உ

கடவுள் துணை.

சனகாபுரம்

பவணந்திமுனிவர்செய்த

# நன்னூல்மூலமும்.

திருநெல்வேலிச்

சங்கரநமச்சிவாயப்புலவரால்

செய்யப்பட்டுத்

திருவாவடுதுறையாதீனச்

சிவஞானஸ்வாமிகளாற்றிருத்தப்பட்ட

விருத்தியுரையும்

இயற்றமிழாசிரியராகிய

திருத்தணிகை,

விசாகப்பெருமாளைய

ரவர்களால்

செய்யப்பட்டபதவுரையும்,

அஷ்டாவதான

வீராசாமிசெட்டியா

ரவர்கள்முன்னிலையில்

தில்லையம்பூர்ச்

சந்திரசேகரகவிராஜ

பண்டிதரால்

பார்வையிடப்பட்டு

வல்லிபுரம்

இராமசாமிமுதலியாரால்

முத்தமிழ்விளக்கஅச்சுக்கூடத்தில்

# பிழை திருத்தல்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௫ | ௰ | கெள்வி... ... | கேள்வி ... ... ...* |
| ௰௧ | ௧௭ | சொல்லட்ட... ... | சொல்லப்பட்ட ...* |
| ௪௭ | ௨௪ | கலாத்து ... ... ... | காலத்து... ... ...* |
| ௫௯ | ௮ | எஉ-ஔ... ... ... ... | உ-எ-ஔ ... ... ... ...* |
| ௬௮ | ௨ | ம்ாற்ருற்... ... ... | மாற்ருற்... ... ...* |
| ௯௮ | ௨௯ | பெய. ... ... ... | பெயர்... ... ... ...* |
| ௱௪ | ௰௬ | குத்திரத்தா... ... ... | சூத்திரத்தா ... ... ...* |
| ௱௩௮ | ௫ | ண்மிகடு. ... ... ... | மின்கடு... ... ...* |
| ௱௪௪ | ௨ | உவ்வரு ... ... ... | உவ்வரு ... ... ...* |
| ௱௪௯ | ௯ | இயாவர்க்கும்... ... | யாவர்க்கும் ... ...* |
| ஷை | ௨௫ | சோழநாடு. ... ... | சோழனாடு... ... ...* |
| ஷை | ௨௬ | பாண்டியநாடு... .. | பாண்டியனாடு... ...* |
| ஷை | ஷை | மலையமாநாடு... ... | மலையமானாடு... ... ...* |
| ௱௬௰ | ௬ | னீங்கிருன் ... ... .. | னீங்கினான்... ...* |
| ௱௭௩ | ௪ | வருமொழியொடு .. | வருமொழியொடு...* |
| ௱௮௬ | ௨௮ | தொன்றுதொடு ... . | தொன்றுதொட்டு... ..* |
| ௨௨௫ | ௰௭ | கூனமை... ... ... . | கூறினமை... ... ...* |
| ஷை | ௰௮ | பிறிரண்டும் ... ... | பீறிரண்டும் ... ...* |
| ஷை | ௨௫ | இன்ன ... ... ... | இன்னன... ... ...* |
| ௨௨௭ | ௩ | எதாக்கூறினாயிற்று | எதுகூறினாயிற்று ...* |



உ

குருவாழ்க.

# நன்னூல்விருத்தியுரை.

## சிறப்புப்பாயிரம்.

மலர்தலையுலகின் மல்கிருளகல-விலகொளிபரப்பி யாவையும் விளக்கும்-பரிதியி னொருதா னாகிமுதலீ-றொப்பளவாசை முனி விகந்துயர்ந்த-வற்புதமூர்த்திதன் மலர்தருதன்மையின்-மனவி ருளிரிய மாண்பொருண் முழுவது - முனிவறவருளிய மூவறு மொழியுளுங்-குணகடல்குமரி குடகம்வேங்கட-மெனுநான்கெ ல்லையி னிருந்தமிழ்க்கடலு-ளரும்பொருளைந்தையும் யாவருமு ணரத்-தொகைவகை விரியிற் றருகெனத்துன்னா-ரிகலறநூறி யி ருநிலமுழுவதுந் - தனதெனக்கோலித் தன்மதவாரணந் - திசை தொறுநிறுவிய திறலுறுதொல்சீர்க்- கருங்கழல் வெண்குடைக் கார்நிகர்வண்கைத்- திருந்தியசெங்கோற் சீயகங்க - னருங்கலைவி னோத னமராபரணன்-மொழிந்தனனாக முன்னோர்நூலின்-வழி யேநன்னூற் பெயரின்வகுத்தனன் - பொன்மதிற்சனகைச் சன் மதிமுனியருள்-பன்னருஞ்சிறப்பிற் பவணந்தி-யென்னுநாமத் திருந்தவத்தோனே. ※

என்பதுபாயிரம். மலர்தலையுலகிற் பன்னூலோர்ந்து-செய்வது ந்தவிர்வதும் பெறுவதுமுறுவது-முய்வதுமறிவிய வொருபொ ருளாக-நன்னெறிபிறழா நற்றவத்தோர்பெறுந்-தன்னடித்தாம ரை தந்தெனையாண்ட- திருவாவடுதுறைத் தேசிகனாகிய-கருணை யங்கடலையென் கண்ணிணைவிட்டகலாச்-சுவாமிநாத குரவனையனு தினமனமொழிமெய்களிற் றொழுதவனருளாற்-பொன்மலைபெ னவிப் புவிபுகழ்பெருமை - மன்னியவூற்று மலைமருதப்பன்- முத்தமிழ்ப்புலமையு முறையரசிலையு-மித்தலத்தெட்டிய வி றைமகனாதி-நன்னூற்குரைநீ நவையறச்செய்து- பன்னூற்பு லவர்முன் பகர்தியென்றியம்பலி - னன்றவர்முக நகைதானு மே-மென்றலியன்றவை யியற்றுமிந்நூலுக், இப்பாயிரமென் னுதலிற்றோவெனின், "வலம்புரிமுத்திற் குலம்புரிபிறப்பும்-வா ன்யாறன்ன தூய்மையும் வான்யாறு-நிலம்படர்ந்தன்ன நலம்ப டரொழுக்கமுந் - திங்களன்ன கல்வியுந்திங்களொடு - ஞாயிறன் னவாய்மையும் யாவதும் - அஃகாவன்பும் வெஃகாவுள்ளமுந் - து

வினவிடின் - வேளாண்வாழ்க்கையுந் தாளாண்மையு - முலகிய
லறிதலு நிலைஇய தோற்றமும்-பொறையு நிறையும் பொச்சாப்
பின்மையு-மறிவு முருவு மாற்றலும் புகழுஞ் - சொற்பொருளு
ணர்த்துஞ் சொல்வன்மையுங் - கற்போர் நெஞ்சங் காமுறப்படு
தலு - மின்னோரன்ன தொன்னெறிமரபினர் - பன்னருஞ்சிறப்
பி னல்லாசிரிய - ரறனே பொருட்பய னின்பெறுமென்றிவ-றி
றனறிபனுவல் செப்புங்காலை - முன்னர்க்கூறிய வெண்வகையு
ளடங்கிய - வொருபகுதியுடைய ராகற்பாற்படச் - சொல்லிய பொ
ருண்மை சொல்லியாங்குணர்தலுஞ் - சொல்லியபொருளொடு
குறித்துநன் குணர்தலுந் - தன்னோ ரன்னோர்க்குத் தான் பயப்
படுதலுஞ்-செய்ந்நன்றியறிதலுந் தீச்சார்பின்மையு -மடிதன்மா
ற்ற மானம்பொச்சாப்புக் - கடுநோய்ச்சீற்றங் களவுகாம- மெ
ன்றிவையின்மையுஞ் சென்றுவழிபடுதலு - மறுத்துரைவழா
மையுங் குறிப்பறிந்தொழுகலுங்- கேட்டவை நினைத்தலும் பாட
ம்போற்றலு - மீட்டவை வினவலும் விடுத்தலுமுடைத்தலு - மு
டையராகி நடையறிந்தியலுநர் - நன்மாணாக்கரென்ப மண்மி
சைத் - தொன்னூற் புலமைத் துணிவுணர்வோரே.,, என ஆத்தி
ரையன் பேராசிரியன்கூறிய பொதுப்பாயிரத்தானே பன்னரு
ஞ் சிறப்பினல்லாசிரியனை புணர்ந்து வழிபட்டொருநூல்கேட்
டான்புகுந்தநன்மாணாக்கர்க் கந்நூலானுவலப்படும் பொருளு
ம் அந்நூல் கேட்டலாற் பெறப்படும் பயனுங் கேட்டற்குரிய
அதிகாரிகளாவா ரிவரென்பதூஉ மின்னது முதற்றியபின்னரிந்நூ
ல் கேட்கற்பாற்றென்னு மியைபு முணர்ந்தன்றி நூல்கேட்டற்
கண் மனவூக்கஞ் செல்லாமையி னின்றியமையாச் சிறப்பினவா
ய விந்நான்கும் பொருதலையாக முன்னருணர்த்தல் வேண்டும்; இந்
நான்கு முணர்ந்த வழியுங் கற்றுவல்லசான்றோரல்லோராற் செய்
யப்பட்ட நூலாயிற் கூறியது கூறன் முதலாய குற்றமுடைத்தா
மர்மேறியெனவும், கற்றுவல்ல சான்றோருமற்றோர் கோட்பாடு
பற்றிச் செய்யின் முன்னவனூலொடு முரணுமன்றே யெனவும்
ஐயற்றாக்கஞ் செல்லாமையின், அவ்வைய நீக்குதற்பொருட்டு
ஆக்கியோன் பெருமையும் நூற்பெருமையும் அந்நூல்வழங்குநி
லைமுதல் அதன்முதனூலு மிவையென்பது தோன்ற, ஆக்கியோ
ன் பெயரும் வழியுமெல்லையும் நூற்பெயரு முணர்த்தல்வேண்
டு மாகலின் இவ்வெட்டு மிவ்வெட்டோடு காலங்களன் காரண
மென்னு மூன்றுங்கூட்டிப்பதினொன்றுந் தெரிப்பதேசிறப்பு
ப் பாயிரத்தி னிலக்கணமென மேல்வருகைப்படும் ஆக்கியோன்
பெயர்முதலியன உணர்த்துதலுதலிற்று.

த்துறை விழுப்புண்பட அமர்செய்தலையே ஆபரணமாகவுடையா ன்—மொழிந்தனனாக - சொன்னானாக — முன்னோர் நூலின்வழி யே - தொல்லாசிரியர் நூலின் வழியே — நன்னூற் பெயரின் வகுத்தனன் - நன்னூலென்னும் பெயரினாற் செய்தனன்—பொன்மதிற்சனகை - பொன்மதில் சூழ்ந்த சனகாபுரத்து ளிருக்கும் —சன்மதி முனியருள் - சன்மதி முனிவன்பெற்ற—பன்னருஞ் சிறப்பிற்பவணந்தியென்னுநாமத்து - சொல்லுதற்கரிய ஞான வொழுக்கச் சிறப்பினையும் பவணந்தியென்னும் பெயரினையுமுடைய—இருந்தவத்தோன் - பெரியதவத்தினை யுடையோன்.— என்றவாறு.

இதனுட்பவணந்தியெனவே- ஆக்கியோன்பெயரும், முன்னோர்நூலின் வழியெனவே - வழியும், நான்கெல்லையெனவே-யெல்லையும், நன்னூலெனவே-நூற்பெயரும், அரும்பொருளைந்தெனவே-நுதலியபொருளும், அவற்றை யாவருமுணர வெனவே-முன்னோர்நூலிலக்கணத்துச் செய்யுளாராய்ச்சி யுடையார்க்கே அவற்றை யாராய்வுழி யவற்றின்க ணவையாகிய செய்கை வேறுபாடுகளுஞ் சொன்முடிவுபொருண்முடிவு வேறுபாடுகளுமின்னவென்று துணியப்படாமையின் அவற்றைத் துணிந்தறியவேண்டியிவ்வியற்றமிழ்நூல்கேட்டறிதலின்கண்ணே யூக்கஞ்செல்லுமாகலின் அவை யாராய்ந்தபின்ன ரிவைகேட்கற்பாற்றென்னும்யாப்பும், அவை யாராய்ந்தோ ரிவைகேட்டற்குரியாரென்னுங் கேட்போரும், அவர் அப்பொருளைந்தினையுமுணர்ந்து மொழித்திறத்தின்முட்டறுத்தலின் மொழித்திறத்தின்முட்டறுத்தலென்னும்பயனும், சீயகங்கன் மொழிந்தனனாக நன்னூற்பெயரின் வகுத்தனனெனவே-அவன் காலத்துப்பாடப்பட்டு, அவனவைக்களத் தரங்கேற்றியதெனக் காலமுங் களனும், சீயகங்கன் மொழிந்தமையானும் யாவரிடத்துமிரக்க முடைமையானும் வகுத்தமையாற் காரணமும் பெறப்பட்டன.

இனி யிவற்றுட் காலமுதலியமூன்றும் நூல்செய்தார்காலத்துநிகழ்ந்தன. ஆக்கியோன்பெயர் முதலிய வெட்டும் நூல்செய்தார்காலத்தும் நூல்வழங்குங்காலத்துமொப்ப நிகழ்வன. இவை தம்முள்வேற்றுமை. கழிந்தவற்றை யுணர்தலாற் பெரும் பயனின்மையின் அவைபொருளாகாராற் கொள்ளப்பட்டன. ஆக்கியோன்பெயர் முதலியன வொருதலையானுணர வேண்டுதலின் அவையெல்லாவாசிரியராலுங் கொள்ளப்பட்டன. வடநூலார்யாப்பை அனுபந்தமென்றும் நுதலியபொருளை விடயமென்றும் கேட்போரை யதிகாரிகளென்றும் பயனைப்பிரயோசனமெ

நூலைப்பயிற்பித்தற்குக் காரணமாகக்கேட்போரை விசேடித்து நிற்றலின் வேறுகூறல்வேண்டாவென்னுங்கருத்தால் ஆனந்தரியந் க்கிச் சம்பந்தமொன்று கூட்டினாரென்பாராயினர். சம்பந்தமென்பதும் யாப்பென்னும் பொதுச்சொல்லாற் கொள்ளப்படும் அது நன்னூற் பெயரின் வகுத்தனனெனவேறாற்றும் நூனுதலிய பொருட்கும் ஏற்பதாஉம் வகுக்கப்படுவதாஉமாகிய சம்பந்த மென்பது பெறப்பட்டது. யாப்பு இயைபு தொடர்ச்சி என்பனவொருபொருட்கிளவி. ஈண்டுக்கேட்டல்பாடங்கேட்டல். அது "கேள்வி விடரிசம் பாவலா" என்பதனுள் "கேட்டவை நினைத்தலும் பாடம்போற்றலும்" என்பதனும் "ஒருகுறி கேட்போ னிருகாற்கேட்பின்" என்பதனுமுணர்க. இவ்வெட்டுமுணர்ந்ததற்குப்பயன் நூல் பயிலுதற்கணூக்கமுண்டாதல் ஊக்கமுள்ளக்கிளர்ச்சி. இனிவாய்ப்பக்காட்ட லென்பதனையித்துணைச்சிறப்பிலவா யவ்வவற்றிற்கினமாய்க் காட்டப்படுவனவுமா வென்பதுபெற்றாம். அவையாக்கியோன்பெயரேயன்றியாக்குவித்தோன்பெயர்கூறுதலும் வழியேயன்றி யதன்வகையாகிய தொகுத்தல் முதலிய நான்கினு ளொன்றுமாறு கூறுதலும் தன்முதனூற்கு வழிகூறுதலும் அதுவந்தமரபுவழிகூறுதலும் பொதுவெல்லைகூறுதலேயன்றிச் செந்தமிழ் முதலியவற்றின் சிறப்பெல்லைகூறுதலும நூற்பெயரேயன்றிப் படலப்பெயரோத்தின்பெயர்கூறுதலும் நூற்கிடைபுகூறுதலேயன்றி நூலினுட்படல முதலியவற்றிற்கிடைபுகூறுதலும் சம்பந்தங்காட்டுவார் மதத்தினூனுதலிய பொருட்குங் கிழமைகூறுதலேயன்றி நூனுதலிய பொருட்கும்பயனுக்குங்கிழமைகூறுதலும் நூற்கு நூல் செய்தோனுக்குங்கிழமைகூறுதலும் நூனுதலியபொருளே யன்றிப் படலநுதலியதாஉமோத்துநுதலியதாஉஞ் சூத்திரநுதலியதாஉங் கூறுதலும் கேட்போரேயன்றிக் கேட்பிப்போரைக்கூறுதலும் பயனேயன்றிப்பயனுக்குப் பயன் கூறுதலுமாம். இவ்வெட்டனுட் சீயகங்கனெனவேயாக்குவித்தோன் பெயரும் தொகைவகை விரியெனவேவழியின்வகையும் மாண்பொருண்முழுவதுமெனவே பயனுக்குப்பயனும்பெறப்பட்டன. ஏனையவிந் நூலுள் வந்தவழிவந்தவழிக்காண்க. பயனுக்குப் பயனாவது, வெண்பா- "எழுத்தறியத் தீருமிழிதகைமை தீர்ந்தான்-பொருட்டிறத்தின் முட்டறுப்பா னாகு-மொழித்திறத்தின்-முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து-கட்டறுத்து வீடுபெறும்.." என்பதனாற்காண்க. எனவே முதனூற்பொருளுணர்தற்கு முன்னையனையிதுகருவிநூலென்பதுபெறப்பட்டது. முதனூலென்றது அறமுதலியநான்கினை

வேண்டு மாகலானுந் தொகுத்தன் முதலியன வழிநூலடங்குதலானு மியைபுமொருதலையா னுணர்த்தற்பாலதாகலானும் யாங்கூறியதே வடநூலார்க்கு முடன்பாடாகலானு மவருரை போலியுரையென்க. வழியின் வகையாகிய நால்வகை யாப்பினுட் டொகைவிரியாப்பெனவொன்று போற்றன்றித் தொகை வகை விரியெனப் போந்ததுவிலையாமெனின், நடுநின்ற வகை பின்னின்ற விரியை நோக்கிற் றொகையாகவு முன்னின்ற தொகையை நோக்கின் விரியாகவு மடங்குதலி னது தொகைவிரி யாப்பென்ற தன்பாற்படுமென்க. எனவே தொகைவிரியென விரண்டாய் விரிணு மாத்திரையது பராமையினின்றுங் கவடுகோடு கொம்புவளார்பல வா யொன்றோடொன்று தொடர்பட்டெழுந்து நிற்றல் போற் றொகையினின்று மொன்றோடொன்று தொடர்படப் பகுக்கப் பட்டுப் பலவாய்விரினுந் தொகைவிரியாப்பேயாமென்க. இப்பாயிரமொருநூற்குரித்தாகலிற் சிறப்புப்பாயிரமாமென்க.

சிறப்புப் பாயிரம் முற்றிற்று.



தன்னூலுட் கருத்துலகோ ரறியவுரை செய்தவெனை நரேந்திரசிங்கந், தென்னூற்று மலைமருதப் பன்புகலப் பொருள்விளங்கச் செய்தான்பாரி, லெந்நூற்கு மெழுத்தொடுசொற் பொருளறிசங் கரநமச்சி வாயனென்னும், பன்னூற்செந் தமிழ்ப்புலவன் சைவசிகா மணிநெல்லைப் பதியினானே. ※

அகத்தியந்தொல் காப்பியமே முதலியமுன் னூல்கள்பல வாய்ந் திருப்பால், பகுத்ததிரு வள்ளுவரோ முதன்ஞான நூல்களெல்லா ம்பகல்செய்வான்போ, லிகத்திலுரை செயவலசங் கரநமச்சி வாயனெனு மிபற்போர்பெற்ற, நகைட்டலவ னன்னூலுக் குலாவகுத்த தொருவியப்போ தமிழ்வல்லோரே. ※

முன்னூற்கு மலயமுனி தன்னூற்கும் புலியிடத்து முநிபோராற் றொ, லெந்நூற்கு தமிழ்க்கடவுள் சிலிபிபற்று நூற்கும் வகை யிதனைக்காட்டி, நன்னூற்கு விரித்துரைசெய் தான்றிசைந் தந்தவா வு நடாத்துங்கீர்த்தி, தென்னூற்று மலைமருதப் பன்சொலச்சங் கரநமச்சி வாயன்றானே. ※

இம்மூன்று முரைப்பாயிரம்.

# பொதுப்பாயிரம்.

(௧) முகவுரை பதிக மணிந்துரை நூன்முகம்- புறவுரை
தந்துரை புனைந்துரை பாயிரம். *

(எ-ன்.) பாயிரத்திற்கு வருஉங் காரணக் குறிகளுணர்-ற்று. (இ-ள்.) பாயிரத்தி னிலக்கணங்களை முன்னுணர்ந்தல்லது நூல்களைச் செய்தலு மவற்றை யீதலுமேற்றலு முடியாமை கருதி முன்னுரைத்தலின் முகவுரையென்றும் "பதிகக்கிளவி பல்வகைப் பொருளைத்-தொகுதியாகச் சொல்லுதற்றே." என்பவாகலின் மேல்வகுக்குமைந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பல்வகைப் பொருளையுந் தொகுத்துச்சொல்லுதலிற் பதிகமென்றும் நூலினது பெருமை முதலிடவிளங்க வணிந்துரைத்தலின் அணிந்துரையென்றும் முகவுரையென்றாற்போல நூன்முகமென்றும் நூனுதலியபொருளல்லனவற்றை யுரைத்தலிற் புறவுரையென்றும் நூற்குள்ள நுதலிய பொருளல்லன வற்றை அதற்குத் தந்துரைத்தலிற் றந்துரையென்றும் அணிந்துரை யென்றாற்போலப் புனைந்துரையென்றும் பாயிரத்திற்குப் பெயராம். எ-று. ❁ பாயிரமென்பதுவரலாறு. பாயிரங்கூறப்புகுந்தார் நிகண்டு போலவதன்பெயர் விகற்பங்களைக் கூறியதென்னையெனின், இப்பாயிரம்பதிகமாகிய புறவுரையாய்த் தந்துரைக்கப்படுவதேனு நூற்கின்றியமையாத வணியாய் முன்னுரைக்கப்படுவதென்ப திக்காரணக்குறிகளான் விளங்குதலினென்க. (௧)

(௨) பாயிரம் பொதுச்சிறப் பெனவிருபாற்றே. *

(எ-ன்.) மேற்பாயிரமென்றதனை வகுத்துணர்-ற்று. (பதவுரை.) பாயிரம் - பாயிரமானது, பொது - பொதுப்பாயிரமும், சிறப்பு-சிறப்புப்பாயிரமும், எனவிருபாற்று - எனவிரண்டுபிரிவையுடைத்தாகும். எ-று. ஏகாரம்-ஈற்றசை.

(பொழிப்புரை.) மேற்பாயிர மென்றது- பொதுப்பாயிரமுஞ் சிறப்புப்பாயிரமுமென விருவகையினையுடைத்து. எ-று. (௨)

(௩) நூலே நுவல்வோ னுவலுந்திறனே - கொள்வோன் கோடற் கூற்றாமைந்து-மெல்லா நூற்கு மிவைபொதுப்பாயிரம். *

(எ-ன்.) இருவகைப்பாயிரத்துட் பொதுப்பாயிரத்தை விரித்துணர்-ற்று. (ப-ரை.) நூல் (திறன்) - நூலினதுவரலாறும், நுவல்வோன் (திறன்) - பாடஞ்சொல்லும் ஆசிரியனதுவரலாறும், நுவலுந்திறன்-பாடஞ்சொல்லுதலினதுவரலாறும், கொள்வோன் (திறன்) - பாடங்கேட்கு மாணாக்கனதுவரலாறும், கோடற்கூற்று-பாடங்கேட்கையினதுவரலாறும், எல்லா நூற்கும் - எல்லா நூலுக்கும்,

ஆம்-ஆகும் ஆதலால், இவை - இவ்வைந்து வரலாற்றையும்விளங்க
க்காட்டுவது, பொதுப்பாயிரம் - பொதுப்பாயிரமாகும். எ-று.
(பொ-ரை.) நூலினது வரலாறும் ஆசிரியனது வரலாறும் அவ்வா
சிரியனூலை மாணாக்கற்குச் சொல்லுதலின் வரலாறும் மாணாக்கன
து வரலாறும் அவன்கேட்டலின் வரலாறுமென்னு மைந்து மெல்
லா நூற்குமாமாதலி னிவ்வைந்து வரலாற்றையும் விளங்க வுணர்த்
துவது பொதுப்பாயிரமாம். எ-று. ※ திறன்கூற்றென்றது வ
ரலாற்றையாதலி னதனை யேனையவற்றுள்ளும் பிரித்துரைத்தாம்.
ஆமென்பதனை யெல்லா நூற்கு மாமெனக்கூட்டுக. "ஈவோன்ற
ன்மை யீதலியற்கை - கொள்வோன்றன்மை கோடன்மரபென -
வீரைந் தென்ப பொதுவின்றொகையே." என்பாருமுளராலோ
வெனின், பாயிரங்கூறுதனூல்கட்கன்றிப் பிறவற்றிற்கின்மை யங்ங
னமாதலினூல்களின் வரலாறென்றுமே கூறவேண்டும் அதனோடா
சிரியன்வரலாறு முதலிய நான்கினையு முடன்கூறுதல்வரலாற்று மு
றைமையின்வாராதாயி னூல்களைக்கற்பிக்கவுங்கற்கவும்புகின் "பொ
ய்படுமொன்றோ புனைபூணுங்கையறியாப் பேதைவினைமேற் கொ
ளின்." என்றவாறேயாய் நூல்களதுடைமையும் பெருமையுங் கெட்டு
ப் பயன்படாவாமென்பது கருதியென்க. அங்ஙனமாயி னூன்மு
கத்துரைக்கப்படும் பாயிரவுறுப்பினு னூலைக்கூறுவது பொருந்
தாதென்னில் இவ்விலக்கணத்தானமைபவனே ஆசிரியனென்றாற்
போல இவ்விலக்கணத்தானமைவது நூலென்றதன்றிப் பாயிர
த்து னூலைக்கூறிய தன்றுமாதலின் ஆசிரியர் தொல்காப்பியர் நூ
லினியல்பை யொத்துறுப்பாகிய மரபியலுட் கூறினாற்போல இவ்
வாசிரியர் பாயிரவுறுப்பினுட்கூறினாரென்க. (௧)

(௪) நூலினியல்பே நுவலி னோரிரு- பாயிரந்தோற்றி மும்
மையி னொன்றாய் - நாற்பொருட்பயத்தோ டெழுமதந்தழுவி-
யையிருகுற்றமு மகற்றியம்மாட்சியோ - டெண்ணான் குத்தியி
னோத்துப்படல- மென்னுமுறுப்பினிற் சூத்திரங்காண்டிகை- வி
ருத்தியாகும் விகற்பநடைபெறுமே. ※

(எ-ன்.) மேற்கூறியவைந்தனு ணூலினதுவரலாறுணர்-த்-று. (ப
-ரை.) நூலினியல்பு - நூலினதுவரலாற்றை, நுவலின்- சொன்னா
ல், ஓரிருபாயிரந்தோற்றி - பொதுவுஞ்சிறப்புமாகிய விருவகைப்
பாயிரத்தையுமுன்னுடைத்தாகி, மும்மையினொன்றாய் - முதனூ
ன்முதலாகிய மூன்றனுள் ஒன்றாகி, நாற்பொருட்பயத்தோடு- அ
றமுதலாகிய நான்குபொருட்பிரயோசனத்துடனே, எழுமதந்த
ழுவி - உடன்படன்முதலாகிய எழுவகைமதத்தையுந்தழுவி, ஐயி
ருகுற்றமுமகற்றி - குன்றக்கூறன்முதலாகிய பத்துக்குற்றத்தையு

மொழித்து, அம்மாட்சியோடு - சுருங்கச்சொல்லல் முதலாகிய பத்தழகுடனே, எண்ணெண்குத்திரியின் - நுதலிப்புகுதல் முதலாகிய முப்பத்திரண்டு உத்தியைக்கொண்டு, ஓத்துப்படலமென்னு மூறுப்பினில் - இயல் அதிகாரமென்னும் அவயவங்களுடனே, சூத்திரம் - சூத்திரமும், காண்டிகை - காண்டிகையுரையும், விருத்தி- விருத்தியுரையும், ஆகும் - ஆகின்ற, விகற்பநடை - பதின்மூன்று வேறுபாட்டு நடையையும், பெறும் - பெற்றுவரும். எ-று. (பொ-ரை.) மேற்கூறியவைந்தனு ணூலினதுவரலாற்றைச் சொல்லினிருவகைப் பாயிரத்தையு முன்னுடைத்தாதன் முதலாக இங்ஙனம் விகற்பித்த பதின்மூன்று விகற்ப நடைகளைப் பெற்றுவரும். எ-று. (௪)

(௫) முதல்வழிசார்பென நூன்மூன்றாகும். *

(எ-ன்.) நூலினதுவரலாற்றைத் தொகுத்துக்கூறினார் அவற்றுளொருபாயிரத்திற்கு வகைபோந்து கிடந்தமையி னதனையொழித்தேனையவற்றை வகுத்துக்கூறுவான்றொடங்கி முன்மையிலொன்றாகிய நூனை வகுத்துணர்-ற்று. (ப-ரை.) முதல் - முதனூல், வழி - வழிநூல், சார்பு - சார்புநூல், என - என்று, நூல்- நூலானது, மூன்றாகும்-மூன்றுபிரிவையுடைத்தாகும். எ-று. (பொ-ரை.) முதனூல் வழிநூல் சார்புநூலென மூன்று கூற்றதாநூல். எ-று.

(௬) அவற்றுள், வினையினீங்கி விளங்கியவறிவின்- முனைவன் கண்டது முதனூலாகும். *

(எ-ன்.) நூன்மூன்றனுண் முதனூலாமாறுணர்-ற்று. (ப-ரை.) வினையினீங்கி - வினையினின்று நீங்கி, விளங்கிய - பிரகாசித்த, அறிவின் - அறிவினையுடைய, முனைவன் - கடவுள், கண்டது -உயிர்களுக்கு ஆதிகாலத்திலே செய்தது, முதனூலாகும் - முதனூலாகும். எ-று (பொ-ரை.) வினையினீககிவிளக்கப்படும் அறிவினையுடையவுயிர்கட்கு வினையினீங்கிவிளங்கியவறிவினையுடையமுதல்வனாதிக்கண்ணேசெய்ததியாததுமுதனூலாம். எ-று. (௬)

(௭) முன்னோர்நூலின் முடிபொருங்கொத்துப் - பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி - யழியாமரபினது வழிநூலாகும். *

(எ-ன்.) வழிநூலாமாறுணர்-ற்று. (ப-ரை) முன்னோர்- கடவுளும் அவனருள்வழிப்பட்டோருஞ்செய்த, நூலின் - நூல்களினுடைய, முடிபு - பொருண்முடிபுகள், ஒருங்கு - முழுவதையும், ஒத்து- நிகர்த்து, பின்னோன் - வழிநூல்செய்வோன், வேண்டும்- முதனூலிருக்கவுந் தான்வழிநூல்வேறேசெய்தற்குக் காரணமாக வேண்டிய, விகற்பம்-வேறுபாடுகளையும், கூறி - உடன்சொல்லி, அழியா - அழியாமலுலகத்திலே நிலைபெற்றுவிளங்காநின்ற, மரபினது-குணத்தையுடையது, வழிநூலாகும்-வழிநூலாகும். எ-று.

(பொ-ரை) தொல்லாசிரியர் நூல்களின் பொருண்முடிபு முழுவது மொத்து வழிநூல்செய்வோன் முதனூலுளதாகவுந் தான்வழிநூல்செய்தற்குக் காரணமாகவேண்டிய விகற்பங்களையு முடன்கூறியவ் விகற்பங்க ளுணர்வுடையோர்பலர்க்கு மொப்பமுடிந்தமையி னழியா துலகத்துநின்று நிலவுமரபினையுடையது வழிநூலாம். எ-று. ✲ பின்னோன்வேண்டும் விகற்பங்கூறலாவது பழையனகழிதலும் புதியனபுகுதலும் வழுவல வென்றவற்றை யிறந்ததுவிலக்கலெதிரதுபோற்றலென்னு முத்திகளான் விலக்கியும்போற்றியுங் கூறுதன்முதலியன. முன்வன் கண்டது முதனூலாகுமென வொருமையாற்கூறினா ரீண்டுமுன்னோர் நூலெனப்பன்மையாற்கூறிய திறைவனூலையு மவனருள்வழிப்பட்டுத் தத்தமரபின் வருங்குரவர்பலர் நூலையுந் தழீஇக்கோடற்கென்க. எனவே முதனூன்மாத்திரையாய்நிற்ப திறைவனூலும் வழிநூன் மாத்திரையாய்நிற்பதிறுதிநூலுமன்றியிடைநிற்கு நூல்களெல்லாமொருவற்கு மைந்தனாயினான் மற்றொருவற்குத் தந்தையாயினாற்போல முதனூலாயும் வழிநூலாயு நிற்குமென்பதுபெற்றாம். (௭)

(அ) இருவர் நூற்கு மொருசிறைதொடங்கித் - திரிபுவேறுடையது புடைநூலாகும். ✲

(எ-ன்.) சார்புநூலாமாறுணர்-ற்று. (ப-ரை.) இருவர்நூற்கும்-முதனூல் வழிநூல் என்னுமிருவகைநூல்களுக்கும், ஒருசிறை-ஒருபுடை, தொடங்கி-பொருண்முடிபொத்து, வேறு- மற்றவைகளெல்லாம், திரிபு- ஒவ்வாமையை, உடையது -உடைத்தாகியது, புடைநூலாகும் - சார்புநூலாகும். எ-று. (பொ-ரை.) முதனூல் வழிநூலென்னு மிருதிறத்து நூல்கட்கும்பொருண்முடி பொருபுடை யொத்தொழிந்தன வெல்லாமொவ்வாமையையுடையது சார்புநூலாம். எ-று. ✲ எனவே முதனூற்குவழிநூலுஞ் சார்புநூலு மொருவற்கு மைந்தனு மருமானும்போலுமென்க. ஒருநூறனக்கு வழிநூலைநோக்கின் முதனூலாகவு முதனூலைநோக்கின் வழிநூலாகவும் அயனூலைநோக்கிற் சார்புநூலாகவு நிற்குமாயினு மிம்முத்திறத்தினு ளொருதிறத்தின்கண் மற்றொருதிறமின்மையின் மும்மையினென்றுமையன்றார். (அ)

(௯) முன்னோர்மொழிபொருளே யன்றியவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவமென்பதற்கு- முன்னோரின்- வேறுநூல் செய்துமெனு மேற்கோளிலென்பதற்கு - கூறுபழஞ்சூத்திரத்தின் கோள். ✲

(எ-ன்.) வழிநூற்குஞ் சார்புநூற்கு மெய்தியதன்மேற்சிறப்புவிதியுணர்-ற்று. முன்னோர்நூலின் பொருண்முடிபு முழுவது மொப்பவு மொருபுடையொப்பவுங் கூறுவதன்றியு மந்நூற்குத்

திரத்தையு மொழியையெடுத்துக் கூறுகவென்றலின். (ப-ரை.) முன்னோர் - முன்னுள்ளோர், மொழி - சொன்ன, பொருளேயன்றி - பொருளையாத்திரமல்லாமல், அவர் - அவரது, மொழியும் - சொல்லையும், பொன்னேபோல் - பொன்னைப்போலவே, போற்றுவமென்பதற்கும் - காப்பாற்றிக்கொள்வோமென்பதற்கு அடையாளமாகவும், முன்னோரின் - முன்னோர்நூலையே சொல்லாமல் அந்நூலினின்றும், வேறுநூல் - வழிநூல் சார்புநூல்களை, செய்துமெனும் - செய்தோமாயினும், மேற்கோள் - ஆசிரியவசனமானது, இல்லென்பதற்கும் - இந்நூலினிடத்தில்லையென்று சொல்லுங்குற்றமொழிதற்காகவும், பழஞ்சூத்திரத்தின்கோள் - முன்னோர்சொல்லியபொருளையல்லாமலும் அவர்சூத்திரத்தையும், கூறு - ஒரோவிடத்திலேசொல்லு. எ-று. (பொ-ரை.) முன்னோர் மொழிந்த பொருளேயன்றியவர்மொழியினையும் பொன்போலப்போற்றிக் கொள்வமென்பதற் கிலச்சினையாகவு முன்னோர்நூலையேகூறா தந்நூலினின்றும் வழிநூல்சார்புநூல் செய்தோமாயினு மாசிரிய வசனங்களை பொமொழியெடுத்துடன்கூறுதல் வழிநூற்குஞ்சார்புநூற்குமிலக்கணமாதலினிந் நூலகத்தாசிரியவசன மில்லையெனக்குற்றங்கூறுவ ராதலினக்குற்றமொழிதற்காகவும்பழஞ்சூத்திரத்தின்கோளைக்கூறு. எ-று. ❁ ஆசிரியவசன மெனினுமேற்கோளெனினும் பழஞ்சூத்திரத்தின்கோளெனினுமொக்கும். முன்போற்றுவஞ்செய்துமெனவுளப்பாட்டுத் தன்மைப்பன்மைமுற்றாகவும்பின்னோர்க்கூறெனமுன்னிலையேவலொருமையாகவுங்கூறினமையின் வழிநூலுஞ் சார்புநூலுஞ்செய்வோர்பலர்குழீஇ யொருவர்க்கொருவர்கூறுங் கூற்றாகவிச்சூத்திரஞ் செய்யப்பட்டதென்க. (௯)

(௰) அறம்பொருளின்பம்வீ டடைதனூற்பயனே. ❋

(எ-ன்.) நூற்பொருட் பயனென்றதனை வகுத்துணர்-ற்று. (ப-ரை.) அறம் - தருமமும், பொருள் - அர்த்தமும், இன்பம் - காமமும், வீடடைதல் - மோட்சமடைதலும், நூல் - நூலிற்சொல்லப்படும், பயன் - பிரயோசனமாம். எ-று. (பொ-ரை.) அறமும்பொருளுமின்பமும் வீடடைதலுமாகிய விந்நான்கும் நூற்கூறப்படும் பயனாம். எ-று. ❁ வீடெனவாளாகூறாது வீடடைதலென்றார் வீடென்பதுபேரின்பமாகிய சாத்தியமாதலின். நான்குமென்னுஞ்செவ்வெண்ணின் றொகையோடு உம்மை விகாரத்தாற்றொக்கன. (௰)

(௰௧) எழுவகைமதமே யுடன்படன்மறுத்தல் - பிறர்தம்மதமேற் கொண்டுகளைவே - தானாட்டித் தனாது நிறுப்பே யிருவர்மாறுகோ ளொருதலை துணிவே - பிறர்நூற்குற்றங் காட்டலேனைப் - பிறிதொடுபடாஅன் றன்மதங்கொளலே. ❋

(எ-ன்.) எழுவகைமதமென்றதனை வகுத்துணர்-ற்று. (ப-ரை.) எழுவகைமதம் - எழுவகைமதமாவன, உடன்படல் - பிறர்மதத்திற்கு உடன்படலும், மறுத்தல் - பிறர்மதத்தைமறுத்தலும், பிறர்தம்மதமேற்கொண்டுகளைவு - பிறர்மதத்திற்கு உடன்பட்டுப்பின்பு மறுத்தலும், தாஅங்கூட்டித்தனாதுநிறுப்பு - தானொருபொருளை எடுத்துநாட்டி அதனைவருமிடந்தோறும் நிறுத்துதலும், இருவர்மாறுகோளொருதலைதுணிவு - இருவர் ஒன்றற்கொன்று விரோதமாகக்கொண்ட விரண்டனுள் ஒன்றனிடத்துத்துணிதலும், பிறர்நூற்குற்றங்காட்டல் - பிறர் நூல்களிலிருக்கின்ற குற்றத்தைக்காட்டுதலும், பிறிதொடுபடாஅன்றன்மதங்கொளல் - பிறர் மதத்திற்கு உடன்படாதொழிந்து தன்மதத்தையேகொள்ளுதலுமாம். எ-று. (பொ-ரை.) மேலெழுவகைமதமென்று சொல்லப்பட்டன இங்ஙனம்பிறர்மதத்தையுடன்படன் முதலியவாகவிதந்தனவாம். எ-று. ✻ நூறழுவியமதங்கள் பலவாயினுந் தலைமைபற்றி மதமேழென்பது நூல்வழக்காமென்க. குற்றம்பத்து அழகுபத்து உத்திமுப்பத்திரண்டு என்பனவுமன்ன. இவ்வெழுவகைமதங்கட்கும் உதாரணம்விளங்க இந்நூலுள்வந்துழிவந்துழிக்காட்டுதுமாங்காங்குணர்க. (௰௧)

(௰௨) குன்றக்கூறன் மிகைபடக்கூறல் - கூறியதுகூறன் மாறுகொளக்கூறல் - வழூஉச்சொற்புணர்த்தன் மயங்கவைத்தல் - வெற்றெனத்தொடுத்தன் மற்றொன்றுவிரித்தல் - சென்றுதேய்ந்திறுத னின்றுபயனின்மை - யென்றிவையீரைங் குற்றநூற்கே. ✻

(எ-ன்.) பத்துக்குற்றமென்றதனை வகுத்துணர்-ற்று. (ப-ரை.) குன்றக்கூறல் - குறித்தபொருளைக் காட்டுதற்குரியசொற்களிற்குறைவுபடச்சொல்லுதலும், மிகைபடக்கூறல் - அதிகப்படச்சொல்லுதலும், கூறியதுகூறல் - முன்சொன்ன ஒருபொருளையே பின்னுஞ்சொல்லுதலும், மாறுகொளக்கூறல் - முன்சொன்னபொருளோடு பின்சொல்லும்பொருள் விரோதங்கொள்ளச் சொல்லுதலும், வழூஉச்சொற்புணர்த்தல் - குற்றமானசொற்களைச்சேர்த்தலும், மயங்கவைத்தல் - ஒன்றற்கொன்றாக மயங்கவைத்தலும், வெற்றெனத்தொடுத்தல் - பொருள்வெளிப்படையாகத் தோன்றத்தொடுத்தலும், மற்றொன்றுவிரித்தல் - சொல்லத்தொடங்கியதைவிட்டு மற்றொருபொருளைவிரித்தலும், சென்றுதேய்ந்திறுதல் - சொல்லின்முடிபும் பொருளின்முடிபும் முன்சிறப்பாகநடந்து அந்நடையின்றேய்ந்துமுடிதலும், நின்றுபயனின்மை - சொற்களிருந்தும் ஒருபிரயோசனமுமில்லாமற்போதலும், என்றிவை - என்றுசொல்லப்பட்டவிவை, நூற்கு - நூலுக்கு, ஈரைங்குற்றம் - பத்துக்குற்றங்களாகும். எ-று. (பொ-ரை.) நூற்

குப்பத்துக்குற்றங்களாவன குன்றக்கூறன் முதலிய விவைகளாம்.
எ-று. ❁ நூல்கள் இக்குற்றங்கள் சாராதுவருதல்காண்க. (௰௨)
(௰௩) சுருங்கச்சொல்லல் விளங்கவைத்த - னவின்றோர்க்கினி
மை நன்மொழிபுணர்த்த- லோசையுடைமை யாழமுடைத்தாத
ன் - முறையின்வைப்பே யுலகமலையாமை - விழுமியதுபயத்த
ல் விளங்குதாரணத்த - தாகுதனூலிற் கழகெனும்பத்தே. ❋
(எ-ன்.) பத்தழகென்றதனை வகுத்துணர்-ற்று. (ப-ரை.) சுருங்
கச்சொல்லல் - சொல்லுகள்வீணாகவிரியாமற் சுருங்கிநிற்கச்சொல்
லுதலும், விளங்கவைத்தல்-பொருளைச்சந்தேகத்திற்கு இடமாகா
மல் விளங்கவைத்தலும், நவின்றோர்க்கினிமை - வாசித்தவருக்கு
இன்பத்தைத்தருதலும், நன்மொழிபுணர்த்தல்- நல்லசொற்களை
ச்சேர்த்தலும், ஓசையுடைமை - சந்தவின்பமுடைத்தாதலும், ஆ
ழமுடைத்தாதல் - ஆழ்ந்தகருத்தை யுடைத்தாதலும், முறையின்
வைப்பு - அதிகாரமுதலானவைகளைக் காரணகாரியமுறையாகவை
த்தலும், உலகமலையாமை - உயர்ந்தோர் வழக்கத்தோடு மாறுகொ
ள்ளாமையும், விழுமியதுபயத்தல் - சிறப்பாகியபொருளைத் தரு
தலும், விளங்குதாரணத்ததாகுதல் - விளங்கிய உதாரணத்தை யு
டையதாதலும், நூலிற்கு - நூலினுக்கு, அழகெனும்- அழகென்
று சொல்லப்படும், பத்து-பத்தாம். எ-று (பொ-ரை.) நூலிற்கழகெ
ன்று சொல்லப்படும்பத்தாவன சுருங்கச்சொல்லன்முதலியவாம். எ-
று. ❁ நூல்கள் இப்பத்தழகோடுங் கூடிவருதல்காண்க. (௰௩)
(௰௪) நுதலிப்புகுத லோத்துமுறைவைப்பே - தொகுத்துச்
சுட்டல் வகுத்துக்காட்டன்- முடித்துக்காட்டன் முடிவிடங்கூற-
றானெடுத்துமொழிதல் பிறன்கோட்கூறல் - சொற்பொருள்விரி
த்த றொடர்ச்சொற்புணர்த்த - லிரட்டுறமொழித லேதுவின்மு
டித்த - லொப்பின்முடித்தன் மாட்டெறிந்தொழுக - லிறந்தது
விலக்க லெதிரதுபோற்றன்- முன்மொழிந்துகோடல் பின்னது
நிறுத்தல் - விகற்பத்தின்முடித்தன் முடிந்ததுமுடித்த - லுரை
த்துமென்ற லுரைத்தாமென்ற - லொருதலைதுணித லெடுத்துக்
காட்ட - லெடுத்தமொழியி னெய்தவைத்த - லின்னதல்ல திது
வெனமொழித - லெஞ்சியசொல்லி னெய்தக்கூறல் - பிறநூன்
முடிந்தது தானுடன்படுத - றன்குறிவழக்க மிகவெடுத்துரைத்
தல் - சொல்லின்முடிவி னப்பொருண்முடித்த - லொன்றினமு
டித்த றன்னினமுடித்த - லுய்த்துணரவைப்பென வுத்தியெண்
ணான்கே. ❋
(எ-ன்.) முப்பத்திரண்டு உத்தியென்றதனை வகுத்துணர்-ற்று.
(ப-ரை.) நுதலிப்புகுதல்-இதனைச்சொல்லுவேனென்று சொல்லிப்
புகுதலும், ஓத்துமுறைவைப்பு- இயல்களைக் காரணகாரிய முறை

யால்வைத்தலும்- தொகுத்துச்சுட்டல்- பலவுந்தொகுத்துக்காட்டலும், வகுத்துக்காட்டல்- அப்படித்தொகுத்துக் காட்டியவைகளை வேறுவேறுவிரித்துக்காட்டுதலும், முடித்துக்காட்டல்- நான்மேலோர் முடித்தவாறுமுடித்துக்காட்டுதலும், முடிவிடங்கூறல்- தான் சொல்லும் இலக்கணத்திற்கு இலக்கியந்தோன்று மிடத்தைச் சொல்லுதலும், தானெடுத்துமொழிதல்- தான்பழைய சூத்திரத்தை யெடுத்துச்சொல்லுதலும், பிறன்கோட்கூறல்-தன்னூலிற் பிறனதுகோட்பாட்டைச்சொல்லுதலும், சொற்பொருள் விரித்தல்- சொல்லினதுபொருள்விளங்குதற்கு உருபுமுதலானவைகளை விரித்துச்சொல்லுதலும், தொடர்ச்சொற்புணர்த்தல்-ஒன்றற்கொன்று சம்பந்தமுடைய சொல்லுகளைச் சேர்த்து வைத்தலும், இரட்டுறமொழிதல்- ஒருவாக்கியத்தில் இரண்டுபொருள் படச் சொல்லுதலும், ஏதுவின்முடித்தல்- முன்காரணம் விளங்காததாகச்சொல்லப்பட்ட ஒன்றற்குப்பின்காரணம் விளங்கக் காட்டி முடிவு செய்தலும், ஒப்பின்முடித்தல்- ஒன்றற்குச் சொல்லப் பட்ட இலக்கணம் வேறொன்றற்கும்ஒத்துவருமாயின் அதற்கும் அதுவேஇலக்கணமாகமுடிவு செய்தலும், மாட்டெறிந்தொழுகல்-ஒன்றற்குச்சொல்லப்பட்ட இலக்கணத்தைஅதனைப்பெறுதற்குரிய மற்றொன்றற்குமாட்டிச்சொல்லி நடத்தலும், இறந்ததுவிலக்கல்- முற்காலத்துவழங்கிய இலக்கணங்களுள்ளே பிற்காலத்து வழங்காமற் போனவைநீக்குதலும், எதிரதுபோற்றல்- முற்காலத்து வழங்காமற் பிற்காலத்து வழங்கி வருகின்ற இலக்கணத்தைத் தழுவிக்கொள்ளுதலும், முன்மொழிந்துகோடல்- முன்னே ஒன்றனைச் சொல்லிப்பின்பு அதனைவேண்டுமிடந்தோறும் எடுத்துக்கொள்ளுதலும், பின்னதுநிறுத்தல்- ஒருபொருளுக்குக் கருவியாகமுன்வைத்தற்குரியதுஅங்கே வைத்தற்கு இடம்பெறாதாயின் அப்பொருளின் பின்னே அதனை வைத்தலும், விகற்பத்தின்முடித்தல்- விளங்குதற் பொருட்டுப்பல வேறுபாடுகளின் சிறப்புவாய்பாட்டான் முடித்தலும்,முடிந்தது முடித்தல்-சிறப்புவாய்பாட்டான்முடிந்ததைப்பொதுவாய்பாட்டான்முடித்தலும்,உரைத்துமென்றல்- பின்னே சொல்லப்படுவதை,முன்னே ஒருநிமித்தத்தினாலே சொல்லவேண்டியவிடத்ததனைப்பின்னே சொல்லுவோமென்பதுதோன்ற அங்கேகுறிக்கச்சொல்லுதலும், உரைத்தாமென்றல்- முன்னே ஒருநிமித்தத்தினாலே சொல்லப்பட்டதைப் பின்னேசொல்லவேண்டியவிடத்ததனைமுன்னேதானே சொல்லினோமென்பதுதோன்றச்சொல்லாதுவிடுதலும், ஒருதலைதுணிதல்- ஒன்றற்கொன்று மாறுபாடாகக்கொண்ட விரண்டுபட்சத்துள் ஒருபட்சந்துணிதலும்,எடுத்துக்காட்டல்-தான்சொல்லுமிலக்கணத்திற்குத்தானே இலக்கியத்தை எடுத்துக்காட்

இதற்கு-இவ்விடத்திற்கு, இவ்வகையாமென- இவ்வகையாகுமென்று நினைத்து, தகும்வகை- தக்கவகையாக, செலுத்துதல்- நடத்துவது, தந்திரவுத்தி- தந்திரவுத்தியாம். எ-று. (பொ-ரை.) ஓரிலக்கண நூலாலுணர்த்தப்படும் பொருளை நூல்வழக்கோடு முலகவழக்கோடும் பொருந்தவுணர்த்தி யப்பொருளைமற்றோரிலக்கிய நூற்கண்ணு மேற்குமிடமறிந்தவ்விடத்திற்கிஃ தாமெனக்கருதித்தக்க வகையாகச்செலுத்துவது தந்திரவுத்தியாம். எ-று. ❋ தந்திரமென்பது நூல். உத்தியானமைக்கும்பொருளை யுத்தி யென்றதாகு பெயர். (௰ரு)

(௰சு) நேரினமணியை நிரல்படவைத்தாங்- கோரினப்பொருளை
யொருவழிவைப்ப- தோத்தெனமொழிப வுயர்மொழிப்புலவர். *

(எ-ன்.) இருவகைபுறப்பினு ளோத்துறுப்பாமாறுணர்-ற்று. (ப-ரை.) நேரின- ஒருசாதியாயுள்ள, மணியை- மணிகளை, நிரல்பட- வரிசையாக, வைத்தாங்கு- பதித்ததுபோல, ஓரினம்-ஒருசாதியாயுள்ள, பொருளை- பொருள்களை, ஒருவழி- ஒருவழிப்பட, வைப்பது- சொல்லுவது, ஓத்தென-இயலுறுப்பென்று, மொழிப- சொல்லுவார், உயர்மொழி-உயிர்க்குறுதியைத்தருகின்ற உண்மைச்சொல்லுகளையுடைய, புலவர்- வித்துவான்கள். எ-று. (பொ-ரை) ஒருசாதியாயுள்ளமணிகளை முறையே பதித்தாற்போல வொருசாதியாயுள்ள பொருள்களை யொருவழிப்படக் கூறுவ தோத்துறுப்பா மெனச்சொல்லுவ ருயிர்க்குறுதிபயக்கு மெய்ம்மொழிகளையுடையபுலவர். எ-று ❋ நேர்தல் ஒன்றுபடுதல். இவ்வாறு வருதலிந்நூலுறுப்பினுட்காண்க. (௰சு)

(௰எ.) ஒருநெறியின்றி விரவியபொருளாற் - பொதுமொழி
தொடரி னதுபடலமாகும். *

(எ-ன்.) படலவுறுப்பாமாறுணர்-ற்று. (ப-ரை.) ஒருநெறியின்றி-ஒருவழிப்படாமல், விரவியபொருளால்-கலந்தபொருள்களோடுபொருந்தி, பொதுமொழி- பலபொருள்களைத் தரும் பொதுச்சொல்லுகள், தொடரின்-ஓரோவிடத்தன்றித்தொடர்ந்துவந்தால், அது- அது, படலமாகும்- படலவுறுப்பாகும், எ-று. (பொ-ரை.) ஒருவழிப்படாது விராய பொருளோடு பொருந்திப் பலபொருளை புணர்த்தும் பொதுச்சொற்க ளோரோவழியன்றித் தொடர்ந்துவரி னதுபடலவுறுப்பாம். எ-று. ❋ படலவுறுப்பினையுடைய காப்பியங்களுட் பாட்டுடைத்தலைவனது சரிதையேயன்றி மலைகடன் முதலிய பலபொருட்டிறங்களும் விரவி வருதலும் பலபொருளையுணர்த்தும் பொதுச்சொற்க ளோரோவழியன்றித் தொடர்ந்துவருதலுங்காண்க. (௰எ)

(௰அ) சில்வகையெழுத்திற் பல்வகைப்பொருளைச் - செவ்வ
னாடியிற் செறித்தினி துவிளக்கித் - திட்பநுட்பஞ் சிறந்தனசூத்
திரம். ❊

(எ-ன்.) சூத்திரமாமாறுணர்-ற்று. (ப-ரை.) ஆடியின் - பெரி
யசரீரமுதலானவைகளின் சாயையைத் தனக்குள்ளே செவ்வையா
கவடக்கி இனிதாகக்காட்டுகின்ற கண்ணாடியைப்போல, சில்வகை
யெழுத்தில் - சிலவகையெழுத்துகளாலாகியசொல்லுகளில், பல்வ
கைப்பொருளை - பலவகைப்பட்டபொருள்களை, செவ்வன் - செ
வ்வையாக, செறித்து - அடக்கி, இனிது - இனிதாக, விளக்கி- கா
ட்டி, திட்பம்- பலபொருளினுடையதிண்மையும், நுட்பம் அ
வற்றினுடையநுண்மையும், சிறந்தன - சிறந்துவருவன, சூத்திர
ம் - சூத்திரங்களாகும். எ-று. (பொ-ரை.) சிறியகண்ணாடியிற்பெ
ரிய சரீரமுதலியவற்றின்சாயை செவ்வாகச்செறிந்தினிதாகவிளங்
கினாற்போலச் செவ்வாகச்செறிந்தினிதாகவிளங்கச்சில்வகையெழுத்
துகளானியன்ற யாப்பின்கட் பல்வகைப்பட்டபொருள்களைச் செ
வ்வாகச்செறித்தினிதாகவிளக்கி யப்பலபொருட்டிண்மையு நுண்
மையுஞ்சிறந்துவருவன சூத்திரங்களாம். எ-று. ❊ திட்பங்குற்ற
மின்மையினலைவறநிற்றல். இவ்வாறுவருதல் இச்சூத்திரத்துள்ளுங்
காண்க. (௰அ)

(௰௯) ஆற்றொழுக்கரிமா நோக்கந்தவளைப் - பாய்த்துப்பரு
ந்தின்வீழ் வன்னசூத்திர நிலை. ❊

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை.) ஆற்றொழுக்கு - நடுவில்விடா
துசெல்லுகின்ற ஆற்றுவெள்ளத்தினது செல்லுகையையும், அரி
மாநோக்கம் - முன்னும்பின்னும் பார்க்கின்ற சிங்கத்தினது பார்
வையையும், தவளைப்பாய்த்து-நடுவேயிடம்விட்டுக்குதிக்கின்ற த
வளையினது குதித்தலையும், பருந்தின்வீழ்வு - நெடுந்தூரத்திலிரு
ந்து ஒன்றை வெளவிப்போதற்கு வீழ்கின்ற பருந்தினது வீழ்ச்
சியையும், அன்ன- போலும், சூத்திரம் - முன்சொன்ன சூத்திர
ங்கள், நிலை - ஒன்றோடொன்று தொடர்ந்துநிற்குநிலைகள். எ-று.
(பொ-ரை.) மேற்கூறிய சூத்திரங்களொன்றோடொன்றுதொடர்
ந்து நிற்குநிலைக ளாற்றொழுக்குமுதலியநான்கினையும்போலும்.
எ-று. ❊ இவ்வாறுநிற்றல் இந்நூலுள்வந்துழிவந்துழிக்காட்டுது
மாங்காங்குணர்க. (௰௯)

(௨௰) பிண்டந்தொகைவகை குறியேசெய்கை - கொண்டியல்
புறனடைக் கூற்றனசூத்திரம். ❊

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை.) பிண்டம் - பலதிறப்பொருள்
களுக்குப்பொதுவாகப்பிண்டமாக்கிச்சொல்லும்பிண்டசூத்திரமு
ம், தொகை - அப்பலதிறப்பொருள்களையும் வேறுவேறாகத் தொ

குத்துச்சொல்லுந் தொகைச்சூத்திரமும், வகை - அத்தொகுத்து ச்சொல்லப்பட்டவைகளை வகுத்துச்சொல்லும் வகைச்சூத்திரமும், குறி - இவையுயிர்- இவைமெய்யெனவறியவருங் குறிச்சூத்திரமும், செய்கை - புணர்ச்சிவிதியறிந்து புணர்த்தலையும் முடிபுவிதியறிந்துமுடித்தலையுஞ் செய்யுஞ் செய்கைச்சூத்திரமும், கொண்டியல்புறனடை - இவைகளை அலைவறக்கொண்டு இவைகளின்புறத்து அடையாகவருகின்ற புறனடைச்சூத்திரமுமாகிய, கூற்றன- ஆறுபிரிவை யுடையன, சூத்திரம் - சூத்திரங்கள். எ-று. (பொ-ரை.) பிண்டமெனவுந் தொகையெனவும்வகையெனவுங்குறியெனவுஞ் செய்கையெனவும் இவற்றை யலைவறக்கொண் டிவற்றின் புறத்தடையாய்வரும் புறனடையெனவுங் கூறுங்கூற்றினை யுடையவா மேற்கூறிய சூத்திரங்கள். எ-று. ❋ இவற்றுட் பிண்டமாவன பன்னிருபாற்றதுவே யென்றற்றொடக்கத்துத் தொகை போலாது நன்கியம்புவனெழுத்தே யென்றற்றொடக்கத்துப் பொதுப்படவருவன. தொகையும்வகையும்புறனடையும் வந்துழிவந்துழிக்காட்டுது மாங்காங்குணர்க. விரி வகையின்பாற்படுதலிற் கூறாராயினார். குறியாவன இவை யுயிரிவையொற்றிவைபெயரிவைவினையென்றற்றொடக்கத் தறிதன்மாத்திரையாய்வருவன. குறியென்பதறிதலை புணர்த்தியமுதனிலைத் தொழிற்பெயர். செய்கையாவன பதமுன்விகுதியும் பதமுமுருபும் புணரும்புணர்ச்சிவிதியறிந்து அங்ஙன மறிதன்மாத்திரையாய்நில்லா தவ்வாறுவேண்டுழிப் புணர்த்தலைச்செய்தலும் பெயர்வினைமுதலியகொள்ளுமுடிபுவிதியறிந்து அங்ஙன மறிதன்மாத்திரையாய்நில்லா தவ்வாறுவேண்டுழி முடித்தலைச் செய்தலுமு தலியன. இப்பிண்டமுதலியவாறு பெயருமப்பொருளை புணர்த்துஞ் சூத்திரங்கட்கு ஆகுபெயராய்வந்தன. எல்லாச்சூத்திரங்களும் பிண்டந் தொகை வகைபுறனடையென்னு நான்கனுளடங்குமன்றே அங்ஙனமாகக் குறியினையுஞ் செய்கையினையும் வேறுகூறிய தெல்லா நூலுள்ளுஞ் சொல்லப்படுவன வறிவதுஞ் செய்வது மன்றி வேறின்மையிற் பிண்டமாக்கியுந் தொகுத்தும் வகுத்தும் புறத்தடை கொடுத்துங்கூறப்படுவன குறியுஞ்செய்கையுமே யென்பது தோன்றற்கென்க. இங்ஙனங்கூறவே யெல்லா நூலுள்ளும் வருமெல்லாச் சூத்திரங்களுங் குறிச்சூத்திரஞ் செய்கைச் சூத்திரமென இரண்டாயடங்குமென்பது பெற்றாம். இவ்வாறன்றிக் குறியென்பதற்குப் பெயர்களை புணர்த்துஞ் சூத்திரமென்றுஞ் செய்கையென்பதற்கெழுத்துப்புணர்ச்சியை புணர்த்துஞ் சூத்திரமென்றும் பொருள் கூறுவாருமுளர். அங்ஙனங்கூறி னேனையிலக்கணங்களைக்கூறுஞ் சூத்திரங்களையும் விதந்துகூறவேண்டு மவையின்மையானும்பெ

யரும் புணர்ச்சியும் இவ்விலக்கண நூற் கன்றிப் பொதுப்பாயிர மா யெல்லா நூற்கும் பொருந்தாமையானு மது பொருளன்றென்க. (உ௰)

(உக) பாடங்கருத்தே சொல்வகைசொற்பொரு-டொகுத்து ரையுதாரணம் வினாவிடைவிசேடம் - விரிவதிகாரந் துணிவுபய னொ - டாசிரியவசனமென் றீரேழுரையே. ❀

(எ-ன்.) மேற்காண்டிகையுரை விருத்தியுரை யென்றார் அவற்றை யுணர்த்துவான் றொடங்கி யுரையினது பொதுவிலக்கண முணர்-ற்று. (ப-ரை.) பாடம் - பாடமும், கருத்து - கருத்துரையும், சொல்வகை - சொற்களை வகுத்துரைத்தலும், சொற்பொருள்-பதப்பொருளும், தொகுத்துரை- தொகுத்துரைத்தலும், உதாரணம் - உதாரணமும், வினா - வினாவும், விடை - உத்தரமும், விசேடம்-வேண்டியவைகளைத்தந்துரைத்தலும், விரிவு- வேற்றுமைத்தொகை முதலானவைகளை விரித்துரைத்தலும், அதிகாரம்-அதிகாரத்தோடுபொருந்தவுரைத்தலும், துணிவு-இதற்கு இதுவேபொருளெனவுரைத்தலும், பயன் - பயனையுரைத்தலும், ஆசிரியவசனம் - ஆசிரியவசனங்காட்டுதலும், என்று- என்றுசொல்லப்பட்ட, ஈரேழ்- பதினான்குவகையாலு முரைக்கப்படும், உரை- நூலுக்கு உரை. எ-று. (பொ-ரை.) இப்பதினான்குவகையா னுரைக்கப்படு நூற்குரை. எ-று. ❀ இவற்றுள் விசேடமாவது சூத்திரத்துட்பொரு ளன்றியாண்டைக்கு வேண்டுவன தந்துரைத்தல். விரிவாவது வேற்றுமைமுதலிய தொக்குநின்றனவற்றை விரிக்கவேண்டுழிவிரித்துரைத்தல். அதிகாரமாவதெடுத்துக்கொண்ட வதிகார மிதுவாதலி னிச்சூத்திரத் ததிகரித்த பொருளிதுவென அவ்வதிகாரத்தோடு பொருந்தவுரைக்கவேண்டுழியுரைத்தல். துணிவாவதையுறக்கிடந்துழி யிதற்கிதுவே பொருளெனவுரைத்தல். ஏனையபொருள்விளங்கிக்கிடந்தன. இப்பதினான்குமிவ்வுரையுள் வந்துழிவந்துழிக்காட்டுது மாங்காங்குணர்க. (உக)

(உஉ) கருத்துப்பதப்பொருள் காட்டுமூன்றினு - மவற்றொடு வினாவிடை யாக்கலானுஞ் - சூத்திரத்துட்பொரு டோற்றுவகாண் டிகை. ❀

(எ-ன்.) காண்டிகையுரையாமாறுணர்-ற்று. (ப-ரை.) கருத்து- கருத்துரையும், பதப்பொருள் - பதவுரையும், காட்டு - உதாரணமும், மூன்றினும்- ஆகியமூன்றனையுஞ்சொல்லுதலானும், அவற்றொடு- அம்மூன்றனோடு, வினா- வினாவும்- விடை- உத்தரமும், ஆக்கலானும்- ஆகிய விரண்டனையுங்கூட்டிச்சொல்லுதலானும், சூத்திரத்துள்- சூத்திரத்துளிருக்கின்ற, பொருள் - பொருளை, தோற்றுவ - காட்டுவன, காண்டிகை - காண்டிகையுரைகளாம். எ-று.

(பொ-ரை.) மேற்கூறிய பதின்மூன்றினுட் கருத்துரையும் பதப்
பொருளும் உதாரணமுமாகிய மூன்றனையு முரைத்தலானும் அ
ம்மூன்றனோடு வினாவிடையென்னு மிரண்டனையுங் கூட்டியுரை
த்தலானுஞ் சூத்திரத்துட்பொருளை விளக்குவனகாண்டிகையுரை
களாம். எ-று. (உஉ)

(உஙூ) சூத்திரத்துட்பொரு ளன்றியுமாண்டைக் - கின்றியமை
யா தியாவையும்விளங்கத்- தன்னுரையானும் பிறநூலானு- மைம்
யமகலவைங் காண்டிகையுறுப்பொடு- மெய்யினையெஞ்சா திசை
ப்பதுவிருத்தி. *

(எ-ன்.) விருத்தியுரையாமாறுணர்-ற்று (ப-ரை.) சூத்திரத்து
ள் - சூத்திரத்துள்ள, பொருளன்றியும் - பொருளையல்லாமலும்,
ஆண்டைக்கு-அவ்விடங்களுக்கு, இன்றியமையாதியாவையும் - இ
ல்லாதுநிறையாத வெல்லாப்பொருள்களும், விளங்க - விளங்கும்
படியாக, தன்னுரையானும் - தானுரைக்குமுரையாலும், பிறநூ
லானும் - ஆசிரியவசனங்களாலும், ஐங்காண்டிகையுறுப்பொடு-
முன்சொன்ன காண்டிகை யுரையின் அவயவமாகிய ஐந்தனுலும்,
ஐயமகல - சந்தேகந்தீர, மெய்யினை - மெய்ம்மைப்பொருளை, எ
ஞ்சாது - குறையாமல், இசைப்பது - விரித்துரைப்பது, விருத்
தி- விருத்தியுரையாகும். எ-று. (பொ-ரை.) காண்டிகையுரைபோ
ற் சூத்திரத்துட் பொருள் விளக்குதன் மாத்திரையினில்லாது அ
வ்விடங்கட் கின்றியமையாத பொருள்கள் யாவையும்விளங்கத் தா
னுரைக்குமுரையானும் ஆசிரியவசனங்க ளானுமேற்கூறிய காண்
டிகையுறுப்பைந்தனானும் ஐயந்தீரச் சுருங்காது மெய்ம்மைப்
பொருளை விரித்துரைப்பது விருத்தியுரையாம். எ-று. ❁ சூத்
திரத்துட் பொருளன்றியுமென்றமையான்மேற்கூறியபதின்மூன்
உறுப்புங்கொண்டது விருத்தியுரை யென்பதுபெறும். (உங)

(உச) பஞ்சிதன்சொல்லாப் பனுவலிழையாகச் - செஞ்சொ
ற்புலவனே சேயிழையா - வெஞ்சாத - கையேவாயாகக் கதிரேம
தியாக - மையிலா நூன்முடியு மாறு. *

(எ-ன்.) நூலென்னும்பெயர் வருமாறுணர்-ற்று. (ப-ரை.) இ
தன்சொல்- இதனதுசொல், பஞ்சா- பஞ்சாகவும், பனுவல்-செ
ய்யுள், இழையாக - இழையாகவும், செஞ்சொற்புலவன் - செவ்
வையாகிய சொல்லுகளையறிந்தபுலவன், சேயிழையா- நூற்கின்ற
பெண்ணாகவும், எஞ்சாத- குறையாத, வாய் - வாய், கையாக- கை
யாகவும், மதி - அறிவு, கதிராக- கதிராகவும், மையிலா- குற்றமில்
லாத, நூல்- இந்நூலானது, முடியுமாறு - முடியும்வழி இதுவா
கும். எ-று. (பொ-ரை.) இந்த நூன்முடியுமாறிதுவாதலினூ

லென்றது உவமையாகுபெயராம். எ-று. (உச)

(உரு) உரத்தின்வளம்பெருக்கி யுள்ளியதீமைப் - புரத்தின்வள முருக்கிப் பொல்லா - மரத்தின் - கனக்கோட்டந்தீர்க்குநூ லஃதே போன்மாந்தர் - மனக்கோட்டந்தீர்க்குநூன் மாண்பு. *

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை.) புரத்தின் - உடம்பினுளிருக்கின்ற, உரத்தின்வளம் - அறிவின்வளத்தை, பெருக்கி - வளர்வித்து, உள்ளிய - நினைக்கப்பட்ட, தீமைவளம் - அறியாமையின்வளத்தை, முருக்கி - கெடுத்து, பொல்லாமரத்தின் - பொல்லாதமரத்தினது, கனக்கோட்டம் - கனம்பொருந்தியகோணலை, நூல் - எற்றுநூலானது, தீர்க்கும் - நீக்கும், அஃதேபோல் - அதுபோலவே, நூல் - கல்விநூலானது, மாந்தர் - மனிதரது, மனக்கோட்டம் - மனத்தினது கோணலை, தீர்க்கும் - நீக்கும், மாண்பு - அந்நூல்போலச் செய்யுஞ்செய்யு மிம்மாட்சிமையாலும் நூலென்றது உவமவாகுபெயராம். எ-று. (பொ-ரை) அந்நூல்போற் செய்யுஞ் செய்தலானு நூலென்றது உவமையாகுபெயராம். எ-று. ❀ புரத்தினதுரத்தின்வளம் பெருக்கியுள்ளியதீமை வளமுருக்கியெனக்கூட்டுக. புரம் - உடம்பு. உரம் - நெஞ்சு. பின்பு தீமைவளமென்றமையான் முன்பு நல்வளமெனத்தந்துரைக்க. நல்வளம் - அறிவு. தீமைவளம் - அறியாமை. (உரு)

(உசா) குலனருடெய்வங் கொள்கைமேன்மை - கலைபயிறெளிவு கட்டுரைவன்மை - நிலமலைநிறைகோன் மலர்நிகர்மாட்சியு - முலகியலறிவோ டுயர்குணமினையவு - மமைபவனூலுரை யாசிரியன்னே. *

(எ-ன்.) நிறுத்தமுறையானே ஆசிரியனதுவரலாறுணர்-ற்று. (ப-ரை.) குலன் - நற்குலசாதியும், அருள் - கருணையும், தெய்வங்கொள்கை - கடவுள்வழிபாடும், மேன்மை - மேம்பாடும், கலைபயிறெளிவு - நூல்களிலேபழகியதெளிவும், கட்டுரைவன்மை - தொடுத்துச்சொல்லுகின்ற உரைவலிமையும், நிலமலைநிறைகோன்மலர்நிகர் - நிலத்தையும் மலையையுந்துலாக்கோலையும் மலரையுநிகர்க்கின்ற, மாட்சியும் - குணங்களும், உலகியல் - உலகநடையை, அறிவு - அறியுமறிவும், உயர்குணம் - உயர்வாகியகுணங்கள், இனையவும் - இவைபோல்வனபிறவும், அமைபவன் - நிறைந்திருப்பவன், நூலுரையாசிரியன் - நூல்கற்பிக்கும் ஆசிரியனாவான். எ-று. (பொ-ரை.) இவ்வியல்பினையுடையார்கற்பிக்கும் ஆசிரியராவார். எ-று. (உசா)

(உஎ) தெரிவரும்பெருமையுந் திண்மையும்பொறையும் - பருவமுயற்சி யளவிற்பயத்தலு - மருவியநன்னில மாண்பாகும்மே. *

(எ-ன்.) மேற்கூறியவுவமையை விரித்துணர்-ற்று. (ப-ரை.) தெரிவரும்பெருமையும் - பிறராலறியப்படாத உருவத்தின்பெருமை

யும்,திண்மையும்-பெரியபாரஞ்செய்துதன்மேலேநெருக்கினவைகளாற்கலங்காதவலிமையும்,பொறையும்-தன்னையடித்தமனிதர்தோண்டுதலாதியாகிய குற்றங்களைச்செய்யினும் பொறுக்கின்ற பொறுமையும்,பருவமுயற்சி யளவிற்பயத்தலும்- பருவத்திலேஉழவர்செய்கிறமுயர்ச்சியளவிற்குத்தக அவருக்குப்பயனைத்தருதலும், நன்னிலம்- நல்லநிலத்தினிடத்து, மருவிய-பொருந்திய,மாண்பாகும் குணங்களாகும். எ-று. (பொ-ரை) நிலத்தினது மாட்சிமையிதுவாதலினிஃது உவமையாயிற்று. எ-று. (உஎ)

(உஅ) அளக்கலாகா வளவும்பொருளுந் - துளக்கலாகா நிலையுந் தோற்றமும்- வறப்பினும்வளந் தருவண்மையுமலைக்கே. *

(எ-ன்.) இதுவுமது (ப-ரை) அளக்கலாகாவளவும்-அளவுசெய்யப்படாததன்வடிவத்தினளவும், அளக்கலாகாப்) பொருளும்- அளவு செய்யப்படாதபலவகைப்பொருளும்,துளக்கலாகா நிலையும்-எப்படிப்பட்டவலிமையுடையவராலும் அசைக்கப்படாத உருவத்தினிலையும்,தோற்றமும்-நெடுந்தூரத்திலுள்ளாராலுங்காணப்படும் உயர்ச்சியும், வறப்பினும்வளந்தரும்வண்மையும் - மழைபெய்யாமல் வறந்த காலத்திலுந் தன்னைச்சேர்ந்த உயிர்களுக்குக் குளிர்ச்சியைக்கொடுக்கிற கொடையும், மலைக்கு- மலைக்குள்ள குணங்களாகும். எ-று. (பொ-ரை.) மலையினதுமாட்சிமையிதுவாதலினிஃது உவமையாயிற்று. எ-று. (உஅ)

(உகூ) ஐயந்திரப் பொருளையுணர்த்தலு - மெய்ந்நடுநிலையு மிகுநிறை கோற்கே. *

(எ-ன்.) இதுவுமது (ப-ரை) ஐயந்திரப் பொருளையுணர்த்தலும்-சந்தேகந்தீரநிறுக்கப்பட்டபண்டத்தினளவைக்காட்டலும், மெய்ந்நடுநிலையும்- உண்மைபெறத்தான் இரண்டு தட்டுகளுக்கும் நடுவேநிற்கையும், நிறைகோற்கு- தராசுகோலின்கண், மிகும்- குணங்களாகமிகும். எ-று. (பொ-ரை) நிறைகோலினது மாட்சிமையிதுவாதலினிஃது உவமையாயிற்று. எ-று. (உகூ)

(ஙய) மங்கலமாகி யின்றியமையா - தியாவருமகிழ்ந்து மேற்கொளமெல்கிப்-பொழுதின்முகமலர் வுடையதுபூவே. *

(எ-ன்) இதுவுமது (ப-ரை) மங்கலமாகி - சுபச்செய்கைக்குரியதாகி, இன்றியமையாது - யாதொருசெயலும் அதற்கின்றித்தானில்லாதுமுடியாததாக,யாவருமகிழ்ந்துமேற்கொள - கண்டோர் யாவருங்களித்துமேலாகத்தன்னைச் சூடிக்கொள்ள, மெல்கி - மெல்லியகுணமுடையதாகி, பொழுதின்முகமலர்வுடையது - மலர்தற்குரிய காலத்திலேமுகம் விரிதலையுடையது, பூ- பூவாகும். எ-று. (பொ-ரை) மலரினதுமாட்சிமையிதுவாதலினிஃது உவமையாயிற்று. எ-று. * இவ்வுவமைகளினது மாட்சிமைபோலப் பொரு

ளினது மாட்சிமையும் விரித்துரைத்துக்கொள்க. (௩௰)

(௩௧). மொழிகுணமின்மையு மிழிகுணவியல்பு - மழுக்காறவா வஞ்சமச்சமாடலுங்-கழற்குடமடற்பனை பருத்திக்குண்டிகை-முடத்தெங்கொப்பென முரண்கொள்சிந்தையு-முடையோரிலரா சிரியராகுதலே. *

(எ-ன்) ஆசிரியராகாரிவரெனவுணர்-ற்று. (ப-ரை) மொழிகுணமின்மையும்- பாடஞ்சொல்லுங் குணமில்லாமையையும், இழிகுணவியல்பும்- இழிகுணமாகியசுபாவத்தையும், அழுக்காறு- பிறருடைய கல்வியைக்குறித்தக்கொள்ளும் பொறாமையையும், அவா - பொருளின்மேலதிகமாகவைக்குமாசையையும், வஞ்சம்- மெய்ப்பொருளைமறைத்துப் பொய்ப்பொருளைக்காட்டி வஞ்சித்தலையும், அச்சமாடலும்- கேட்போர்க்கு அச்சமுண்டாகப் பேசுதலையும், கழற்குட மடற்பனை பருத்திக்குண்டிகை முடத்தெங்கு - கழற்குடமும் மடற்பனையும் பருத்திக்குண்டிகையும் முடத்தெங்கும் ஆகியநான்கனையும், ஒப்பென- ஒப்பென்றுசொல்ல, முரண்கொள்சிந்தையும்- மாறுபாடுகொண்டகருத்தையும், உடையோர்- தம்மிடத்திலுடையவர், ஆசிரியராகுதல்-கற்பிக்குமாசிரியராகுதல், இலர்-இலராவர். எ-று. (பொ-ரை) இக்குற்றங்களையுடையோர் கற்பிக்கும் ஆசிரியராகார். எ-று. (௩௧)

(௩௨) பெய்தமுறையன்றிப் பிறழவுடன்றருஞ் - செய்திகழற் பெய் குடத்தின்சீரே. *

(எ-ன்) மேற்கூறிய வுவமையை விரித்துணர்-ற்று. (ப-ரை) பெய்தமுறையன்றி - தன்னுள்ளேபோட்டமுறையினாலல்லாமல், பிறழ-முன்போடப்பட்டவையும் பின்போடப்பட்டவையும் அம்முறைபிறழ்ந்துபோக, உடன்றரும்- விரைவிலே தன்னுள்ளே கொண்ட கழற்காய்களைக் கொடுக்கின்ற, செய்தி - செய்கையானது, கழற்பெய்குடத்தின்சீர்- கழற்காய்போட்ட குடத்தினது குற்றமாம், எ-று. (பொ-ரை) கழற்பெய்தகுடத்தின் குற்றமிதுவாதலின்ஃது உவமையாயிற்று. எ-று. (௩௨)

(௩௩) தானேதரக்கொளா னன்றித்தன்பான் - மேவிக்கொளக் கொடா விடத்ததுமடற்பனை. *

(எ-ன்) இதுவுமது (ப-ரை) தானேதர - தானேதன்னிடத்துள்ளபழங்களைத்தர, கொளானன்றி- கொண்டாற்கொள்ளலாமையல்லாமல், தன்பால்மேவிக்கொள- ஒருவர்தன்னிடத்து நெருங்கிவந்துபறித்துக்கொள்ள, கொடாவிடத்தது - அப்பழங்களைக் கொடாவிடத்தையுடையது, மடற்பனை- தலைவடிவடு கூறுமடல்விரிந்தபனை, எ-று. (பொ-ரை) மடற்பனையின் குற்ற மிதுவாதலின்ஃது உவமையாயிற்று. எ-று. (௩௩)

(௩௪) அரிதிற்பெயக்கொண் டப்பொருடான்பிறர்க் - கெளிதி லில்லது பருத்திக்குண்டிகை. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) அரிதிற்பெயக்கொண்டு- பஞ்சைக்கொண்டபோதும் வருத்தத்தோடுசிறிதுசிறிதாக அடைப்பத்தன்னுள்ளேகொண்டு,அப்பொருடான்பிறர்க்கெளிதீவில்லது- கொடுக்கும்போதும் அப்பஞ்சைத் தான்பிறர்க்கு எளிதிற்கொடாத குற்றமுடையது, பருத்திக்குண்டிகை - பஞ்சுபோட்ட குடுக்கையாகும்.எ-று. (பொ-ரை) பருத்திபெய்தகுண்டிகையின் குற்றமிதுவாதலினிஃது உவமையாயிற்று. எ-று. (௩௪)

(௩௫) பல்வகையுதவி வழிபடுபண்பி - னல்லோர்க்களிக்கு மதுமுடத்தெங்கே. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) பல்வகையுதவி- நீர்விடுகை முதலாகிய பலவகையுபகாரங்களையுஞ்செய்து, வழிபடுபண்பின்- தனக்குவழிபாடுசெய்யுங்குணத்தினின்றும், அல்லோர்க்கு- அல்லாதபிறருக்கு, அளிக்குமது - தன்னிடத்துள்ளகாய்களைத் தருங்குற்றமுடையது, முடத்தெங்கு- வேலிக்கப்புறம்வளைந்ததென்னமரமாம் எ-று. (பொ-ரை) முடத்தெங்கினது குற்றமிதுவாதலினிஃது உவமையாயிற்று.எ-று. ❋ இவ்வுவமைகளின்குற்றம்போலப் பொருளின் குற்றமும்விரித்துரைத்துக்கொள்க. (௩௫)

(௩௬) ஈதலியல்பே யியம்புங்காலைக் - காலமுமிடனும் வாலிதினோக்கிச்- சிறந்துழியிருந்துதன் றெய்வம்வாழ்த்தி- யுரைக்கப்படும்பொரு ளுள்ளத்தமைத்து - விரையான்வெகுளான் விரும்பிமுகமலர்ந்து- கொள்வோன்கொள்வகை யறிந்தவனுளங்கொளக்- கோட்டமின்மனத்தினூல் கொடுத்தலென்ப. *

(எ-ன்) திறுத்தமுறையானே ஆசிரியன்கற்பிக்குமாறுணர்-ற்று (ப-ரை) ஈதல்- பாடஞ்சொல்லுதலினது, இயல்பு-வரலாற்றை,இயம்புங்காலை- சொல்லும்போது, காலமும்-உரியகாலத்தையும், இடனும்- உரிய இடத்தையும், வாலிதின்- தூயனவாக,நோக்கி-பார்த்து, சிறந்துழியிருந்து- சிறந்தவிடத்திருந்து, தன்றெய்வம்-தான்வழிபடுகடவுளை, வாழ்த்தி- வாழ்த்துதல்செய்து,உரைக்கப்படும்பொருள்-பாடஞ்சொல்லப்படும்பொருளை,உள்ளத்து-தன்கருத்தின்கண், அமைத்து- நிறைத்து, விரையான்-விரையானாகியும், வெகுளான்-கோபஞ்செய்யானாகியும், விரும்பி- இச்சித்து, முகமலர்ந்து - முகமலர்ச்சியையடைந்து, கொள்வோன் - கேட்பவனது, கொள்வகை- கேட்குமறிவின்வகையை, அறிந்து-உணர்ந்து, அவனுளம்- அவனதுள்ளம், கொள-ஏற்றுக்கொள்ள, கோட்டமில்-மாறுபாடில்லாத, மனத்தின்- மனத்துடனே, நூல்-நூலை, கொடுத்தல்-

கொடுத்தலாகும், என்ப- என்றுசொல்லுவர்புலவர். எ-று. (பொ-ழி) கற்பிக்குமாறிவ்வாறெனச் சொல்லுவர்புலவர், எ-று. (௩௬)

(௩௭) தன்மகனாசான் மகனேமன்மகன்- பொருணனிகொடுப்போன் வழிபடுவோனே- யுரைகோளாளற் குரைப்பது நூலே.*

(எ-ன்) இறுத்தமுறையானே மாணாக்கராவாராமாறுணர்-த்-று. (ப-ரை) தன்மகன்-தன்புதல்வனுக்கும், ஆசான்மகன் - தன்னாசிரியன்புதல்வனுக்கும், மன்மகன்- அரசன்புதல்வனுக்கும், பொருணனிகொடுப்போன் - பொருளைமிகுதியாகக்கொடுப்போனுக்கும், வழிபடுவோன் - வழிபாடுசெய்வோனுக்கும், உரைகோளாளற்கு - தன்னாற்சொல்லப்பட்ட உரையை விரைவிலேயேற்கும் அறிவுடையோனுக்கும், உரைப்பது-சொல்லப்படுவது, நூல்-நூலாகும். எ-று. (பொ-ழி) இவ்வறுவர்க்குஞ்சொல்லப்படுவது நூல். எ-று.

(௩௮) அன்னமாவே மண்ணொடுகிளியே- யில்லிக்குடமா டெருமைநெய்யரி - யன்னர்தலையிடை கடைமாணாக்கர். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) அன்னம்- அன்னத்தையும், ஆ- பசுவையும், (அன்னர்) - போல்வார், தலை (மாணாக்கர்) - முதன்மாணாக்கர், மண் - மண்ணையும், கிளி - கிளியையும், (அன்னர்)- போல்வார், இடை (மாணாக்கர்) - நடுமாணாக்கர், இல்லிக்குடம் பொள்ளற்குடத்தையும், ஆடு - ஆட்டையும், எருமை - எருமையையும், நெய்யரி - பன்னாடையையும், (அன்னர்) - போல்வார், கடைமாணாக்கர் - கடைமாணாக்கர். எ-று. (பொ-ழி) மேற்கூறிய வறுவருளன்னமும் பசுவும்போல்வார் தலைமாணாக்கர் மண்ணுங்கிளியும்போல்வார் இடைமாணாக்கர் இல்லிக்குடமும் ஆடும் எருமையும் நெய்யரியும்போல்வார் கடைமாணாக்கர். எ-று. ❁ இவ்வுவமைத்திறமும் பொருட்டிறமும் விரித்துரைத்துக்கொள்க. (௩௮)

(௩௯) களிமடிமானி காமிகள்வன் - பிணியனேழை பிணக்கன் சினத்தன் - றுயில்வோன்மந்தன் றொன்னூற்கஞ்சித் - தடுமாறுளத்தன் றறுகணன்பாவி - படிறனின்னோர்க்குப் பகரார்நூலே*

(எ-ன்) மாணாக்கராகாரிவரெனவுணர்-த்-று. (ப-ரை) களி- கட்குடியனும், மடி - சோம்பேறியும், மானி- அபிமானமுடையவனும், காமி- காமமுடையவனும், கள்வன் - திருடனும், பிணியன்-நோயாளியும், ஏழை ஏழைமையுடையவனும், பிணக்கன்-பிணக்குடையவனும், சினத்தன்- கோபமுடையவனும், துயில்வோன்- மிகத்தூங்குவோனும், மந்தன்- புத்திநுட்பமில்லாதவனும், தொன்னூற்கஞ்சித்தடுமாறுளத்தன் - பழையநூல்களைக்கண்டு அஞ்சித்தடுமாறுமுள்ளத்தையுடையவனும், தறுகணன்-அஞ்சத்தக்கவைகளை அஞ்சாதவனும், பாவி - பாவஞ்செய்வோனும், படிறன்- பொய்பேசுவோனும், இன்னோர்க்கு- ஆகிய இப்படிப்பட்டகுற்

றத்தையுடையவருக்கு, நூல் - நூலை, பகரார் - சொல்லார், எ-று. (பொ-ரை) இக்குற்றங்களையுடையார்க்கு நூலைச்சொல்லார் ஆசிரியர். எ-று. (௩௯)

(௪௰) கோடன்மரபே கூறுங்காலைப் - பொழுதொடுசென்று வழிபடன்முனியான் - குணத்தொடுபழகி யவன்குறிப்பிற்சார்ந்- திருவெனவிருந்து சொல்லெனச்சொல்லிப்-பருகுவனன்ன வார்வத்தனாகிச்- சித்திரப்பாவையி னத்தகவடங்கிச - செவிவாயாக நெஞ்சுகளனாகக்- கேட்டவைகேட்டவை விடாதுளத்தமைத்துப்- போவெனப்போத லென்மனார்புலவர். *

(எ-ன்) நிறுத்தமுறையானே மாணாக்கனூலைக்கற்குமாறுணர்-த்று. (ப-ரை) கோடன்மரபு- பாடங்கேட்கையினது வரலாற்றை, கூறுங்காலை- சொல்லும்பொழுது, பொழுதொடு - தருக்காலத்தில், சென்று- போய், வழிபடல் - வழிபாடுசெய்தலில், முனியான்- வெறுப்பில்லாதவனாகி, குணத்தொடு- ஆசிரியன் குணத்தோடுபொருந்த, பழகி- பயின்று, அவன்குறிப்பின் - அவன்குறிப்பின்வழியிலே, சார்ந்து- சேர்ந்து, இருவென- இருவென்றுசொன்னபின், இருந்து- இருந்து, சொல்லென- படியென்றுசொன்னபின், சொல்லி படித்து, பருகுவனன்ன- பசித்துண்பவனைப்போல, ஆர்வத்தனாகி - மிக்கவிருப்பத்தை யுடையவனாகி, சித்திரப்பாவையின்- சித்திரப்பாவையைப்போல, அத்தகவடங்கி - அவ்வகைவருந்தனைத்தினோடடங்கி, செவி- காதானது, வாயாக - வாயாகவும், நெஞ்சு- மனமானது, களனாக - கொள்ளுமிடமாகவும், கேட்டவை - முன் கேட்கப்பட்டவற்றை, கேட்டு - திருப்பிக்கேட்டு, அவை - அப்பொருள்களை, விடாது- மறந்துவிடாமல், உளத்து - உளத்தின்கண், அமைத்து- நிறைத்துக்கொண்டு, போவென - போவென்றபின், போதல் - போகுதலாகும், என்மனார் - என்றுசொல்லுவர், புலவர் - புலவரானவர். எ-று. (பொ-ரை) கற்குமாறிவ்வாறெனச் சொல்லுவர்புலவர். எ-று. (௪௰)

(௪௧) நூல்பயிலியல்பே நுவலின்வழக்கறிதல்-பாடம்போற்றல் கேட்டவைநினைத்த - லாசாற்சார்ந்தவை யமைவரக்கேட்டல், அம்மாணுடையோர் தம்மொடுபயிறல் - வினாதல்வினாயவை விடுத்தலென்றிவை கடனாக்கொளினே மடநனியிகக்கும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) நூல்பயிலியல்பு - நூலைக்கற்றலினியல்பு - நுவலின்- சொல்லின், வழக்கு- உலகவழக்கும் செய்யுள்வழக்குமாகிய இருவகைநடையையும், அறிதல் - அறிந்திருத்தலும், பாடம்- கேட்டபாடத்தை, போற்றல் - பலகாலுஞ்சிந்தித்தலும், கேட்டவை- தான்கேட்டபொருள்களை, நினைத்தல் - எண்ணுதலும், ஆசான்- ஆசிரியனை, சார்ந்து- அடுத்து, அவை - அப்பொ.

அமைவர-குறைவுதீர, கேட்டல்- கேட்டலும், அம்மாண்பு-அக்கல்வி மாட்சிமையை, உடையோர்தம்மொடு- உடையவரோடு, பயிறல் - பழகுதலும், வினாதல் - தான் ஐயுற்றபொருளை வினவுதலும், வினாயவைவிடுத்தல்- அவர் வினாவியவைகளுக்கு உத்தரங்கொடுத்தலும், என்று- என்றுசொல்லப்பட்ட, இவை-இச்செயல்களை, கடனா- முறையாக, கொளின்- மாணாக்கன் கொண்டால், மடம்- அறியாமையானது, நனி - மிகவும், இகக்கும் - அவனைவிட்டு நீங்கும். எ-று. (பொ-ரை) இவ்வாறு நூலைப்பயின்றவர்க்கறியாமைமிகுதியும்போம். எ-று. (௪௧)

(௪௨) ஒருகுறிகேட்போ னிருகாற்கேட்பிற் - பெருகநூலிற் பிழைபாடிலனே. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) ஒருகுறி - ஒருதரம், கேட்போன்- ஒருநூலைப்பாடங்கேட்பவன், இருகால் - இரண்டுதரம், கேட்பின்- கேட்டானாயின், பிழைபாடு- அந்நூலிற்பிழைபடுதல், பெருக- மிகுதியும், இலன்-இல்லாதவன். எ-று. (பொ-ரை) ஒருகாற்கேட்டதுணையானே யமையாது இருகாற்கேட்பானாகில் அந்நூலின் கட்பிழைபாடுமிகுதியுமிலன். எ-று. (௪௨)

(௪௩) முக்காற்கேட்பின் முறையறிந்துரைக்கும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) முக்கால்-மூன்றுதரம், கேட்பின்- கேட்டானாயின், முறை - ஆசிரியன்கற்பித்த முறையை, அறிந்து- உணர்ந்து, உரைக்கும் - சொல்லுவான். எ-று. (பொ-ரை) முக்காற்கேட்டானாகில் ஆசிரியன்கற்பித்தமுறையறிந்துரைப்பன். எ-று.

(௪௪) ஆசானுரைத்த தமைவரக்கொளினுங் - காற்கூறல்லது பற்றலனாகும். *

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை) ஆசான்- ஆசிரியன், உரைத்தது- கற்பித்தபொருளை, அமைவர - தன்னறிவினிடத்துநிறைய, கொளினும்- கற்றானாயினும், காற்கூறல்லது- புலமைத்திறத்திற் காற்பங்கல்லது, பற்றலனாகும்-அதற்கதிகமாகப்பெறாதவனாவன். எ-று. (பொ-ரை) ஆசிரியன்கற்பித்தனவற்றைத் தன்னறிவின்கண் அமையக்கற்றானாகிலும் புலமைத்திறத்திற் காற்கூறல்லது பற்றான். எ-று. (௪௪)

(௪௫) அவ்வினையாளரொடு பயில்வகையொருகாற் - செவ்விதினுரைப்ப வவ்விருகாலு- மையறுபுலமை மாண்புடைத்தாகும்*

(எ-ன்.) இதுவுமது (ப-ரை) அவ்வினையாளரொடு - தன்போலியரோடு, பயில்வகை - பழகும்வகையால், ஒருகால் - காற்கூறும், செவ்விதினுரைப்ப - தன்மாணாக்கருக்குஞ் சபையாருக்கும் உரைவிரித்துரைத்தலால, அவ்விருகாலும் - அரைக்கூறுமாக, மையறு - குற்றமற்ற, புலமை- புலமையானது, மாண்புடைத்

தாகும்-நிரம்புதலுடைத்தாகும். எ-று. (பொ-ரை) தன்போலிய ரொடுபயிலும்வகையாற் காற்கூறு மக்கல்வியைத் தன்மாணாக்கர்க்கும் அவைக்களத்தோர்க்கு முணரவிரித்துரைத்தலா னொருகூறுமாகக் குற்றமற்றபுலமை நிரம்பும். எ-று. (சரு)

(சசு) அழலினீங்கா னணுகானஞ்சி - நிழலினீங்கா னிறைந்த நெஞ்சமோ - டெத்திறத்தாசா னுவக்குமத்திற - மறத்திற்றிரியாப் படர்ச்சிவழிபாடே. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) அழலின் - குளிர்காய்வோனைவிட்டு நீங்காமலும் நெருங்காமலும் இருக்கின்ற நெருப்பைப்போல ஆசிரியனைநினைத்து, அஞ்சி - அச்சமுற்று, நீங்கான் - விட்டுநீங்கானாகியும், அணுகான் - நெருங்கானாகியுமிருந்து, நிழலின் - விடாது பின்செல்லுநிழலைப்போல, நீங்கான் - தொடர்ந்துசென்று, நிறைந்தநெஞ்சமோடு - நிறைந்தகருத்துடனே, எத்திறத்து - எத்தன்மையினாலே, ஆசான் - ஆசிரியனானவன், உவக்கும் - மகிழ்வான், அத்திறம் - அத்தன்மையோடுபொருந்தி, அறத்தின் - அறத்தினின்றும், திரியா - வேறுபடாத, படர்ச்சி - நடத்தலானது, வழிபாடு - மாணாக்கன்செய்யும் வழிபாடாகும். எ-று. (பொ-ரை) இவ்வாறொழுகுதல் வழிபாடாம். எ-று. (சசு)

(சஎ) ஆக்கியோன்பெயரே வழியேயெல்லை - நூற்பெயர்யாப்பே நுதலியபொருளே - கேட்போர்பயனோ டாயெண்பொருளும் - வாய்ப்பக்காட்டல் பாயிரத்தியல்பே. *

(எ-ன்) பாயிரம் பொதுச்சிறப்பென மேனிறுத்த முறையானே மலர்தலையுலகி னென்றற்றொடக்கத்தனவாயெல்லா நூற்கண்ணும்வருஞ் சிறப்புப்பாயிரங்களினது பொதுவிலக்கண முணர்-ற்று. இதனையும் பொதுப்பாயிரத்துட்கூறினார் பொதுவைந்தனு ளொன்முகத்தின திலக்கணமாதலி னென்க. (ப-ரை) ஆக்கியோன்பெயர் - நூல்செய்தோன்பெயரும், வழி - நூல்வந்தவழியும், எல்லை - நூல்வழங்குநிலமும், நூற்பெயர் - நூலினது பெயரும், யாப்பு - இந்நூல்முடிந்தபின்பு இந்நூல்கேட்கத் தகுமென்னு மியைபும், நுதலியபொருள் - நூலிற்சொல்லப்பட்டபொருளும், கேட்போர் - இந்நூல்கேட்டற்குரிய அதிகாரிகளிவரென்பதுவும், பயன் - நூல்கேட்கையாற் பெறப்படும்பயனும், ஆயெண்பொருளும் - ஆகிய எட்டுப்பொருளையும், வாய்ப்பக்காட்டல் - விளக்கவுணர்த்துதல், பாயிரத்து - சிறப்புப்பாயிரத்தினது, இயல்பு - இலக்கணமாம். எ-று. (பொ-ரை) இவ்வெட்டுப்பொருளையும் விளக்கவுணர்த்துவது சிறப்புப்பாயிரத்திலக்கணமாம். எ-று. * ஆக்கியோன்பெயரே யென்றற்றொடக்கத்தன வேற்றுச் சிறப்பென்பது

தோன்றினமையிற் பாயிரமென வாளாகூறினரென்க (௪௭)

(௪௮) காலங்களனே காரணமென்றிம் - மூவகையேற்றி மொழிநருமுளரே. *

(எ-ன்) இதுவுமஃது. (ப-ரை) காலம் - நூல்செய்தார்காலமும், களன் - நூலரங்கேற்றியசபையையும், காரணம் - நூல்செய்தற்குக்காரணமும், என்று - என்று, இம்மூவகை - இம்மூன்றனையும், ஏற்றி - அவ்வெட்டனோடுங்கூட்டி, மொழிநரும் - பதினொன்றாகச்சொல்லுவாரும், உளர் - சிலருளர். எ-று (பொ-ரை) அவ்வெட்டனோடும் இம்மூன்றனையுங்கூட்டிப் பதினொன்றாகக் கூறுவாருமுளர். எ-று.

(௪௯) முதனூல்கருத்த னளவுமிகுதி - பொருள்செய்வித்தோன் றன்மைமுதனிமித்தினு - மிடுகுறியானுநூற் கெய்தும்பெயரே. *

(எ-ன்) மேற்கூறிய பதினொன்றனு ணூற்பெயர்க்குச் சிறப்புவிதியுணர்-ற்று. (ப-ரை) முதனூல் - முதனூலும், கருத்தன் - செய்தவனும், அளவு - அளவும், மிகுதி - மிகுதியும், பொருள் - பொருளும், செய்வித்தோன் - செய்வித்தவனும், தன்மை - குணமும், முதல் - முதலாகிய, நிமித்தினும் - காரணங்களாலும், இடுகுறியானும் - இடுகுறியாலும், நூற்கு - நூலுக்கு, பெயர் - பெயரானது, எய்தும் - வரும். எ-று. (பொ-ரை) முதனூன் முதற்றன்மையீறாகக்கூறியவேழும் பிறவுமாகிய காரணங்களானும் இடுகுறியானு நூற்குப்பெயர்வரும். எ-று. (வரலாறு.) முதனூலாற் பெயர்பெற்றன ஆரியப்படலம் பாரதமுதலாயின. கருத்தனாற் பெயர்பெற்றன அகத்தியந்தொல்காப்பியமுதலாயின. அளவினாற் பெயர்பெற்றன பன்னிருபடலம் நாலடிநானூறுமுதலாயின. மிகுதியாற் பெயர்பெற்றன களவியன் முதலாயின. பொருளாற் பெயர்பெற்றன அகப்பொருண் முதலாயின. செய்வித்தோனாற் பெயர்பெற்றன சாதவாகன முதலாயின. தன்மையாற் பெயர்பெற்றன சிந்தாமணி நன்னூன்முதலாயின. இடுகுறியாற் பெயர்பெற்றன நிகண்டு கலைக்கோட்டுத்தண்டு முதலாயின. பிறவுமன்ன. (௪௯)

(௫௰) தொகுத்தல்விரித்த றொகைவிரி மொழிபெயர்ப் - பெனத்தகுநூல்யாப் பீரிரண்டென்ப. *

(எ-ன்) வழிநூல்வகையாகிய நூல்யாப்பினுக்குச் சிறப்புவிதியுணர்-ற்று. (ப-ரை) தொகுத்தல - விரிந்துகிடக்கின்றவைகளைத் தொகுத்துச்சொல்லுதலும், விரித்தல் - சுருங்கிக் கிடக்கின்றவைகளை விரித்துச்சொல்லுதலும், தொகைவிரி - தொகுத்தும் விரித்துஞ்சொல்லுதலும், மொழிபெயர்ப்பு - பதினெண்மொழியுளொன்றனுளிருக்கின்றபொருளை மற்றொன்றுள்ளே திருப்பிச்சொல்லுதலும், எனத்தகும் - என்றுசொல்லத்தகும், ஈரிரண்டு - நான்குவி

தகும். எ-று. (பொ-ரை) இவ்விடங்களாயிற் றன்னைப்புகழ்தலுந் தகுதியாய் புலவோர்க்கு. எ-று. ✽ புகழ்தலுமென்றவும்மையா னிவ்விடங்களினுந் தன்னைப்புகழாமையே தகுதியென்பது பெற்றாம். (௫௩)

(௫௪) ஆயிரமுகத்தா னகன்றதாயினும் - பாயிரமில்லது பனுவலன்றே. *

(எ-ன்) இருவகைப்பாயிரங்களு நூற்கின்றியமையாதன வென்பதுணர்-ற்று. (ப-ரை) ஆயிரமுகத்தான்-ஆயிரமுறுப்புக்களால், அகன்றதாயினும்- விரிந்ததாயினும், பாயிரமில்லது - பாயிரமில்லாதது, பனுவலன்று- நூலன்றாகும், எ-று. (பொ-ரை) ஆயிரமுறுப்புக்களான் விரிந்தநூலாயினும் பாயிரமில்லாதது நூலன்று. எ-று. (௫௪)

(௫௫) மாடக்குச் சித்திரமு மாநகர்க்குக் கோபுரமு- மாடமைத்தோ ணல்லார்க் கணியும்போ-னாடிமு- னைதுரையா நின்ற வணிந்துரையை யெந்நூற்கும்- பெய்துரையா வைத்தார் பெரிது *

(எ-ன்) மேற்பாயிரமில்லது பனுவலன்றென்றா ரஃதன்றாகற்குக்காரணமுணர்-ற்று. (ப-ரை) மாடக்கு- மாளிகைக்கு, சித்திரமும்- ஓவியமும், மாநகர்க்கு- பெரியபட்டணத்திற்கு, கோபுரமும்- சிகரியும், ஆடு- நாட்டியஞ்செய்கின்ற, அமை - மூங்கில் போன்ற, தோள்- தோள்களையுடைய, நல்லார்க்கு - மங்கையருக்கு, அணியும்போல் - ஆபரணமும்போல, நாடி- நினைந்து, ஐது- அழகியபொருளை, உரையாநின்ற - சொல்லுகின்ற, அணிந்துரையை- இருவகைப்பாயிரங்களையும்- உரையா - உரைத்து, எந்நூற்கும்- எவ்வகைப்பட்டபெரியநூலுக்கும், முன் - முன்னே, பெய்து- சேர்த்து, வைத்தார்- ஆசிரியர்வைத்தார்- பெரிது- மிகவும், எ-று. (பொ-ரை) அறிவுடையோர்மாடமுதலிய மூன்றற்குஞ்சித்திரமுதலிய மூன்றும்போலக் கருதி யழகிதாகிய பொருளையுரைத்தாநின்ற இருவகைப்பாயிரங்களையுமுரைத் தெவ்வகைப்பட்ட பெரியநூல்கட்கு முன்னர்ப்பெய்துவைத்தார் பெரும்பாலுமாதலிற் பாயிரமில்லதுபனுவலன்றாம். எ-று. (௫௫)

பொதுப்பாயிர முற்றிற்று.



## முதலாவது

# எழுத்ததிகாரம்.



எழுத்ததிகாரம் - என்பது, எழுத்தினததிகாரத்தையுடையதென அன்மொழித்தொகையாய்ப் படலத்திற்குக் காரணக்குறியாயிற்று. எழுத்தென்றது - அகரமுதனகரவிறுவாய்க்கிடந்த முதலெழுத்துமுப்பதும், உயிர்மெய்முதலிய சார்பெழுத்துப் பத்துமாம். அவற்றிற் கெழுத்தென்னுங்குறி, மொழிமுதற் காரணமென்னுஞ்சூத்திரத்தாலோதுபவாகலின் ஈண்டெதிரதுபோற்றி யாளப்பட்டது. அதிகாரம் - அதிகரித்தல். அஃதிருவகைப்படும். அவற்றுள் ஒன்று, வேந்தனிருந்துழியிருந்து தன்னிலமுழுவதுந் தன்னாணையி னடப்பச்செய்வதுபோல, ஒருசொன்னின்றுழிநின்று பலசூத்திரங்களும் பல ஓத்துக்களுந் தன்பொருளை நுதலிவரச்செய்வது. ஒன்று, சென்றுநடாத்துந் தண்டத்தலைவர்போல ஓரிடத்துநின்றசொல் பலசூத்திரங்களோடுஞ் சென்றியைந்து தன்பொருளைப்பயப்பிப்பது. இவற்றிற்குமுறையே வடநூலார் எதோத்தேசபக்கமெனவும், காரியகாலபக்கமெனவுங்கூறுப. இதுசேனாவரையருரையானுமுணர்க. அவற்றுள் ஈண்டதிகாரமென்றதுமுன்னையது. அதனையுடையதெனவே, எழுத்தைநுதலிவரும்பல ஓத்தினதுதொகுதி எழுத்ததிகாரமென்றாராயிற்று. எழுத்தினது அதிகாரத்தையுடையதென்புழி ஆறுவதுவினைமுதற்பொருண்மையின்கண்வந்தகாரகம். இப்படலத்துள்விதிக்கப்படுவனவெல்லாங் கருவியுஞ் செய்கையுமென இருவகைப்படும், அவற்றுட்கருவி - எழுத்தியல்பதவியலென்னு மிரண்டோத்தானும், செய்கை உயிரீற்றுப் புணரியன்முதலிய மூன்றோத்தானுங் கூறப்படும். கருவிபொதுவுஞ்சிறப்புமென இருவகைத்து. முதலிரண்டோத்தினுங் கூறப்படுவனபொதுக்கருவி. உயிரீற்றுப்புணரியன்முதற்கட் புணர்ச்சி இன்னதெனக் கூறப்படுவனவும், உருபுபுணரியலி னிறுதிக்கட் சாரியைத்தோற்றங் கூறப்படுவனவுஞ் செய்கையொன்றற்கே உரியகருவியாகலிற் சிறப்புக்கருவி.

முதலாவது

# எழுத்தியல்.

---

(ருகூ) பூமலியசோகின் புனைநிழலமர்ந்த - நான்முகற்றொழு
துநன் கியம்புவனெழுத்தே. *

(எ-ன்) கடவுள்வணக்கமும் அதிகாரமு முணர்-ற்று. (ப-ரை)
பூ- பூக்களானவை, மலி - நிறைந்த, அசோகின் - அசோகமரத்தி
னது, புனை- அலங்கரிக்கும், நிழல- நிழலின்கண், அமர்ந்த - எழு
ந்தருளியிருந்த, நான்முகன - நான்குதிருமுகங்களையுடையகடவு
ளை, தொழுது- வணங்கி, நன்கு- நன்றாக, இயம்புவன்- சொல்லு
வன், எழுத்து- எழுத்திலக்கணத்தை, எ-று. (பொ-ரை) பூக்கண்
மலிந்த அசோகமரத்தினது அலங்கரிக்கு நிழலின்கண் எழுந்தருளி
யிருந்த நான்குதிருமுகங்களையுடைய கடவுளை வணங்கி நன்றாகச்
சொல்லுவனெழுத்திலக்கணத்தை, எ-று. ❊ எல்லா நூலுமங்கல
மொழிமுதல் வகுத்துக்கூற வேண்டுதலிற் பூமலியென்றும் எல்
லாச் சமயத்தோராலும் வணங்கப்படும் படைப்புமுதலிய வைந்
தொழிற்குமுரிய வெல்லாக்கடவுளாகிய நின்றுவொருவனே யென்
பார் அருகனை நான்முகனென்றுங்கூறினார்· இவ்வாறு வள்ளுவநா
யனாரும்—"மலர்மிசையேகினான் மாணடிசேர்ந்தார் - நிலமிசை
நீடுவாழ்வார்"—என வரையாது கூறுதல்காண்க. எழுத்தென்ப
தாகுபெயர். ஏகாரம் - ஈற்றசை. எல்லாம் வல்லகடவுளை வணங்
கலானே இனிதுமுடியுமென்பதுகருதி நன்கியம்புவனென்றுபகு
த்ததமையின் இது- நுதலிப்புகுதலென்னுமுத்தி. (க)

(ருஎ) எண்பெயர்முறைபிறப் புருவமாத்திரை - முதலீறி
டைநிலை போலியென்று - பதம்புணர்பெனப்பன் னிருபாற்ற
துவே. *

(எ-ன்) அவ்வெழுத் திலக்கணம் இத்துணைத்தென்ப துணர்-ற்
று. (ப-ரை) எண்- எழுத்தினெண்ணும், பெயர்- பெயரும், மு
றை- முறையும், பிறப்பு- பிறப்பும், உருவம் - வடிவமும், மாத்தி
ரை- அளவும், முதனிலை - முதனிலையும், ஈறு(நிலை) - கடைநிலையு
ம், இடைநிலை- இடைநிலையும், போலி- போலியும், பதம்- பதமு
ம், புணர்ப்பு-புணர்ச்சியும், என- என்று, பன்னிருபாற்று- பன்னி
ருபகுதியினையுடைத்தாகும், அது- அவ்வெழுத்திலக்கணம், எ-று.
(பொ-ரை) இப்பன்னிருபகுதியினையுடைத்து அவ்வெழுத்தி
லக்கணம் எ-று. ❊ என்றுவென்பது எண்ணிடைச்சொல். இச்
சூத்திரம் தொகுத்துச்சுட்டலென்னுமுத்தி. மேல்வருவனவெல்
லாம் வகுத்துக்காட்டல். (உ)

(ருஅ) மொழிமுதற்காரண மாமணுத்திரளொலி - யெழுத்
ததுமுதல்சார் பெனவிருவகைத்தே, *

ம், ஒற்றளபு- ஒற்றளபெடையும், (அஃகிய) இ- குற்றியலிகரமும் (அஃகிய) உ- குற்றியலுகரமும், (அஃகிய)ஐ- ஐகாரக்குறுக்கமும்- (அஃகிய)ஔ- ஔகாரக்குறுக்கமும், (அஃகிய)மஃகான்-மகரக்குறுக்கமும், (அஃகிய)தனிநிலை- ஆய்தக்குறுக்கமும், பத்தும் ஆகியபத்தும், சார்பெழுத்தாகும் - சார்பெழுத்தாகும், (எ-று) (பொ-ரை) இப்பத்துஞ்சார்பெழுத்தாம். எ-று. ❁ அஃகுதல்-சுருங்குதல். தனிநிலை- ஆய்தம். உயிர்களோடு மெய்களோடுங் கூடியுங்கூடாதுமலிபோலத்தனிநிற்றலிற்றனிநிலையெனப்படும் உயிர்மெய்-உயிருமெய்யுங்கூடிப்பிறத்தலானும் ஆய்தம்உயிர்போல "அற்றாலளவறிந்துண்க வஃதுடம்பு - பெற்றானெடிதுய்க்கு மாறு" என அலகுபெற்றும். மெய்போல "தோன்றிற் புகழொடுதோன்றுக வஃதிலார்- தோன்றலிற் றோன்றாமை நன்று" —என அலகுபெறாதும் ஒருபுடையொத்து அவற்றினிடையே சார்ந்துவருதலானும் ஏனைய தத்தமுதலெழுத்தின் றிரிபுவிகாரத்தாற் பிறத்தலானுஞ்சார்பெழுத்தாயின வெனக்கொள்க. அவ்வாறன்றி உயிர்மெய்யொழிந்தன அகரமுதலியனபோற் றனித்தானுங் ககரமுதலியனபோல அகரமொடு சிவணியானுமியங்கு மியல்பின்றியொருமொழியைச்சார்ந்துவருதலே தமக்கிலக்கணமாக வுடைமையிற் சார்பெழுத்தாயினவெனக் கோடலுமாமென்க. இனி ஆசிரியர் தொல்காப்பியர் செய்கை ஒன்றனையுநோக்கிச்சார்பெழுத்துமூன்றெனக்கருவிசெய்தாராகலின் இவ்வாசிரியர்செய்கையுஞ்செய்யுளியலுநோக்கிச் சார்பெழுத்துப்பத்தெனக்கருவிசெய்தா ரென்பதுமுய்த்துணர்க. (௫)

(௬௧) உயிர்மெய்யிரட்டுநூற் றெட்டுயராய்த- மெட்டுயிரளபெழு மூன்றொற்றளபெடை- யாறேழஃகு மிம்முப்பானே- ழுகரமா றைகான்மூன்றே- யௌகானொன்றே மஃகான்மூன் றே- யாய்தமிரண்டொடு சார்பெழுத்துறுவிரி-யொன்றொழிமுந் நூற் றெழுபானென்ப. *

(எ-ன்) இதுவுமது (ப-ரை) உயிர்மெய்-உயிர்மெய், இரட்டுநூற்றெட்டு - இருநூற்றுப்பதினாறு, உயராய்தம் - குறுகாதவாய்தம், எட்டு- எட்டு, உயிரளபு- உயிரளபெடை, எழுமூன்று, இருபத்தொன்று, ஒற்றளபெடை - ஒற்றளபெடை, ஆறேழ்- நாற்பத்திரண்டு, அஃகுமி- குற்றியலிகரம், முப்பானேழ் - முப்பத்தேழு, (அஃகு) முகரம்-குற்றியலுகரம், ஆறு- முப்பத்தாறு (அஃகு) மைகான்-ஐகாரக்குறுக்கம், மூன்று-மூன்று, (அஃகு) மௌகான்- ஔகாரக்குறுக்கம், ஒன்று- ஒன்று, (அஃகு) மஃகான்-மகரக்குறுக்கம், மூன்று-மூன்று, (அஃகு) மாய்தம் - ஆய்தக்குறுக்கம், இரண்டொடு - இரண்டுடனே, சார்பெழுத்து - சார்பெழு

த்தினது, உறுவிரி- யிருந்தவிரி, ஒன்றொழிமூந்நூற்றெழுபான்- மூந்நூற்றறுபத்தொன்பதாம், என்ப - என்றுசொல்லுவர் புலவர். எ - று. (பொ-ளா) உயிர்மெய்யிருநூற்றுப்பதினாறு குறுகாதவாய்தமெட்டு உயிரளபெடையிருபத்தொன்று ஒற்றளபெடை நாற்பத்திரண்டு குற்றியலிகரமுப்பத்தேழு குற்றியலுகரமுப்பத்தாறு ஐகாரக்குறுக்கமூன்று ஔகாரக்குறுக்கமொன்று மகரக்குறுக்கமூன்று ஆய்தக்குறுக்கமிரண்டுடனே சார்பெழுத்தினது மிருந்தவிரி மூந்நூற்றறுபத்தொன்பதாமென்று சொல்லுவர் புலவர் எ-று ※ இவையித்துணையவாதல் பிறப்பதிகாரத்துட்காண்க. இவ்வாறு உயிர்மெய்யொழிந்தனவற்றையும் விரித்தொன்னெறியென்பாரென்பவென்றார். (ஞ)

(௬௨) இடுகுறிகாரணப் பெயர்பொதுச்சிறப்பின. ※

(எ-ன்) நிறுத்தமுறையானே யெழுத்தின்பெயராமாறுணர்த்துவான்றொடங்கிப் பெயர்க்கெல்லாம் பொதுவிலக்கணமுணர்-ற்று. (ப-ரை.) இடுகுறிகாரணப்பெயர் - இடுகுறிப்பெயருங் காரணப்பெயருமாகிய விரண்டும், பொதுச்சிறப்பின - பலபொருளுக்குப் பொதுப்பெயராகியும் ஒருபொருளுக்குச் சிறப்புப்பெயராகியும் வருவனவாம். எ-று. (பொ-ரை) இடுகுறிப்பெயருங் காரணப்பெயருமாகியவிரண்டும் பலபொருட்குப் பொதுப்பெயராயு மொருபொருட்குச் சிறப்புப்பெயராயும் வருவனவாம். எ-று, ※ ஒருபொருளைக்குறித்தற்குக் கடவுளானுமறிவுடையோரானு மிட்டகுறியாகியபெயர் இடுகுறிப்பெயர். காரணத்தான்வரும்பெயர் காரணப்பெயர். [உதாரணம்.] மரம் என்பது இடுகுறிப்பொதுப்பெயர். பனை என்பது இடுகுறிச்சிறப்புப்பெயர். அணி என்பது காரணப்பொதுப்பெயர். முடி என்பது காரணச்சிறப்புப்பெயர். இனி இரட்டுறமொழிதலென்னு முத்தியா லிச்சூத்திரத்திற்கு இடுகுறியென்றுங் காரணமென்றுஞ்சொல்லப்படுமிலக்கணங்களையுடையபெயர்கள் இடுகுறிகாரணமென்னும் இரண்டற்கும் பொதுவாயும் இடுகுறிக்கே சிறப்பாயுங் காரணத்திற்கேசிறப்பாயும் வருவனவாமென்றும் பொருளுரைத்துக்கொள்க. [உ-ம்.] பரம் என்பதிடுகுறிப்பெயர். பரமன் என்பதுகாரணப்பெயர். முக்கணன் அந்தணன் மறவன் முள்ளி கறங்கு மொழி சொல் என்பன காரணவிடுகுறிப்பெயர். இவை காரணவிடுகுறியாயதென்னையெனின் இவற்றுள் முக்கணனென்னும்பெயர் யானைமுகக்கடவுள் முதலியோர்க்கு மூன்றுகண்ணுளவாகலிற்காரணங்கருதிய வழி மூன்றுகண்ணையுடையோர் பலர்க்குஞ்சேறலானுங்காரணங்கருதாதவழி இடுகுறிமாத்திரையா

யிப் பரமனுக்கேசேறலானுங் காரணவிடுகுறியாயிற்று. ஏனைப் பெயர்கட்கு மிவ்வாறேகாண்க. இவ்வாறேவடநூலார் இடுகுறியை ரூடியென்றுங் காரணத்தையோகமென்றுங் காரணவிடுகுறியை யோகரூடியென்றும் வழங்குப. இவ்விலக்கணத்தா னெழுத்தினதுபெயரும் பிறபெயரும் வருமாறுகாண்க. (எ)

(௬௩) அம்முதலீரா றாவிகம்முதன் - மெய்ம்மூவாறென விளம்பினர்புலவர். *

(எ-ன்) ஒருசாரெழுத்தினது பெயராமாறுணர்- ற்று. (ப-ரை) அம்முதல் - அகரமுதலாகிய, ஈராறு - பன்னிரண்டனையும், ஆவி (யென) ஆவியென்றும், கம்முதல் - ககரமுதலாகிய, மூவாறு-பதினெட்டனையும், மெய்யென- மெய்யென்றும், விளம்பினர் - சொன்னார், புலவர்-அறிவுடையோர். எ-று. (பொ-ரை) அகரமுதல் ஔகாரமீறாகக்கிடந்தபன்னிரண்டனையும் ஆவியென்றுங் ககரமுதனகரமீறாகக்கிடந்த பதினெட்டனையும் மெய்யென்றும் நூல்களாற்சொன்னார் அறிவுடையோர். எ-று ※ கடவுளால் ஆவி மெய்யென்றமைத்த பெயர்க்காரண முயிர்களான்முற்றுமுணர் தற்கருமையுங் கடவுணூலுணர்ந்தோர் வழிச்செல்லுந் தமது பெருமையுந்தோன்ற விளம்பினர் புலவரென்றார். ஆவியுமெய்யும் போறலின் இவ்விருவகையெழுத்திற்கும் ஆவிமெய்யெனவுவமவாகுபெயராய்க்காரணப்பொதுப்பெயராயின. ஏனையவுமிவ்வாறேகாண்க. (அ)

(௬௪) அவற்றுள், அ இ உ எ ஒ க்குறிலைந்தே. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) அவற்றுள் - ஆவிமெய்யென்றவற்றுள், அ இ உ எ ஒ-அ இ உ எ ஒ என்கிற, ஐந்து -ஐந்தும், குறில்-குற்றெழுத்தாம், எ-று. (பொ-ரை) ஆவி மெய்யென்றவற்றுள் இவ்வைந்துங்குற்றெழுத்தாம். எ-று. (௯)

(௬௫) ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ - ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்கிறவேழும், நெடில் - நெட்டெழுத்தாம். எ-று. (பொ-ரை) இவ்வேழுநெட்டெழுத்தாம். எ-று. (௰)

(௬௬) அ இ உம்முதற் றனிவரிற்சுட்டே. *

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை) அ இ உ - அ இ உ என்கிற மூன்றும், முதல் - சொல்லுக்குமுதலில், தனி - தனித்து, வரின்- சுட்டிப்பொருளைக்காட்டவந்தால், சுட்டு - சுட்டெழுத்தாம். எ-று. (பொ-ரை) இம்மூன்றெழுத்துமொழிக்குப்புறத்துமகத்து முதற்கட்டனித்துச்சுட்டிப்பொருளுணர்த்தவரிற்சுட்டெழுத்தாம்.எ-று. ※ முதலெனப்பொதுப்படக் கூறினமையிற் புறத்து மகத்து மென்பதுபெற்றும். [உ-ம்] அக்கொற்றன் - இக்கொற்றன்- உக்

கொற்றன் (எ-ம்) அவன் - இவன்- உவன் (எ-ம்) வரும். அவனெ ன்பதன்கண் அகரம் அறமென்பதன்கண் அகரம்போலப் பின்னெ ழுத்துகளோடு தொடர்ந்து நின்றுபொருளை புணர்த்தாது மலையினென்பதன்கட் டுதிபோல மீவறுநின்றுசுட்டிப் பொருளு ணர்த்தலின் அகத்துவருமிதனைப்புறத்துவரினெனவுரை. இஃதுணா வி றுவிற்குங்கொள்க. (௰௧)

(௬௭) எ யா முதலும் ஆ ஓ வீற்றும் - ஏ யிருவழியும் வினா வாகும்மே. ✻

(எ-ன்.) இதுவுமது, (ப-ரை) எ யா - எகரமும்யாவும், முதலு ம்- சொல்லுக்குமுதலிலும், ஆ ஓ - ஆகாரமும் ஓகாரமும், ஈற்று ம்-சொல்லுக்கு ஈற்றிலும், ஏ - ஏகாரம், இருவழியும் - அவ் விரண்டிடத்திலும், (தனிவரின்)-தனித்துவினாப்பொருளைக் காட் டவந்தால், வினாவாகும் - வினாவெழுத்தாகும். எ-று. (பொ-ரை) புறத்துமகத்துமொழிமுதற்கண் எகரமும்யாவும் ஈற்றின்கண் ஆ காரமும் ஓகாரமும் இவ்விரண்டிடத்திலும் ஏகாரமுந்தனித்துவி னாப்பொருளுணர்த்தவரின்வினாவெழுத்தாம். எ - று. ✻ மேற்ற னிவரினென்றதனைப்பின்னுங்கூட்டுக. இவைபுறத்துமகத்தும்வருத லேற்றபெற்றிகொள்க. ஒன்றினமுடித்த றன்னினமுடித்தலெ ன்னுமுத்தியான் யாவினாவையுமுடன்கூறினர் [உ-ம்] எக்கொ ற்றன்-எவன்-யாவன்- என முதற்கண்வந்தன. கொற்றனா - கொற் றனோ - எனவீற்றின்கண்வந்தன. ஏவன் - கொற்றனே - எனவீ ரிடத்தும்வந்தது என்னும்பெயர் வினைகளோடுமேற்ற பெற்றி யொட்டிக்கொள்க. (௰௨)

(௬௮) வல்லினங்கசடதபறவெனவாறே ✻

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை.)வல்லினம்- வல்லெழுத்துகள், கச டதபறவென - கசடதபறவென்று, ஆறு- ஆறும், எ-று.(பொ-ரை) இவ்வாறும்வல்லினமாம். எ-று. (௰௩)

(௬௯) மெல்லினஙஞணநமனவெனவாறே. ✻

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) மெல்லினம்-மெல்லெழுத்துகள், ஙஞணநமனவென - ஙஞணநமனவென்று, ஆறு-ஆறும், எ-று. (பொ-ரை) இவ்வாறும் மெல்லினமாம். எ-று. (௰௪)

(௭௰) இடையினம்யரலவழளவெனவாறே. ✻

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை.) இடையினம்-இடையெழுத்து கள், யரலவழளவென - யரலவழளவென்று, ஆறு- ஆறும், எ-று. (பொ-ரை) இவ்வாறுமிடையினமாம். எ-று. (௰௫)

(௭௧) ஐ ஔ இ உச் செறிய முதலெழுத் - திவ்விரண்டோரின மாய்வரன்முறையே. ✻

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை.) ஐ ஔ - இனமில்லாத ஐகார

தியாதோ இறுதிக்கணிற்பதியாதோ வென்னுமைய நீக்குதற்கு
"இகரமும் யகரமு மிறுதிவிரவும்." என்றுங்கூறினார் மொழிந்த
பொருளோ டொன்றவவ்வயின்மொழியாததனையு முட்டின்றுமு
டித்தலென்னுமுத்தியான் எகர ஏகாரங்கள் ஒகர ஓகாரங்கள்அவ்வா
றுதலுங் கொள்ள வைத்தார். மாபாடியத்துள் ஊகாரத்தின் பின்
னின்ற வடவெழுத்து நான்குயிர்க்குமிடையே ரகர லகாரக்கூறுக
ளொத்து நிற்குமென்ற ஆசிரியர் பதஞ்சலியார்க்குஐ ஔ வென்
பழியு மிடையே யகர வகரக்கூறுகள் பிரவிநிற்குமென்பது உட
ம்பாடாதல்பெற்றாம். எகரமுதலியவற்றுள் அகரக்கூறு குறையு
ம் இகர உகரக்கூறுகண் மிகுதியுமாமெனவுமுணர்க. இதுவுமா
பாடியத்திற்கண்டது. ஈண்டுக்கூறியவாற்றானே அகரமுயிரெழு
த்துகளினுங் கலந்துநிற்குமாறறிக. இனிமெய்களுள் வலியாரைமு
ன்வைத்து மெலியாரைப் பின்வைத்தன் மரபாகலின் அச்சிறப்பு
நோக்கி வல்லெழுத்துகண்முன்னும் அவ்வவற்றிற் கினமொத்த
மெல்லெழுத்துகள் அவ்வவற்றின்பின்னுமாக வைக்கப்பட்டன.
அவ்விரண்டு நோக்கியல்ல திடைநிகரானவாயொலித்த லறியப்படா
மையினதுபற்றி யிடையெழுத்துகளவ்விருகூற்றிற்கும் பின்வைக்
கப்பட்டன. ஒருவாற்றானொத்தலு மொருவாற்றான்வேறுதலு மு
டைமைபற்றியன்றே யினமென்று வழங்கப்படுவது. அவற்றுள்
இடையெழுத்தாறு மிடப்பிறப்பானொத்தலு முயற்சிப்பிறப்பா
ன் வேறுதலுமுடைமையின் இடைக்கணமெனவேறினமாயின.
உயிர்க்கணம் வன்கணம் மென்கணமென்பவற்றிற்கும் இஃதொ
க்கும். இனிக்ஙக்களுஞ் சஞக்களும் டணக்களும் தநக்களும் ப
மக்களும் அடிநாவண்ணம் இடைநாவண்ணம் நுனிநாவண்ணம்அ
ண்பலடியிதழென்னு மிவற்றின்முயற்சியாற்பிறத்தலான்அப்பி
றப்பிடத்துமுறையேமுறையாகவைக்கப்பட்டன. ய ர ல வக்களு
ன்றுமுறையே அடியண்ணமும் இடையண்ணமும் அண்பன்முத
லும் இதழுமென்னு மிவற்றின்முயற்சியாற் பிறத்தலான் அப்பிற
ப்பிடத்து முறையேமுறையாக வைக்கப்பட்டன. ழகார றகாரன
காரங்கண் மூன்றுந் தமிழெழுத்தென்ப தறிவித்தற்கு இறுதிக்க
ண் வைக்கப்பட்டன. அவற்றுள்ளும் ழகர மிடையெழுத்தாகலின்
அதுபற்றியிடையெழுத்தோடு சார்த்தியவற்றிறுதிக்கண் வைக்க
ப்பட்டது. வடமொழியின் லகரம் ளகரமாகவும் உச்சரிக்கப் படு
வதன்றித் தனியே ஓரெழுத்தன்மையின் அச்சிறப்பின்மைபற்றி
யிடையெழுத்தாகிய ளகரம் ழகரத்திற்கும்பின் வைக்கப்பட்டது.
இவ்வாறே உயிருள்ளும் எகர ஒகரங்கள் ஒருவாற்றாற் சிறப்பெழு
த்தாயினும் பிராகிருதமொழியிற் பயின்றுவருதலானுஞ் சாமவே
தமுடையாருள்ஒருசாராரிசைபற்றிக் குழூஉக்குறிபோலக்கொண்,

போதுபவாகலானும் இறுதிக்கண் வையாது முறைபற்றி எகர ஒகாரங்களின் முன்வைக்கப் பட்டன. ஆகையான் முறையாமாறிவையெனவுய்த்துணர்ந்துகொள்க. இவ்வாறு உலகத்தும் பிறப்பொத்தல் பற்றி ஓரினமென்று வழங்குபவாகலின் ஈண்டினத்திறுமென்றதற்குப் பிறகாரணங்களுமுளவேனும் பெரும்பான்மையும் பிறப்பொத்தலேயினமென்றுகொள்க. (௰௮)

(௭௪) நிறையுயிர்முயற்சியி னுள்வளிதுரப்ப - வெழுமணுத் திரளுரங் கண்டமுச்சி-மூக்குற்றிதழ்நாப் பல்லணத்தொழிலின் வெவ்வேறெழுத்தொலி யாய்வரல்பிறப்பே. *

(எ-ன்) நிறுத்தமுறையானே பிறப்பாமாறுணர்த்துவான்றொடங்கியதன்பொதுவிதியுணர்-ற்று. (ப-ரை) நிறை - ஒலியெழுத்திற்குவேண்டுங்காரணங்களிற் குறைவின்றிநிறைந்த, உயிர் - உயிரினது, முயற்சியின் - முயற்சியால், உள் - உள்ளேநின்ற, வளி - காற்றானது, துரப்ப - எழுப்ப, எழும் - எழுகின்ற, அணுத்திரள் - செவிப்புலனாமணுக்கூட்டம், உரம் - மார்பும், கண்டம் - கழுத்தும், உச்சி - தலையும், மூக்கு - நாசியும் ஆகியநான்கிடத்தையும், உற்று - பொருந்தி, இதழ் - உதடும், நா - நாக்கும், பல் - பல்லும், அணம் - மேல்வாயும் ஆகியநான்கனுடைய, தொழிலின் - முயற்சிகளால், வெவ்வேறு - வேறுவேறு, எழுத்து - எழுத்தாகிய, ஒலியாய் - ஓசைகளாய், வரல் - தோன்றுதல், பிறப்பு - அவற்றின் பிறப்பாம். எ-று. (பொ-ரை) ஒலியெழுத்தாகிய காரியத்திற்கு வேண்டுங் காரணங்களொருவாற்றானுங் குறைவின்றி நிறைந்தவுயிரினது முயற்சியாலுண்ணின்றவளி யெழுப்பவெழுஞ் செவிப்புலனாமணுத்திரள் உரமுதலியநான்கிடத்தையும்பொருந்தியிதழ்முதலிய நான்கின்றொழில்களால் வெவ்வேறெழுத்தாகிய வொலிகளாய்த் தோன்றுதல் அவற்றின்பிறப்பாம். எ-று. (௰௯)

(௭௫) அவ்வழி, ஆவியிடைமை யிடமிடறாகு- மேவுமென்மை மூக் குரம்பெறும்வன்மை. *

(எ-ன்) முதலெழுத்துகட்கிடம் வகுத்துணர்-ற்று. (ப-ரை) அவ்வழி - முன்சொன்னவழியாற் பிறக்குமிடத்து, ஆவி - உயிரெழுத்துகளுக்கும், இடைமை - இடையினத்திற்கும், இடம் - இடம், மிடறாகும் - கழுத்தாகும். மென்மை - மெல்லினம், மூக்கு - நாசியை, மேவும் - இடமாகப்பொருந்தும், வன்மை - வல்லினம், உரம் - மார்பை, பெறும் - இடமாகப்பெறும். எ-று. (பொ-ரை) மேற்கூறியநெறியாற்பிறக்குங்கால் ஆவியிடையினமென்னுமிருவகையெழுத்தினதிடமிடறாம் மெல்லின மூக்கையிடமாகப்பொருந்தும் வல்லினநெஞ்சையிடமாகப்பெறும். எ-று. (௨௰)

(௭௬) அவற்றுள், முயற்சியுள் அ ஆ வங்காப்புடைய. *

(எ-ன்) முதலெழுத்துட்சிலவற்றிற்கு முயற்சிவகையாற் பிறப்புணர்-ற்று. (ப-ரை) அவற்றுள்-மேலிடம்வகுத்தமுதலெழுத்துகளுள், அ ஆ - அ ஆ இரண்டும், முயற்சியுள் - நால்வகை முயற்சியுள், அங்காப்புடைய-அண்ணத்தின்றொழிலாகிய அங்காத்தலையுடையனவாய்ப்பிறக்கும். எ-று (பொ-ரை) மேலிடம்வகுக்கப்பட்ட முதலெழுத்துகளுள் அகர ஆகாரங்களுல்வகை முயற்சியுளண்ணத்தின்றொழிலாகியவங்காத்தலையுடையவாய்ப்பிறக்கும். எ-று.

(எஎ) இ ஈ எ ஏ ஐ யங்காப்போ - டண்பன்முதனா விளிம்புற வருமே. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) இ ஈ எ ஏ ஐ-இ ஈ எ ஏ ஐ ஐந்தும், அங்காப்போடு- அங்காப்புடனே, அண்பல்- அண்பல்லை, நாமுதல்- நாக்கடியினது, விளிம்பு- ஓரமானது, உற - பொருந்த, வரும்- பிறக்கும், எ-று. (பொ-ரை) இவ்வைந்தெழுத்துமங்காப்புடனேயண்பல்லையடிநாவிளிம்பு பொருந்தப்பிறக்கும், எ-று (௨௨)

(எஅ) உ ஊ ஒ ஓ ஔ விதழ்குவிவே. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) உ ஊ ஒ ஓ ஔ- உ ஊ ஒ ஓ ஔ ஐந்தும் பிறத்தற்கேதுவாகியமுயற்சி, இதழ்குவிவு உதடுகளின்குவிதலாம், எ-று. (பொ-ரை) இவ்வைந்தெழுத்தும் பிறத்தற்கேதுவாகியமுயற்சியிதழ்குவிவாம். எ-று. (௨௩)

(எகூ) கஙவுஞ்சஞவும் டணவுமுதலிடை - நுனிநாவண்ண முற முறைவருமே. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) கங- கவ்வும் ஙவ்வும், (நா) முதல்- நாக்கினடி, (அண்ணமுதல்)- மேல்வாயடியையும், சஞ- சவ்வும் ஞவ்வும், (நா) இடை- நாக்கினடு (அண்ணவிடை)-மேல்வாய்நடுவையும், டண- டவ்வும் ணவ்வும், நாநுனி- நாக்கின்கடை, அண்ண (நுனி)-மேல்வாய்க்கடையையும், உற- பொருந்த, முறை- இம்முறையே, வரும்-பிறக்கும், எ-று. (பொ-ரை) கவ்வும் ஙவ்வும் முதனா முதலண்ணத்தையும் சவ்வும் ஞவ்வும் இடைநாவிடையண்ணத்தையும் டவ்வும்ணவ்வும் நுனிநாநுனியண்ணத்தையும் பொருந்தவிம்முறையேபிறக்கும்- எ-று. (௨௪)

(அ௦) அண்பல்லடிநா முடியுறத்தநவரும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) அண்பல்-அண்பல்லினது, அடி- அடியை, நாமுடி- நாக்குநுனி, உற- பொருந்த, தந - தவ்வும்நவ்வும், வரும் - பிறக்கும். எ-று. (பொ-ரை) அண்பல்லடியை நாநுனிபொருந்தத் தவ்வும் நவ்வும் பிறக்கும். எ-று. (௨௫)

(அக) மீகீழிதழுறப் பம்மப்பிறக்கும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) மீ (இதழ்) மேலுதடும், கீழிதழ்-கீழுதடும், உற- பொருந்த, பம்ம- பவ்வும் மவ்வும், பிறக்கும்- பிற

க்கும். எ-று. (பொ-ரை) மேலிதழுங் கீழிதழும் பொருந்தப் ப வ்வும் மவ்வும் பிறக்கும். எ-று. (௨௬)

(அஉ) அடிநாவடியண முறயத்தோன்றும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) நாவடி - நாக்கினடியானது, அணவடி-மேல்வாயடியை, உற- பொருந்த, ய - யகரமானது, தோன்றும் - பிறக்கும். எ-று. (பொ-ரை) அடிநாவடியண்ணத்தைப் பொருந்த யகரம்பிறக்கும். எ-று. (௨௭)

(அங) அண்ணநுனிநா வருடரழவரும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) அண்ண (நுனி)-மேல்வாய்க்கடையை, நாநுனி - நாக்குநுனியானது, வருட- தடவ, ரழ- ரவ்வும் ழவ்வும், வரும் - பிறக்கும். எ-று. (பொ-ரை) அண்ணத்தை நுனிநாத் தடவ ரவ்வும் ழவ்வும் பிறக்கும். எ-று. (௨௮)

(அச) அண்பன்முதலு மண்ணமுமுறையி- னாவிளிம்புவீங்கி யொற்றவும்வருடவும்- லகாரளகாரமா யிரண்டும்பிறக்கும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) அண்பன்முதல்-அண்பல்லடியை, நாவிளிம்பு- நாவோரமானது, வீங்கி- தடித்து, ஒற்ற- நெருங்க, லகார (மாய்) - லகாரமாகியும், அண்ணம்- மேல்வாயை, (நாவிளிம்பு)- நாவோரமானது, வருட - தடவ, ளகாரமாய் - ளகாரமாகியும், இரண்டும் - இரண்டெழுத்துகளும், முறை- இம்முறையே, பிறக்கும்- பிறக்கும் எ-று (பொ-ரை) அண்பன்முதலை நாவிளிம்புவீங்கியொற்ற லகாரமாகியும்அண்ணத்தை நாவிளிம்பு வீங்கிவருடளகாரமாகியும் இவ்விரண்டெழுத்தும் பிறக்கும் எ-று. (௨௯)

(அரு) மேற்பல்லித ழுற மேவிடும்வவ்வே. *

(எ-ன், இதுவுமது. ப-ரை.) மேற்பல்- மேற்பல்லானது, இதழ்- கீழுதட்டை, உற - பொருந்த, வ - வகரமானது, மேவிடும்- பிறக்கும். எ-று (பொ-ரை)மேற்பல்கீழிதழைப்பொருந்தவகரம் பிறக்கும். எ-று. (௩0)

(அசா) அண்ணநுனிநா நனியுறிற்றனவரும். *

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை) அண்ணம் - மேல்வாயை, நாநுனி- நாக்குநுனி, நனியுறின் - மிகப்பொருந்தின், றன- றவ்வும்னவ்வும், வரும்- பிறக்கும். எ-று. (பொ-ரை)அண்ணத்தை நுனிநா மிகப்பொருந்தில் றவ்வும் னவ்வும் பிறக்கும். எ-று. (௩௧)

(அஎ) ஆய்தக்கிடந்தலை யங்காமுயற்சி - சார்பெழுத்தேனவு ந் தம்முதலனைய.

*

(எ-ன்) சார்பெழுத்துகட் கிடமுயற்சிவகையாற்பிறப்புணர்- ற்று (ப-ரை) ஆய்தக்கு - ஆய்தம் பிறத்தற்கு, இடம் - இடமானது, தலை- தலையாம், முயற்சி தொழிலானது, அங்கா - வாயை

த்திறத்தலாம், சார்பெழுத்தேனவும் - ஆய்தம் நீங்கலாகியமற்றை
ச்சார்பெழுத்துகளும், தம்முதலனைய - தம்முதலெழுத்துகளோ
டொப்பனவாய்ப்பிறக்கும். எ-று. (பொ-ரை) ஆய்தம்பிறத்தற்கி
டந்தலை, முயற்சியங்காத்தலாம். ஒழிந்த சார்பெழுத்துகளுமிட
முயற்சிகட்டம்முதலெழுத்துகளோ டொப்பனவாய்ப் பிறக்கும்.
எ-று. ❁ சார்பின்சார்பாகியவாய்தக்குறுக்கமும் அதன்முதல்போ
ற்பிறக்குமென்பார் எதிரதுதழீஇ யேனவுமென்றார். (௯௨)

(௮௮) எடுத்தல்படுத்த னலிதலுழப்பிற் - றிரிபுந்தத்தமிற் சி *
றிதுளவாகும்.

(எ-ன்) மேற்கூறியபிறப்பிற்கோர்புறனடைபுணர்-ற்று.(ப-ரை)
பலவெழுத்திற்குப்பிறப்பு ஒன்றாகச்சொல்லப்பட்டாலும், எடுத்
தல்- எடுத்தலும், படுத்தல்- படுத்தலும், நலிதல் - நலிதலுமாகி
ய, உழப்பின்- எழுத்திற் குரிய ஒலிமுயற்சியால், திரிபும் - ஒன்ற
ற்கொன்றுபிறப்புவேறுபாடுகளும், தத்தமில்- அவ்வவற்றின்கண்,
சிறிது- சிறிதுசிறிது, உளவாகும்- உள்ளனவாம், எ-று.(பொ-ரை)
பலவெழுத்திற்குப் பிறப்பொன்றாகச் சொல்லப்பட்டனவேனு
மெடுத்தல் படுத்தனலிதலென்னு மெழுத்திற்குரிய வொலிமுயற்
சியாலொன்றற்கொன்றுபிறப்பு வேறுபாடுகளுமவ்வவற்றின்கட்சி
றிதுசிறிதுளவாம். எ-று. (௯௩)

(௮௯) புள்ளிவிட்டவ்வொடு முன்னுருவாகியு- மேனையுயிரோ
டுருவுதிரிந்து - முயிரளவாயதன் வடிவொழித்திருவயிற் - பெய
ரொடுமொற்றுமுன் னாய்வருமுயிர்மெய். *

(எ-ன்) மேற்பிறப்புணர்த்திய சார்பெழுத்திற்குச்சார்ந்துவரு
மாறுமோர்பிறப்பாதலிற் பிறப்பதிகாரத்துளடக்கிபுணர்த்துவா
ன்றொடங்கியவற்றுளுயிர்மெய் வருமாறுணர்-ற்று. (ப-ரை) புள்
ளிவிட்டு- மெய்புள்ளியைவிட்டு, அவ்வொடு- அகரத்தோடுகூடிய
வழி, முன்னுருவாகியும்- அவ்விட்டவுருவேயுருவாகியும், ஏனையுயி
ரோடு- அதுநீங்கலாகியவுயிர்களோடுகூடியவழி,உருவுதிரிந்தும்-
உருவுவேறுபட்டும், உயிரளவாய் - தன்மாத்திரைதோன்றாது உ
யிர்மாத்திரையே மாத்திரையாய், அதன்வடிவொழித்து - தன்வரி
வடிவின் விகாரவடிவேவடிவாய் உயிர்வடிவையொழித்து, இருவ
யிற்பெயரொடும்- உயிரும்மெய்யும் ஆகிய இரண்டிடத்தும் பிற
ந்த உயிர்மெய்யென்னும் பெயருடனே, ஒற்றுமுன்னாய் - ஒற்
றொலி முன்னும் உயிரொலிபின்னுமாகி, உயிர்மெய்-உயிர்மெய்
யெழுத்து,வரும்-பிறக்கும். எ-று.(பொ-ரை) மெய்புள்ளியைவிட்
டகரத்தோடுகூடியவழிவிட்டவுருவேயுருவாகியுமொழிந்த வுயிர்
களோடுகூடியவழியுருவுவேறுபட்டுந் தன்மாத்திரைதோன்றாது
உயிர்மாத்திரையேமாத்திரையாய்த் தன்வரிவடிவினதுவிகாரவடி

வேவடிவாயுயிர்வடிவையொழித்து மெய்யுயிரொன்னும் பெயரா கிய விரண்டிடத்தும்பிறந்த வுயிர்மெய்யென்னும் பெயருடனே யொற்றொலிமுன்னுமுயிரொலிபின்னுமாகிவரு முயிர்மெய்யெ ழுத்து. எ-று. ※ உருவுதிரிதல் புள்ளிபெறுவன புள்ளிபெற்று ம் மேலுங்கீழும்விலங்குபெறுவன விலங்குபெற்றும் கோடுபெ றுவனகோடுபெற்றும் புள்ளியுங்கோடு முடன்பெறுவன வுடன் பெற்றும் வருவனவாம். அருகேபெற்றபுள்ளியை யிக்காலத்தார் காலாக வெழுதுவர். ஒழித்தென்றும் ஒற்றுமுன்றாயென்றும் வந் தகிளைவினையிருவயிற்பெயரொடும்வருமென்னு முதல்வினையோ டுமுடிந்தன. நூதிமுதலியவற்றிற்றீட்டியவரிவடிவு மொலிவடிவு போலப் பயன்றருமொற்றுமைகுறித் தீண்டவ்விருதிறனும் விர விக்கூறினார். இவ்விலக்கணத்தானெவ்வொருமெய்யிற் பன்னீரு யிருங்கூடப்பன்னிருபதினெட்டிருநூற்றொருபத்தாறாய்வருமா று வழங்கும் வரிவடிவுள்ளு மொலிவடிவுள்ளுங்காண்க. (௫௧)

(௯௰) குறியதன்முன்ன ராய்தப்புள்ளி - யுயிரொடுபுணர்ந்த வல் லாறன்மிசைத்தே. ※

(எ-ன்) முற்றாய்தம்வருமாறுணர்-ற்று. (ப-ரை) ஆய்தப்புள்ளி- புள்ளிவடிவினதாகியவாய்தம், குறியதன்முன்னர்- குற்றெழுத்தி ன்முன்னதாய், உயிரொடுபுணர்ந்த- உயிரோடுகூடிய, வல்லாறன் மிசைத்து- வல்லெழுத்தாறனுளொன்றன்மேலதாய்வரும். எ-று. (பொ-ரை) புள்ளிவடிவினதாயவாய்தங் குற்றெழுத்தின் முன்ன தா யுயிரோடுகூடிய வல்லெழுத்தாறன்மேலதாய்வரும். எ-று. ※ உயிர்வருக்கத்திறுதிக்கட்டந்தவாய்தவடிவைப்பிறகலாத்து வேறு படவரைந்து வழங்குவராதலிற்றொல்லைவடிவுதோன்ற ஆய்தப்பு ள்ளியென்றார். [உ-ம்] எஃகு- கஃசு- இருபஃது. அஃகடிய - அஃகான்-மஃகான்- எனவரும். தனிக்குறிலென்று வரைந்தோதா மையின்-"விலஃஃகி வீங்கிருளோட்டுமேமாத-ரிலஃஃகுமுத்தினி னம்" எனவும்வரும். பிறவுமன்ன. இச்சூத்திரமேற்கோளாதலாற் றொனடுத்துமொழித லென்னுமுத்தி. வல்லினவகையானியல்பா கவந்தவாய்த மாறனோடு புணர்ச்சிவிகாரத்தான்வரு மாய்தமுஞ் செய்யுள்விகாரத்தான்வரு மாய்தமுங்கூடியெட்டாய்வருமாறுகா ண்க. (௫௨)

(௯௧) இசைகெடின்மொழிமுத லிடைகடைநிலைநெடி - லள பெழுமவற்றவற் றினக்குறில்குறியே. ※

(எ-ன்) உயிரளபெடை வருமாறுணர்- ற்று. (ப-ரை) இசை கெடின்- பாட்டிலோசைகுறையின், மொழி- அவ்வோசை குறை ந்தசொல்லுக்கு, முதல்- முதலிலாகிலும், இடை - நடுவிலாகிலு ம், கடை - இறுதியிலாகிலும், நிலை - நின்ற, நெடில் - நெட்டெ

ழுத்தேழுமொன்று, அளபெழும்- அவ்வோசையை நிறைக்கத்த
ம்மாத்திரையின் மிகுந்தொலிக்கும், அவற்று - அவற்றின் பின்,
அவற்றினக்குறில்- அததற்கு இனமாகியகுற்றெழுத்துகள், குறி -
அளபெடுத்தமையை அறிதற்குவரிவடிவில் அறிகுறியாய் வரும்.
எ-று. (பொ-ரை) செய்யுட்கண் இசைகுன்றின் மொழிமுதலினு
ம் இடையினுங் கடையினுநின்ற நெட்டெழுத்தேழும் அவ்வி
சைநிறைக்கத் தத்தமாத்திரையின்மிக்கொலிக்கும் அவ்வாறு அள
பெடுத்தனவறிதற்கு அவற்றின்பின் னவற்றிற்கினமாகிய குற்றெ
ழுத்துகள் வரிவடிவின்க ணறிகுறியாய்வரும் எ-று. [உ-ம்] "ஆஅ
வளைய வலவன்றன் பார்ப்பினோ - டீஇ ரிரையுங்கொண் டீரளைப்
பள்ளியுட்- டூஉந் துணையலைப்பத் துஞ்சா திறைவன்றேண்-மென
வலைப்பட்ட நம்போ னறுநுதா- லோஒ வுழக்குந் துயர்." (எ-ம்)
"உறூஉர்க் குறுமோ யுரைப்பாய் கடலைச் - செறாஅஅய் வாழிய
நெஞ்சு." (எ-ம்) "அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ணுசுப்
பிற்கு - நல்ல படாஅ பறை." (எ-ம்) வரும். செறாஅஅய் வாழி
யென்புழி நான்குமாத்திரையாயும் ஏனைய மூன்று மாத்திரையா
யும் அலகுபெற்றுச் செய்யுளிசைநிறைத்து மூவிடத்தும்வந்தவா
றுகாண்க. பிறவுமன்ன. இனி இசைகெடினென்று பொதுப்
படக் கூறினமையால் "கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்
வாய்மற்றாங்கே- யெடுப்பதூஉ மெல்லாமழை" எனக்குறினெ
டிலா யளபெழுந் தலகுபெற்றும் பெறாதும் இன்னிசை நிறைப்
ப வருவனவும் "உரனசைஇ யுள்ளந் துணையாகச்சென்றார் - வர
னசைஇ யின்னு முளேன்." எனவளபெழுந்தலகுபெற்றும்பெ
றாதுஞ் சொல்லிசை நிறைப்ப வருவனவும் "வீழப்படுவார் கெ
ழீஇயிலர் தாம்வீழ்வார் - வீழப் படாஅரெனின்." என்பதனு
ட்கெழீஇ யிலவெனவளபெழுந் தலகுபெறாதுசொல்லிசை நிறை
ப்ப வருவனவுங்கொள்க. எழுத்துப்பலவாயின ஒலிவேற்றுமையா
னன்றே? அங்ஙனமாதலினெடிலதுவிகாரமாய் ஓரொலியாய்ப் பி
றப்பதே அளபெடையென்பார் நெடிலளபெழுமென்றும் அ
வற்றவற்றினக்குறில்குறியே யென்றுங்கூறினர். ஆசிரியர் தொல்
காப்பியரும் நீருநீருஞ்சேர்ந்தாற்போல நெட்டெழுத்தோடு கு
ற்றெழுத் தொத்துநின்று நீண்டிசைப்பதே அளபெடை யென்
பார் "குன்றிசைமொழிவயி னின்றிசைநிறைக்கு- நெட்டெழுத்
திம்ப ரொத்தகுற்றெழுத்தே" என்றார். இங்ஙனம் ஒலிபற்றிக்
கூறும்வகையால் இருவர்க்குங்கருத் தொன்றேயாயினுங் குறியே
யென்றது இவ்விரண்டுமேற்கோளிலொன்று துணிதலாலொருதலை
துணிதலென்னுமுத்தியும் அம்மதமும் படவந்ததென்க. இப்பெ
ற்றியறியாதார் நெடிலுங் குறிலும் விரலும் விரலுஞ் சேர நின்று

ற்போல இணைந்துநின்று அளபெடுக்குமெனத் தமக்குவேண்டி யவாறேகூறுப. நெடிலுங் குறிலு மவ்வாறு நின்றளபெழுமென் றல் பொருந்தாமைக் கெழுத்தெடையென்று தளபெடையென் னுங்குறியீடே சான்றாதலறிக. அற்றேல் ஓரெழுத்தினையே யிரண் டுமாத்திரையும் ஒருமாத்திரையுமாகப்பிரித் தசைத்தலானுஞ் சீர் செய்துதளையறுத்தல் பொருந்தாதென்னி லற்றன்று எழுத்துவ கையானென்னை "மாத்திரை வகையாற் றளைதம கெடாநிலை- யாப்பழியாமையென் றளபெடை வேண்டும்" எனக்கூறுபவாகலின் எழுத்திற்குமாத்திரை கோடலுமசைத்தலுஞ் சீர்செய்தலுந் தளையறுத்தலும் ஓசைபற்றி யல்லது எழுத்துப்பற்றி யல்லவென்க. இதனுட் செப்பலோசை முதலியவோசைகுன்றுழி நெட்டெழுத்தேழுமொழிமுதலிடைகடைகளினின் றளபெடுக்குங்காலௌகார மொழியிடைகடைகளின் வாரப்பெறுமையி னவ்விடங்களினொழிய நின்றளபெடுக்குமளபெடை பத்தொன்பதோடின்னிசை நிறைப்பவும் சொல்லிசைநிறைப்பவும் அளபெடுக்கு மளபெடையிரண்டுங்கூடி உயிரளபெடை யெழுமூன்றாய் வருமாறுகாண்க. (௯௧)

(௯௨) ஙஞணநமன வயலளவாய்த - மளபாங்குறிலிணை குறிற்கீழிடைகடை - மிகலேயவற்றின் குறியாம்வேறே. *

(எ-ன்) ஒற்றளபெடைவருமாறுணர் - த்று, (ப-ரை) (இசைகெடின்) - பாட்டிலோசைகுறையின், குறிலிணைக்(கீழ்) - குறிலிணையின்கீழாவது, குறிற்கீழ்- குறிற்கீழாவது, இடை - சொல்லுக்குநடுவிலாகிலும், கடை - சொல்லுக்குக்கடையிலாகிலும், ஙஞணநமனவயலள- ஙம்முதலிய விப்பத்துளொன்றேனும், ஆய்தம்-ஆய்தமேனும், அளபுமிகலாம்- அவ்வோசையை நிறைக்கத் தன்மாத்திரையின்மிகுந்தொலிக்கும், அவற்றின் வேறுகுறியாம்- அப்படியளபெடுத்தமையை யறிதற்கு அவற்றின்பின் அவ்வெழுத்துகளே வரிவடிவில் அறிகுறியாய்வரும். எ-று. (பொ-ரை) செய்யுட்களினிசைகுன்றிற் குறிலிணைக்கீழுங் குறிற்கீழுமாய் மொழியிடையினு மீற்றினுநின்ற விப்பத்தொற்றும் ஆய்தமும் அவ்வோசைநிறைக்கத் தம்மாத்திரையின் மிக்கொலிக்கு மவ்வாறளபெடுத்தன வறிதற்கவற்றின்பி னவ்வெழுத்துகளே வரிவடிவின்கண் வேறறிகுறியாய் வரும். எ-று. ❊ "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனான் மேல் இசைகெடி னென்றதனை யிவ்வளபெடைக்கும் வருவித்துக்கொள்க. மாத்திரைநிறைத்தற்பொருட்டு அதிகமாத்திரையாய் வருமென்று கோடற்குமேலே யென்றார். [உ-ம்] "இலங்ங்கு வெண்பிறைசூ டீசனடியார்க்குக் - கலங்ங்கு நெஞ்ச

மிலைகாண்." (எ-ம்) "எங்கு நிறைவனுள னென்பாய் மனனேயா-னெங்கெனத்திரிவாரின்." (எ-ம்) "கலங்கொண்ட சன்மார்பர்," "மடங்கலந்தமனனேகளத்துவிடங்கலந்தானை வேண்டு." (எ-ம்,) "அங்கணிந்த வருளிடத்தார்க்கன்பு செய்து- நங் களங்கறுப்பா நாம்." (எ-ம்) ஙகரங் குறிலிணைக்கீழுங் குறிற்கீழு மொழிக்கிடையினுங் கடையினுமுறையேயளபெழுந்தது. "கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு- பொன்ன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ - மின்ன் னுழைமருங்குன் மேதகு சாயலா - ளென்ன் பிறமகளா மாறு."என ணகரமும் னகரமுங்குறிற்கீழ் மொழியீற்றினளபெழுந்தன. "எஃஃ கிலங்கிய கையராயின்னுயிர் - வெஃஃகுவார்க் கில்லைவீடு."என ஆய்தங்குறிற்கீழ்மொழிக்கிடையினளபெழுந்தது. பிறவுமன்ன. ஆய்தமொற்றொடு மொருபுடை யொத்துவருதலின் ஈண்டுத்தந்துரைத்தார். ஙகரம்விதியீறாய்வருதலினதனை விலக்கா தாய்தமொருமொழிக்கண்ணுந்தொடர்மொழிக்கண்ணும் விதித்த முதலெழுத்தாக ளிருமருங்கு நின்றெழுப்பவிருசிறகெழுப்ப வெழுமுடலதுபோ லிடையெழுந்தொலிப்பதன்றி ஒருவாற்றானு மீறாய் வருந்தன்மையதன்றாகலின் அஃகடிய முதலியவற்றின்கட் டிரிந்தவாய்தம் அஃகான் முதலியவற்றின்கட் டோன்றிய ஆய்தம்போலத் தொடர்மொழிக்கணிடை நிலையாயதன்றியிறுதியீறன்றென் றதனுண்மைதுணிந்ததனை யிறுதிக்கண்விலக்கிஒற்றளபெடை நாற்பத்திரண்டென்று மேலுரைத்தவாறிங்ஙனம்வருதல்காண்க. (௧௭)

(௧௮) யகரம்வரக்குறளுத்திரியிகரமு- மசைச்சொன் மியாவினிகரமுங்குறிய. *

(எ-ன்.) குற்றியலிகரம் வருமாறுணர் - த்து. (ப-ரை) யகரம்வர - யகரத்தைமுதலிலேயுடைய சொல்வர, குறளு - குற்றியலுகரம், திரி - திரிந்த, இகரமும் - இகரமும், அசைச்சொல் - அசைச்சொல்லாகிய, மியாவின் - மியாவென்பதின் மகரத்தின்மே லிருக்கிற, இகரமும் - இகரமும், குறிய - குற்றியலிகரங்களாம். எ-று. (பொ-ரை) யகரம் வருமொழிக்குமுதலாகிவர நிலைமொழிக்கீறாகி நின்ற குற்றியலுகரந் திரிந்தவிகரமு மியாவென்னுமசைச்சொல்லின்க ணிகரமுங் குற்றியலிகரங்களாம், எ-று, ※ எனவேயிங்ஙனம்வருமாயி னிவ்வெழுத்தின் றொடர்பாற்குறுகுமென்பது பெற்றாம். [உ-ம்] நாகியாது - எஃகியாது - வரகியாது - கொக்கியாது - குரங்கியாது - அல்கியாது (எ-ம்) கேண்மியா - சென்மியா- (எ-ம்) வரும், பிறவுமன்ன. பொதுப்படக்கூறியவற்றுள் விலக்குவனவற்றை விலக்கிக்கொள்ளப்படுங் குற்றியலுகர முப்பத்தாறனும் அசைச்சொன்மியாவினானுங் குற்றியலிகர முப்பத்தேழா

யீ வருமாறுகாண்க. (கூங)

(கூச) நெடிலோடாய்த முயிர்வலிமெலியிடைத் தொடர்மொழியிறுதி வன்மையூருகர - மஃகும்பிறமேற் றொடரவும்பெறுமே. ❋

(எ-ன்) இடமும் பற்றுக்கோடுஞ்சார்ந்து குற்றியலுகரம் வருமாறுணர் - ற்று. (ப-ரை) நெடிலோடு - தனிநெடிலெழுத்துடனே, ஆய்தம்- ஆய்தமொன்றும், உயிர்-சொல்லுக்குநடுவிலுங்கடையிலும்வாராத ஔகாரம் நீங்கிய உயிர்பதினொன்றும், வலி - வல்லெழுத்தாறும், மெலி- மெல்லெழுத்தாறும், இடை - வல்லெழுத்துகளோடுதொடராதவகரம் நீங்கிய இடையெழுத்தைந்தும் ஆகிய முப்பத்தாறனுளொன்றால், தொடர்- ஈற்றுக்கு அயலெழுத்தாகத் தொடரப்பட்டு, மொழியிறுதி-சொல்லினிறுதியில், வன்மை வல்லெழுத்துகளுள் யாதாயினுமொன்றன்மேல், ஊர் - ஏறிவருகின்ற, உகரம் உகரமானது, அஃகும் - தன்மாத்திரையிற் குறுகும், பிற- பிறவெழுத்துகளுளொன்றும்பலவும், மேற்றொடரவும்- குறுகுதற்கு மொழிநிறைதற்குங்காரணமாக மேலே தொடரவும், பெறும் - தனிநெடிலொழிந்த வைந்துதொடரும் பெறும். எ-று. (பொ-ரை) தனிநெடிலெழுத்துடனே ஆய்தமொன்று மொழியிடையீறுகளின் வரப்பெறாத ஔகாரமொழித் தொழிந்த வுயிர் பதினொன்றும் வல்லெழுத்தாறும் மெல்லெழுத்தாறும் வல்லெழுத்துகளோடு தொடராதவகரமொழிந்தொழிந்த இடையெழுத்தைந்துமாகிய முப்பத்தாறெழுத்தினுள் யாதானு மொன்றீற்றுக் கயலெழுத்தாய்த் தொடரப்பட்டு மொழியிறுதிக்கண் வல்லெழுத்துகளுள் யாதானுமொன்றுபற்றுக்கோடாக வதனையூர்ந்துவரி னவ்வுகரந்தன் மாத்திரையிற்குறுகு மதுதன்மாத்திரையிற்குறுகுதற்குமொழிநிரப்புதற்குங்காரணமிவ்வோரெழுத்துத் தொடர்தன்மாத்திரையினமையாது பிறவெழுத்துகளுளொன்றும் பலவுமேலே தொடரவும்பெறும். எ-று. ❋ நெடிலை யொடுக் கொடுத்துப்பிரித்தார் தனிநெடிலாதலின். உயிரொன்றது குற்றுயிர் நெட்டுயி ரிரண்டனையும். தொடரொன்றும்வினைத்தொகை வன்மையூ ருகரமென்னுஞ் செயப்படு பொருளோடு முடிந்தது. பிறவென்றது பகாப்பதமேழும் பகுபதமொன்பதுமென்றுவரையறுத்தவற்றினிங்ஙனட்ஈற்றயலுமீறுமாகக்கூறிய விரண்டுமொழித்தொழிந்தவேழுமைந்துமாயவெழுத்துகளை. தொடரவுமென்றவும்மையிறந்தது தழீஇ நின்றது பெறுமேயென்றது தனிநெடிலொழிந்த ஐந்து தொடரும். வன்மையூருகரங் குறுகுதற்கு மொழிநிரம்புதற்கு மேற்றொடர்தலு மின்றியமையாமையின். [உ-ம்] நாகு- எஃகு-வரகு-பலாசு-கொக்கு-குரங்கு-அல்கு-எனவு

றும். பிறவுமன்ன. இனியிங்ஙனம்பிறமேற்றொடரவும்பெறுமே யெனக்கூறு தொழியினிவ்வைவகையெழுத்துமீற்றெழுத்துங் கூடியேயொருமொழியாய் நிற்குமெனவும்பட்டுஅது இது என்றற்றொடக்கத்தன வுங்குற்றியலுகரமாவான்செல்லுமெனவும் ஆய்தமுந்தனிமெய்யுமொழிக்குமுதலா மெனவுந் தனிநெடிலையொடுக்கொடுத்துவிதக்கவேண்டாவெனவும் ஆசிரியர் தொல்காப்பியர் "நெட்டெழுத்திம்பருந்தொடர்மொழியீற்றுங்-குற்றியலுகரம்வல்லாறூர்ந்தே" எனத்தொகுத்துக் கூறியவாறேகூறுது எல்லாவெழுத்தையுங்கூறுவார் அவற்றைமேயாய்தமுதலைந்தாகவகுத்துத்தனிநெடிலோடாறுகக் குற்றுகரத்தையறுவகையான் வழங்குதற்கிலக்கணந்தோன்றக் கூறினமையினவ்வாறெறிந்தாருசற் பொருட்டெல்லாவெழுத்தையுங் குறியீடாகவிருந்தவாய்தமுதலியவைந்தனுளொன்றீர்நயலினின்றிறுதி வன்மையூருகரத்தைத் தொடர்தலேயன்றிப்பிறமேற்றொடர்தலுங் கூறுகுதற்கேதுவன்றெனவும்பொருள்படுமாறறிக. இச்சூத்திரப்பொருண்முன்மொழிந்துகோடலென்னுமுத்தி இனியிவ்வாறன்பகுதித்தொடருமிடமாதலினிவ்விடவேற்றுமையாற் குற்றியலுகரமுப்பத்தாறென்று மேற்கூறியவாறே வருமாறுகாண்க. இவ்வாறுகொள்ளா தாசிரியரீற்றயலினின்றவெழுத்தையிடமாகக்கொண்டாற்போலவீற்றயலினின்றவசையையிடமாகக்கொண்டு அவற்றுள் அது இது முதலியமுற்றுகரத்தை நீக்குதற்குக் குற்றெழுத்துத் தனியேவருமசையொன்றனையுமொழித் தேனையேழசையினையும் "நெடிலேகுறிலிணை குறினெடி லென்றிவை- யொற்றொடு வருதலொடுகுற்றொற்றிறுதியென்- றேழ்குற்றுகரக்கிடனென மொழிப" எனக்கூறினருமுளரா லோவெனின், அவ்வாறேழிட மெனக்கோடுமென்பார்க்குப் பின்னுக்குச்சுண்ணம்பு பட்டாங்கு விளையாட்டு இறப்பூது முதலியனவும் ஆய்தந்தொடர்ந்தனவுநெட்டொற்றிறுதிநெடிலிறுதிக்குற்றுகர முதலியனவுங்குற்றொற்றிறுதிக்குற்றுகரமுமாயடங்குமேனும் போவது வருவதுஎன்பது முதலியனவடங்காமையறிக, நெடிலன் முதலாயின வீற்றயலி னிற்றல்வேண்டுமென யாப்புறவின்மையின் முதற்கணிற்பினு மீற்றுகர மவற்றிறுதியாதலையுமெனக்கொண்டு போவது முதலியனவு நெடிலிறுதி முதலியவாயடங்குமென்பார்க்கும் அந்நனம் பாகுபடுத்துக் கூறுவிசெட்ததனற் போதப்படலின்றெனப்படாம். இது பிறநூற்குற்றங்காட்டலென்னுமதம். இனி மொழிந்தபொருளோ டொன்றவவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்த லென்னுமுத்தியான் நுந்தையென்னு முறைப்பெயர் மருங்கினொற்றிய நகரமிசை யுகரமூர்ந்து மொழிமுதற்கணிற்பினுங் குற்றியலுக

ரமாமெனவும் அவ்வுகரம் செக்குக்கணை சுக்குக்கொடு எனப்புண ர்மொழியிடைப்படினுந் தன்னரைமாத்திரையிற் குறுகுமெனவுங்கொள்க. (௬௯)

(௫௯) தற்சுட்டளபொழி யைம்மூவழியு - நையுமௌவு முதலற்றாகும்.

(என்) ஐகார ஔகாரக்குறுக்கங்கள்வருமாறுணர்-ற்று. (ப-ரை) ஐ- ஐகாரம், தற்சுட்டளபு - தன்னைக்குறித்துத் தன்பெயர் சொல்லுமளவிற்குறுகாது, ஒழி- ஒழிந்த, மூவழியும்- சொல்லுக்குமுதலிடை கடைகளிலே யெங்கே நின்றாலும், நையும் - தன்மாத்திரையிற்குறுகும், ஔவும்- ஔகாரமும், முதல்- சொல்லுக்குமுதலில், அற்றாகும்- தன்மாத்திரையிற்குறுகும், எ-று. (பொ-ரை) ஐகாரந்தன்னைக்கருதித் தன்பெயர்கூறுமளவிற் குறுகாதொழிந்த மொழிமுதலிடை கடை யென்னுமூன்றிடத்துமுன்னும் பின்னுமிருமருங்கு மாயவெழுத்தின்றொடர்பாற் றன்மாத்திரையிற்குறுகும் ஔகாரமுந்தன்பெயர் கூறுமளவிற்குறுகா தொழிந்த மொழிமுதற்கட் பின்வருமெழுத்தின்றொடர்பாற் றன்மாத்திரையிற் குறுகும். எ-று. ❁ சுட்டளபென்பது வினைத்தொகை. அவையொன்றாவெழுத்தின் சாரியைதொடரினுங் குறுகுமென்பது கருதி. எனவே ஓரெழுத்தொருமொழியாய் நிலைமொழி வருமொழியாய்த் தொடராது தனித்து ஒரோவிடங்களின்வரிற் றன்மாத்திரைகுறுகாதென்பதூஉம்பெற்றாம். [உ-ம்] ஐப்பசி- கைம்புறம் (எ-ம்) உலையன் (எ-ம்) குவளை (எ-ம்) மௌவல் (எ-ம்) வரும். இனி "ஔவியமை தனிபிரண் டல்வழி யையௌ வுஞ்தாமொன்றரை தனிமையுமாகும்." எனக்கூறினரு முளராலோவெனிற் றன்னியல்பாய விரண்டு மாத்திரையி னின்றுங் குறுகுதலில்லனவற்றை யொழிப்பார் விகாரத்தான் மூன்றுமாத்திரையு நான்குமாத்திரையுமாய் மிகலொலிக்கு மளபெடையை யொழிக்கவேண்டாமையினது பொருந்தாதென்க. இது- மறுத்தலென்னுமதம். ஏனையவுடன்படல். இடவகையா னைகாரக்குறுக்கமூன்றும் ஔகாரக்குறுக்கமொன்றும் வருமாறுகாண்க. இனி ஐகாரக்குறுக்க மொழிமுதற்க ணொன்றரைமாத்திரையாயும் ஏனையிடங்களி னொருமாத்திரையாயும் ஔகாரக்குறுக்க மொழிமுதற்க ணொன்றரை மாத்திரையாயுங் குறுகுமென்ப துணர்ந்துணர்ந்துகொள்க. அவ்வாறுயித்துணர்ந்து கொள்ளாயெனல் "வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார் - வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர் - வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல்- வைகலை வைத்துணராதார்." (எ-ம்) "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன் - மெய்வேல் பறியா நகும்." (எ-ம்

"ஔவியநெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்- கேடு நினைக்கப்படு ம்.,, (எ-ம்) வருமிலக்கியங்கட் கிலக்கணமின்றாய் முடியுமென்க.()

(௯௬) ணனமுன்னும்வஃகான் மிசையுமக்குறுகும். *

(எ-ன்) மகரக்குறுக்கம் வருமாறுணர்-ற்று. (ப-ரை) ணன - ணகர னகரங்களிலொன்று நின்றுதொடர, முன்னும்- அதன்முன்னின்றாலும், வஃகான்- வகரம்வந்துதொடர, மிசையும் - அதன்பின்னின்றாலும், ம- மகரம், குறுகும்-தன்மாத்திரையிற் குறையும். எ-று.(பொ-ரை) ணகார னகாரங்களிலொன்றுநின்றுதொடர்ந்திடவ தன்முன்வரினும்வகாரம்வந்துதொடர்ந்திடவதன்மேனிற்பினு மகரந் தன்னரைமாத்திரையிற்குறுகும். எ-று. [உ-ம்] "பசும்போல்வார்முற்பட்டாற் பார்ப்பட்டசான்றோர்- முசுப்போல முன்காத் திருப்பர்- பசுத்தான் - வெருளினுமெல்லாம் வெருளுமஃதன்றி- மருளினு மெல்லாமருண்ம்.,, (எ-ம்) "திசையறி மீகானும் போன்ம்.,, (எ-ம்) தரும்வளவன் (எ-ம்) வரும். இனி ணகர னகரங்களின் முன்வந்த மகரஞ் செய்யுமென்னும் வாய்பாட்டுமுற்றீற்ற தென்பதூஉம் அவ்வீற்றப னுகரங்கெட அவ்வுகரமூர்ந்த ளகர லகரங்களீற்றுமகரத்தோடு மயங்காமையின்மயங்குதற்குரிய ணகர னகரமாய்த் திரிந்தனவீண்டுநின்ற ணகர னகர மென்பதூஉ மிவற்றொன்றுடன் ஃறொற்றாய்மயங்கின் மகரங்குறுகு மென்பதூஉம் இவற்றின்முன் குறுகுதல் செய்யுட்கண்ணதென்பதூஉம் காணும் கூனும் எனவியல்பாகநின்ற ணகரனகரங்கண்முன்னிவ்வாறுவந்து மகரங்குறுகாதென்பதூஉம் பிறவுமேல்வருஞ் சூத்திரங்களெல்லாவற்றையுப்வேண்டிப் பருந்தின்வீழ்வாய்நின்றவிச்சூத்திரத்துய்த் துணர்ந்துகொள்க. இஃதுய்த்துணரவைப்பென்னுமுத்தி. (௪௧)

(௯௭) லளவீற்றியைபினா மாய்தமஃகும். *

(எ-ன்) ஆய்தக்குறுக்கம் வருமாறுணர்-ற்று. (ப-ரை) லளவீற்றியைபின்-லகார ளகார வீற்றுப்புணர்ச்சியினால்,ஆம்- ஆகின்ற, ஆய்தம்- குறில்வழிலளத்தவ்வணையி னாய்தமாகவும் பெறாஉமல்வழியானே என்னுமாய்தம், அஃகும்- தன்னரைமாத்திரையிற்குறுகும் எ-று. (பொ-ரை) லகார ளகார வீற்றுப்புணர்ச்சியினால்வரும் "குறில்வழி லளத்தவ்வணையினாய்த- மாகவும்பெறாஉம்,, என்றவாய்தமிருமருங்குமாயவெழுத்தினொடுடர்பாற் றன்னரைமாத்திரையிற் குறுகும். எ-று. [உ-ம்] கஃறீது- முஃடீது- எனவரும், இது - முடிவிடங்கூறலென்னுமுத்தி. இவ்வாய்தங்குறுகாதெனக் காணாடல் விரோதங்கூறுவாருமுளர். (௪௨)

(௯௮) தொல்லைவடிவின வெல்லாவெழுத்துமாண்டு - எய்துமெகர மொகரமெய்புள்ளி. *

(எ-ன்) நிறுத்தமுறையானே யுருவமாமாறுணர்-ற்று. (ப-ரை)

எல்லாவெழுத்தும்-எல்லாவெழுத்துகளும், தொல்லைவடிவின- பல வேறுவகைப்படவெழுதிவழங்கும் பழையவடிவினையுடையவாம், ஆண்டு அவ்வடிவையுடையவாய்வழங்குமிடத்து,எகரம்-எகரமும், ஒகரம்- ஒகரமும், மெய்- மெய்களும், புள்ளி- புள்ளியை, எய்தும்-பெறும். எ-று. (பொ-ரை)எல்லாவெழுத்தும் பல்வேறுவகைப் படவரைந்துவழங்கும் பழையவடிவினையுடையவாமவ்வடிவினவாய்வழங்குமிடத்துத் தனித்துமுடம்பூர்ந்தும்வருமெகரமுமொகரமுந் தனிமெய்களுமியல்பாய்ப்புள்ளியைப் பிற்காலத்தொழித்தவரைந்து எகாரவோகாரங்களோடுமுயிர்மெய்களோடு மையப்படவழங்கும்வழக்கினையுடையவன்றித் துணியப்படுந் தொல்லைவடிவினதுறுப்பாய புள்ளியைப்பெறும். எ-று. ※ வரலாறு. ள்-எ-ஒ்-ஒ-கெ கெ கொ கொ க்க எனவரும். பிறவுமன்ன. (சா௩)

(௯௧) மூன்றுயிரளபிரண் டாநெடிலொன்றே - குறிலோடை யௌக் குறுக்கமொற்றள - பவையொற்றிஉக் குறுக்கமாய்தங்- கால்குறண்மஃகா னாய்தமாத்திரை.

(எ-ன்) நிறுத்தமுறையானேமாத்திரையாமாறுணர்-ற்று.(ப-ரை) மாத்திரை - ஒலிக்குமளவு, உயிரளபு - உயிரளபெடைக்கு, மூன்(றும்)- மூன்றுகும், நெடில்- நெட்டெழுத்திற்கு, இரண்டாம்- இரண்டாகும், குறில்- குற்றெழுத்திற்கும், ஐக் (குறுக்கம்)- ஐகாரக் குறுக்கத்திற்கும், ஔக்குறுக்கம்- ஔகாரக்குறுக்கத்திற்கும், ஒற்றளபு- ஒற்றளபெடைக்கும்,ஒன்(றும்)- தனித்தனியொன்றுகும், ஒற்று-மெய்யெழுத்திற்கும், இக் (குறுக்கம்)-குற்றியலிகரத்திற்கும், உக்குறுக்கம்- குற்றியலுகரத்திற்கும், ஆய்தம்- ஆய்தத்திற்கும்,அரை(யாம்)- தனித்தனியரையாகும், குறண்மஃகான் - மகரக்குறுக்கத்திற்கும், (குற ளாய்தம்- ஆய்தக்குறுக்கத்திற்கும், கா(லாம்)- தனித்தனிகாலாகும். எ-று. (பொ-ரை) உயிரளபெடைக்கு மாத்திரை மூன்றாம் நெடிலுக்குமாத்திரை இரண்டாம் குறிலுக்கும் ஐகாரக் குறுக்கத்திற்கும் ஔகாரக்குறுக்கத்திற்கும் ஒற்றளபெடைக்குந் தனித்தனி மாத்திரையொன்றாம். ஒற்றிற்குங் குற்றியலிகரத்திற்குங் குற்றியலுகரத்திற்கு மாய்தத்திற்குந்தனித்தனிமாத்திரையரையாம். மகரக்குறுக்கத்திற்குமாய்தக்குறுக்கத்திற்குந் தனித்தனிமாத்திரைகாலாம்.எ-று ※உயிர்மெய்க்களவுகூறுதொழிந்தார். மேனுயிரளபாயென்றுரைத்தலின். இஃதுரைத்தாலென்னுமெத்தி உயிரளபெடை நான்குமாத்திரையவாதலும் ஐகார ஔகாரக்குறுக்கங்களொன்றரை மாத்திரையவாதலும் ஆரிடத்துள்ளுமளவைபோல்வனவற்றுள்ளுமருகிவந்துசெய்யுள்வழுவமைதியாய்முடிதலினவற்றை யொழித்தெல்லார்க்கு மொப்பமுடிந்துபயின்றுவருவன மூன்று மாத்திரையுமொருமாத்திரையுமேயாகலின் மூன்றுயிரளபென்று

மொன்றே குறிலோ டையெளக்குறுக்கமென்றுங்கூறினார். குற்றி யலுகரம்புணர்மொழியிடைப்படிற்குறுகிக்கான்மாத்திரைபெறு தலுமையிற்கோடலென்பதனாற்கொள்க. (௯௪)

(௱) இயல்பெழுமாந்த ரிமைநொடிமாத்திரை. *

(எ-ன்) எழுத்தொலியெழுச்சியலவற்றையுமளந்து கோடற்குக் கூறியவொருமாத்திரையென்னுங் காலசங்கையையுணர்-ற்று. (பதவுரை) மாந்தர்- மனிதருடைய, இயல்பு-இயல்பாக, எழும் - உண்டாகுகின்ற, இமை- கண்ணிமைப்பொழுதும், நொடி- கைந்நொடிப் பொழுதும், மாத்திரை-ஒருமாத்திரையென்னும்வரையறைப்பொழுதாம். எ-று, (பொழிப்புரை)மாந்தருடைய வியல்பாகவெழுமிமைப் பொழுதுநொடிப்பொழுதுமொருமாத்திரையென்னும் வரையறைப்பொழுதாம்.எ-று. ※ இமையென்றதிமைத்தலை. நொடியென்றது நொடித்தலை.இவையிரண்டுமாகுபெயராய்க்காலத்தையுணர்த்தி நின்றன.இயல்பெழுமென்னும்பெயரெச்சம்இமைநொடியென்னும் பெயர்களோடு முடிந்தது. எழுத்தொலிமுதலியவற்றையியல்புகெடுத் தொருவன்வேண்டியவாறெழுப்பினுமவ்வாறெழாநிற்கு மிமைப்புநொடியுமியல்புகெடுத்தெழுப்பவேண்டினுமவ்வாறெழாதியல்பாகவே யெழாநிற்குமாதலி னியல்பெழுமெனவும் மேலைசூத்திரத்தெழுத்தொலிகளை வேண்டியவாறெழுப்பாநிவ்வளவானளந் தெழுப்புகவெனவுங்கூறினார். பின்னதுநிறுத்தலென்னுமுத்தியானிவ்வளவுகருவியிற்கூறப்பட்டது. (௪௫)

(௱க) ஆவியுமொற்று மளவிறந்திசைத்தலு - மேவுமிசைவிளி பண்டமாற்றாதியின், *

(எ-ன்) தவளைப்பாய்த்தாயொன்றிடையிட்டுநின்ற மேலதற்கோர்புறனடையுணர்-ற்று. (பதவுரை) ஆவியும்-முதலுஞ்சார்புமாகிய உயிரெழுத்துகளும், ஒற்றும் - அவ்விருவகைமெய்யெழுத்துகளும், அளவிறந்து - முன்சொன்ன அளவைக்கடந்து, ஒலித்தலும்- அதிகமாக ஒலித்தலையும், மேவும்- பொருந்தும், இசை- இராகமும்,விளி- அழைத்தலும், பண்டமாற்று -பண்டமாற்றலும், ஆதியின்-முதலானவைகளிடத்தென்றவாறு. (பொழிப்புரை) முதல்சார்பனைத்துமாயவாவியுமொற்றுமேற்கூறியவளவிறந்துமிக்கொலித்தலையும்பொருந்துமிசை விளி பண்டமாற்று முதலியவற்றின்கண். எ-று, ※ ஆதியென்றமையானுவல் குறிப்பிசைமுறையீடு புலம்பலுங்கொள்க. இசையினள்விறந்திசைக்குங்கா லாவிபன்னிரண்டு மாத்திரையீறாகவுமொற்றுப் பதினொருமாத்திரையீறாகவுமிசைக்குமென்றாரிசை நூலார்.இது-பிறநூன்முடிந்ததானுடன்படுதலென்னுமுத்தி. ஏனையவற்றினளவிறந்திசைக்குங்காலுலக நடைபிறழாதிசைப்பதே வரையறையென்க. நாவலென்பது நெற்போர்தெழிக்கும் பகட்

டிணங்களைத் துரப்பதோர்சொல். "காவ லுழவர் கடுங்களத்துப் போரேறி - நாவலோஒ வென்றிசைக்கு நாளோதை - மாவல் வன் - கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தாற் போலுமே-நல் யானைக் கோக்கிள்ளி நாடு.," என்பதனாலறிக. "கஃஃஃ றென்னுங் கல்லத ரத்தம்.," "சுஃஃஃ றென்னுந் தண்டோட்டுப்பெண்ணை.," என்பனகுறிப்பிசை. ஏனையபொருடேன் றிக் கிடத்தலினளவிறந்திசைத்தல்வந்தவழிக்காண்க. (௬௬)

(௱௨) பன்னீருயிருங் க ச த ந ப ம வ ய- ஞ ங வீரைந்துயிர் மெய்யுமொழிமுதல். *

(எ-ன்) நிறுத்தமுறையானே மொழிக்குமுதலாமாறுணர் - ற்று. (ப-ரை) பன்னீருயிரும் - பன்னிரண்டுயிரெழுத்துகளும், கசதநபமவயஞங-ககரமுதல் ஙகரமீறுகச்சொல்லப்பட்ட, ஈரைந்து - பத்து, உயிர் - உயிரேறிய, மெய்யும் - மெய்யெழுத்துகளும், மொழி சொல்லுக்கு,முதல்- முதலாகும். எ-று. பொ-ரை) பன்னிரண்டுயிரு மூயிரூர்ந்த விப்பத்து மெய்யு மொழிக்கு முதலாம். எ-று. ❁ [உ-ம்] அடை- ஆடை- இடை - ஈடு - உடை- ஊடல்- எடு- ஏடு- ஐயம்- ஒநி- ஓதி- ஒளவியம் (எ-ம்) களி - சவடி- தளிர்- நலம்- படை- மலை- வளம்- யவனர்- ஞமலி - அங்ஙனம் (எ-ம்) வரும். பிறவுமன்ன. உயிர்போற்றனித்து முதலாந்தன்மையவல்லவ தலி னுயிர்மெய்யென்றார். இஃதின்மைதல்ல துமெனமொழிதலென்னு முத்தி. (௬௭)

(௱௩) உ ஊ ஒ ஓ வலவொடு வம்முதல். *

(எ-ன்) பொதுவிதியுட் சிறப்புவிதியுணர் - ற்று. (ப-ரை) உ ஊ ஒ ஓ வலவொடு - உ ஊ ஒ ஓ என்கின்ற நான்குமல்லாத எட்டுயிர்களோடும், வ- வகரமெய்யானது, முதல்- சொல்லுக்குமுதலாகும், எ-று. (பொ-ரை) இந்நான்குமல்லாத வெட்டுயிரோடும் வகரமொழிக்குமுதலாம். எ-று. ❁ [உ-ம்] வளி - வாளி - விளி - வீளி - வெளி - வேளை - வைகல்- வௌவு- எனவரும். (௬௮)

(௱௪) அ ஆ உ ஊ ஓ ஔ யம்முதல். *

(எ-ன்) இதுவுமது. ப-ரை) அ ஆ உ ஊ ஓ ஔ (வொடு) - அ ஆ உ ஊ ஓ ஔ என்கிற ஆறுயிரோடும், ய- யகரமெய், முதல்- சொல்லுக்குமுதலாகும். எ-று. (பொ-ரை) இவ்வாறுயிரோடும் யகரமொழிக்குமுதலாம் எ-று. ❁ [உ-ம்] யவனர்- யானை- யுகம்- யூகி- யோகம்- யௌவனம்- எனவரும். மேலையொடுவை வருவித்துக்கொள்க. (௬௯)

(௱௫) அ ஆ எ ஒ வ்வோ டாகுஞம்முதல். *

(எ-ன்) இதுவுமது (ப-ரை) அ ஆ எ ஒ வ்வொடு-அ ஆ எ ஒ என்கின்ற

நான்குயிரோடும், ஞ - ஞகரமெய், முதலாகும் - சொல்லுக்குமுதலாகும். எ-று. (பொ-ரை) இந்நான்குயிரோடும் ஞகரமொழிக்குமுதலாம். எ-று. ❁ [உ-ம்] ஞமலி- ஞாலம்- ஞெகிழி - ஞொள்கிற்று- எனவரும். (ருய)

(௱௬) சுட்டியாவெகர வினாவழியவ்வை - யொட்டிஙவ்வு முதலாகும்மே. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) சுட்டு - மூன்றுசுட்டும், யா(வினா) - யாவினாவும், எகரவினா எகரவினாவும் ஆகியவைந்தனுடைய, வழி- பின்பு, அவ்வை- அகரத்தை, ஒட்டி- சேர்ந்து, ஙவ்வும் - ஙகரமெய்யும், முதலாகும் - சொல்லுக்குமுதலாகும், எ - று. (பொ-ரை) மூன்றுசுட்டும் யாவினாவும் எகரவினாவுமாயவிடைச் சொற்களின்பின் அகரத்தையொட்டி ஙவ்வுமொழிக்குமுதலாம். எ-று. ❁ [உ-ம்] அங்ஙனம்- இங்ஙனம்- உங்ஙனம்- யாங்ஙனம்- எங்ஙனம்- எனவரும. இவற்றை அங்கு எங்கு என்றாற்போல ஒருமொழிகளென்று லென்னையெனின், அஞ்ஞான்று எஞ்ஞான்று என்பனபோலப் பிளவுபட்டிடையே மெய்யொற்று மிக்கு வருதலிற் றொடர்மொழிகளேயாமென்க. ஙனமென்ப திடத்தினையுந் தன்மையினையுமுணர்த்தும் பலபொருளொருசொல்லாயவற்றினுந் தனித்துவருந் தன்மையதன்றி முடவன்கோலூன்றிவந்தாற்போலச் சுட்டிவினாவாகிய விடைச்சொற்களை முன்னிட்டு வருதலான் வழியென்றும் ஏனைய மெய்கள்போல முதலாகாமையி னவ்வோடென்றது ஒட்டியென்றும் ஒருவாற்றான் முதலாதலி னிழிவுசிறப்பாக ஙவ்வுமென்றுங்கூறினார். இங்ஙனங்கூறலான் ஙகரமொழிக்குமுதலாகா தென்பார்க்குடன்பட்டு மறுத்தலுமாய்ப் பிறர்தம்மதமேற்கொண்டு களைவே யென்னுமதம்படக் கூறினாரென்றுணர்க. இனி முதலாமென்றபதத்துயிர்மெய்யுள் வகரமுதலிய நான்கினையும் விதந்து கூறவே யொழிந்தவாறு மெய்யும் பன்னிரண்டுயிரோடு முதலாமென்பது அருத்தாபத்தியாற்பெற்றாம். இனி "சகரக் கிளவியு மவற்றோ ரற்றே- அ ஐ ஔவெனு மூன்றலங் கடையே." என்பது முதலாகவின்னோரன்ன சிலவெழுத்துக்களை மொழிக்குமுதலாகாவென ஆசிரியர் தொல்காப்பியர் விலக்கினாராலோவெனின் இவ்வடமொழிகளுந் திசைச்சொற்களு மக்காலத்திவ்வாறு தமிழின்கட் பயின்று வாராமை பற்றியென்க. (ருக)

(௱எ) ஆவி ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள மெய்- சாயுமுகர நாலாறுமீறே. *

(எ-ன்) நிறுத்தமுறையானே மொழிக்கிறுமாறுணர்-ற்று. (ப-ரை) ஆவி - தனித்தும் மெய்யோடும்வரும் பன்னிரண்டு உயிர்க

ளும், ஞ, ண ந ம ன ய ர ல வ ழ ள மெய் - இப்பதினொருமெய்களும், சாயுமுகரம் - குற்றியலுகரமுமாகிய, நாலாறும் - இருபத்துநான்கெழுத்தும், ஈறு - மொழிக்கீறாகும், எ-று. (பொ-ரை) தனித்துமொற்றேறியும் வருமாவிமுதலாக விங்ஙனங்கூறியவிருபத்துநான்கெழுத்து மொழிக்கீறாம். எ-று. ❀ [உ-ம்] ஆ-ஈ- ஊ-ஏ-ஐ ஓ-ஔ - எனவும். சுட்டும் வினாவும் உவமவுருபுமாயவோரெழுத்தொருமொழியாயிடைச்சொல்லாகிய அ-இ-எ உ-ஒ-(எ-ம்) விள- பலா- கிளி- குரீஇ- கடு- மரூஉ- சே- தை- கோ- (எ-ம்) உரிஞ்- மண்- பொருந்- மரம்- பொன்- வேய்- வேர்- வேல்- தெவ்- வீழ்- வாள்-அஃகு- (எ-ம்) வரும் காட்டாதொழிந்தன வருஞ் சூத்திரத்தாற்காண்க. குற்றுகரமு முயிரா யடங்குமேனும் புணர்ச்சி வேறுபாடுதோன்ற வேறெடுத்தோதினாரென்க. (௱௨)

(௱௮) குற்றுயிரளபி னீறாமெகர - மெய்யொடே லாதொந்நவ்வொடாமௌ - ககரவகரமோ டாகுமென்ப. ❀

(எ-ன்) குற்றுயிர்க்கெய்திய தன்மேற்சிறப்புவிதியும் எகரத்திற்கெய்தியதொருமருங்குவிலக்கலும்ஒகரத்திற்கும் ஔகாரத்திற்கும் எய்தியவற்றுட் சிறப்புவிதியுமுணர் - த்று, (ப-ரை) குற்றுயிர் - அ இ உ எ ஒ என்கிறகுற்றுயிரானவை, அளபின் - அளபெடையிலே, ஈறாம் - வரிவடிவில் அறிகுறியாகத்தனித்து ஈறாகும், எகரம் - எகரமானது, மெய்யொடேலாது - மெய்யோடீறாகாது, ஒ-ஒகரமானது, நவ்வொடாம்-நகரமெய்யொன்றுடனீறாகும், ஔ-ஔகாரமானது, ககரவகரமோடாகும்- ககர வகரமாகியஇரண்டுமெய்யுடனுமீறாகும். என்ப -என்றுசொல்லுவர்புலவர். எ-று. (பொ-ரை) குற்றுயி ரளபெடையின்கண் வரிவடிவி னறிகுறியாய்த்தனித்தீறாம் எகரமெய்யோ டீறாகாது ஒகரம் நகரமொன்றுட னீறாம் ஔகாரங் ககர வகரங்க ளிரண்டிட னுமீறாமென்று சொல்லுவர்புலவர், எ-று. ❀ [உ-ம்] ஆஅ வஇி பவலவன்-(எ-ம்) நொ-(எ-ம்) கௌ-வௌ- (எ-ம்) வரும் நெடிலளபெடுப்புழி வரிவடிவின் அறிகுறியாய்வருங்குற்றுயிர் நெடிலோடு தொடர்ந்துடன்பன்மெய்யுடனீறுந்தன்மையதன்றித்தனித்து நிற்றலிற் குற்றுயிரளபினீறாமென்றார். தானேயீறாதலன்றிக்குற்றுயிரளபினுமீறாமெனவும்மைகொடாதொழிந்தார் உயிர்கழிந்த உடம்பைப் படுமகன்கிடக்கைகாணூஉவென்றற்போல அறிகுறிமாத்திரையாய்நின்றதனை இங்ஙனக்குற்றுயிரென்றதன்றி அஃதோரெழுத்தன்றாதலின். எகர ஒகர ஔகாரங்களை விதந்தோதவே யனையுயிர்கடமக்கேற்ற மெய்களோடீறாமென்பது பெறற்றாம். முதலுஞ்சார்புமாய்வகுத்து விரித்துக்கொண்ட வெல்லாவெழுத்து முயிருமெய்யு மாய்தமுமாயடங்கலின் முதலுமீறுமாகாத வாய்தத்தை

த்துங்கா லுயிருட னுயிர்மயங்கலும் மெய்யுடன் மெய்ம்மயங்கலு மிவ்விரண்டுமாறிமயங்கலுமென மூன்றாகவகுக்கப்படும் இவற்று ளுயிருட னுயிர் மயங்குந்தன்மையின்மையி னதனையொழித்தே னையிரண்டனையுமுணர்-ற்று. (ப-ரை) கசதப-கசதப வென்னு நான்கையும், ஒழித்த-நீக்கிய, ஈரேழன்கூட்டம்-பதினான்குமெய்களும் பிறமெய்களோடுகூடுங் கூட்டம், மெய்ம்மயக் (காகும்) - வேற்று நிலைமெய்ம்மயக்கமாகும், ரழ- ரழவென்னுமிரண்டனையும், ஒழித்து நீக்கி, ஈரெட்டு- மற்றைப்பதினாறுமெய்களும், (கூட்டம்) - தம்மோடுகூடுங்கூட்டம், உடனிலை (மெய்ம்மயக்) காகும்-உடனிலை மெய்ம்மயக்கமாகும், இவ்விருபான்மயக்கும் இவ்விருவகை மயக்கமும், மொழி- ஒருமொழிக்கண் தொடர்மொழிக்கணும், இடை - நடுவில், மேவும்- வரும், உயிர்மெய்- உயிருடன்மெய்யும் மெய்யுடன் உயிரும், மயக்கு - மாறிமயங்குமயக்கத்திற்கு, அளவின்று- அளவில்லைவேண்டியவாறேமயங்கும். எ-று. (பொ-ரை) மெய்பதினெட்டனுட் க ச த ப வென்னு நான்கையு மொழித்த பதினான்குமெய்யும் பிறமெய்களோடு கூடுங்கூட்டம் வேற்று நிலைமெய்ம்மயக்கமாம் ரகார ழகாரமென்னுமிரண்டனையுமொழித்தொழிந்த பதினாறுமெய்யுந் தம்மோடு கூடுங்கூட்ட முடனிலை மெய்ம்மயக்கமாம்இவ்விரண்டுபகுதிமயக்கமுமொழிக்கிடையே வரும். இவ்வாறுமெய்யுடன்மெய்மயங்குதலன்றி உயிருடன்மெய்யும் மெய்யுட னுயிருமாறி உயிருமெய்யு மயங்குமயக்கத்திற்கு வரையறையின்று வேண்டியவாறேமயங்கும். எ-று. ❀ கூட்டமெனினு மயக்கமெனினுமொக்கும். உடனிலையென்பதனாற் பிறமெய்யென்பதுபெற்றாம். மொழியென்றது ஒருமொழி தொடர்மொழியென்னு மிரண்டனையும். உயிருமெய்யுமயங்குதற் கிடம்விதந்துகூறாது பொதுப்படக்கூறினர் மொழியினு முயிர்மெய்யென்னு மோரெழுத்தினும்வருதலின் இச்சூத்திரத்தான் மெய்யுடன்மெய் மயங்குங்கால் க ச த ப வென்னு நான்குந் தம்மொடுதாமே மயங்குமெனவும் ர ழ வென்னு மிரண்டுந் தம்மொடுபிறவே மயங்குமெனவும் ஒழிந்தபன்னிரண்டு மெய்யுந் தம்மொடுதாமும் பிறவுமயங்குமெனவும் பெற்றாம். உயிருமெய்யுமயங்குதற்குதாரணம்- அல்- வில்- (எ-ம்), கா- (எ-ம்) மொழிக்கண்மயங்கின. க - எனவெழுத்தின்கண்மயங்கின மெய்யுடன் மெய் மயங்குதற்குதாரணம் மேலவருஞ் சிறப்புச் சூத்திரங்களிற்காண்க இவ்விடைநிலையை ஒருமொழி தொடர்மொழி யென்னுமிரண்டினுங்கொள்ளாது ஒருமொழிக்கேயேற்கக் கொள்வாருமுளர். எவ்விடத்துவரினு மிரண்டெழுத்திணங்கிப் பொருந்து

ம் பொருந்துவாயை யிடைநிலையென்றோதலானு மிணங்காதன வரின் விகாரப்படுதலானு மது நூற்கருத்தன்றென்க. இனி உயிர்மெய் மயக்கமின்றென்பதற்கு உயிர்மெய்முன் னுயிர்மெய் மயங்குதல வரையறையின்றெனப் பொருள்கூறுவாருமுளர். இங்ஙனம் உயிர்மெய்யையிரண்டெழுத்தாகப்பிரித்து மயக்கவிதி கூறுமாரத்தினையே யொன்றாகவைத்து மயக்கவிதிகூறு ராதலானுங் கூறினுமிடைநிலை மயக்கமுழுவது மிச்சூத்திரத்தடங்காமையானுமது பொருந்தாதென்க. (௫௫)

(௱௰௭) ஙம்முன்கவ்வாம் வம்முன்யவ்வே. *

(எ-ன்) வேற்றுநிலை மெய்ம்மயக்கத்துள் விதந்துசிறப்புவிதி யுணர்-ற்று. (ப-ரை) ஙம்முன்- ஙகரத்தின்முன், க- ககரமும், வம்முன் - வகரத்தின்முன், ய- யகரமும், ஆம் - மயங்கும். எ-று. (பொ-ரை) ஙகரமுன்னர்க் ககரமும் வகரமுன்னர் யகரமுமயங்கும். எ-று. ❀ [உ-ம்] கங்கன்- தெவ்யாது- எனவரும். (௫௬)

(௱௰௮) ஞநமுன்றம்மினம் யகரமொடாகும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) ஞநமுன்- ஞகர நகரங்களின்முன், தம்மினம்- அவற்றிற்கினமாகிய சகரதகரங்களும், யகரம்- யகரமும், ஆகும் - மயங்கும், எ-று. (பொ-ரை) இவ்விரண்டுமெய்முன்னருந்தமக்கினமாகிய சகரதகரங்களும் யகரமுமயங்கும். எ-று. ❀ [உ-ம்] கஞ்சன்- உரிஞ்யாது- கந்தன்- பொருந்யாது- எனவரும். (௫௭)

(௱௰௯) டறமுன்கசப மெய்யுடன்மயங்கும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) டறமுன் - டகர றகரங்களின்முன், கசபமெய்- கசப என்கின்ற மூன்றுமெய்களும், உடன்மயங்கும்- இணங்கிமயங்கும், எ-று (பொ-ரை) இவ்விரண்டுமெய்முன்னருங் கசப வென்னு மூன்றுமெய்யு மிணங்கி மயங்கும். எ-று. ❀ [உ-ம்] கட்கம் கட்சி நுட்பம்- கற்க- கற்சிறார்- கற்ப- எனவரும். (௫௮)

(௱௨௰) ணனமுன்னினங்கசஞ பமயவவ்வரும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை). ணனமுன் - ணகர னகரங்களின்முன், இனம்- அவற்றிற்கினமாகிய டகரறகரங்களும் கசஞபமயவ- ககரமுதலியவேழுமெய்களும், வரும்- மயங்கும், எ-று. (பொ-ரை) இவ்விரண்டுமெய்முன்னருந் தமக்கினமாகிய டறக்களும் கசஞபமயவவென்னு மேழுமெய்யு மயங்கும். எ-று. ❀ [உ-ம்] விண்டு- வெண்கலம் - வெண்சோறு- வெண்ஞமலி - வெண்பலி- வெண்மலர்- மண்யாது- மண்வலிது - (எ-ம்) புன்றலை- [illegible] - புன்செய்- புன்ஞமலி- புன்பயிர்- புன்மலர் - பொன்யாது [illegible] (எ-ம்) வரும். (௬௰)

(௱௰௫) மம்முன் பயவ மயங்குமென்ப. ❋

(எ-ன்) இதுவுமது, (ப-ரை) மம்முன்- மகரத்தின்முன், பயவ- ப, ய, வ வென்றுமூன்றுமெய்களும், மயங்குமென்ப- மயங்குமென்றுசொல்லுவர்புலவர், எ-று. (பொ-ரை) மகரமெய்முன்னர்ப் பகர யகர வகரங்கண்மயங்குமென்று சொல்லுவர்புலவர், எ-று, ❋ [உ-ம்] கம்பன்- கலம்யாது- கலம்வலிது- எனவரும். ()

(௱௰௬) யரழமுன்னர் மொழிமுதன்மெய்வரும். ❋

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) யரழமுன்னர்- யரழவென்றுமூன்றுமெய்களின்முன், மொழிமுதன்மெய் - மொழிக்குமுதலாகநின்றபத்துமெய்களும், வரும்- மயங்கும், எ-று. (பொ-ரை) இம்மூன்றுமெய்முன்னரு மொழிமுதற்கு விதந்தோதப்பட்ட பத்துமெய்யுமயங்கும். எ-று ❋ [உ-ம்] வேய் வேர்- வீழ் கடிது- சிறிது- தீது பெரிது நீண்டது மாண்டது- ஞான்றது- யாது வலிது- (எ-ம்) வேய்ங்குழல்- ஆர்ங்கோடு- பாழ்ங்கிணறு- (எ-ம்) வரும். சுருங்கச்சொல்லலென்னும் வனப்புவகையான்மொழிமுதன்மெய்யெனக்கூறலின் யகரத்தின்முன் யகரமயங்குமுடனிலை நீண்டுக்கொள்ளாதொழிக. (௬௧)

(௱௰௭) லளமுன்கசப வயவொன்றும்மே. ❋

(எ-ன் இதுவுமது. (ப-ரை) லளமுன்- லகரளகரங்களின்முன், கசபவய- ககரமுதலியவைந்தும், ஒன்றும் - மயங்கும், எ-று. (பொ-ரை) இவ்விரண்டுமெய்முன்னருங் கசபவய வென்னுமைந்துமெய்யுமயங்கும், எ-று. ❋ [உ-ம்] வேல்- வாள்- கடிது- சிறிது- பெரிது- வலிது- யாது- எனவரும். (௬௨)

(௱௰௮) ரழ வல்லன தம்முற் றுடனிலையும். ❋

(எ-ன் உடனிலைமெய்ம்மயக்கத்திற்குச் சிறப்புவிதிபுணர்-ற்று.(ப-ரை) ரழவல்லன- ரகர ழகரமல்லாதபதினாறுமெய்களும், தம்முன்- தமக்குமுன், தாம்- தாம்,உடனிலையும் உடனின்றுமயங்கும்.எ-று (பொ-ரை) ரகார ழகாரமல்லனவாகிய வேற்றுநிலைமெய்ம்மயக்கத்துட்கூறிய பன்னிரண்டுமெய்யு முடனிலைக்குரிய கசதப நான்குந் தம்முற்றாமுடனின்று மயங்கும். எ-று, ❋ [உ-ம்] அங்ஙனம்- அவ்வை- அஞ்ஞானம்- அந்நீர்- அட்டு - அற்றம்- அண்ணம்- அன்னை - அம்மை- அய்யம்- அல்லி- அள்ளல்- (எ-ம்) அக்கு- அச்சு - அத்து- அப்பு - (எ-ம்) வரும். (௬௩)

(௱௰௯) ய ர ழ வொற்றின்முன் க ச த ப ங ஞ ந ம - வீரொற்றாம்ரழத் தனிக்குறிலணையா. ❋

(எ-ன்) தனிமெய்யுடன் றனிமெய்யாயு மயங்குவனவினைய வென்பதூஉ மொழிக்குறுப்பாக மயங்காதன வினையவென்பதூஉ முணர்-ற்று. (ப-ரை) யரழ- யரழ வென்கிறமூன்றுமெய்

களும், முன்-இவற்றின்முன் மயங்குமென்று, ஒற்றில்- பதினெண்மெய்களுள், கசதபஙஞநம- ககரமுதலாகியவிவ்வெட்டுமெய்களும், ஈரொற்றும்- தனிமெய்யும் உயிர்மெய்யுமாகி மயங்குதலன்றியு மீரொற்றாயுமயங்கும், ரழ- ரகார ழகாரமெய்களும், தனிக்குறில்- தனிக்குற்றெழுத்தும், அணையா- சொல்லுக்கு உறுப்பாக வருவதும் நிற்பதுமாக மயங்குவனவல்ல, எ-று. (பொ-ரை) யரழவென்னு மூன்றொற்று மிவற்றின்முன் மயங்குமெனவிதித்த பத்தொற்றுள் இங்ஙனங்கூறிய வெட்டொற்றுந்தனிமெய்யு முயிரூர்ந்த மெய்யுமாய் மயங்குவனவன்றி யீரொற்றாயுமயங்குவனவாம், ரகார ழகாரவொற்றுந் தனிக்குறிலுமயங்குந் தன்மையவாயினும் மொழிக்குறுப்பாக வருவது நிற்பதுமாய்மயங்கா. எ-று. ❀ ஈரொற்றுமாமென்னு மும்மையு மொழிக்குறுப்பாகவென்னுஞ் சொற்களுமெஞ்சிநின்றன. [உ-ம்] வேய்க்குறை- வேர்க்குறை- வீழ்க்குறை- சிறை-தலை-புறம் (எ-ம்) வேய்ங்குழல்- ஆர்ங்கோடு-யாழ்ங்கிணறு (எ-ம்) காய்ந்தனம்-சேர்ந்தனம்·வாழ்ந்தனம் - (எ-ம்) வரும். ஏனையவற்றுழிக்காண்க. அணையா வென்றவாகாதனவற்றிற்குதாரணங் காட்டலாகாமையுணர்க. (௩௪)

(௱உ௰) லளமெய்திரிந்த னணமுன்மகார- நைந்தீரொற்றாஞ் செய்யுளுள்ளே.

*

(எ-ன்) செய்யுட்குரியவா யீரொற்றுடனிற்பன வினையவென்பதுணர்-ற்று. (ப-ரை) லளமெய்திரிந்த- லகார ளகாரவொற்றுத்திரிந்த, னணமுன்- னகர ணகார முன்வரும், மகாரம்- மகரவொற்றானது, நைந்து- முன்சொன்னபடியேகுறுகி, ஈரொற்றும்- அந்தமெய்களுடனே யீரொற்றுடனிலையாம், செய்யுளுள்ளே- பாட்டினுள். எ-று (பொ-ரை) லகார ளகார வொற்றுத்திரிந்த னகர ணகாரங்கண்முன் வருமகரவொற்று முன்னர்க்கூறியவாறே குறுகியவற்றுட னீரொற்றுடனிலையாஞ் செய்யுளகத்து. எ-று. ❀ [உ-ம்] "திசையறி மீகானும் போன்ம்" (எ-ம்) "மயிலியன் மாதர்மருண்ம்." (எ-ம்) வரும். மகாரநைந்தென அனுவதித்தார் மகரங்குறுகுதற்குத்தொடரும் னகர ணகரங்கள் லகர ளகரந் திரிந்தனவென்பதூஉ மக்குறுக்கஞ் செய்யுட்கண்ணதென்பதூஉமுடன்றுணர்தற்கென்க. (௩௫)

(௱உ௧) தம்பெயர்மொழியின் முதலுமயக்கமு - மிம்முறை மாறியு மியலுமென்ப.

*

(எ-ன்) மொழிமுதலி னிடைநிலைகட் காவதோர்புறனடை யுணர்-ற்று. (ப-ரை) தம்பெயர் - தம்முடைய பெயர்களை, மொழியின் - சொல்லிநிலைமொழிவருமொழிகளாகப்புணர்க்குமிடத்து, முதலும்- மொழிமுதலுக்கும், மயக்கமும் - இடைநிலைமயக்கத்

திற்கும், மெய்ம்முறை- இப்படிவிதிக்கப்பட்டனவும் விலக்கப்பட்டனவுமாகிய வெல்லாமெழுத்துகளும்,மாறியுமியலும்-முதலாகியும்மயங்கியும்வரும்,என்ப-என்றுசொல்லுவர்புலவர்.எ-று (பொ-ளை) எழுத்துகடப்பெயர்களை மொழிந்து நிலைமொழி வருமொழியாகப்புணர்க்குமிடத் தெல்லாமொழிமுதற் றமிங்ஙனம் விதித்தனவும் விலக்கியனவுமாகிய வெல்லாவெழுத்து முதலாம் மயக்கத்திற்கு இங்ஙனம்விதித்தனவும் விலக்கியனவுமாகிய வெல்லாவெழுத்து மயங்குமென்றுசொல்லுவர்புலவர். எ-று. ❊ இங்ஙன மெல்லாவெழுத்துந் தனித்தனி யதற்கதுவேமுதலாக வருமெனவே யீற்றிற்கு விதித்தனவும் விலக்கியனவுமாகிய வெல்லாவெழுத்துந் தனித்தனி யதற்கதுவேயீறாக வருமெனச் சொல்லாதே அருத்தாபத்தியா னமைதலி னீறுமென மிகைபடக்கூறாதொழிந்தார். [உ-ம்] "அவற்றுள் - ளகரக்கான்முன்னரீ யவுந்தோன்றும்." என்புழி லகரமுதலாகியுங் கூனிறுதிளகரவொற்றேறு மயங்கியுநின்றது. கெட்பெரிது என்புழி எகரமெய்யோ டீறாய்நின்றது. பிறவும் வரையறையின்றி வருதல்காண்க. ஆய்தத்திற்குப் பிறப்பதிகாரத்துள் வருவாய்கூறியவழி மயக்கவிதியமைந்துகிடந்தமையானுந் தன்பெயர்மொழிய வாராமையானுங்கூறாதொழிந்தார். (௬௬)

(௱௨௨) மகரவிறுதி யஃறிணைப்பெயரி - னகரமொ டுறழா நடப்பன வுளவே. ❊

(எ-ன்) நிறுத்தமுறையானே போலியாமாறுணர்த்துவான் றொடங்கி மொழியிறுதிப்போலியுணர் - ற்று. (ப-ரை) அஃறிணைப்பெயரின் - பால்பகாவஃறிணைப் பெயர்களிடத்து, இறுதி-கற்றிலேநின்ற, மகரம் - மகரமெய்யானது, னகரமொடு - னகரமெய்யோடு, உறழா- ஒத்து, நடப்பன- நடப்பவை, உள - உண்டு, எ-று. (பொ-ரை) பால்பகா வஃறிணைப்பெயர்களினிடத்திறுதி மகரம் னகரத்தோடொத்து நடப்பனவுளவாம். எ-று ❊ மகரவிறுதி யென்றதனாற் பால்பகாவஃறிணைப் பெயரென்பது பெற்றாம். மகரம் னகரத்தோடொத்தலாவது பெயரிறுதிக்கண் மகரநின்றநிலைக்களத்து னகரநிற்பினும் வேற்றுமையின்றியொத்தல். [உ-ம்] "அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து-நல்விருந்தோம்புவானில்." இதனுள்- அகம்- அகன்- முகம்- முகன்- (எ-ம்) தலம்- தலன்- நிலம்- நிலன்- கலம்- கலன்- நலம் - நலன்- வலம்- வலன்- (எ-ம்) வரும். பிறவுமன்ன. உறழா நடப்பன உளவென்னுஞ்சொல்லாற்றலா னுறழாதனபெரும்பாலவென்க. அவை- வட்டம்- குட்டம்- மாடம்- கூடம்- முதலாயின. பால்ப

காவலிதிணைப் பெயர்களிடத்தியல்பாய மகரவிறுதிநிலையின் னக ரம்போலியாய் வருமெனவே அகன் முகன் முதலியசொற்க ளைப்பால்பகுத்தவாடூஉவறிசொல்லெனக் கொள்ளற்க வென்ப தூஉம் எகின்- பயின்- குயின் - வயின் - முதலிய னகரவீற்றுப் பெயர்க் கிவ்வையப்பாடில்லையென்பதூஉம் பெற்றாம். இனியி வ்விறுதிப்போலியை முற்கூறியவ்தனாற் சுரும்பு - சுரும்பர்- அ ருப்பு- அரும்பர்- சாம்பல்- சாம்பர்- பந்தல்- பந்தர்- முதலிய னவுங்கொள்க. (கஎ)

(ாஉ௩) அ ஐ முதலிடை யொக்குஞ் ச ஞ ய முன். *

(எ- ன்.)மொழிமுதற்போலியு மொழியிடைப்போலியுமுண ர்- ற்று(ப-ரை) அ ஐ - அகரமும் ஐகாரமும், முதல் - சொல்லு க்குமுதலிலும், இடை- நடுவிலும், ஒக்கும் - வேறுபாடில்லாம லொத்துநடக்கும், சஞயமுன் - சகர ஞகர யகரங்களுக்குமுன்வ ந்தால், எ-று. (பொ-ரை) மொழிமுதலினு மிடையினும் அகர ஐகாரங்கள் வேற்றுமையின்றியொத்து நடப்பனவாம் சகர ஞகர யகரங்கட்கு முன்னர்வருமாயின், எ-று. ※ ஈண்டு முன்னென்ற துகாலமுன்னெனக்கொள்க. [உ-ம்] பசல் - பைசல் - மஞ்சு- மைஞ்சு- மயல்- மையல்- (எ-ம்) அமச்சு- அமைச்சு- இலஞ்சி- இ லைஞ்சி- அரயர்- அரையர்- (எ-ம்) வரும் பிறவுமன்ன. (கஅ)

(ாஉச) ஐகான்யவ்வழி நவ்வொடுசில்வழி - ஞஃகானுறழு மென்மரு முளரே. *

(எ-ன்) இதுவு மொழியிடைப் போலியுணர் - ற்று. (ப-ரை) சில்வழி - சொல்லுக்குநடுவே சிலவிடத்து, ஐகான் (வழி) - ஐகா ரத்தின்பின்னும், யவ்வழி - யகரமெய்யின்பின்னும், நவ்வொடு- இயல்பாய்வரும் நகரமெய்யினோடு, ஞஃகான்- ஞகரமெய்யான து, உறழும்- ஒத்துநடக்கும், என்மரும்- என்றுசொல்வாரும், உ ளர்- சிலருண்டு. எ-று. (பொ-ரை) மொழியிடைக்கட் சிலவிட த்து ஐகாரத்தின்பின்னும் யகரவொற்றின்பின்னு மியல்பாய்வ ரும் நகரத்தோடு ஞகரமுறழுமென்று சொல்லுவாருமுளர். எ- று ※ இப்போலி யருகிவருதலிற் சில்வழியென்றும் எல்லார் க்குமொப்பமுடிந்த தன்றாகலி னென்மருமென்றுங் கூறினார். [உ-ம்] "செய்ஞ்ஞின்ற நீலமலர்கின்ற தில்லைச்சிற் றம்பலவ ன்-மைஞ்ஞின்ற வொண்கண்மலைமகள் கண்டு மகிழ்ந்துநிற்க-நெ ய்ஞ்ஞின் றெரியும்விளக்கொத்த நீல மணிமிடற்றான்- கைஞ்ஞின் ற வடல்கண் டாற்பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே.," (எ-ம்) ஐஞ்ஞாறு- (எ-ம்) வரும். இச்சூத்திரம் பிறன்கோட்கூற லென்னுமுத்தி, "மண்யாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே.," "மஞ்ஞாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே.," (எ-ம்) "பொ

ன்யாத்ததார்ப்புரவி பரிக்குமே,, "பொன்னாத்ததார்ப்புரவி பரிக்குமே.,, (எ-ம்) வருமொழி வினைக்குமுன்னர் யாநின்றநிலைக்களத்து ஞாநிற்பினுமொக்கும்போலிக்கு ஆசிரியர் தொல்காப்பியர் "ண ன வென் புள்ளிமுன் யாவு ஞாவும் - வினையோ ரனைய வென்மனார் புலவர்.,, எனச்சூத்திரஞ்செய்தவாறு இவ்வாசிரியருஞ் சூத்திரஞ்செய்யாதொழித லிறந்ததுவிலக்க லென்னுமுத்தி. பிறவுமன்ன. இம்மூன்றுசூத்திரத்தானுங்கூறிய போலிகளை இடைநிலை மயக்கத்தின் பாற்படுத்துப் பொருள் கூறுவாருமுளர். இங்ஙனங்கூறியவெழுத்துகண் மொழிக்குறுப்பாகவொன்றுநின்ற நிலைக்களத்து மற்றொன்றதுபோல மொழிநிரப்ப நிற்பதன்றி யொன்றோடொன்று மயங்கியிரண்டெழுத்து முடனிற்பதின்மையானு முதலீறிடைநிலைகட்குப் புறனடையுங் கூறிக்குறைவறுத்தமையானு முறைமா நடப்பனவென்றும் ஒகதுமென்றும்உறழுமென்றும்உவமவுருபுகொடுத்து இம்மூன்றுசூத்திரத்துங்கூறுதலானுமது பொருந்தாதென்க. (௩௨௪)

(௩௨௫) அம்மு னிகரம் யகரமென் றிவை - யெய்தினையொத்திசைக்குமவ்வோ- டுவ்வும்வவ்வு மௌவோரன்ன. *

(எ-ன்) வடநூலார் சந்தியக்கரமென்பவற்றுள் ஐ ஔ என்னு நெட்டெழுத்துகளின் வடிவு புலப்படுதலுணர் - ற்று. (ப-ரை) அம்முன்- அகரத்தின்முன், இகரம்- இகரமும், யகரம் - யகரமெய்யும், என்றிவை - என்றுசொல்லப்பட்ட விவை, ஒத்து - தம்முளொத்து, எய்தின் - பொருந்தினால், ஐயிசைக்கும் - ஐயென்கிற நெட்டெழுத்து ஒலிக்கும், அவ்வோடு - அகரத்தோடு, உவ்வும் உகரமும், வவ்வும்- வகரமெய்யும், (ஒத்து) - தம்முளொத்து, ஓரன்ன- ஒருதன்மையனவாக, (எய்தின்) - பொருந்தினால், ஔ வினசக்கும்) - ஔவென்கிறநெட்டெழுத்து ஒலிக்கும். எ-று. (பொ-ரை) அகரத்தின்முன்ன ரிகரமும் யகரமுந் தம்முளொத்தெய்தின் ஐயென்னுநெட்டெழுத்தொலிக்கும் அகரத்தோடுகரமும் வகரமுந் தம்முளொத் தொருதன்மையவாக வெய்தின் ஔவென்னுநெட்டெழுத்தொலிக்கும். எ-று. ❊ மொழிந்தபொருளோடொன்றவவ்வயின் மொழியாததனை முட்டின்றுமுடித்த லென்னுமுத்தியான் அகரக்கூறுமிகரக்கூறுந்தம்முளொத்தைகாரமொலிக்கும் அகரக்கூறு முகரக்கூறுந் தம்முளொத் தௌகாரமொலிக்குமெனவுங்கொள்க. இனி இச்சூத்திரத்திற் கிவ்வாறுபொருள் கொள்ளாது தமிழ்நூற்பயிற்சி யொன்றுமே யுடையாரெழுத்துப்போலி புணர்த்திற்றென்று பொருள்கொண்டு- அஇ ஐ அய் ஐ. கஇ- கை. கய்-கை. அஉ- ஔ. அவ்- ஔ. கஉ- கௌ. கவ் - கௌ. என வுதாரணங்காட்டுவர். அவ்வாறுபொருட்கொண் டுதாரணங்

காட்டுமாற்றாற் பெரும்பயனின்மையானும் வடநூலோடு மாறுபடுமாதலானுமது பொருந்தாதென்க. (௭௰)

(௱௨௪) மெய்களகரமு நெட்டுயிர்காரமு - மையௌ கானு மிருமைக்குறிலிவ் - விரண்டொடு கரமுமாஞ் சாரியை பெறும் பிற *

(எ-ன்) மேலெழுத்திலக்கணங்கூறியமுகத்தாற் போந்தவெழுத்தின் சாரியைகளைத்தொகுத்தினமடைத்தனுதலிற்று (ப-ரை) மெய்கள்- ஒற்றுகள், அகரமும்-அகரச்சாரியையும், நெட்டுயிர்- உயிர்நெடில்கள், காரமும்- காரச்சாரியையும், ஐ ஔ- அவற்றுள், ஐகார ஔகாரங்கள், கானும்- காரச்சாரியையுடனே கான்சாரியையும், இருமைக்குறில் - உயிர்க்குறிலுமுயிர்மெய்க்குறிலும், இவ்விரண்டொடு - காரம் கான் என்கிற விரண்டுடனே, கரமும் - கரச்சாரியையும், ஆம்- ஆகிய, சாரியை- சாரியைகளை, பெறும்- பெறும், எ-று. (பொ-ரை) மெய்கள் அகரச்சாரியையும் நெட்டுயிர்கள் காரச்சாரியையும் அவற்றுள் ஐகார ஔகாரங்கள் காரச்சாரியையுடனேகான்சாரியையும் உயிர்க்குறிலுமுயிர்மெய்க்குறிலுங்காரங் கானென்னுமிவ்விரண்டுடனே கரச்சாரியையும்பெறும். எ-று. மெய்களெழுத்தாகுமென்றார் அவற்றிற்கு அச்சாரியையின்றியமையாமையின். மெய்களவ்வுமென்னது நகரமுமென்றார் அங்ஙனங்கரங் காரங்கான்கள்வரிற் சாரியையகரத்தினது சாரியையென்று கோடற்கு. ஆஞ்சாரியை யென்றார் காரமுதலிய சாரியைகளையேற்றபெற்றிகோடற்கு, [உம்] க-ஙு (எ-ம்) ஆகாரம் ஐகாரம் - ஔகாரம், (எ-ம்) ஐகான் - ஔகான் - (எ-ம்) - அகாரம் - அகான் - அகரம்- மகாரம்- மகான்- மகரம் - (எ-ம்)- வருமா. பிறவுமன்ன. பிறவெனற்றமையாற் குறிலோடுகான்புணருங்காலிடையே யாய்தந்தோற்றமும் வழங்கும் பிறசாரியைகளுங் கொள்க. உயிர்மெய் நெடிலுமாட்தமுங் கூறுதொழிந்தார் உயிர்மெய்நெடிலிற்கங்ஙனங்கூறிய மூன்றுசாரியையு மேலாமையானும் ஆய்தம்பிற வழி வாராமையின் மொழியிடைப்படுத் தம்மொழியிறுதிக்கட்பிறசாரியை தந்துயிர் வருக்கத் திறுதிக் கணமே வழங்குதலானு மென்க. விகற்பத்தின்முடிததலென்னு முத்தியான் மேல் விரித்தாமுடிந்தது கிடந்தனவற்றை புலப்படவேண்டி மீண்டுந் தொகுத்து முடித்தலான் இச்சூத்திர முடிந்தது முடித்தலென்னு முத்தி. (௭௧)

(௱௨௫) மொழியாய்த் தொடரினு முன்னனைத்தெழுத்தே. *

(எ-ன்) இவ்வியலுக் காவதோர் புறனடையுணர்-ற்று. (ப-ரை) எழுத்து- இவ்வெழுத்துகள், மொழியாய் - பதமாயினும், தொடரினும் - அப்பதந் தம்மோடும் உருபோடும் புணர்ந்தாலும்,

முன்னனைத்து - முன்சொல்லப்பட்ட அப்பதத்திலக்கணத்தையு முடையனவாகும், எ-று. (பொ-ரை) இவ்வெழுத்துகள் பதமாயி னும் அப்பதந்தம்மோடு முருபோடும் புணரினு மவற்றாற் பிறழா து முன்னர்க்கூறிய அப்பதத்திலக்கணத்தையுமுடையவாம். எ-று. ❁ எழுத்துச்சுண்ணத்தின்க ணரிசனமுதலியபோலாது மாலை யின்கண்மலர்போ லவற்றினிற்றலின் முன்னனைத்தென்றார். எழு த்தென்பது சாதியொருமையாதலின் அனைத்தென்னுமொரு மையோடுமுடிந்தது. முன்னனைத்தாதல் பதவியன் முதலிய நான்கியலுள்ளுங்காண்க. (௭௨)

எழுத்தியன் முற்றிற்று.

இரண்டாவது

# பதவியல்.

(௱௨௮) எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருடரிற் பதமா மதுபகாப் பதம்பகு பதமென - விருபாலாகி யியலு மென்ப. *

(எ-ன்) நிறுத்தமுறையானே பதத்தினிலக்கண முணர்த்து வான்றொடங்கி யெழுத்தாற் பதமாதலும் அஃதித்துணைய வென் பதூஉமுணர் - ற்று. (ப-ரை) எழுத்தே - எழுத்துகள் தாமே, த னித்தும் - ஒவ்வொன்றாகத்தனித்தாகிலும், தொடர்ந்தும் - இரண் டுமுதலாகத்தொடர்ந்தாகிலும், பொருள் - பிறபொருளை, தரின் - காட்டுமேயானால், பதமாம் - பதமாகும், அது - அப்பதமானது, பகாப்பத (மென) - பகாப்பதமெனவும், பகுபதமென - பகுப தமெனவும், இருபாலாகி - இரண்டுவகையினையுடையதாகி, இய லும் நடக்கும், என்ப - என்றுசொல்லுவர்புலவர். எ-று (பொ-ரை) எழுத்துகடாமே யொவ்வொன்று தனித்து மிரண்டு முதலா கத்தொடர்ந்தும் பிறபொருளைத்தருமாயி னதுபதமாம் அப்ப தம் பகாப்பதமெனவும் பகுபதமெனவு மிரண்டுபகுதியவாகி நடக்குமென்றுசொல்லுவர்புலவர். எ-று. ❁ எழுத்தாலாயபதம்

அரிசனமுதலியவற்றாற் சமைத்த சுண்ணம்போலாது மலராற் ச
மைத்தமாலைபோனிற்றலினெழுத்தேயென்றும் ஓரெழுத்தேனு
ம்பிறபொருடருதலிற்பதமாமென்பார்தனித்தென்றும் ஒன்றிர
ண்டு பலவென்பன வடநூல்வழக்கு ஒன்றல்லனவெல்லாம் பல
வென்பது தமிழ்நடையாகலின் வடநூல்வழக்குப்பற்றி ஆசிரிய
ர்தொல்காப்பியர் "ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொரு
மொழி- யிரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட - மூ
ன்றே மொழிநிலை தோன்றிய நெறியே" எனக்கூறினாரேனுங்
கல் வில் என்றற்றொடக்கத் தீரெழுத்தொரு மொழிகளு மொன்
றொடொன்றுதொடர்ந்துநின்றே பிறபொருளுணர்த்தலி னிவ
ற்றைத் தொடர்ந்தனவல்லவெனக் கூறினாரல்லரென்பதற்குத்
தொடர்மொழியென வாளாகூறா திரண்டிறந்திசைக்குந் தொடர்
மொழியென அடைகொடுத்தோதியதே சான்றாகலாற் றமிழ்ந
டைபற்றி "ஓரெழுத் தொருமொழி யீரெழுத்தொருமொழி- யி
ரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட - மூன்றேமொ
ழிநிலை தோன்றிய நெறியே." என்றார்க்கிரண்டெழுத்துந்தொ
டர்ந்தனவல்லவெனிலது மொழியு மன்றென்பார் தனிநிலையொ
ழிந்தன வற்றைத் தொடர்ந்தென்றும் இறீஇ மிறீஇ யெனிற்
றொடருமேனுந் தன்னையுணர்த்துமன்றிப் பிறபொருடாராமை
யிற் பதமாகாதென்பார் பொருடரினென்றும் "தன்னையுணர்
த்தி னெழுத்தாம் பிறபொருளைச் - சுட்டுதற்கண்ணேயாஞ்சொ
ல்." என்பவாகலிற் பொருளென்றது பிறபொருளென்பாரு
ணர்த்தினென்னாது தரினென்றும் அணுவென்னு மொலிநுட்ப
த்தா னெழுத்தாவதுபோல வெழுத்தென்னு மொலிநுட்பத்தா
ன் மொழியாமென்பார் பதமாமென்றும் இப்பதவியலுக்கு
மேற்கோ ளாரிய மென்பார் மொழியென்னாது பதமென்றுங்
கூறினார். இச்சூத்திரத்துட் டொடர்ந்துமென்றது பிறர்நூற்
குற்றங்காட்ட லென்னுமதம். (௧)

(௱௨௯) உயிர்மவிலாறுந் தபநவி லைந்தும்- கவசவி னாலும்
யவ்விலொன்று- மாகுநெடிநொது வாங்குறிலிரண்டோ - டோ
ரெழுத்தியல்பத மாறேழ்சிறப்பின. *

(எ-ன்) மேலெழுத்துத் தனித்துந்தொடர்ந்து மொருமொழி
யாமென்றார் அவற்றுள் ஓரெழுத்தொருமொழி யிவையென்ப
தூஉ மித்துணையவென்பதூஉமுணர்- ற்று. (ப-ரை) உயிர்மவி
ல்- உயிர்வருக்கத்திலும் மவ்வருக்கத்திலும், ஆறும் - அவ்வாறும்,
தபநவில்- தவ்வருக்கத்திலும் பவ்வருக்கத்திலும் நவ்வருக்கத்திலு
ம், ஐந்தும்- ஐவ்வைந்தும், கவசவில்- கவ்வருக்கத்திலும் வவ்வரு
க்கத்திலும் சவ்வருக்கத்திலும், நாலும் - நந்நான்கும், யவ்வில்-

யவ்வருக்கத்தில், ஒன்றும் - ஒன்றும், ஆகுநெடில் - ஆகுநெட்டெழுத்தாலாகியமொழிநாற்பதும், நொ - நொவ்வும், து - துவ்வும், ஆங்குறில்- ஆகுங்குற்றெழுத்தாலாகியமொழி, இரண்டோடு- இரண்டுடனே, ஓரெழுத்தியல்பதம்- ஓரெழுத்தாலாகியமொழிகள், ஆறேழ் - நாற்பத்திரண்டும், சிறப்பின - சிறப்பினவாம். எ-று. (பொ-ரை) உயிர்வருக்கத்து மவ்வருக்கத்துமவ்வாறும் தவ்வருக்கத்தும் பவ்வருக்கத்து நவ்வருக்கத்தும் ஐவைந்தும் கவ்வருக்கத்தும் வவ்வருக்கத்துஞ் சவ்வருக்கத்து நந்நான்கும்யவ்வருக்கத் தொன்று மாகு நெட்டெழுத்தாகிய மொழிநாற்பதும் நொவ்வுந் துவ்வுமாகுங் குற்றெழுத்தாகிய மொழியிரண்டுடனே யோரெழுத்தாகியமொழி இந்நாற்பத்திரண்டுஞ் சிறப்பினவாம். எ-று. ❁ [உ-ம்] ஆ-ஈ-ஊ-ஏ ஐ-ஓ-(எ-ம்) மா-மீ-மூ-மே-மை-மோ (எ-ம்) தா-தீ-தூ-தே-தை- (எ-ம்) பா-பூ பே-பை-போ- (எ-ம்) நா-நீ-நே-நை-நோ- (எ-ம்) கா-கூ- கை-கோ- (எ-ம்) வா-வீ-வை-வௌ- (எ-ம்) சா-சீ-சே-சோ- (எ-ம்) யா- (எ-ம்) நொ- து- (எ-ம்) வரும். இவற்றுள்- ஊ- இறைச்சி. ஓ-மதகுநீர்தாங்குபலகை. பே - நுரை. நே - அன்பு. சோ- அரண். நொ-து என்னுங்குறிலிரண்டும் துன்பி-புசி-என்னுமேவல். இவை சிறப்பின வெனவே வகரவீற்றுச் சுட்டுப்பெயர்ப் பொருளையொப்புமையா னுணர்த்திநிற்றலான் ஔவென்னு மோரெழுத்தொருமொழியும் சுட்டிறு வுவமைப்பொருளைத்தரு மிடைச்சொல்லாதலாற் குற்றுயி ரைந்தானும் வோரெழுத் தொருமொழிகளும் கௌவென்னு முயிர்மெய்யானு யோரெழுத்தொருமொழியுமிவைபோல்வனபிறவுஞ் சிறப்பில்லன வெனக்கொள்க.

(௱௩௰) பகாப்பத மேழும் பகுபத மொன்பது - மெழுத்தீறாகத் தொடருமென்ப. ❋

(எ-ன்) தொடரெழுத் தொருமொழியாமாறுணர்- ற்று, (ப-ரை) பகாப்பதம்-பகாப்பதங்கள், ஏ(ழெழுத்தீறாக)வும்- இரண்டெழுத்துமுதலேழெழுத்தீறாகவும், பகுபதம்-பகுபதங்கள், ஒன்பதெழுத்தீறாகவும்- இரண்டெழுத்துமுதலொன்பதெழுத்தீறாகவும், தொடரும்-தொடரும், என்ப-என்றுசொல்லுவர்புலவர். எ-று. (பொ-ரை) பகாப்பதமிரண்டெழுத்துமுத லேழெழுத்தீறாகவும் பகுபதமிரண்டெழுத்துமுத லொன்பதெழுத் தீறாகவுந் தொடரு மென்றுசொல்லுவர்புலவர். எ-று, ❁ [உ-ம்] அணி-அறம்- அகலம்- அருப்பம்- தருப்பணம் - உத்திரட்டாதி- (எ-ம்) கூனி-கூனன்-குழையன்-பொருப்பன்-அம்பலவன்- அரங்கத்தான்-உத்திராடத்தான்- உத்திரட்டாதியான் (எ-ம்) வரும். எழுந்திருக்கின்றார் - நடத்துவிப்பிக்கிறார் - நடத்துவிப்பிக்கின்றார்-

நடத்துவிப்பிக்கிறார்கள்- நடத்துவிப்பிக்கின்றார்கள்- நடத்துவிப்பிக்கின்றவர்கள்- எனப்பகுதிமுதலிய வுறுப்புவேறுபட்டு வருவன வற்றிற் கிவ் வரையறை யில்லையென்க. (௧)

(௱௩௧) பகுப்பாற்பயனற் றிடுகுறியாகி- முன்னேயொன்றாய் முடிந்தியல்கின்ற - பெயர்வினையிடையுரி நான்கும்பகாப்பதம். *

(எ-ன்) மேற்பதம்பகாப்பதம்பகுபதமென விரண்டுபகுதியவாய் நடக்குமென்றா ரவற்றுட் பகாப்பத மினையவென்பதூஉ மித்துணைய வென்பதூஉ முணர்-ற்று (ப-ரை) பகுப்பால்- பிரிக்கப்படுதலினாலே, பயனற்று- பகுதி விகுதிமுதலாகிய பயனில்லாமல், இடுகுறியாகி- காரணமில்லாமல் இடப்பட்டகுறியாகி முன்னேயொன்றாய்- படைப்புக்காலந்தொட்டு ஒன்றாகி, முடிந்து-முடிந்து, இயல்கின்ற-நடக்கின்ற, பெயர் - பெயர்ச்சொல்லும், வினை-வினைச்சொல்லும், இடை- இடைச்சொல்லும், உரி- உரிச்சொல்லுமாகிய, நான்கும்- நான்கும், பகாப்பதம் - பகாப்பதங்களாகும். எ-று. (பொ-ரை) பகுபதம் போலிதனைப்பகுத்துப் பார்க்கினப்பகுப்பாற் பகுதிவிகுதி முதலியவுறுப்பின்பயன் விளைவதின்றிக்காரணத்தால்வருமப்பதம்போலாது இடுகுறியாய்ப் பகுதிவிகுதிமுதலியவாறுறுப்பானும் பின்புமுடிக்கப்படுமப்பதம்போலாது படைப்புக்காலந்தொட்டொன்றாய் முடிந்து நடக்கின்ற பெயர்ச்சொல் வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொல் என்னுநான்கும்பகாப்பதமாம். எ-று. ※ பகுபதத்திற்கு மறுதலைப்பட்டதென்பா ரிவ்வாறுகூறினார். [உம்] நிலம்- நீர்- (எ-ம்) நட- வா- (எ-ம்.) மன்- கொல்- (எ-ம்.) உறு- கழி- (எ-ம்.) வரும்- பிறவுமன்ன. (௪)

(௱௩௨) பொருளிடங்காலஞ் சினைகுணந்தொழிலின் - வருபெயர்பொழுதுகொள் வினைபகுபதமே. *

(எ-ன்) பகுபதமினையவென்பதூஉ மித்துணையவென்பதூஉ முணர்-ற்று. (ப-ரை) பொருள்- பொருளும், இடம்- இடமும், காலம்- காலமும், சினை- உறுப்பும், குணம் குணமும், தொழிலின்- தொழிலுங்காரணமாக, வரு- வருகின்ற, பெயர்- பெயர்ச்சொற்களும், பொழுது கொள்-தெரிநிலையாகவுங்குறிப்பாகவுங்காலத்தைக்கொள்ளும், வினை- வினைச்சொற்களும், பகுபதம்- பகுபதங்களாகும். எ-று. (பொ-ரை) இங்ஙனங்கூறிய பொருளாதியாறுங்காரணமாகவரும் பெயர்ச்சொற்களுந் தெரிநிலையாயுங்குறிப்பாயுங் காலத்தைக்கொள்ளும் வினைச்சொற்களுமாகியவிரண்டும்பகுபதமாம். எ-று. ※ பொழுதுகொள்வினைபகுபதமாமெனவே அவ்விருவகைவினையாலணையும்பெயரும் பகுபதமாமென்

பது அருத்தாபத்தியாற் கூறிறொன்க. [உ-ம்.] பொன்னன்- அ
கத்தன்- ஆதிரையான்- கண்ணன்- கரியன்- ஊணன்- எனப்பெ
யர்ப்பகுபதம்வந்தன. நடந்தான் - நடக்கின்றான்- நடப்பான்-
(எ-ம்) நடந்த- நடக்கின்ற- நடக்கும் (எ-ம்) நடந்து-நடக்க-ந
டக்கின் (எ-ம்) நடவான் (எ-ம்) நடவாத (எ-ம்) நடவாமல் (எ-ம்)
தெரிநிலையுடன்பாட்டுவினைமுற்றும் எச்சமு மெதிர்மறைவினை
முற்றும் எச்சமுமாய வினைப்பகுபதங்கண் முறையே வந்தன.
பொன்னன்- அகத்தன்- ஆதிரையான்-கண்ணன்-கரியன்-ஊணன்
(எ-ம்) கரிய-பெரிய- (எ-ம்) அன்றி- இன்றி (எ-ம்) குறிப்புவினை
முற்றுமெச்சமுமாய வினைப்பகுபதங்கள்வந்தன. நடந்தான்- ந
டந்தவன்- எனத்தெரிநிலைவினையாலணையும் பெயர்ப் பகுபதம்
வந்தன. பொன்னன்- ஊணன் - எனக்குறிப்புவினையாலணையு
ம் பெயர்ப்பகுபதம்வந்தன. பிறவுமன்ன. இனி இங்ஙனம்பொ
ருளாதியாறுமடியாகத்தோன்றிய அவ்வினைக்குறிப்புப்பெயர்க்கு
ம் வினைக்குறிப்பிற்கும் வேற்றுமையாதோவெனின் வினைக்குறி
ப்புச்சொல்லெல்லாந் தெரிநிலைவினைபோல முதனிலையிற் பொ
ருள் சிறந்துநிற்கும் வினைக்குறிப்புப்பெயர்ச்சொல்லவ்வாறன்றி
விகுதியிற்பொருள்சிறந்து நிற்குமெனவறிக. எனவே பொரு
ளாதியாறுங்காரணமாகவரும் பெயர்ச்சொற்கண் முதனிலை விகு
தியாகிய அவ்விரண்டினும் பொருள்சிறந்துநிற்குமெனவுமுணர்
ந்துகொள்க எல்லாச்சொற்களையுங் கூறுங்காற் பொருள்சிற
க்குமிடத்தெழுத்தினையெடுத்தும் அயலெழுத்தினை நலிந்தும் ஏ
னை யெழுத்துக்களைப் படுத்துங்கூறுக. அவன்- இவன்- உவன்- எ
ன்னுஞ் சுட்டுப்பெயரும் எவன் - யாவன்- என்னும் வினாப்பெ
யரும் தமர்- நமர்- நுமர்- என்னுங்கிளைப்பெயரும் தந்தை- எ
ந்தை- நுந்தை- என்னுமுறைப்பெயரும் இவைபோல்வனபிறவு
ஞ் சுட்டுப்பொருளும்வினாப்பொருளுங்கிளைப்பொருளு முறை
ப்பொருளும் காரணமாகப் பிறபொருட்குவரும் பெயராய்ப் ப
குதிவிகுதி முதலிய வுறுப்புமுறுப்பின் பொருளுந்தந்து வெளி
ளிடைக்கிடக்கும் பகுபதமாய்ப் பகுக்கப்படுதலால் இவற்றைப்
பகுபதமென்றோதா புகாப்பதமெனக்கூறி னது பொருந்தாதெ
ன்க. இனிப் பகுதிவிகுதி முதலியவுறுப்பு முறுப்பின்பொருளு
ந்தரும் ஒருசொல்லைப் பகுபதமென்றமையின், சொன்மை-
பொருண்மை- இன்மை- செம்மை- சிறுமை- நடத்தல்- வருதல்-
முதலியசொற்கள் பகுதிவிகுதியாகப் பகுக்கப்படுதலானும் வி
குதிக்குவேறுபொருளின்றிப் பகுதிப்பொருள் விகுதியாய் நிற்
றலானுஞ் சொன்னிலையாற் பகுபதமென்றும் பொருணிலையாற்

பகாப்பதமென்றுங்கொள்ளப்படுமென்க. மேற் சொல்லதிகாரத்துள் திணை பால் இடமுதலிய இலக்கணங்களான் விதந்துகிளையென்றதூஉமுதற்பலபொருளொன்றுஞ்சூத்திர முதலியவற்றானுங் கிய வுள்ளுமுணர்த்தலானாண்டுணரவரும்பெயர்வினையிடையுரிக ளீண்டுணர வாராவேனும் உரைத்துமென்றுமுத்தியானவற்றைப் பகாப்பதம் பகுபதமென்றார். (ங)

(ாகக) பகுதிவிகுதி யிடைநிலைசாரியை - சந்திவிகார மாறினுமேற்பவை - முன்னிப்புணர்ப்ப முடியுமெப்பதங்களும். *

(எ-ன்) பகுபதவுறுப்பு இத்துணையவென்பதுணர்- த்து.(பொ) பகுதி- முதனிலையும், விகுதி- இறுதிநிலையும், இடைநிலை- இடைநிலையும், சாரியை- சாரியையும், சந்தி- சந்தியும், விகாரம்- விகாரமும், ஆறினும்- ஆகியவிவ்வாறு உறுப்பினுள்ளும், ஏற்பவை - பொருளமைதிக்கு ஏற்பவைகளை, முன்னி - நினைத்து, புணர்ப்ப- அறிவுடையோர் கூட்டிமுடிக்க, எப்பதங்களும் - எவ்வகைப்பட்ட பகுபதங்களும், முடியும்- முடிவுபெறும், எ-று. (பொழிப்பு) இங்ஙனங்கூறிய பகுதிமுதலியவாறுறுப்பினுள்ளு மிப்பதப்பொருளமைதிக் கேற்பனவற்றைக்கருதி யறிவுடையோரால் கூட்டிமுடிப்ப எவ்வகைப்பட்ட பகுபதங்களு முடியும். எ று. ※ பிரகிருதி-விகிருதி யென்னும் ஆரியமொழிகள் பகுதிவிகுதியெனத்திரிந்துநின்றன. தன்னியல்பினிற்றலிற் பகுதியென்றுந் தன்னியல்பினிற்கு மொருவனுள்ளத்தை ஆடை அணி முதலியவற்றொருத்தி முன்னின்று தன்னிடத்தவாவ விகாரப்படுத்தல் போலத் தன்னியல்பினிற்கும் பகுதிப்பொருளை யிடைநிலைமுதலியவற்றோடு விகுதிமுன்னின்று தன்னிடத்தவாவ விகாரப்படுத்தலின் விகுதியென்றும் முதனிலைப்பகுதிக்கு மிறுதிநிலை விகுதிக்கு மிடைநிற்றலின் இடைநிலையென்றும் இவ்விகுதிமுதலிய புணர்ப்பைச்சார்ந் தாண்டைக்கியைந்து நிற்றலிற் சாரியையென்றும் நால்வகைச்சொல்லு மொன்றோடொன்று சந்தித்தலான் வருந்தோன்ற திரிதல் கெடுதலைச் சந்தியென்றும் செய்யுட்டொடைமுதலியவற்றான் வலித்தல்மெலித்தன்முதலாக விகாரப்படுதலி னவற்றை விகாரமென்றுங் காரணக்குறியாய் வந்தன. அவ்வழிவேற்றுமைப் புணர்ச்சிக்குவிதித்த தோன்றறிரிதல் கெடுதலையுஞ் செய்யுட்கு விதித்தவொன்பதுவிகாரத்தையும் இப்பதம்பெறுமென மாட்டுதலின் இது- மாட்டெறிந்தொழுக லென்னுமுத்தி. (சு)

(ாகஉ) தத்தம் பகாப் பதங்களே பகுதியாகும். ※

(எ-ன்) பகுபதவுறுப்புஆறனுட் பின்னையமூன்றும்புணரியலுளுணர்த்தப்படுதலி னவையொழித்துமுன்னையமூன்றனுட்பகுதியி

வினையெவன்பதுணர்-ற்று.(ப-ரை)தத்தம்பகாப்பதங்களே-பெயர்ப்பகுபதங்களுள்ளும் வினைப்பகுபதங்களுள்ளும்அதனதனுடைய முன்னிற்கின்ற பகாப்பதங்களே,பகுதியாகும்-பகுதிகளாகும், எ-று.(பொ-ரை) பெயர்ப்பகுபதங்களுள்ளும் வினைப்பகுபதங்களுள்ளுந் தத்தமுதனிலையாய பகாப்பதங்களே யவற்றின் பகுதியாம், எ-று. ※ பகுபதத்துட் பகுதிவிகுதி முதலிய வுறுப்பெல்லாம் பகாப்பதமாயினும் விகுதிமுதலியவற்றை மேல்விதந்து கூறலி னீண்டுத் தத்தம்பகாப்பதங்களென்றது முதனிலைகளையே யென்பதுபாரிசேடத்தாற்பெறும். பகுபதவுறுப்பாமுதனிலையிறுதிநிலை யிடைநிலைகளாய பகாப்பதங்களினின்று முதனிலைப் பகாப்பதமொன்றனையுமே பிரித்துத்தந்தமையிற் பகாப்பதங்களேயென்னு மேகாரம் பிரிநிலைக்கண்வந்தது. (எ)

(௱௩௯) செம்மை சிறுமை சேய்மை தீமை- வெம்மை புதுமை மென்மை மேன்மை திண்மை யுண்மை நுண்மை யிவற்றெதி- ரின்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே. ※

(எ-ன்) பண்புப்பகுதிக் கெய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்- ற்று. (ப-ரை) செம்மைநுண்மை- செம்மைமுதல் நுண்மையீறுகச்சொல்லப்பட்ட பதினொன்றும், இவற்றெதிர்- இவைகளுக்கு எதிரானவெண்மை முதலானவைகளும், இன்னவும் - இவைபோல்வன பிறவும், பண்பின்- பண்புப் பொருளினின்றும், பகா- வேறுபொருள் பகுக்கப்படாத, நிலை- நிலையையுடைய,பதம்- பதங்களாகும், எ-று. (பொ-ரை) இங்ஙனங்கூறிய பதினொன்றுமிவற்றிற்கெதிரான வெண்மை கருமை பொன்மை பசுமைகளும் பெருமை அணிமை நன்மை தண்மை பழமை வன்மை கீழ்மை நொய்மை இன்மை பருமையும் இவைபோல்வனபிறவும் பகுதியாய பண்புப்பொருளினின்றும் வேறுபொருள் பகுக்கப்படாத நிலைப்பதமாம் எ-று. ※ இங்ஙனங்கூறிய வாய்பாடுமுதலியவெல்லாஞ் சொன்னிலையாற் பகுபதமாயினு மைவிதிக்குப் பகுதிப்பொருளன்றி வேறுபொருளின்மையிற் பொருணிலையாற் பகுக்கப்படாதென்பார் பண்பிற்பகாவென்றும் "மெய்யி னியக்க மகரமொடு சிவணும்" என்றாற்போல இங்ஙனங்கூறியவாய்பாட்டுப் பண்புகண் மைவிகுதியின்றி யியங்காமையி னிவ்விகுதியினையும் பகுதியாக நிறீஇமேல்வரும் விகுதியோடுபுணர்க்கப்படுமென்பார்- நிலைப்பதமென்றுங்கூறினார். பண்புப் பகாப்பதமென்னாது பண்பிற்பகா நிலைப்பதமென்றல்சொற் பொருள்விரித்தலென்னுமுத்தி. செம்மை சிறுமைமுதலியவாய்பாடுகள் எடுத்துக்காட்டலென்னுமுத்தி. (அ)

னவடக்கியுங்கூறிய பல்வேறு வகைப்பட்ட பண்புவாய்பாட்டு விகற்பங்களெல்லாம் பொதுவிதியானு மீறுபோதன்முதலாக விதந்து மினையவுமெனஅடக்கியுங்கூறிய சிறப்புவிதியானும் விகுதிபதங்களோடுபுணர்ந்தமைந்துகிடந்தமை யுய்த்துணர்ந்துகொள்க. இங்ஙனம் விதந்துகூறிய விகாரங்கள் அன்பன் அழகன் முதலியவாய்பாடுகட்கு எய்தாமையானும் செம்மை சிறுமை முதலாக வெடுத்துக்காட்டுமொழிகட் கெய்தினமையானும் இஃது எடுத்தமொழியி னெய்தவைத்தலென்னு முத்தி. (கக)

(௱கஎ) நடவா மடிசீ விடுகூ வேவை- நொப்போ வௌவுரி
ஞுண்பொருந் திருந்தின்- றேய்பார் செல்வவ் வாழ்கே ளஃகெ
ன்- றெய்திய விருபான் மூன்று மீற்றவுஞ் - செய்யெ னேவல்
வினைப்பகாப்பதமே. *

(எ - ன்) தெரிநிலைவினைப்பகுதிக் கெய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்- ற்று. (ப-ரை) நட - அஃகென்று- நட வா மடி சீ விடு கூ வே வை நொ போ வௌ உரிஞ் உண் பொருந் திரும் தின் தேய் பார் செல் வவ் வாழ் கேள் அஃகு என்று, எய்திய - முதனிலையாகப்பொருந்திய, இருபான்மூன்றும் - இருபத்துமூன்றும், ஈற்றவும் - உயிரு மெய்யுங் குற்றியலுகரமுமாகிய வீற்றையுடைய இவைமுதலாகிய வாய்பாடுகளெல்லாம், செய்யென் - செய்யென்கின்ற, ஏவல்-ஏவலினது, (பகாப்பதம்) - பகாப்பதமாகிய பகுதியும், வினை- மற்றைவினைகளுக்கு, பகாப்பதம்-பகாப்பதங்களாகியபகுதியும், ஆம்-ஆகும், எ-று (பொ-ரை) நட வா மடி சீ விடு கூ வே வை நொ போ வௌ உரிஞ் உண் பொருந் திரும் தின் தேய் பார் செல் வவ் வாழ் கேள் அஃகு என்று முதனிலையாய் எய்திக்கிடந்த இவ்விருபத்துமூன்றுமுயிரு மெய்யுங் குற்றுகரமுமாகிய வீற்றினையுடைய இத்தொடக்கத்து வாய்பாடுகளெல்லாஞ் செய்யென்னு மேவலினது பகாப்பதமாகிய பகுதியுமேனைவினையினது பகாப்பதமாகிய பகுதியுமாம், எ-று. * இத்தொடக்கத்து வாய்பாடுகளென்பார் அஃகாமென்றொழிது அஃகென்றனவும் ஈற்றவுமெனவும் எகரவுயிர் விளிவிடைச்சொற்கண்ணுந் தன்பெயர்க்கண்ணு மன்றிப் பிறவழி யீறுகாமையின் அஃதொழித்தலை யீண்டைக்காமென்பா ராமீற்றவெனவும் விகற்பத்தின்முடித்த லென்னுமுத்தியா னிருபத்துமூன் றீற்றவாசவிகற்பித் தெடுத்துக்காட்டும் வாய்பாடுகண் முதலியவெல்லாம் இப்பொதுவாய்பாட்டி னடங்குமென்பார் முடிந்தது முடித்தலென்னுமுத்தியாற் செய்யெனவுங்கூறினார். இரட்டுறமொழிதலென்னுமுத்தியா னெடுத்துக்கொண்ட முதனிலையொன்றற்கே

புரிய ஏவலினது பகுதிப்பொருளு மேனைவினையினது பகுதிப்பொருளுந் தந்துநிற்கும் நடவாமுதலியவாய்பாடுகளை யெண்ணித்தொகுத்த விருபான்மூன்றும்மீற்ற வென்னுந்தொகை செய்யென்னேவற் பகாப்பதமென்னும் பயனிலையோடுஞ் செய்யென்வினைப்பகாப்பதமென்னும் பயனிலையோடுந் தனித்தனி முடிந்தன. செய்யென் வினைப்பகாப்பதமென்றதனையானே செய்யென்னேவற்பகாப்பதமு மடங்காதோ வேறுகூறவேண்டியதென்னையெனின், நட வா உண் தின் என்றற்றொடக்கத்து முதனிலைகளே விகுதியோடுபுணராது தனித்துநின்றுழைவேறுபாட்டான் முன்னிலையேவலொருமையெதிர்காலவினைமுற்றுப்பொருண்மை புணர்த்தினவோ விகுதியோடுபுணர்ந்துநின்றே யப்பொருண்மைபுணர்த்தினவோவென் றையுறுவார்க்கையமறுத்தற்குக் கூறியதெனவுணர்க. ஏவற்பகுதிக்குதாரணம், நடவாய் - வாராய் - உண்ணாய் - தின்னாய் - அஃகாய் - (எ-ம்) நடமின் - வம்மின் - உண்மின் - தின்மின் - அஃகுமின் - (எ-ம்) வரும். இனி ஆசிரியர் தொல்காப்பியர் "செய்யாயென்னு முன்னிலைவினைச்சொற் - செய்யென்கிளவி யாகிடனுடைத்தே." எனக்கூறிய வாற்றால் ஆயென்னும்விகுதிகுன்றி நட வா உண் தின் அஃகு எனவுநிற்குமெனவுணர்க. நிற்பினும் விகுதியொடுபுணர்ந்தனவேயாம். அஃதச்சூத்திரத்திற் சேனாவரையர் கடாவிடைகளான் விளங்கக்கூறிய வாற்றானுமறிக. இனி இவ்வாறேவற்பொருளுணர்த்தாது முதனிலைத்தனிவினைப்பொருளுணர்த்தி நிற்பிற் பகாப்பதமென்று கொள்ளப்படும். இதுபற்றியன்றே முன்னரேவல்வினைப்பகாப்பதத்திற் குதாரணங் காட்டியதூஉமென்க. இன்னும் அச்சூத்திரத்து மொழிந்தபொருளோ டொன்றவவ்வயின் மொழியாதனை முட்டின்றுமுடித்தலென்னு முத்தியான் விகுதிபுணர்ந்து கெட்டுநிற்குஞ்சொற்கள்பலவுள அவையெல்லாம் பதமுடிப்புழிக்காண்க. ஏனைவினைப்பகுதிக்குதாரணம். நடந்தான் - வந்தான் - மடித்தான் - சீத்தான் - விட்டான் - கூவினான் - ஏவினான் - வைத்தான் - நொந்தான் - போயினான் - வெளவினான் - உரிஞினான் - உண்டான் - பொருநினான் - திருமினான் - தின்றான் - தேய்த்தான் - பார்த்தான் - சென்றான் - வவ்வினான் - வாழ்ந்தான் - கேட்டான் - அஃகினான் - (எ-ம்) கிடந்தான் - கண்டான் (எ-ம்) ஏகினான் - குறுகினான் - கட்டினான் - பொருந்தினான் - எய்தினான் - (எ-ம்) வரும். பிறவுமன்ன. இவற்றுட் பகுதி முதனிலையாயெய்திக்கிடந்தமைகாண்க. இனியிச்சூத்திரத்திற் செய்யென்னேவல்வினைப்பகாப்பதமேயென்பதற் கிவ்வாறுபொருள்கூறாது ஆற்றொழுக்காகச்செய்யென்னேவல்வினைப்பகாப்பதமே வினை வினைப்பெயர்கட்கெல்லா முதனிலையெனப் பொருள்கூறுவாருமுளர்.

"அடியேனு னடியார் நடுவிருக்குமருளைப்புரியாய்," "எந்தா யினித்தானிரங்காயே," "மருங்கே சார்ந்து வரவெங்கள் வாழ்வேவாவென் றருளாயே," "நரிப்பாய்நாயேனிருப்பேனோநம்பி யினித்தா னல்காயே," "கீதமினிய குயிலே—அந்தமிலான்வரக் கூவாய்," என்றற்றொடக்கத்தனவாயதிணைபாலிடங்காலங்காட்டும் விகுதியுறுப்போடுகூடி முற்றிநிற்கு முன்னிலையேவலொருமையெதிர்காலவினைமுற்றுப் பகுபதங்களைப் பகாப்பதமென்றல் கூடாமையேயன்றித் "தத்தம் பகாப் பதங்களே பகுதியாகும்," என்னும் பொதுச்சூத்திரத்தோடு மாறுகொளக்கூறலா மாதலினது பொருளன்றெனமறுக்க. இங்ஙனமுதனிலை புடைபெயர்தலே வினையாதலி னெல்லாவினைச்சொற்களுந் பிறத்தற்குமூலமாகியபொது முதனிலைத்தனிவினைப் பெயரென்றே கொள்க. அதனைப்பகுத்தலோசையாற் கூறிக்காண்க. எல்லாவினைச்சொற்களாவன திணைபால்இடங்காலம்-விதிமறைபொதுச்சிறப்பாதியோடுங்கூடின முற்றெச்சங்களுந் தொழிற்பெயர்களுமென்க. ஐயறியாமாக்கட்கன்றி நூலியற்று மறிவின்புடையமக்கட்குப் பலகலைக்குரிசில் பவணந்தியென்னும் புலவர்பெருமான் புகழ்போல விளங்கி திற்றலா னுலகமலையாமையுள்விட்ட பத்தழுங்காட்டும் பிறந்துநின்றது இச்சூத்திரமென்றுணர்க. வடநூன் மேற்கோளாக வொருமொழிகளை விதந்து பகாப்பதம் பகுபதமெனக் காரணக்குறிதா மேற்று அவற்றைநல்விருத்தென்னநாவலர்பயில எழுத்தே முதலிய தாமென்னுஞ் சூத்திரமுத லிச்சூத்திரமீறாகப் பகாப்பதம்பகுபதமெனப் பல்காற்கூறுதல் தன்குறிவழக்க மிகவெடுத்துரைத்தலென்னு முத்தி. (௭)

(௱௩அ) செய்யென்வினைவழி விப்பிதனிவரிற்-செய்வியென் னேவ லிணையினீரேவல்.

*

(எ-ன்) மேலிரட்டுற மொழிந்தவற்று ளேவற்பகுதிக்கெய்திய தன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று. (ப-ரை) செய்யென் - செய்யென்னும்வாய்பாட்டு, வினைவழி - முதனிலைத் தனிவினையின்பின், விப்பி - வி பி விகுதியாவது பிவ்விகுதியாவது, தனிவரின் - தனித்து வருமாயின், செய்வியென்னேவல் - செய்வியென்னுமேவலின்மேலேவலாய்ச் செய்வியென்னும்வாய்பாட்டேவற்பகுதியாம், இணையின் - அவ்வினையின்பின் இந்தவிகுதிகள் தம்மொடும் பிறவொடும் இணைந்துவருமாயின், ஈரேவல்-செய்விப்பியென்னும் வாய்பாட்டேவற்பகுதியாம். எ-று. (பொ-ரை) மேற்கூறிய செய்யென்னும் வாய்பாட்டுமுதனிலைத் தனிவினையின்பின் வி பி என்னுமிவ்விரண்டு விகுதியினுளொன்று வருமாயிற் செய்யென்னு மேவலை மேலோரேவலாய்ச் செய்வியென்னும் வாய்பாட்டேவற்பகுதிய

இம்மின் இர்ஈர்- ஈயர்கயவு மென்பவும் பிறவும்- வினையின் விகுதி பெயரினுஞ் சிலவே. *

(எ-ன்) விகுதியிவையென்பதுணர்- ற்று. (ப-ரை) அன்-என்பவும்- அன்முதல் முப்பத்தேழாகச் சொல்லப்பட்டவைகளும், பிறவும்- இவைபோல்வனபிறவும், வினையின்விகுதி - வினைப்பகுபதங்களின் விகுதிகளாகும், பெயரினும் - பெயர்ப்பகுபதங்களிலும், சில- சிலவிகுதிகளாகும், எ-று. (பொ-ரை) இங்ஙனம் அன்ஆன் முதன் முப்பத்தேழாகச் சொல்லப்படுவனவும் இவைபோல்வனபிறவுந் தெரிநிலைவினையின் விகுதிகளாம் பெயரிடத்துமிவற்றுட்சிலவிகுதியாம் எ-று. ☼ இரட்டுறமொழிதலென்னுமுத்தியாற் றன்மையொருமைக்கும் அஃறிணைப்படர்க்கை யொருமைக்கும் பொதுவாகக் குடுதுறுவென்றும் முன்னிலை யொருமைக்கு முன்னிலையேவலொருமைக்கும் பொதுவாக ஆய் என்றும் அம்மென்னுந் தன்மையொருமைவிகுதிதொன்றுதொட்டதன்றி யிலக்கியங் கண்டமையின் எதிரதுபோற்ற லென்னுமுத்தியாற்றழீஇக்கொண்டதாதலின் அதனைவேறுபுறுத்திப்பின்னுமன்னை வைத்தும் இன்னுமிவற்றுள் இரட்டுறமொழிதலானடங்குவனவடங்க வடங்கா வாயபெயரெச்சம் வினையெச்சம்-நடந்து-நடப்பி- முதலிய பிறவினையென்பவற்றுள்ளும் பிறவற்றுள்ளும் டகுதியை விகுதிப்படுத்தி வருவனயாவை அவை யெல்லாம் விகுதியென்று கருதிக் கோடற்குப் பிறவு மென்றுங் கூறினார். பெயரினுஞ் சிலவென்ற மாத்திரையிற் குறிப்பு வினையினுஞ் சிலவென்பதுகூறுதே யமைதலின் இங்ஙனம்வினையென்றது அவ்விரண்டிமொழிந்த தெரிநிலைவினை யெனப்படு பெற்றும். [உ-ம்] நடந்தனன்- நடந்தான்- இவை யாண்பாற்படர்க்கை. நடந்தனள்- நடந்தாள்- இவை பெண்பாற்படர்க்கை. நடந்தனர்-நடந்தார் நடப்ப-நடமார்- இவை பலர்பாற்படர்க்கை. நடந்தன-நடவா- இவை பலவின்படர்க்கை. நடக்கு- உண்டு-நடந்து-சேறு- நடந்தனன்- நடந்தேன்- நடப்பல்- நடப்பன்- இவை ஒருமைத்தன்மை. நடந்தது- கூயிற்று- குண்டுகட்டு- இவை ஒன்றன்படர்க்கை. நடப்பம்-நடப்பாம்-நடப்பெம்- நடப்பேம்-நடப்போம்- நடக்கும்- உண்டும்- நடந்தும்- சேறும்- இவை தன்மைப்பன்மை நடந்தனை- நடந்தாய்- நடத்தி- இவை ஒருமைமுன்னிலை. நடமின்-நடந்தனிர்- நடந்தீர்- இவை பன்மைமுன்னிலை. நிலீயர்- நடக்க- வாழிய- இவை வியங்கோள். நடக்கும் - இது செய்யுமென்முற்று. பிறவுமன்ன. இவை திணைபாலிடங்களை யுணர்த்தியிடைநிலைவிகுதியாய் முற்றுவருமும் வந்தன. வில்லன்-

வில்லான் - வளையன் - வளையாள் - ஊரர் - ஊரார் - வில்லி - வாளி -
அரசி - செட்டிச்சி - காதறை - மூக்கறை: இவைபெயர்க்கட் சிலவ
ந்தன. பிறவுமன்ன. (யங)

(௱சக) இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலிற் - பகுதி
விகுதி பகுத்திடை நின்றதை - வினைப்பெய ரல்பெயர்க் கிடை
நிலை யெனலே. *

(எ-ன்) இடைநிலையாமா றுணர்த்துவான் றொடங்கிப் பெயர்க்
கிடைநிலையுணர் - த்து. (ப-ரை) இலக்கியம் - அறிவுடையோரா
லே நியமிக்கப்பட்ட இலக்கியத்தை, கண்டு - பார்த்து, அதற்கு -
அவ்விலக்கியத்திற்கு, இலக்கணம் - அவ்விலக்கியத்தினமைதியே
யிலக்கணமாக, இயம்பலின் - சொல்லுதலால், பகுதி - முன்சொ
ல்லப்பட்ட பகுதியையும், விகுதி - விகுதியையும், பகுத்து - பிரி
த்து, இடைநின்றதை - நடுநின்றதை, வினைப்பெயரல்பெயர்க்கு
- வினையாலணையும் பெயரல்லாத பெயர்களுக்கு, இடைநிலையெ
னல் - இடைநிலையென்றுசொல்லுக. எ-று. (பொ-ரை) அறிவு
டையோரானியமிக்கப்படுமிலக்கியங்கண்டதனுக்குஅவ்விலக்கிய
த்தி னமைதியே யில்க்கணமாகக்கூறலின் மேற்கூறிய பகுதியை
யும் விகுதியையும்பகுத் திடையேநின்றதியா ததனைவினையால
ணையும் பெயரல்லாத பெயர்கட் கிடைநிலை யென்று சொல்லுக.
எ-று. ※ குறிக்கப்படு மிலக்கணத்தை யுடையனவெல்லா மிலக்
கியமாயினும் ஈண்டிலக்கியமென்றது பெயர்ப்பகுபதத்தை. இ
லக்கணமென்ற தனகத்துப்பகுதிமுதலிய வுறுப்புக்களை. மா-
பலா- முதலியன பராரைமுதலிய சினையோடு நின்றனவெனக்க
ண்டது கூறுவார்போலப் பகுபதம் பகுதிமுதலியவுறுப்பொடு
நின்றதெனக் கண்டதுகூறி யப்பதந்தந்தமதோலாநாவின்மேலோ
ராணையினிற்றலிற் கண்டதற்கென்றும் சாரியை சந்தி விகாரங்க
ளு மிடைநிற்குமேனுமவைமேல்விதக்கப்படுதலி னவையொழி
ந்தனவற்றை யிடைநின்றதையென்றும்மேல்வினைக்குவிதந்துகூ
றுமிடைநிலை வினையாலணையும் பெயர்க்கு மமைதலின் வினைப்
பெயரல்பெயர்க்கென்றும் இப்பெயரிடைநிலை வரையறுக்கப்ப
ட்டதன் றுங்காங்குணர்ந்துரைக்கவென்பா ரெனலே யென்றுங்
கூறினார். [உ-ம்] அறிஞன்-என்பது ஞகரவிடைநிலைபெற்றது.
ஓதுவான் - பாடுவான் - என்பன வகரவிடைநிலை பெற்றன வலை
ச்சி - புலைச்சி - என்பன சகரவிடைநிலை பெற்றன. வண்ணாத்தி -
பாணத்தி - மலையாட்டி - வேளாட்டி - தந்தை - எந்தை - நுந்தை
என்பன தகரவிடைநிலை பெற்றன. பிறவுமன்ன. (யச)

(௱சஉ) தடறவொற்றின்னே யைம்பான்மூவிடத் - திறந்தகால
த் தருந்தொழி லிடைநிலை. *

(எ-ன்) இறந்தகாலவினைக் கிடைநிலையுணர்-ற்று (ப-ரை) தட றவொற்று- தகர டகர றகர மெய்களும், இன்-இன்னும், ஐம்பா ன்மூவிடத்து- ஐம்பான்மூவிடங்களிலும், இறந்தகாலம்- இறந்த காலத்தை, தரும்- காட்டுகின்ற, தொழில்-வினைப்பகுபதங்களினு டைய, இடைநிலை- இடைநிலைகளாகும். எ-று (பொ-ரை) தகரட கர றகரமெய்களும் இன்னென்னுங்குற்றொற்றும் ஐம்பான் மூவி டத்து மிறந்தகாலத்தைத்தரும் வினைப்பகுபத விடைநிலைகளாம் எ-று ❋ [உ-ம்] நடந்தான்- நடந்தாள் - நடந்தார்- நடந் தது நடந்தன- நடந்தேன்- நடந்தேம்- நடந்தாய்- நடந்தீர்- (எ-ம் உண்டான்- (எ-ம்) சென்றான்- (எ-ம்) உறங்கினான்- (எ-ம்) வரும். இன்னிடைநிலை ஒன்றியதெனக் கடைக்குறைந்து போன தென முதல்குறைந்தும்வரும். பிறவுமன்ன. (௰௩)

(௱௪௩) ஆநின்றுகின்று கிறுமூவிடத்தி- னைம்பாலிகழ்பொழு தறைவினை யிடைநிலை. ❋

(எ-ன்) நிகழ்காலவினைக்கிடைநிலையுணர்-ற்று. (ப-ரை) ஆநின் று- ஆநின்றென்பதும்,கின்று- கின்றென்பதும்,கிறு-கிறுவென்ப தும், ஐம்பான் மூவிடத்தின்- ஐம்பான் மூவிடங்களிலும், நிகழ் பொழுது- நிகழ்காலத்தை, அறை- காட்டுகின்ற, வினை- வினைப்ப குபதங்களினுடைய, இடைநிலை-இடைநிலைகளாகும் எ-று. (பொ- ரை) ஆநின்றென்பதூஉம் கின்றென்பதூஉம் கிறுவென்பதூஉம் ஐம்பான் மூவிடத்தினு நிகழ்காலத்தைத்தரும் வினைப்பகுபத வி டைநிலைகளாம் எ-று. ❋ தருவினையை யறைவினையென்ற திலக் கணை. மேலைச்சூத்திரத்தில் வருவதூஉமது. [உ-ம்.] நடவாநின்றா ன்- நடக்கின்றான்-நடக்கிறான்-எனவரும். ஏனைப்பாலிடங்களினு மொட்டிக்கொள்க. (௰௪)

(௱௪௪) பவ்வமூவிடத் தைம்பாலெதிர்பொழு- திசைவினை யிடைநிலை யாமிவை சிலவில. ❋

(எ-ன்) எதிர்காலவினைக் கிடைநிலையு முக்கால விடைநிலைகட்கு மாவதோர்புறனடையுமுணர்-ற்று. (ப-ரை) பவ்வ-பகர மெய்யும் வகரமெய்யும், ஐம்பான்மூவிடத்து - ஐம்பான் மூவிடங்களிலும், எதிர்பொழுது- எதிர்காலத்தை, இசை- காட்டுகின்ற,,வினை- வினை ப்பகுபதங்களினுடைய, இடைநிலையாம்- இடைநிலைகளாகும், இ வை-இம்முக்காலவிடைநிலைகளுள், சில- சில முற்றெச்சங்களுக்கு, இல- இல்லை. எ-று (பொ-ரை) பகரவொற்றும் வகரவொற்றுமை ம்பான்மூவிடத்து மெதிர்காலத்தைத்தரும்வினைப்பகுபதவிடை நிலைகளாம். இம்முக்காலமுமுறைமுறைபேகாட்டுந் தகரவொற்று முதல் வகரவொற் றீறாயவிடைநிலைகள் சிலமுற்றுவினை யெச்சவினைகட் கிலவாம். எ-று. ❋ [உ-ம்] நடப்பான் - வருவான் - எனவரும்.

குறுகும்.” என்பதனாற் பகுதிமுதல்குறுகி உடன்மேலுயிரேறி முடிந்தது. குறிஞ்சியானென்னும் இடப்பெயர்ப்பகுபதங்குறிஞ்சியென்னும் பகுதியும் ஆனென்னும் விகுதியும்பெற்று யகரவுடம்படுமெய்தோன்றி உயிரேறி முடிந்தது. பிரபவனென்னுங் காலப்பெயர்ப்பகுபதம் பிரபவமென்னும்பகுதியும் அன்னென்னும்விகுதியும்பெற்று “ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே” என்பதனாற் பகுதிகடைக்குறையாய் வகரவொற்றின்மேல் விகுதி அகரவுயிரேறிமுடிந்தது. திணிதோளனென்னுஞ் சினைப்பெயர்ப்பகுபதம் திணிதோளென்னும்பகுதியும் அன்னென்னும் விகுதியும்பெற்று உடன்மேலுயிரேறி முடிந்தது. பெரியனென்னுங் குணப்பெயர்ப்பகுபதம் பெருமையென்னும்பகுதியும் அன்னென்னும்விகுதியும் பெற்றுப் பகுதியீறுபோயிடையுகரமிகரமா யகரவுடம்படுமெய்தோன்றி யுயிரேறிமுடிந்தது. ஓதுவானென்னுந் தொழிற்பெயர்ப்பகுபதம் ஓது என்னும்பகுதியும் ஆன் என்னும்விகுதியும் வகரவிடைநிலையும்பெற்று உயிரேறி முடிந்தது. நன்மையென்னும் பகுபதம் நல் என்னும் பகுதியும் மை என்னும்விகுதியும்பெற்று “மெலிமேவினணவும்” என்பதனான் லகரம் னகரமாய்த் திரிந்து முடிந்தது. வருதலென்னும்பகுபதம் வா வென்னும்பகுதியும் தல் என்னும் விகுதியும் பெற்று “வலித்தன் மெலித்தல்” என்பதனாற் பகுதிமுதல்குறுகி ரகரவுகரம் விரிந்துமுடிந்தது. நடந்தனனென்னும்இறந்தகால வினைப்பகுபதம் நடவென்னும் பகுதியும் அன்னென்னும்விகுதியும் இறந்தகாலந்தருந் தகரவிடைநிலையும் அன்சாரியையும் பெற்றுப் பகுபதவுறுப்புக்களுட் பகுதியொழிந்தன இடைச்சொல்லாதலின் “இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்” என்பதனாற் பகுதியீற்றினின்ற வுயிர்முன்வந்த தகர விடைநிலை மிகாததற்கினமிகுந்து இடைநிலைத்தகரவொற்றின்மேற்சாரியையகரவுயிரேறிச் சாரியையீற்று னகரவொற்றின்மேல்விகுதி அகரவுயிரேறி முடிந்தது. நடவாநின்றான் என்னுநிகழ்கால வினைப்பகுபதம் நடவென்னும்பகுதியும் ஆனென்னும்விகுதியும் ஆநின்றென்னு மிடைநிலையும்பெற்று உடம்படுமெய்தோன்றியிடைநிலையீற்றுக் குற்றுகரங்கெட்டு உயிரேறி முடிந்தது. நடப்பான் என்னுமெதிர்கால வினைப்பகுபதம் நடவென்னும்பகுதியும் ஆனென்னும்விகுதியும் பகரவிடைநிலையும்பெற்று “இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன் கசதப மிகும்.” என்பதனாற் பகரமிகுந்து உடன்மேலுயிரேறி முடிந்தது. நடந்தது என்னும் அஃறிணை யொருமைப்படர்க்கை இறந்தகாலவினைப்பகுபதம் நடவென்னும்பகுதியும் துவ்வென்னும்விகுதியும் தகரவிடைநிலை

யும் அவ்விகுதிக்கும் தகரவிடைநிலைக்கும் இடையே அகரச்சாரியையும்பெற்று முடிந்தது. நடவாயென்னு முன்னிலையேவலொருமை யெதிர்காலவினைமுற்றுப்பகுபதம் நடவென்னும்பகுதியும் ஆயென்னும் விகுதியும்பெற்று வகரவுடம்படுமெய்தோன்றி விகுதி ஆகாரவுயிரேறி முடிந்தது. நடப்பியாயென்னும் ஏவற்பிறவினைப்பகுபதம்நடவென்னும்பகுதியும் பி என்னும்விகுதியும்பெற்றுப் பகரமிகுந்து இரண்டுமோர்பகுதியாய்நின்றுமேல்வரும்ஆய்விகுதியோடுபுணர்ந்து யகரவுடம்படுமெய்தோன்றி விகுதி ஆகார வுயிரேறிமுடிந்தது. நடப்பிப்பியாயென்னு மயவினைப்பகுபதம்நடப்பியென்னும்பகுதியும் பி என்னும்விகுதியும்பெற்றுப் பகரமிகுந்து அனைத்துமோர்பகுதியாய்நின்றுமேல்வரும் ஆய்விகுதியோடுபுணர்ந்து யகரவுடம்படுமெய்தோன்றி விகுதியாகாரவுயிரேறி முடிந்தது. விளம்பியபகுதிவேறனவையுமிவ்வாறேமுடிந்து அனைத்துமோர்பகுதியாய்நின்றுமேல்வரும் அன் ஆன் முதலிய விகுதியோடு புணர்ந்தமை காண்க. நடவானென்னு மெதிர்மறை வினைப்பகுபதம் நடவென்னும் பகுதியெதிர்மறையாகார விகுதியோடுபுணர்ந்து இரண்டுமோர்பகுதியாய்நின்றுமேல்வரும் ஆன்விகுதியோடுபுணர்ந்து "ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே." என்பதனான் விகுதியின தாகாரங்குறைந்து முடிந்தது. நடவாவென்னு மஃறிணைப் பன்மைப் பகுபதம் "ஆவே யெதிர்மறைக் கண்ணதாகும்" என்பவாகலிற் பால்காட்டும் ஆகாரவிகுதியன்றி யெதிர்மறை ஆகாரம்வேண்டாதுமுடிந்தது. நடந்திலன் - நடவாநின்றிலன் - என்பவற்றுட் காலவிடைநிலையும் அவற்றைமறுத்த இல் என்னுமெதிர்மறைவிகுதியுந் தந்தவற்றை யோர்பகுதியாக்கிமுடிக்க. இவ்வாறே பெயரெச்ச வினையெச்சங்களும் பிறவும் பகுதி விகுதி முதலிய வுறுப்புக்களோடேற்றவா றமைந்துகிடந்தமை காண்க. எழுதப்படுவதென்னும் பொருட்கண் எழுதென்னு முதனிலை முன்னர்ச் செயப்படுபொருண்மை புணர்த்தும் ஐகாரவிகுதிபுணர்ந்துகெட்டுக்கெட்டவழித் தகரமிரட்டித் தெழுத்தெனமுடிந்தது. உண்- தீன்- கோள்- என்றற்போல்வனவுஞ் செயப்படுபொருண்மைபுணர்த்தும் ஐகாரவிகுதிபுணர்ந்து கெட்டுமுதனிலைநின்றன. திரை- நுரை- அலை- தளிர்- பூ- காய்- கனி- என்றற்போல்வனவினைமுதற்பொருண்மைபுணர்த்தும் இகரவிகுதி புணர்ந்து கெட்டுநின்றன. கெடுவாகவையாதென்புழிக் கெடுவென்பது புடைபெயர்ச்சியைபுணர்த்துந் தல்விகுதிகெட்டுநின்றது. கேடென்பது அவ்வாறாய் முதலீண்டு நின்றதெனக் கொள்க. ஏனையவு மிவ்வாறே யேற்றபெற்றியறிந்து முடித்துக் கொள்க. திரை- நுரை- த

ம்- மொழிக்குமுதலிலே அகரமும் நடுவிலே ககரமுமாகும், ஐந்து- முப்பத்தைந்தா மெய்யானது, இருகவ்வும்- இரண்டு ககரமாகும், ஆவீறு- பொதுவெழுத்துகளிலே மொழியிறுதி ஆகாரமானது, ஐயும்- ஐகாரமாகும், ஈயீறு- மொழியிறுதி ஈகாரமானது, இகரமும்- இகரமாகும். எ-று (பொ-ளை) மேற் றிரியுமென்றவற்றுட் சிறப்பெழுத்தாகிய வேழாமுயி ரிகரமு மிருவுமாம் ஐந்துவருக்கங்களினு மிடையினின்றமூன்றும் அவ்வவ் வருக்கங்களின் முதலெழுத்தாம் எட்டா மெய்யான சவ்வருக்கத்துள் எடுத்துச் சொல்லுமெய் யொரோவிடத்துயகரமுமாம். முப்பதாமெய்மொழிமுதற்கட் சகரமும் இடைக்கண் யகரமுமாம். முப்பத்தொன்றாமெய் மொழிமுதற்கட்சகரமுமிடைக்கண்டகரமுமாம். முப்பத்திரண்டாமெய் மொழிமுதற்கட்சகரமும்இடைக்கண்தகரமுமாம். முப்பத்துமூன்றாமெய் மொழிமுதற்கண் அகரமும் இடைக்கண் ககரமுமாம். முப்பத்தைந்தாமெய் இரண்டுககரமாம். பொதுவெழுத்துள் மொழியிறுதி ஆகாரம் ஐகாரமாம். மொழியிறுதி ஈகார மிகரமாம். எ-று. மேற் றிரியுமெனப் பொதுவிதிபோந்தவற்றுட் சிலவின் றுவருவனவற்றுக்குத் திரிபுகூறி யேனைய வந்தவழிக்காண்கவென்பா ரிகரமுமாகுமெனப் பயனிலைகொடுத்துமுடியாது இகரமுமென அவாய்நிலையாக முடித்தார். [வரலாறு] இடபம்- விடபம்- திட்டி- [illegible] இருக்கு- [illegible] விருத்தி- (எ-ம்) எழாமுயி ரிகரமு மிருவுமாயிற்று. நகம்- நாகம்- மேகம்- (எ-ம்) சலவாதி- விசயம்- சருச்சரை- (எ-ம்) பீடம்-பீடை- திடம் (எ-ம்) தலம்-திண்ம்-தரை- (எ-ம்) பலம்-பந்தம்-பாரம்- (எ-ம்) ஐந்துவருக்கத்தினு முரப்பியும் எடுத்துங் கனைத்துஞ் சொல்லுமூன்றுமவ்வம் முதலாயின. அயம்- பங்கயம்- எனவெட்டாமெய் யகரமுமாயிற்று, சாலை- சூலை- (எ-ம்) மயானம்- (எ-ம்) முப்பதாமெய்சகரமும் யகரமுமாயிற்று. சட்டி- (எ-ம்) இடபம்- (எ-ம்) முப்பத்தொன்றாமெய் சகரமும் டகரமுமாயிற்று. சித்தி- சூத்திரம்- சேனை- (எ-ம்) ஆதனம்- வாதனை- (எ-ம்) முப்பத்திரண்டாமெய் சகரமுந்தகரமுமாயிற்று. அரன்- அரி- (எ-ம்) சிங்கம்- மோகம்-(எ-ம்) முப்பத்துமூன்றாமெய் அகரமுங் ககரமுமாயிற்று. பக்கம் - தக்கணம்- என முப்பத்தைந்தாமெய் இரண்டு ககரமாயிற்று. வேலை- சாலை- மாலை- உவமை- வனிதை- என ஆகாரவீறு ஐகாரவீறாயிற்று. புரி- மேதினி- குமாரி- என ஈகாரவீறு இகரவீறாயிற்று. (உ௰)

(௱௪௮) ரவ்விற் கம்முத லாமுக் குறிலும்- லவ்விற் கிம்முத லிரண்டும் யவ்விற்- கியவு மொழிமுத லாகிமுன் வருமே. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) ரவ்விற்கு- ரகரத்திற்கு, அம்முத

லாமுக்குறிலும்- அ இ உ என்கிறமூன்று குற்றெழுத்துகளிலொன்றும், லவ்விற்கு- லகாரத்திற்கு, இம்முதலிரண்டும் - இ உ என்கிற இரண்டிலொன்றும், யவ்விற்கு- யகாரத்திற்கு, இய்யும் - இகரமும், மொழிமுதலாகி- அவ்வெழுத்துகளை முதலிலுடைய வடமொழிகளுக்குமுதலாகி, முன்வரும் - அம்மூன்றெழுத்துகளுக்கு முன்னேவரும். எ-று. (பொ-ரை) ரகர லகர யகரங்களைமுதலாகவுடைய ஆரியமொழிகள் வடமொழியாங்கால் அகர இகர உகர மென்னுமிம்மூன்றுகுற்றுயிரும் இங்ஙனஞ் சொன்னவாறே அவ்வடமொழிகட்குமுதலாய் அம்மூன்றெழுத்திற்கு முன்னர்வரும். எ-று [வ-று] அரங்கம்- இராமன்- உரோமம்- (எ-ம்) இலாபம்- உலோபம்- (எ-ம்) இயக்கம்- (எ-ம்) வரும். (உக)

(௱சகூ) இணைந்தியல்காலை யரலக் கிகரமு- மவ்வக் குகரமு நகரக் ககரமு- மிசைவரும் ரவ்வழி யுவ்வுமாம் பிற. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) இணைந்து - ஆரிய மொழியுள் இரண்டெழுத்து இணைந்து, இயல்காலை- ஓரெழுத்தைப்போலநடக்கும்போது, யரலக்கு- பின்னின்ற யகர ரகர லகரங்களுக்கு, இகரமும்- இகாரமும், மவ்வக்கு- மகர வகரங்களுக்கு - உகரமும்- உகாரமும், நகரக்கு - நகரத்திற்கு, அகரமும் - அகாரமும், மிசை- மேலே, வரும் - வந்து வடமொழிகளாகும், ரவ்வழி- இணைந்து முன்னின்ற ரகரத்திற்குப்பின், உவ்வுமாம்- உகாரமும் வரும். எ-று. (பொ-ரை) ஆரியமொழியுள் இரண்டெழுத்திணைந்து ஓரெழுத்து நீர்மையாய் நடக்குங்காற் பின்னிற்கும் யரலக்கண்மீதே இகரமும் மகர வகரங்கண்மீதே உகரமும்நகரமீதே அகரமும் வந்துவடமொழியாம் இணைந்து முன்னிற்கும் ரகரத்திற்குப்பின்ன ருகரமும்வரும். எ-று. * [வ-று.] வாக்கியம்-வாச்சியம்-நாட்டியம்- (எ-ம்) வக்கிரம்- வச்சிரம்- சத்திரம்- அப்பிரம்- (எ-ம்) சுக்கிலம்- ஆமிலம்- (எ-ம்) பதுமம்- (எ-ம்) பக்குவம்- (எ-ம்) அரதனம்- (எ-ம்) அருக்கன்-அருத்தம்- கருப்பம்- சருச்சம் - தருமம்- (எ-ம்) வரும். பிறவென்றமையானே, சத்தி- கடவி- காப்பியம்- பருப்பதம்- என்றற் றொடக்கத்துத் திரியும், தூலம் - அத்தம் - ஆதித்தன்- அநத்தம்- என்றற்றொடக்கத்துக் கெடும் மற்றும் விகாரத்தால் வருவனவுங் கொள்க. (உஉ)

(௱ருய) றனழ எ ஒவ்வுமுயிர் மெய்யுமுயிரளு- டல்ல-சசார்புந் தமிழ்பிற பொதுவே. *

(எ-ன்) வடமொழியாக்கங் கூறவேண்டி ஆரியத்திற்குப் பொதுவெழுத்துஞ்சிறப்பெழுத்தெனவிதந்தமையி னிவ்விதப்புத் தமிழிற்குண்டோவென்றேவென் றையுறுவார்க் கையமறுத்ததனுதலிற்று. (ப-ரை) ற ன ழ எ ஒவ்வும்- முதலுஞ் சார்புமாகிய தமிழெழுத்

து நாற்பதுகளிலே றகர னகர ழகர எகர ஒகரங்களைந்தும், உயிர்மெய்யுமுயிரளபெடை - உயிர்மெய்யும் உயிரளபெடையுமல்லாத சார்பெழுத்தெட்டும், தமிழ் - தமிழிற்கே சிறப்பெழுத்துகளாம், பிற - ஒழிந்தவிருபத்தே ழெழுத்துகளும், பொது - பொதுவெழுத்துகளாம். எ-று. (பொ-ரை) முதலுஞ்சார்புமான நாற்பதெழுத்துள்ளும் றகர னகர ழகர எகர ஒகரமான முதலெழுத்தைந்தும் உயிர்மெய்யு முயிரளபெடையுமல்லாத சார்பெழுத்தெட்டுந் தமிழிற்கே சிறப்பெழுத்தாம் ஒழிந்த விருபத்தேழுந் தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொதுவெழுத்தாம். எ-று. ❋ மெய்யை முற்கூறினார் எகர ஒகரங்கள் பிராகிருதத்திற்கு முரியவாதலி னென்க. (௨௩)

இரண்டாவது பதவியல் முற்றிற்று.

---

மூன்றாவது.

# உயிரீற்றுப் புணரியல்.

---

(௱௫௧) மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களுந் - தன்னொடும் பிறிதொடு மல்வழி வேற்றுமைப் - பொருளிற் பொருந்துழி நிலைவரு மொழிக - ளியல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே. ❋

(எ-ன்) நிறுத்த முறையானே மேலையியலுட் கூறிய பதங்களொன்றோடொன்று புணருமாறுணர்த்துவான்றொடங்கிப் புணர்ச்சி யின்னதென்பதூஉம் பொதுப்புணர்ச்சியு முறையே தலைப்பெய் துயிரீற்றுப் புணருஞ் சிறப்புப்புணர்ச்சி கூறுவார் கமுகந்தோட்ட மென்றாற்போல மிகுதிபற்றிக்குறியா யிவ்வியற்கு உயிரீற்றுப் புணரியலெனப் பெயர்தந்தமையி னிவ்வியலின் வைத்தமுறையே புணர்ச்சி யின்ன தென்ப துணர்-ற்று. (ப-ரை) மெய்யுயிர் - மெய்யாவது உயிராவது, முதலீறும் - முதலுமீறுமாகிய, இருபதங்களும் - பகாப்பதம் பகுபதம் என்கின்ற விரண்டுபதங்களும், தன்னொடும் பிறிதொடும் - தன்னொடுதானும் பிறிதொடு பிறிதுமாய், அல்வழிவேற்றுமைப்பொருளின் - அல்வழிப் பொருளினாலாவது வேற்றுமைப் பொருளினாலாவது, பொருந்துழி - பொருந்துமிடத்து, நிலைவருமொழிகள் - நிலை

மொழியும் வருமொழியும், இயல்பொடுவிகாரத்து - இயல்போடாயினும் விகாரத்தோடாயினும், இயைவது- பொருந்துவது, புணர்ப்பு- முன்சொல்லப்பட்ட புணர்ச்சியாம், எ-று. (பொ-ளா) மெய்யையும் உயிரையும் முதலும் ஈறுமாகவுடைய பகாப்பதம் பகுபதமென்னும் இரண்டுபதங்களுந் தன்னொடுதானும் பிறிதொடு பிறிதுமாய் அல்வழிப்பொருளினுறைதல் வேற்றுமைப்பொருளினுறைதல் பொருந்துமிடத்து நிலைமொழியும் வருமொழியும் இயல்போடும் விகாரத்தோடும் பொருந்துவது மேற்கூறிய புணர்ச்சியாம். எ-று. ☼ உயிர்மெய் முதலீறுமெனில உயிர்மெய்யென்னும் ஓரெழுத்தாகப் பொருள்படுமாதலின் மெய்யுயிர்முதலீறுமென மெய்யை முற்கூறினார். இடைச்சொல்லும் வடசொல்லும் பெயர்வினையிடையுரியாய் அடங்குமாதலின் அவற்றுள் அடக்கி யிருபதங்களுமென்றார். வேற்றுமை யல்லாதவழி அல்வழியாதலின் வேற்றுமையல்வழி யெனக்கூறவேண்டும் அங்ஙனங்கூறின் வேற்றுமைப்பொருள் அல்வழிப்பொருளென விருபொருட்படாது வேற்றுமையென்பது அல்வழியை விசேடித்ததாய் அல்வழிப்பொருள் ஒன்றினும் பொருந்துழியெனப் பொருள்படுமாதலின் அல்வழிவேற்றுமையென அல்வழியை முற்கூறினார். இயல்பெனினும் தன்மையெனினும் இயற்கையெனினுமொக்கும். விகாரமெனினும் செயலெனினும் செயற்கையெனினும் விதியெனினுமொக்கும். இவ்விரண்டனுள் "நின்றசொன்முன் னியல்பாகும்மே" என இயற்கையைச் செயற்கையாகவும் "இசையாவொருபொருளில்லென்றல் யார்க்கும் - வசையன்று வையத்தியற்கை" எனச் செயற்கையை இயற்கையாகவுங் கூறுதல் இலக்கணை. புணரியன் மூன்றனுள்ளு மெய்யுயிர் முதலீறாமிரு பதங்களும் இவ்வாறு புணர்ந்துவருதல் காண்க. (௧)

(௱௫௨) வேற்றுமை யைம்முத லாறா மல்வழி- தொழில் பண் புவமை யும்மை யன்மொழி- யெழுவாய் விளியீ ரெச்சமுற் றிடையுரி- தழுவு தொடரட் டெனவீ ரேழே. ※

(எ-ன்) மேல் அல்வழிவேற்றுமையென்றார் அவையிவையென்பதுணர் - ற்று. (ப-ரை) வேற்றுமை- வேற்றுமைப் புணர்ச்சியாவது, ஐம்முதலாறும்- ஐ ஆல் கு இன் அது கண் என்கின்ற ஆறுருபுகளும் மறைந்தாகிலும் வெளிப்பட்டாகிலும்வரப் புணர்க்கப் பொருந்துந் தொடர்ச்சியாம், அல்வழி- அல்வழிப்புணர்ச்சியாவது, தொழில்- வினைத்தொகையும், பண்பு - பண்புத்தொகையும், உவமை உவமைத்தொகையும், உம்மை - உம்மைத்தொகையும், அன்மொழி-அன்மொழித்தொகையும், எழுவாய்-எழுவாயும், விளி-

து நாற்பதுகளிலே றகர னகர ழகர எகர ஒகரங்களைந்தும், உயிர்மெய்யுமுயிரளபெடையுமல்லாத சார்பெழுத்தெட்டும், தமிழ்- தமிழிற்கே சிறப்பெழுத்துகளாம், பிற- ஒழிந்தவிருபத்தேழெழுத்துகளும், பொது- பொதுவெழுத்துகளாம். எ-று. (பொ-ரை) முதலுஞ்சார்புமான நாற்பதெழுத்துள்ளும் றகர னகர ழகர எகர ஒகரமான முதலெழுத்தைந்தும் உயிர்மெய்யு முயிரளபெடையுமல்லாத சார்பெழுத்தெட்டுந் தமிழிற்கே சிறப்பெழுத்தாம் ஒழிந்த விருபத்தேழெழுத்துந் தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொதுவெழுத்தாம். எ-று. ❀ மெய்யை முற்கூறினார் எகர ஒகரங்கள் பிராகிருதத்திற்கு முரியவாதலி னென்க. (உரு)

இரண்டாவது பதவியன் முற்றிற்று.

---

மூன்றாவது.

# உயிரீற்றுப் புணரியல்.

---

(௱ருக) மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களுந் - தன்னொடும் பிறிதொடு மல்வழி வேற்றுமைப் - பொருளிற் பொருந்துழி நிலைவரு மொழிக - ளியல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே. *

(எ-ன்) நிறுத்த முறையானே மேலையியலுட் கூறிய பதங்களொன்றோடொன்று புணருமா றுணர்த்துவான்றொடங்கிப் புணர்ச்சி யின்ன தென்பதூஉம் பொதுப்புணர்ச்சியு முறைமையே தலைப்பெய் துயிரீற்றுப்பதப்புணருஞ் சிறப்புப்புணர்ச்சி கூறுவார் கமுகந்தோட்ட மென்றாற்போல மிகுதிபற்றியகுறியா யிவ்வியற்கு உயிரீற்றுப் புணரியலெனப் பெயர்தந்தமையி னிவ்வியலின் வைத்தமுறையே புணர்ச்சி யின்ன தென்ப துணர்-ற்று. (ப-ரை) மெய்யுயிர்- மெய்யாவது உயிராவது, முதலீறும்- முதலுமீறுமாகிய, இருபதங்களும்- பகாப்பதம் பகுபதம் என்கின்ற விரண்டுபதங்களும், தன்னொடும் பிறிதொடும்- தன்னொடுதானும் பிறிதொடு பிறிதுமாய், அல்வழிவேற்றுமைப்பொருளின் - அல்வழிப் பொருளிலாவது வேற்றுமைப் பொருளிலாவது, பொருந்துழி - பொருந்துமிடத்து, நிலைவருமொழிகள் - நிலை

மொழியும் வருமொழியும், இயல்பொடுவிகாரத்து - இயல்பேயாகா
யினும் விகாரத்தோடாயினும், இயைவது - பொருந்துவது; புண
ரிப்பு - முன்சொல்லப்பட்ட புணர்ச்சியாம், எ-று. (பொ-ள்)மெ
ய்யையும் உயிரையும் முதலும் ஈறுமாகவுடைய பகாப்பதம் பகு
பதமென்னும் இரண்டுபதங்களுந் தன்னொடுதானும் பிறிதொடு
பிறிதுமாய் அல்வழிப்பொருளினுறைதல் வேற்றுமைப்பொருளி
னுறைதல் பொருந்துமிடத்து நிலைமொழியும் வருமொழியும் இய
ல்பேயாயும் விகாரத்தோடும் பொருந்துவது மேற்கூறிய புணர்ச்
சியாம். எ-று. ❋ உயிர்மெய் முதலீறுமெனின் உயிர்மெய்யெ
ன்னும் ஓரெழுத்தாகப் பொருள்படுமாதலின் மெய்யுயிர்முதலீ
றுமென மெய்யை முற்கூறினார். திசைச்சொல்லும் வடசொல்
லும் பெயர்வினையிடையுரியாய் அடங்குமாதலின் அவற்றுள் அ
டக்கி யிருபதங்களுமென்றார் வேற்றுமை யல்லாதவழி அல்வழி
யாதலின் வேற்றுமையல்வழி யெனக்கூறவேண்டும் அங்ஙனங்கூ
றின் வேற்றுமைப்பொருள் அல்வழிப்பொருளென விருபொரு
ட்படாது வேற்றுமையென்பது அல்வழியை விசேடித்ததாய் அ
ல்வழிப்பொருள் ஒன்றினும் பொருந்துவழியெனப் பொருள்படு
மாதலின் அல்வழிவேற்றுமையென அல்வழியை முற்கூறினார். இ
யல்பெனினும் தன்மையெனினும் இயற்கையெனினுமொக்கும்.
விகாரமெனினும் செயலெனினும் செயற்கையெனினும் விதியெ
னினுமொக்கும். இவ்விரண்டனுள் "நின்றசொன்முன் னியல்பா
கும்மே" என இயற்கையைச் செயற்கையாகவும் "இசையாவொ
ருபொருளில்லென்றல் யார்க்கும் - வசையன்று வையத்தியற்
கை" எனச் செயற்கையை இயற்கையாகவுங் கூறுதல் இலக்கணை.
புணரியன் மூன்றனுள்ளு மெய்யுயிர் முதலீறாமிரு பதங்களும்
இவ்வாறு புணர்ந்து வருதல் காண்க. (௧)

(௱௫௨) வேற்றுமை யைம்முத லாறா மல்வழி - தொழில் ப
ண் புவமை யும்மை யன்மொழி - யெழுவாய் விளிமீ ரெச்சமு
ற் றிடையுரி - தழுவு தொட ரடுக் கெனவீ ரேழே. ❋

(எ-ன்) மேல் அல்வழிவேற்றுமையென்றார் அவையிவையெ
ன்பதுணர் - ற்று. (ப-ரை) வேற்றுமை - வேற்றுமைப் புணர்ச்சி
யாவது, ஐம்முதலாறும் - ஐ ஆல் கு இன் அது கண் என்கின்ற ஆ
றுருபுகளும் மறைந்தாகிலும் வெளிப்பட்டாகிலும்வரப் பதங்கள்
பொருந்துந் தொடர்ச்சியாம், அல்வழி - அல்வழிப்புணர்ச்சியாவ
து, தொழில் - வினைத்தொகையும், பண்பு - பண்புத்தொகையும்,
உவமை - உவமைத்தொகையும், உம்மை - உம்மைத்தொகையும்,
அன்மொழி - அன்மொழித்தொகையும், எழுவாய் - எழுவாயும், விளி -

விளியும், எச்சம் - பெயரெச்ச வினையெச்சங்களும், (கா) முற்று - தெரிநிலைவினை குறிப்புவினைமுற்றுக்களும், இடை - இடைச்சொல்லும், உரி - உரிச்சொல்லும், அடுக்கென - அடுக்குமென்று, ஈரேழ் - பதினான்குவகையாக, தழுவுதொடர் - பதங்கள்பொருந்துந் தொடர்ச்சியாம், எ-று. (வி-ரை) வேற்றுமைப்புணர்ச்சிபெயரே ஐ ஆல் என்னுஞ்சூத்திரத்து ஐமுதலிய ஆறு உருபுந்தொக்கும் விரிந்தும்வரப் பதங்கள்பொருந்துந் தொடர்ச்சியாம். அல்வழிப்புணர்ச்சி வினைத்தொகை முதலிய ஐந்துதொகைநிலையும் எழுவாய் முதல் ஒன்பது தொகாநிலையுமெனப் பதங்கள் பொருந்துந் தொடர்ச்சி பதினான்காம், எ-று ※ வேற்றுமைத் தொகைநிலை தொகாநிலையென விதவாமையின் அவ்விரண்டும் வேற்றுமைப்புணர்ச்சி யென்பதூஉம் முற்றெச்சங்களை விதந்தமையிற் றொழிலென்றது வினைத்தொகையை யென்பதூஉம் வினைத்தொகை முதல் ஐந்தும்விரிந்தவழி வினைத்தொகை பெயரெச்சமாயும் பண்பை விளக்குமொழி இடைச்சொல்லாதலிற் பண்புத்தொகையிரண்டும் இடைச்சொற் சந்தியாயும் உவமைத்தொகை யிரண்டாம்வேற்றுமையோடு பயனிலையாயும் உம்மைத்தொகை இடைச்சொற் சந்தியாயும் அன்மொழித்தொகை பொற்றொடி யென்பது பொன்னாலாய தொடியினையுடையாள் என்சொற்களுஞ் சந்திகளும் பலவாயுமுடிதலானும் வேற்றுமைத் தொகையன்றி இத்தொகைகள் தொகாநிலையுமாமென மேற்சூத்திரஞ் செய்யாமையானும் இவ்வைந்துந் தொடருந் தொகைநிலை யென்பதூஉம் பெற்றாம். இரண்டென்பதனை முற்றெச்சமென்பதனோடுந் தழுவுதொடரென்பதனை யெல்லாவற்றோடுங் கூட்டுக. அடுக்குந் தழுவுதொடராயினும் ஒருசொல்லடுக்கிவருதலின் ஏனையபோற் றழுவுதொட ரன்றென்பார் விதந்து பிரித்தோதினர். [உ-ம்] பொன்னுடையான் - பொன்னை யுடையான் - கல்லெறிந்தான் - கல்லாலெறிந்தான் - கொற்றன்மகன் - கொற்றனுக்குமகன் - மலைவீழருவி - மலையின் வீழருவி - மலையுச்சி - மலையினதுச்சி - மலைமுழை - மலைக்கண்முழை - என வேற்றுமைப் புணர்ச்சிவந்தன. கொல்யானை - கருங்குதிரை - ஆயன்சாத்தன் - பொன்னைந்து - இராப்பகல் - பொற்றொடி - கொற்றன்கொடுத்தான் - கொற்றாகொள் - உண்டசாத்தன் - உண்டுவந்தான் - உண்டான்சாத்தன் - குணட்டெருமை - அணைந்துகொலாம்பயில் கொல்லோகணந் துறைமுழ - தனிப்படைப்ப - படைபடையென்றஞ்சி - என அல்வழிப் புணர்ச்சி வந்தன. தழுவுதொடராறும் பதினான்குமெனக் கூறவே தழுவாத்தொடருமீண்டுள அவ்வாறேழுமென்றாராயிற்று. அவைவருமாறு. கைக்கனிறு - பொற்குடம் - ஆடகப்பூண் - என்

பன தழுவுதொடராகிய உருபும் பயனுமுடன் றொக்கமையிற்
களிறு குடம் பூண் என்பனவற்றோடு நிலைமொழிக டழுவாதுதொ
டர்ந்து மூன்றுவிகாரமுமேற்ற வேற்றுமைப்புணர்ச்சி. "இரு
ம்பு திரித்தன்ன மாயிருமருப்பிற் பரலவலடைய விரலை தெறி
ப்ப" என்பதனுள் மருப்பினிரலை யெனக் கொண்டுகூட்டாக
வந்துழி யைந்தாம்வேற்றுமையுருபும் பயனுமுடன்றொக்கு மரு
ப்பென்பது இரலையென்பதனோடு புணராது மருப்பிற் பரலெ
னப்புணர்ந்து திரிந்தது. இத்தொடக்கத்தனவெல்லாந் தழாத்
தொடராய வேற்றுமைப் புணர்ச்சியாமென்க. "சுரையாழ வம்
மி மிதப்ப" என்பதனுள் மொழிமாற்றுச் சுரைமிதப்பவெ
னத் தழுவுதொடராகி வரும்வழி இயல்பாகமுடியும் எழுவாய்ப்
புணர்ச்சி சுரையாழவெனத் தழாத்தொடரா யுடம்படுமெய்தோ
ன்றிமுடிந்தது. இத்தொடக்கத்தனவெல்லாந் தழாத்தொடரா
ய அல்வழிப் புணர்ச்சியாமென்க. மாடத்தைக்கட்டினான் - என
வேற்றுமையுருபுஞ் சாரியையும் விரிந்துநின்ற இருமொழி ஒரு
சந்தியாகிய வேற்றுமைச்சந்தியை வேற்றுமை நயங்கருதி நான்
குசொன் மூன்றுசந்தியாக்கி உருபுஞ் சாரியையும் இடைச்சொ
ல்லாதலின் அவ்வழியுள் இடைச்சொற் சந்தியென்று கோடலு
மொன்றும். எட்டேவேற்றுமையென மேற்கூறுவார் எழுவாயும்
விளியுமொழித்து வேற்றுமை ஐம்முதலாறென்றதென்னையெ
னின், பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலான் வேற்றுமை
யெட்டென்பார் எழுவாய்க்கும் விளிக்கும் உருபு பெயரும் பெய
ரதுவிகாரமுமன்றி வேறுருபின்மையின் அவ்விரண்டனையு மொ
ழித்துத்தமக்கென உருபுடையன இடைநின்ற ஆறு வேற்றுமை
யுமேயாதலின் அவற்றின் உருபாறுந்தொக்கும் விரிந்து மிடை
நிற்க அவ்வாறேனும் பதங்கள்பொருந்தும் புணர்ச்சியைவேற்று
மைப்புணர்ச்சி யென்றாரென்க. வினைத்தொகை பண்புத்தொ
கை அன்மொழித்தொகை யென்னும் அல்வழிப்புணர்ச்சியவா
ய தொகைநிலைத் தொடர்மொழிகளை ஒருமொழிக ளென்பாரு
முளர். அவர்கூற்றுத்தாய் மலடி யென்றாற் போலும். (உ)

(௱௫௫) விகார மனைத்து மேவல தியல்பே. ✻

(எ-ன்) மேல் இயல்பொடு விகாரத் தியைவதென்றார் அவற்
றுள் இயல்பாவதுணர் - ற்று. (ப-ரை) விகாரமனைத்தும்- மேல்
வரும் விகாரவகையனைத்தும், மேவலது- அடையாதது, இயல்பு-இ
யல்பாகும். எ-று. (பொ-ரை) மேல்வரும் விகாரவகை யனைத்து
மேவாதது இயல்புப்புணர்ச்சியாம் எ-று. ✻ [வரலாறு.] பொன்
மலை-புகழழகிது- ஒளிமணி- எனவரும். இயல்புக்குவிதி கூறவே
ண்டுவ தென்னையெனின், மலர்க்கணை தொடுத்தானென விகாரமா

யவழி மலராகியகணையைத் தொடுத்தானெனவும், மலர்க்கணைதொடு த்தானென வியல்பாயவழி மலரையுங் கணையையுந் தொடுத்தானெ னவும் பொருள்வேறுபடுதலிற் கூறவேண்டுமென்க. (௩)

(௱௫௪) தோன்ற றிரிதல் கெடுதல் விகார- மூன்றுமொழிமூ விடத்துமாகும். *

(எ-ன்) விகாரமுணர்-ற்று. (-ள்) தோன்றல்-எழுத்தாவதுசாரி யையாவதுதோன்றுதலும், திரிதல் வேறுபடுதலும், கெடுதல்-கெடு தலும், விகாரம்- முன்சொன்ன விகாரமாகும், மூன்றும்-இம்மூவ கைவிகாரமும், மொழி நிலைமொழிவருமொழிகளுடைய, மூவிடத் தும்- முதலிடைகடை என்கின்ற மூன்றிடத்தும், ஆகும் ஏற்றபடி வரும், எ-று. (பொ-ள்)மெய்யேனு முயிரேனு முயிர்மெய்யேனு ஞ் சாரியையேனுமொன்றும் பலவுந்தோன்றுதலுந் திரிதலுங் கெ டுதலுமேற்சொன்ன விகாரமாகும். இம்மூவகைவிகாரமுநிலைமொ ழிவருமொழிகளின் முதலிடை கடையென்னு மூன்றிடத்துமேற் றபடிவரும். எ-று. [உ-ம்] பூகொடி- பூங்கொடி வருமொ ழிக்கு முதலின்மெய் தோன்றின. பஃறலை வருமொழிமுதலினுநி லைமொழியீற்றினுமெய் திரிந்தன. நிலவலையம்- நிலைமொழியீற்றின் மெய்கெட்டது. அறுபது நிலைமொழிமுதலுயிர்திரிந்து வருமொ ழியிடையொற்றுக்கெட்டது. பஃபொருள் நிலைமொழியீற்றுயிர் கெட்டது. நாடுரி நிலைமொழியீற்றுயிர்மெய்கெட்டு டகரந்தோன் றிற்று. தமிழ்ப்பிள்ளை- பனங்காய் நிலைமொழியீற்றிற்சாரியைதோ ன்றின காட்டாதொழிந்தன வந்தவழிக்காண்க. இவ்விகாரங்க ணிலை மொழி வருமொழிகளுள் ஒருமொழியைச் சார்ந்துவந்தன. ஒ ருமொழி தொடர்மொழியென விதவாது பொதுப்படமொழி மூ விடத்துமாகுமென்றமையி னிருமொழியைச் சார்ந்துவருவ னவு முளவெனக்கொள்க. அவைவருமாறு. ஆவழிகிது வகரவுடம் படுமெய் தோன்றிற்று. உரியநெய் யகரவுயிர்மெய் தோன்றிற்று. புளியங்காய் அம்முச்சாரியை தோன்றிற்று. இத்தோன்றல் விகார ங்கணிலைமொழிவருமொழிகளுள் ஒருமொழிக்கே யுரியவன்றியி ருமொழியையுஞ் சார்ந்துவந்தவாகாண்க. (௪)

(௱௫௫) வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்கல்-விரித்தறொகு த்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி. *

(எ-ன்) செய்யுள்விகார முணர்-ற்று. (-ள்) வலித்தல் மெல் லொற்றை வல்லொற்றாக்கலும், மெலித்தல்- வல்லொற்றை மெல் லொற்றாக்கலும், நீட்டல்- குற்றெழுத்தை நெட்டெழுத்தாக்கலு ம், குறுக்கல்- நெட்டெழுத்தைக் குற்றெழுத்தாக்கலும், விரித்தல் - இல்லாதவெழுத்தை வருவித்தலும், தொகுத்தல்- உள்ளவெழுத் தைநீக்கலும், வரும்- வருவனவாம், செய்யுள்-செய்யுளிடத்து, வே

ண்டுழி - அடிதொடை முதலானவைகளை நோக்கி அமைக்கவேண்டுமிடத்து எ-று. (பொ-ரை) அல்வழி வேற்றுமையான் வரு மேற்கூறிய மூன்றுவிகாரமுமே யன்றி ஆறுக இங்ஙனங் கூறிய விகாரங்களும் வருவனவாஞ் செய்யுளகத்து அடி தொடை முதலிய நோக்கி யமைக்கவேண்டியவிடத்து, எ-று. ❁ இவ் வதிகாரத்துட் கூறுஞ் செய்யுண்முடிபும் பிறவுமடங்குதற்கு இன்னது நோக்கியென வரைந்துகூறாராயினார். [வரலாறு] "குறுத்தாட் பூதஞ் சுமந்த - வறங்கிளர் ராழியெம் மண்ணைலத் தொழினே." இது - குறுந்தாளெனற்பாலது - குறுத்தாளென வலித்தவாறு. "தண்டை யினக்கிளி கடிவோள் - பண்பேடைய வல்லன் மாவேறுக்கினளே." இது தட்டையெனற்பாலது - தண்டையென மெலித்தவாறு. "நீமைதபு கிழிலை கன்றித் திரிதந் தெருவை போற் - போத்தறார் புல்லறிவினார்." இது - பொத்தறு ரெனற்பாலது - போத்தறு ரென நீட்டியவாறு. "யானை - யெருத்தத் திருந்த விலங்கிலைவேற் றென்னன் - திருத்தார் நன்றென்றேன் றியேன்." இது - தீயேனெனற்பாலது - தியேனெனக் குறுக்கியவாறு. "சிறியிலை வெதிரி னெல்விளையும்மே." இது - விளையுமே யெனற்பாலது - விளையும்மே யென வொற்றில்வழி யொற்றை விரித்தவாறு இதனுட் சிறியவிலை யெனற்பாலது - சிறியிலையெனத் தொகுத்தவாறு. "தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக் - கற்றனைத் தூறு மறிவு." இதுவுந் தொட்டது கற்றதெனற்பாலது தொட்டுகற்று எனத்தொகுத்தவாறு. பிறவுமன்ன.

(௱௫௯) ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே. (௫)

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை) ஒருமொழி - ஒருசொல்லினுடைய, மூவழி - முதலிடை கடையென்கிற மூன்றிலோரிடத்து, குறைதலும் - குறைந்துவருதலும், அனைத்து - அச்செய்யுள்விகாரமாம். எ-று. (பொ-ரை) அடி தொடை முதலியநோக்கித் தொகுக்கும்வழித் தொகுத்தலன்றி வழக்கின்கண் மரூஉப்போலச் செய்யுட்கண் மரூஉவா யடிப்பாடாகவொருமொழி முதலிடைகடையென்னுமூன்றிடத்துங் குறைந்துவருதலுஞ் செய்யுள் விகாரமாம். எ-று. ❁ [வ-று.] "மரையிதழ் புரையு மஞ்செஞ் சீறடி." (எ-ம்) "வேதின வெரிநி னோதிமுது போத்து." (எ-ம்) "நீலுண் டுகிலிகை கடுப்ப." (எ-ம்) முறையே தாமரை ஓந்தி நீலம் எனற்பாலன குறைந்தவாறுகாண்க. செய்யுட்கேயுரிய விகாரங்களை யீண்டுக்கூறிய தென்னையெனிற் செய்யுளகத்து அல்வழிவேற்றுமையான்வரு மூன்றுவிகாரமும் இவ்வொன்பது விகாரமும்வருதலின் வேறுபாடறிதற்கென்க.

(ன)

ல்பாரும், ஆவி- உயிரையும், யர- யகர ரகர மெய்களையு மீறாகவு டைய அவ்விருவகைப் பெயர்களுக்கும், முன்- முன்வருகிற, வன்மை- வல்லெழுத்துகள், மிகா- மிகாவாம், உயர்திணை- உயிரீறு மெய்யீறுமாகிய உயர்திணைப்பெயர்கள் நாற்கணங்களோடும் புணருமிடத்து, சிலவிகாரமாம்- நிலைமொழிவருமொழிகள் விகாரப்படுவனவுஞ் சிலவுளவாம், எ-று. (பொ-ரை இருதிணைப் பொதுவான பெயர்களு முயர்திணைப் பெயர்க்கு மீறானமெய்கள் வல்லின முதன்மொழிவந்தாலியல்பாம் உயிரோ யகரமே ரகரமே யென்னு மிவ்வீற்றவ்விருபெயர்களின் முன்னரும் வரும் கசதபக்கள் மிகாவாம் மெய்யுயிரீற் றுயர்திணைப்பெயர்க ணாற்கணங்களொடும் புணருமிடத்து நிலைமொழி வருமொழிகள் விகாரப்படுவனவுஞ் சிலவுளவாம். எ-று. (இ-ள்) வல்லினத்துண் மயங்காதனமயங்கி னீற்றுமெய்விகாரப்படுவனவு முளவாதலிற் பொதுப்பட வலிவரினென்றும வல்லினமிகுதற் கீறாக மஃறிணைக்கன்றி யிவ்விருபெயர்களுமீறாகாமையி னதனை யொழித்து யரமுன்னென்றும் வன்கணமே யன்றி யேனைக்கணங்கள்புணரினும் விகாரப்படுமாதலின் இறந்தது தழீஇய வெச்சவும்மை கொடுத்து விகாரமுமாமென்றது விகாரமாமென்றும் அவ்விகார நிலைமொழி வருமொழி யிரண்டினு மேற்றபெற்றியாகவருதலி னுயர்திணையீறென்று துயர்திணையென்றுங் கூறினார். உயர்திணைப்பெயரைப் பின்வைத்தார் பின்பு மெடுத்து விதத்தற்கென்க. [உ-ம்] சாத்தன்-கொற்றன்- ஆண்- குறிது- சிறிது- தீது - பெரிது- குறியன்- சிறியன்- தீயன்- பெரியன்; (எ-ம்; கை- செவி- தலை- புறம்- (எ-ம்) பொதுப்பெயரீறு னகர ணகரங்கள்வன்மைவர இருவழியு மியல்பாயின. ஊரன்- அவன்- குறியன்- சிறியன்- தீயன்- பெரியன்- (எ-ம்) கை-செவி-தலை புறம் (எ-ம்) உயர்திணைப்பெயர்களீற்றுனகரம் வன்மைவர இருவழியு மியல்பாயிற்று. பிறவுமன்ன. சாத்தி-கொற்றி தாய்- குறிது சிறிது- தீது பெரிது-குறியள்-சிறியள்-தீயள்-பெரியள் (எ-ம்) கை-செவி-தலை- புறம் (எ-ம்) பொதுப்பெயரீற்று இகர யகரங்கண் முன்வந்த வல்லின மிருவழியு மிகாவாயின. நம்பி-விடலை குறியன்- சிறியன்- தீயன்-பெரியன் (எ-ம்) கை-செவி தலை-புறம்- (எ-ம்) அவர்- ஒருவர் -குறியர்-சிறியர்- தீயர்-பெரியர் (எ-ம்) கை-செவி-தலை-புறம் (எ-ம்) உயர்திணை இகர ஐகார ரகரங்கண்முன்வந்த வல்லின மிருவழியு மிகாவாயின. பிறவுமன்ன. கபிலபரணர்- வடுகநாதன்- அரசவள்ளல் (எ-ம்) ஆசீவகப்பள்ளி- குமரகோட்டம் குமரக்கோட்டம் (எ-ம்) இருவழியு முயர்திணையுட் சில தமக்கேற்ற விகாரமாயின. பிறவுமன்ன. (௬௨)

(௱௬௰) ஈற்றியா வினாவிளிப் பெயர் முன்வலி யியல்பே. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) ஈற்று (வினைமுன்) - ஆ ஏ ஓ என்
கின்ற மூன்றீற்று வினைமுன்னும், யாவினா (முன்) - யாவினாமுன்
னும், விளிப்பெயர்முன் - உயிரீறு மெய்யீறுமாகிய விளிப்பெய
ர்முன்னும், வலி - வருகிற வல்லெழுத்துகள், இயல்பு - இயல்பாகு
ம், எ-று. (பொ-ரை) மூன்றீற்று வினைமுன்னும் யாவென்னும்
வினாப்பெயர்முன்னும் உயிரீற்றொற்றீறாய விளிப்பெயர்கண் மு
ன்னும் வரும்வல்லின மியல்பாம். எ-று. ❁ [உ-ம்] நம்பியாகொ
ண்டான்-சென்றான்-தந்தான்-போயினான்- உண்காகொற்றா - சா
த்தா-தேவா-பூதா- (எ-ம்) யாகுறிய- சிறிய- தீய- பெரிய- (எ-ம்)
வினாமுன்வல்லின மியல்பாயின. நம்பி-நம்பீ- விடலை-விடலாய்-
கிள்ளை-கிள்ளாய்- சாத்தி-சாத்தீ- தாய்- தாயே- கொள்-செல்- தா-
போ- என உயர்திணைப்பெயர் அஃறிணைப்பெயர் பொதுப்பெ
யரின் ஆண்மைவிளிமுன்னும் செய்மைவிளிமுன்னும் வரும்வல்
லின மியல்பாயின. பிறவுமன்ன. இறுதி யேகார ஓகார வினைமு
ன்வரும் வல்லின மியல்பாதற்கு உதாரணங்காட்டிற்றிலம் அவ்விர
ண்டற்கும் மேற்சிறப்புவிதி இடைச்சொல்லேயா வென்னுஞ்
சூத்திரத்து ளடக்கிக்கூறுதலின். (ம)

(௱௬௧) ஆவி யரழ விறுதிமுன் னிலைவினை - யேவன்முன் வல்
லின மியல்பொடு விகற்பே. ❋

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) ஆவி- உயிரையும், யரழ- யரழ எ
ன்கின்ற மூன்றுமெய்களையும் இறுதி - இறுதியாகவுடைய, முன்
னிலைவினை - முன்னிலைவினைமுன்னும், ஏவன்முன் - ஏவல்வினைமு
ன்னும், வல்லினம்- வருகிற க ச த பக்கள், இயல்பொடு- இயல்பு
டனே, விகற்பு- விகற்பமாம், எ-று. (பொ-ரை) உயிரையும் யர
ழவென்னு மூன்றொற்றையும் இறுதியாகவுடைய விகுதியுருபின
வாய முன்னிலைவினைமுன்னும் ஏவன்முன்னும் வரும்வல்லினமிய
ல்புடனே விகற்பமாம். எ-று. ❁ [உ-ம்] உண்டி- தின்றி உண்ட
னை- தின்றனை- உண்டாய்-தின்றாய்-உண்டனிர்- தின்றனிர்- கொற்
றா-சாத்தா தேவா- பூதா- கொற்றரோ- சாத்தரோ- தேவரோ- பூதரே-
என முன்னிலைவினைமுன் னியல்பாயின. கொணா- எறி- விடு- ஆட்-
சோ- தாழ்-கொற்றா- சாத்தா-தேவா-பூதா- என ஏவன்முன் னியல்
பாயின. விகற்பம்வந்தவழிக் கண்டுகொள்க. நடகொற்றா- நடக்
கொற்றா- எய்கொற்றா- எய்க்கொற்றா ஈர்கொற்றா- ஈர்க்கொற்றா
- தாழ்கொற்றா- தாழ்க்கொற்றா - என ஏவன்முன் விகற்பித்தன
வென்று கோடலுமொன்று. இவ்வா றருகிவருதலின் இயல்பொ
டுவிகற்பேயென விகற்பத்தைப் பிரித்துக்கூறினார். ழகர வீறு
முன்னிலைவினை யேலாமையின் உதாரணங்காட்டிற்றிலம் முன்னி

லைவினையென்றார் ஏவலைவிதந்த தென்னையெனின், முன்னிலைவினையென்பது தன்மைவினை படர்க்கைவினைகட்கு இனமாகிய முன்னிலை வினையையுணர்த்துமல்லது இனமின்றி முன்னிலையொன்றற்கேயுரிய ஏவல்வினையை யுணர்த்தாமையி னென்க (௰௧)

(௱௬௨) இ ஈ ஐ வழி யவ்வுமேனை- யுயிர்வழி வவ்வு மேமுனிவ் விருமையு- முயிர்வரி னுடம்படு மெய்யென் றாகும். *

(எ-ன்) உயிரீற்றுப் பதம்புணருஞ் சிறப்புப்புணர்ச்சி கூறுவான்றொடங்கி உயிரீற்றின்முன் னுயிர்முதல்வந்து புணருமாறுணர் - ற்று. (ப-ரை) இ ஈ ஐ வழி இகர ஈகார ஐகாரங்களின்முன்னே, யவ்வும்-யகரமும், ஏனையுயிர்வழி- அ ஆ உ ஊ ஒ ஓ ஔ என்கின்ற இவ்வே ழுயிர்களின்முன்னே, வவ்வும்- வகரமும், ஏமுன்- ஏகாரத்தின்முன்னே, இவ்விருமையும்- யகரமும் வகரமும், உயிர்வரின் - உயிர்முதன்மொழிவந்தால், உடம்படு மெய்யென்றாகும்- உடம்படு மெய்யென்று வரப்பெறும், எ-று. (பொ-ரை) இகர ஈகார ஐகாரங்களின்வழியே யகரமும் அ ஆ உ ஊ ஒ ஓ ஔ என்னும் இவ்வே ழுயிர்களின்வழியே வகரமும் ஏகாரத்தின்வழியே யகரமும் வகரமும் உயிர்முதன் மொழி வந்தால் உடம்படு மெய்யென்றுவரும். எ-று. ❁ இருமையென்பது, "ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்- தான்புக் கழுந்து மளறு." என்றாற் போலக் குணியைக் குணமாகக்கூறுவதோர் மரபு வழுவமைதி. [உ-ம்] மணியழகிது- தீயெழுந்தது - அவை யௌவியம் (எ-ம்) விளவழகிது- பலாவழகிது - கடுவழகிது- பூவழகிது- நொவ்வழகா-சோவழகிது கௌவழகிது (எ-ம்) "ஏயேயிவளொருத்தி பேடியோவென்றார்." சேவழகிது- (எ-ம்) அல்வழிக்கட் கூறிய முறையே யுடம்படுமெய்பெற்றன. மணியொளி- விளவடி- மணியை யளித்தான் - என வேற்றுமைக்கண்வந்தன. பிறவுமன்ன. மாயிருஞாலம் - என உரிச்சொல் ஆகாரவீற்றின்வழி யகர வுடம்படுமெய்வந்த தென்னையெனின், அஃது "இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்." என்னுஞ் சூத்திரத்தா னமையுமென்க. வின்வத்துக் கொட்கும் என மெய்யீற்றின் வழியும் உயிர்வரி னுடம்படுமெய் பெறுமென்பாரு முளராலோவெனின், உயிரீற்றின்முன் னுயிர்முதல்வரின் உயிரோ டுயிர்க்கு மயக்கமின்மையிற் புணர்ச்சியின்றி விட்டிசைத்துநிற்குமாதலின் உடம்படாத அவ்விரண்டும் உடம்படுதற் பொருட்டிடையேவரு மெய்யை யுடம்படுமெய்யென்பவாகலின் வருமுயிரோடி யொற்றுமைப்பட்டுப் புணர்தற்குரிய மெய்யீற்றின்வழித் தோன்று மெய்யை யுடம்படுமெய்யென்பதுபொருந்தாது. அவ்வகரமெய்தோன்றுதற்கு விதி வருஞ் சூத்திரத்துட் கூறுப. உடன் புட

லென்பது உடம்படலென மரீஇயிற்று. "உடம்பா டிலாதவர் வாழ்க்கை,, எனவருதல்காண்க. உயிரோ டுயிர்க்கு மயக்க மின்மையின்வருமுயிர்க்கு உடம்பாகவ ரிக்குமெய் யுடம்படுமெய்யெனப் பொருள்கூறுதலுமொன்று. இவ்வுடம்படுமெய்களின்றேற்ற மேனைத்தோன்றல் விகாரம்போலாது மயங்காதன மயங்குதற்காகப்போல வந்தமையின் இப்புணர்ச்சியை யியல்புப் புணர்ச்சியென்றுகூறுவார்கூற்றும் அமையுமென்பார் உடம்படுமெய்தோன்றுமென்னாது உடம்படுமெய்யென் றருகுமென்றார். ஈண்டும் ஏகாரவீ றொழியக்கொள்க. (௰௨)

(௱௬௩) எகர வினாமுச் சுட்டின் முன்னர் — உயிரும் யகரமு மெய்தின் வவ்வும் — பிறவரி னவையுந் தூக்கிற் சுட்டு — நீளின் யகரமுந் தோன்றுத னெறியே. ❋

(எ-ன்) இஃ ஐவழியென்னுஞ் சூத்திரத்தானும் எண்மூ வெழுத்தீற்றென்னுஞ் சூத்திரத்தானும் எய்தியவிதிவிலக்கிப் பிறிதுவிதிவகுத்த துதலிற்று. (ப-ரை) எகரவினா (முன்னர்) - எகரவினாவிடைச்சொலின்முன்னும், முச்சுட்டின்முன்னர்- மூன்று சுட்டிடைச்சொல்லின்முன்னும், உயிரும் - உயிரும், யகரமும் - யகரமும், எய்தின் - வந்தால், வவ்வும் - வகரமும், பிற - யகரமொழிந்த மெய்கள், வரின் - வந்தால், அவையும் - அவ்வந்தமெய்களும், தூக்கில் - செய்யுளிடத்து, சுட்டு - சுட்டுகள், நீளின் - நீண்டுவருமிடத்து, யகரமும் - யகரமும், தோன்றுதல் - மிகுதல், நெறி - முறையாம். எ-று. (பொ-ரை) எ என்னும் வினாவிடைச்சொன்முன்னும் அ இ உ என்று மூன்றுசுட்டிடைச்சொன்முன்னும் உயிரும் யகரமும்வந்தால் வகரமும்ஒழிந்தமெய்கள்வந்தால் அம்மெய்களுஞ் செய்யுட்கட்சுட்டு நீண்டிசைத்தவழி யகரமு மிகுதன்முறையாம். எ-று. ❋[உ-ம்] எவ்வணி- எவ்யானை- அவ்வணி- அவ்யானை- இவ்வணி- இவ்யானை உவ்வணி- உவ்யானை- (எ-ம்) அ- இ- உ- குதிரை-சேனை- தண்டு- படை- ஞாலம்- நாடு-மனை- வளை- (எ-ம்) எங்ஙனம்- அங்ஙனம்- இங்ஙனம் - உங்ஙனம்- (எ-ம்) ஆயிடைத்தமிழ் கூறுநல் லுலகத்து - (எ-ம்) வகரமும் வந்தமெய்களும் யகரமுமுறையே தோன்றியவாறுகாண்க. பிறவுமன்ன. யகரமுமெய்தின் வவ்வுமென்றமையின் இங்ஙனந்தோன்றிய வகர யகரங்கள் உடம்படுமெய்யல்ல வென்பதூஉம் சுட்டு நீளினெனவே நீடல் உடம்பா டென்பதூஉம் நீட லொருதலையன்றென்பதூஉம் யகரந்தோன்றுமெனவே இந்நீட்சி அத்தொடைநோக்கி நீட்டும்வழிநீட்ட லன்றென்பதூஉம் யகரமுமென வெண்ணின்கணின்ற இழிவு சிறப்பும்மையான் யகரத்தோற்றம் உயிர்வரும்வழி யன்றிப் பிறவழித்தோன்று தென்பதூஉம் நெறியென்றமையின் இவ்வாறுநெறிப்பட வருவனவெல்லாங்கோ

டல்வேண்டு மென்பதூஉம் பெறும். ஆவயினனை எனச் சுட்டு நீண்டு பிறவழி யகரந்தோன்றா தாயிற்று. இவ்வாறு நெறிப்பட வருவன வருமாறு, யாங்ஙனம்- என யாவினமுன் வருமொழி ஙகரமிகுந்தது. ஆங்ஙனம்- ஈங்ஙனம் ஊங்ஙனம்- எனச் சுட்டுநீண்டவழியும் வருமொழி ஙகரமிகுந்தது. ஈது - (எ-ம்) ஆங்கு - ஈங்கு - ஊங்கு- (எ-ம்) ஆண்டு - ஈண்டு - (எ-ம்) சுட்டுப் பெயர்ச்சொல் னீண்டன. விண்வத்துக்கொட்கும் - (எ-ம்) செல்வுழிச் செல்க- (எ-ம்) சார்வுழிச் சார்ந்ததலைகையள் - (எ-ம்) மெய்யீற்றுமுன் னுயிர்வருங்கால் இங்ஙனம் உடம்படுமெய் யன்றெனக்கூறும் வகரந்தோன்றின. பிறவுமன்ன. (௬௧)

(௱௬௪) உயிர்வரி னுக்குறண் மெய்விட் டோடும்- யவ்வரி னிய்யா முற்றுமற் றொரோவழி- ❋

(எ-ன்) குற்றிய லுகரத்திற்கு இ ஈ ஐவழி யென்னுஞ் சூத்திரத்தா னெய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிவகுத்தலும் முற்றியலுகரத்திற்கச்சூத்திரத்தா னெய்தியதன்மேற் சிறப்புவிதிவகுத்தலு நுதலிற்று. (ப-ரை) உக்குறள்- குற்றியலுகரமானது, உயிர் - உயிர்முதன்மொழி, வரின்- வந்தால், மெய்விட்டு-தனக்கிடமாகிய மெய்யைவிட்டு, ஓடும்- கெடும், ய- யகரமுதன்மொழி, வரின்- வந்தால், இய்யாம்- அது இகரமாகத்திரியும், முற்றும்- முற்றியலுகரமும், அற்று-அவ்விருவிதியும் பெறும், ஒரோவழி- ஒவ்வோரிடத்து. எ-று (பொ-ரை) குற்றியலுகர முயிர்முதன்மொழிவந்தாற் றனக்காதாரமான மெய்நிற்கத் தான்கெடும் யகரமுதன்மொழிவந்தா லிகரமாகத்திரியும் முற்றியலுகரமு மவ்விருவிதியும்பெறு மொரோவிடங்களின். எ-று ❋ [உ-ம்] நாகரிது- நாகியாது- (எ-ம்) நாகின்வளர்சசி- நாகியமன்கொள்ளான்- தஞதடி- (எ-ம்) கதவு- செலவு அழகிது-யாது- (எ-ம்) அதனை- இதனை- (எ-ம்) இருவழியும்வந்தன. பிறவுமன்ன. கெடுமென்றதோடு மென்றமையாற் குற்றியலுகரமொரோவழி இ ஈ ஐவழியென்னும் பொதுவிதி பெறாதலுங் கொள்க. [வ-று.] "தன்முகமாகத் தானழைப்பதுவே." - "அற னொருமைக் கதுவுமாதுவும்." எனவரும். ஆசிரியர் தொல்காப்பியர் "அவற்றுண், மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்." (எ-ம்) "குற்றியலுகரமுமற்றெனமொழிப." எனவுங்கூறிய சூத்திரங்களுள் அற்றென்னு மாட்டேற்றிற்கு மெய்யீறுபோலக் குற்றியலுகரவீறும் புள்ளியொடு நிற்குமெனப் பொருள்கொள்ளாது இம்மூன்றுஞ் சூத்திரத்தைப் "புள்ளியீற்றுமு னுயிர் தனித்தியலாது- மெய்யொடு சிவணு மவ்வியல்கெடுத்தே." என்னுமுப்பத்தாறுஞ் சூத்திரத்தோடு மாட்டெறிந்ததாகக் குற்றியலுகரமும் புள்ளியீறும்போல வுயிரேற விடங்கொடுத்துக் கெடாதிரண்டுயிரு மொருங்கு நிற்குமெனக்கூறிச் சாதிப்

யாருமுளர். அவ்வாறுகூறன்மாட்டேற் றிலக்கணமன்றாம் அன்றியும் மெய்யுயிரொன்பன உவமவாகு பெயராய்வந்த காரணக்குறியல்லவாகவேண்டும் அதனால் அஃது அந்நூலாசிரியர் கருத்தன்றாம். இவ்வாறு அந்நூலோர் பொருந்தாவுரைகோள் பலவுள அவற்றை அந்நூற்கருத்தாகத் துணிந்து அந்நூலோர் இந்நூலை மறுதலைப்பட்டதென்று கோடற்க. (௰௪)

(௱௬௫) இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்—க ச த ப மிகும்வித வாதன மன்னே. ❋

(எ-ன்) உயிரீற்றின்முன் வல்லினம்புணருமா றுணர்த்துவான்றொடங்கி உயர்திணைப்பெயர் பொதுப்பெயர்க்கு ஆவியாமுன் வன்மைமிகாவென வெய்தியதன்மேற் சிறப்புவிதியும் அஃறிணைப்பெயர்க்கும் வினைமுதலியவற்றிற்கும் எய்தாததெய்துவித்தலு நுதலி- ற்று. (ப-ரை) இயல்பினும்- இயல்பினாலும், விதியினும் - விதியினாலும், நின்ற- இறுதியாகநின்ற, உயிர்முன் - உயிர்களின்முன், க ச த ப - வருகிற க ச த பக்கள், மிகுமன் - பெரும்பாலுமிகும், விதவாதன - சிறப்புவிதியிற் சொல்லாதவைகள். எ-று. (பொ-ரை) இயல்பினாலும் விதியினாலும் இறுதியாகநின்ற உயிர்களின்முன்னர் வரும் க ச த பக்கள் பெரும்பாலுமிகும் விதந்துசொல்லாதன. எ-று. ❀ விதியீறுவன முன்னைய உயிரீறு மெய்யீறு மொழிய உயிரீறாய்நிற்பனவும் யாதானுமோருயிர் பின்னர் இறுதிக்கட் டோன்றிநிற்பனவுமாம், விதப்பாவன சிறப்புவிதி. [உ-ம்] ஆடூஉக்குறியன்- சிறியன்-தீயன்-பெரியன்-நம்பிக்கொற்றன் - (எ-ம்) சாத்திப்பெண் (எ-ம்) தாராக்கடிது - ஒற்றைக்கை- வட்டக்கல்- தாழக்கோல் (எ-ம்) மூவகைப்பெயர்ப்பதமுன் அல்வழியின்மிக்கன. இவற்றுள் ஒற்றை- வட்ட- தாழ-என்பன விதியீறு, ஆடூஉக்கை-செவி-தலை-புறம்- எட்டிப்பூ- காவிதிப்பூ- நம்பிப்பூ- (எ-ம்) விளக்கோடு- கடுக்காய்- ஆட்டுக்கால்- (எ-ம்) உயர்திணை யஃறிணைப் பெயர்ப்பதமுன் வேற்றுமைக்கண் மிக்கன. ஆடிக்கொண்டான் - ஆடாக்கொண்டான் - ஆடூக்கொண்டான்- ஆடெனக்கொண்டான்- ஆடக்கொண்டான்- உண்பாக்குச்சென்றான்-பூத்துக்காய்த்தது- பொள்ளெனப்பரந்தது- சாலப்பகைத்தது-(எ-ம்) இருளின்றிக்கண்டார்- பொருளன்றிக்காணார் (எ-ம்) பலவகைத்தெரிநிலை குறிப்பாய வினையெச்சங்கண்முன் மிக்கன. மற்றைச்சாதி (எ-ம்) கடிக்கமலம்- (எ-ம்) சொன்றிக்குழிசி (எ-ம்) கங்கைச்சடை (எ-ம் இடைச்சொல் உரிச்சொல் திசைச்சொல் வடசொன்முன் மிக்கன. பிறவுமன்ன. விதவாதன பெ

ரும்பாலு மிகுமெனவே விதந்தன சிறுபான்மை மிகுமெனவும்
விதவாதன சிறுபான்மை மிகாவெனவுங் கூறினாராயிற்று. அவை
வருமாறு, நொக்கொற்றா- துக்கொற்றா- சாத்தா- தேவா- பூதா-
என்பன எவன்முன் வல்லின மியல்பாமிவிகற்பேயென்று முற்
கூறியவிதப்புவிதிபெறாது மிகுந்தன. எனவே நொது முன்
மூவினமு மிகுமென்றாராயிற்று. எரிகரை- குழந்தைகை- குழ
விகை- பழமுதிர்சோலை மலைகிழவோனே- (எ-ம்) கூப்புகரம்- நட்
டுதனம் நாட்டுபுகழ்- (எ-ம்) இருவழியும் பின்விதவாதன மிகாவா
யின- பிறவுமன்ன. (௰௫)

(௱௬௬) மரப்பெயர் முன்ன ரின மெல்லெழுத்து - வரப்
பெறு னவுமுள வேற்றுமை வழியே. *

(எ-ன்) உயிரீற்றுச்சிலமரப்பெயர்முன்வரும் வல்லெழுத்திற்
கெய்தியதொருவழிவிலக்கிப் பிறிதுவிதியுணர் - ற்று (ப-ரை)
மரப்பெயர்முன்னர் - உயிரீற்றுமரப்பெயர்களுக்குமுன், இன
மெல்லெழுத்து வர - முன்சொன்ன பொதுவிதியால் வருகிறவ
ல்லெழுத்து மிகாமல் அவற்றிற் கினமாகிய மெல்லெழுத்து மிக,
பெறுனவும் - பெறுவனவும், உள - சிலவுளவாம், வேற்றுமைவழி -
வேற்றுமைவழியில், எ-று. (பொ-ரை) உயிரீற்று மரப்பெயர்க
ண்முன் மேலைப்பொதுவிதியான் வல்லெழுத்துமிகாது வரும்
வல்லெழுத்திற் கினமான மெல்லெழுத்து மிகப்பெறுவனவுஞ் சி
லவுள வேற்றுமைக்கண். எ-று ❀ பெறுவனவென்னுஞ் சொற்
பெறுனவெனத் தொகுத்தல் விகாரமாயிற்று, [உ-ம்] விளங்கா
ய்-களங்கனி- மாங்கொம்பு- செதிள்- தோல்- பழம்- எனவரும். பி
றவுமன்ன. இனமெல்லெழுத்துமென்மையிற் பொதுவிதி
யிற்காட் டேலாவென்க. (௰௬)

(௱௬௭) செய்யிய வென்னும் வினையெச்சம் பல்வகைப்-பெ
யரி னெச்சமுற் றாற னுருபே - யஃறிணைப் பன்மை யம்மமு
ன் னியல்பே. *

(எ-ன்) உயிரீறுகட்குத் தனித்தனிச் சிறப்புவிதி கூறுவான்றொ
டங்கி அகரவீற்றுச்சொல்லுட் சிலவற்றிற்கெய்தியது விலக்கனுத
வி- ற்று, (ப-ரை) செய்யிய வென்னும் வினையெச்சம் - செய்யிய
வென்னும் வினையெச்சவினையும், பல்வகைப் பெயரினெச்சம்-ப
லவகைப்பட்ட பெயரெச்சவினையும், (பல்வகை) முற்று - பலவ
கைப்பட்டமுற்றுவினையும், ஆறனுருபு - ஆறும் வேற்றுமை அகர
வுருபும், அஃறிணைப்பன்மை - அஃறிணைப்பன்மைப்பெயரும், அ
ம்ம - அம்மவென்கின்ற வுரையசை யிடைச்சொல்லும், முன் - ஆ
கிய அகரவீற்றுச்சொற்க ளாறன்முன்னும், இயல்பு - வல்லெழுத்
துக வியல்பாம். எ-று. (பொ-ரை) இங்ஙனம்விதந்த அகரவீற்று

ச்சொற்க ளாறன்முன்னும் வரும்வல்லின மியல்பாம் எ-று. பல்வகையென்பதனை முற்றென்பதனொடு மொட்டுக. பெயரினெச்சம் னவின்சாரியை தவிர்வழிவந்தமையின் விரித்தல்விகாரம். இதன் முதலிறுதிகளின் அகரவீற்றுச்சொல்வைத்தமையானிடையனவும் அகரவீற்றவென்பதூஉம் பல்வகையென்றதனான்வினையடி நான்கினும்பிறந்தபெயரெச்ச முற்றென்பதூஉம் முற்றெனவிதந்தமையினஃறிணைப்பன்மையென்றதுபெயரென்பதூஉம்பெற்றாம். வினையடிநான்காவன இயல்பாகிய வினையடியொன்றும் வினைப்பெயரிடையுரியடியாகப்பிறந்தவினையடிமூன்றுமாம். [உ-ம்] உண்ணியகொண்டான்- சென்றான்- தந்தான்- போயினான் எனச்செய்யியவென்னும் வினையெச்சமுன் னியல்பாயின. உண்ட- உண்ணாநின்ற- உண்ணாத- (எ-ம்) கடைக்கணித்த- சித்திரித்த- வெளுத்த- சினவிய- கறுவிய- அமரிய- (எ-ம்) திண்ணென்ற- பொன்போன்ற- (எ-ம்) சான்ற- உற்ற- (எ-ம்) குதிரை- செந்நாய்- தகர்- பன்றி- (எ-ம்) நால்வகைத்தெரிநிலைப் பெயரெச்சமுன்னு மியல்பாயின. அமர்முகத்த- கடுங்கண்ண- சிறிய- பெரிய- உள- இல- பல- சில- (எ-ம்) பொன்னன்ன- (எ-ம்) கடிய- (எ-ம்) குதிரை- செந்நாய்- தகர்- பன்றி- (எ-ம்) மூவகைப் பெயரெச்சக்குறிப்பின்முன்னு மியல்பாயின, முற்றிற்கும் பொருள்வேறுபாடன்றிச் சொல்வேறுபா டின்மையி னிவையேகாட்டாகக் கொள்க. வாழ்க- வாழிய- கொற்றா- சாத்தா- தேவா- பூதா- என வியங்கோண்முற்றின் முன்னியல்பாயின. முற்றுமுன்னியல்பாமென்றமையின் அருத்தாபத்தியா னிவ்வினைமுற்று வினையெச்சமாயுங் குறிப்புமுற்றெச்சமாயுநின்றவழி வரும்வல்லின மியல்பாதலுங் கொள்க. [வ-று.] உண்டகண்டன- (எ-ம்) அமர்முகத்தகுதிரை- (எ-ம்) அமர்முகத்தகலங்கின- (எ-ம்) வரும். தனைகள்- செவிகள்- தாள்கள்- டதங்கள்- என ஆறனுருபின்முன் னியல்பாயின. பல குதிரை- செந்நாய்- தகர்- பன்றி- (எ-ம்) பலகொடுத்தான்- செட்டான்- தந்தான்- படைத்தான்- எ-ம் இருவழியு மஃறிணைப்பன்மைப்பெயர்முன் னியல்பாயின. பிறபெயர்களுமன்ன. அம்மகொற்றா- சாத்தா- தேவா- பூதா என வுரையசையிடைச்சொன்முன் னியல்பாயின. ஒருசொல்லையே பலவிடத்துங்காட்டிய தென்னையெனின், இங்ஙனம் காட்டியவற்றுட் பலவென்னு மொருசொல் பெயரெச்சக் குறிப்பாயுங் குறிப்புவினைமுற்றாயுங் குறிப்புமுற்றெச்சமாயும் பெயரெச்சக்குறிப்பாயும் வினையெச்சக்குறிப்பாயுங் குறிப்புவினையாலணையுமஃறிணைப்பன்மைப்பெயராயும் பொருளாதி யாறனுட் பண்புகாரணமாகவரு மஃறிணைப்பன்மைப்பெயராயு மறுவகைப்பட்டுப் பொருளேக்கமுதலியவற்றா னின்னதென்று துணியப்படா

தலா னென்க. பிறசொற்களுமன்ன. இவ்விகற்பமெல்லாஞ் சொல் லதிகாரத்துட் காண்க. (௰௭)

(௱௬௮) வாழிய வென்பத னீற்றி னுயிர்மெய் யேகலு முரித்தஃ தேகினு மியல்பே. *

(எ-ன்) வியங்கோண் முற்றுச்சொற் கெய்தாத தெய்துவித்தலு மெய்தியவழிப் புணரும் வல்லினத்திற் கெய்திய திகந்துபடாமற் காத்தலு நுதலி-ற்று. (ப-ரை) வாழியவென்பதன் - வாழிய வென்னும் வியங்கோண்முற்றினுடைய, ஈற்றின் - இறுதியிலுள்ள, உயிர்மெய் - யகர வுயிர்மெய்யானது, ஏகலும் - குறைதலும், உரித்து - உரித்தாகும், அஃது - அவ் வுயிர்மெய்யானது, ஏகினும் - குறைந்து இகரவீறாய் நின்றாலும், இயல்பே - வல்லினம் பொதுவிதியிறுமேல்மிகாமற் சிறப்புவிதியிற்கூறிய இயல்பேயாம், எ-று. (பொ-ரை) வாழியவென்னும் வியங்கோண்முற்றினது ஈற்றுயிர்மெய் குறைதலுமுரித்து குறைந் திகரவீறாய் நின்றாலும் வல்லினம் பொதுவிதியால் மிகாது சிறப்புவிதியுட்கூறிய இயல்பேயாம். எ-று. ❁ [உ-ம்] ஆவாழி - அந்தணர்வாழி - படாஅதிவாழி எனவீற்றுயிர்மெய்க் குறைந்துவந்தது. வாழிகொற்றா - சாத்தா - தேவா - பூதா - எனக் குறைந்தவழியும் வல்லினமியல்பாயின. ஏகலு முரித்தென முடித்துப் பின்பஃதெனச்சுட்டிப் புணர்ச்சிவிதிகூறுதலானுஞ் செய்யுளீற்றுக்கண் வாழியெனமுடிந்துநிற்றலானு மிதுபுணர்ச்சிவிகாரமன்று கடைக்குறையென்பதூஉம் இவ்வடிப்பாடாகக்குறைந்து இயலுந் தன்மை செய்யியவென்னும்வாய்பாட்டு வாழிய வென்னும் வினையெச்சத்திற் கின்மையின் வாழியவென்னும் வியங்கோண்முற்றிற்கே இவ்விகாரங்கூறினா ரென்பதூஉம் பெற்றாம். (௰௮)

(௱௬௯) சாவவென் மொழியீற் றுயிர்மெய்சா தலும்விதி. *

(எ-ன்) சாவ வென்னு நிலைமொழிக் கெய்தாத தெய்துவித்த னுதலி-ற்று. (ப-ரை) சாவவென்மொழி - சாவவென்னுஞ் செயவெனெச்ச வினைச்சொல்லினுடைய, ஈற்று - இறுதியி லிருக்கின்ற, உயிர்மெய் - வகரவுயிர்மெய்யானது, சாதலும் - கெட்டுப் புணர்தலும், விதி - விதியாகும், எ-று. (பொ-ரை) சாவவென்னுஞ் செயவெனெச்ச வினைச்சொல்லினது ஈற்றுயிர்மெய் கெட்டுப் புணர்தலும் விதியாம். எ-று. ❁ [உ-ம்] சாக்குத்தினான் - எனவரும். இப்புணர்ச்சி சாவக்குத்தினான் என்னும்புணர்ச்சிபோற் சிறந்ததன்மையிற் சாதலுமென்றும் ஒரோவழி யருகிவருதலின் விதியென்றுங் கூறினார். (௰௯)

(௱௭௰) பல்சில வெனுமிவை தம்முன் றாம்வரி னியல்பு மிகலு மகரமேக லகரம் றகர மாகலும் பிறவரி னகரம் விகற்ப மாகலு முளபிற. *

(எ-ன்) வருமொழிக் கெய்திய திகந்துபடாமைக் காத்தலும் அதன்மேற் சிறப்புவிதியும் நிலைமொழிக் கெய்தாத தெய்துவித்தலு முணர்த்துதனுதலிற்று. மிகுதல் செய்யியவென்னுஞ் சூத்திரத்தான் விலக்கி ஈண்டு விதித்தலையிற் சிறப்புவிதியாயிற்று. (ப-ரை) பலசிலவெனுமிவை-பலசிலவென்கின்ற இவ்விருசொல்லும், தம்முன் - தமக்குமுன்னே, தாம்வரின்- தாம்வருமாயின், இயல்பும்- இயல்பாதலும், மிகலும் மிகுதலும், அகரம்-அகரமானது, ஏக கெட, லகரம்- லகரமானது, றகரமாகலும்-றகரமாகத்திரிதலும், பிற - இவற்றின்முன் பிறமொழிகளுள் யாதாயினுமொன்று, வரின்- வந்தால், அகரம்- அகரமானது, விகற்பமாகலும் - நிற்றலுநீங்கலும், உள - உளவாம், எ-று. (பொ-ரை. பலசிலவென்னும் இவ்விருசொல்லுந் தம்முன்னர்த் தாம்வருமாயின் இயல்பாதலு மிகுதலும் அகரங்கெட லகரம் றகரமாகலும் இவற்றின்முன் பிறமொழிகளுள் யாதானுமொன்றுவரின் அகரம் நிற்றலுநீங்கலுமுளவாம். எ-று ❀ [உ-ம்] பலபல-சிலசில-என இயல்பாயின. பலப்பல - சிலச்சில - என மிக்கன. இம்மிகுதி இயல்புபோற் பயின்றுவாராமையின் வல்லினம்விகற்பமாகலு மென்றது - இயல்புமிகலு மென்றார். பற்பல - சிற்சில - என அகரமேக லகரம் றகரமாயின. பலகலை - பல்கலை - பலசாலை- பல்சாலை- பலதாழிசை- பஃறாழிசை- பலபடை- பல்படை- பலஞானம்- பன்ஞானம்- பலநாள்- பன்னாள்- பலமணி - பன்மணி - பலவளை - பல்வளை- பலயானை- பல்யானை- பலவணி - பல்லணி - பலவாயம் - பல்லாயம்- எனப்பிறவரின் அகரம் விகற்பமாயின. சிலவென்பதற்கு மிவ்வாறேகொள்க. பிறவென்றமிகையானே, பல்பல-சில்சில- என அகரமேக லகரம் றகரமாகாது அருகிவருதலும் பிறவல்லினமொழிவரின் லகரம் றகரத்தோடு உறழும்வழி உறழாது இயல்பாதலும் அகரவீற்றுப்புணர்ச்சியுள் அமையாதொழிந்தன வுளவேல் அவையுங்கொள்க. அகரநீங்கநின்ற பல்லாயமுதலியன நன்மை வன்மை மென்மை அன்மை இன்மை என்பனபோல லகரமெய்யீற்றுப் பண்படியாய்நின்று வருமொழியோடு புணர்ந்தன வன்றே அவற்றை அகர வீற்றின வாகவைத்துப் புணர்த்ததென்னையெனின், அப்பண்படி பன்மை சின்மை எனப்பகுதிப்பொருள் விகுதியோடேனும் பலர் பல சிலர் சில எனவிகுதிப்பொருள் விகுதியோடேனும் அன்றித் தனித்துநில்லாவொற்றுமைநோக்கம்பற்றியென்க. இஃதொன்றின முடித்த றன்னின முடித்தலென்னு முத்திக்கினம். அகரம்விகற்பமா மென்றதனானே பல் சில் எனப்பண்படி தோன்றினமையின் இவ்விதி

அல்வழிக்கேயென்பது கூறுதே யமையுமென்க. (௨௰)

(௱௭௧) அல்வழி யாமா மியாமுற்று முன்மிகா. *

(எ-ன்) ஆகாரவீற்றுச் சொல்லுட் சிலவற்றிற்கெய்திய தொருமருங்கு விலக்குத னுதலிற்று. (ப-ரை) அல்வழி - அல்வழியில், ஆமா- ஆவுமாவுமாகிய இருபெயரும், மியா- மியாவென்னும் முன்னிலை யசை இடைச்சொல்லும், முற்று-ஆகாரவீற் றஃறிணைப்பன்மை யெதிர்மறை முற்றுவினையுமாகிய, முன்- இவற்றின்முன், மிகா- வருகிறவல்லினம் இயல்பாகும், எ-று. (பொ-ரை) அல்வழிக்கண் ஆவுமாவுமாகிய இருபெயரும் மியாவென்னு முன்னிலையசை இடைச்சொல்லும் ஆகாரவீற் றஃறிணைப்பன்மை யெதிர்மறை முற்றுவினையுமிற்க இவற்றின்முன் வரும்வல்லின மிகா. எ-று. ❁ [உ-ம்] ஆகுறிது - மாகுறிது - சிறிது - தீது பெரிது - (எ-ம்) கேண்மியாகொற்று - சாத்தா - தேவா - பூதா - (எ-ம்) உண்ணு குதிரைகள் - தின்னுகுதிரைகள் - செந்நாய்கள் - தகர்கள் - பன்றிகள் (எ-ம்) வரும் ஆமாவென்ற துணையானே காட்டா வெனவும் பொருட இரட்டுற மொழிந்தமையான் ஆமாகுறிது - சிறிது - தீது - பெரிது - என மிகாமையும் முற்றுமுன்மிகா வென்றமையான் அருத்தாபத்தியான் அவ்வினையாலணையும் பெயர்முன் உண்ணு குதிரைகள் - தின்னுகுதிரைகள் - செந்நாய்கள் - தகர்கள் - பன்றிகள் என மிகாமையும் அவ்வினைமுற்று வினையெச்சமா யவற்றின்முன் உண்ணுகிடந்தன - தின்னுகிடந்தன - சென்றன - தந்தன - போயின - என மிகாமையுங்கொள்க. உண்ணுக்குதிரைகள் - உண்ணுக்கிடந்தன - எனப் பொதுவிதியான் மிகும்மேல் எதிர்மறைப்பெயரெச்சமுஞ் செய்யாவென்னும் வாய்பாட்டுவினை யெச்சமுமாமென்க. ()

(௱௭௨) குறியதன் கீழாக் குறுகலு மதனே - டுகரமேற்றலு மியல்புமாந் தூக்கின். *

(எ-ன்) ஆகாரவீற்றுட் சிலசொல்லினது இறுதிக்கெய்தாதன வெய்துவித்தலும் அவ்வழிவருவதோர் ஐயமறுத்தலு நுதலிற்று. (ப ரை) குறியதன்கீழா- குற்றெழுத்தின் கீழ்நின்ற ஆகாரம், குறுகலும்- அகரமாதலும், அதனோடு- அவ்வகரமாதலுடனே, உகரமேற்றலும்- உகரம்பெறுதலும், இயல்பும்- அவ்விரண்டு மில்லாம லியல்பாதலும் ஆகியமூன்றுவிதியும், ஆம் - ஆகும், தூக்கின்- பாட்டினிடத்து, எ-று. (பொ-ரை) குற்றெழுத்தின் கீழ்நின்ற ஆகாரங்குறுகலும் அக்குறுகலுடனே உகரம்பெறுதலும் அவ்விரண்டுமின்றித் தன்னியல்பி னிற்றலுமாகிய மூன்றுவிதியும் பெறுஞ் செய்யுட்கண். எ-று. ❁ [உ-ம்] சுறமறிவனதுறையெல்லாம்- நிலவிரிகானல்வாய்- (எ-ம்) இறவுப்புறத்தன்ன-சுறவுக்கோட்டன்ன - மருவிலென் செய்யுமோ நிலவு (எ-ம்) நிலாவணங்கு வெண்மணை

ன்மேனின்று - நெடியகழியுமிரா (எ-ம்) முறையேகாண்க. ஈண்டியல்பு ஐயமறுத்தற் குரைத்தாரென்க. இம்மூன்றுமாந்தாக்கினனவே வழக்கில் இரண்டுமொன்றுமாமென்றுணராயிற்று. [வ-று.] உதித்ததுநிலவு- நிலா - கண்டேன்கனவு - கனா - எனக் குறுகுதலோடு உகரமேற்றலுந் தன்னியல்புமாகிய இரண்டும்வந்தன. நிரா - மிடா - எனத் தன்னியல் பொன்றுமாய்நின்றன. இவ்விகாரங்கள் அல்வழிவேற்றுமைப் புணர்ச்சியான் வந்தனவல்லவென்று ஐயமறுத்தற்குக் கூறப்பட்டனவென்க. இவ்வாறு வருவனவெல்லா மன்ன. (௨௨)

(௱௭௩) அன்றி யின்றியென் வினையெஞ் சிகரந் - தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே. *

(எ-ன்) இகரவீற்றுச்சொற்களுள் அன்றி இன்றியென்னும் வினையெச்சக்குறிப்பிற் கெய்தாததெய்துவித்தலு மெய்திய வழிப்புணரும்வல்லினத்திற் கெய்தியதுவிலக்கலு நுதலிற்று. (ப-ரை) அன்றி யின்றியென் - அன்றி இன்றி என்கின்ற, வினையெஞ்சிகரம் - வினையெச்சக்குறிப்புச் சொற்களி னீற்றிலிருக்கின்ற இகரம், தொடர்பினுள் - செய்யுளில், உகரமாய்வரின், உகரமாய்த்திரிந்துவரின், இயல்பு - வருகிற கசதபக்கள் இயல்பாகும். எ-று. (பொ-ரை) அன்றியின்றியென்னும் வினையெச்சக் குறிப்புச்சொல்லினீற்றிகரஞ் செய்யுட்கண் உகரமாய்வருமாயிற் கசதபக்கள் பொதுவிதியான் மிகாதியல்பாம். எ-று. ❀ என்னென்னும் வினைத்தொகையு மெஞ்சென்னும்வினைத்தொகையுஞ் சொல்லென்னு முதற்பெயரோடுமுடியாது அதனகத் திகரமென்னுஞ் சினைப்பெயரோடுமுடிந்தன. இவ்வாறுடம்படுபுணர்த்திக் கூறினமையின் இதற்கிதுவே விதியென்பதூஉம் உகரமாய் வரினெனவே உகரமாதலுடன்பாடென்பதூஉம் அஃதொருதலையன்றென்பதூஉம் பெற்றாம். [உ-ம்] "நாளன்று போகிப் புள்ளிடைதட்பப் - பதனன்று புக்குத் திறனன்று மொழிபினும் - வறிதுபெயர்குநரல்லர் - நெறிகொளப் பாடான்றிரங்குமருவிப் - பீடுகெழுமலையற் பாடியோரே," (எ-ம்), "உப்பின்று புற்கையுண்கமாகொற்கையோனே," (எ-ம்) வரும். பிறவுமன்ன.

(௱௭௪) உரிவரி னாழியி னீற்றுயிர் மெய்கெட - மருவும் டகர முரியின் வழியே - யகரவுயிர் மெய்யா மேற்பன வரினே. *

(எ-ன்.) எய்தியது விலக்கிப் பிறிதுவிதிவகுத்த னுதலிற்று. (ப-ரை) உரிவரின் - உரியென்னுமளவுப்பெயர்வருமொழியாய் வந்தால், நாழியினீற்று - நாழியென்னுமளவுப் பெயரினது, ஈற்றுயிர்மெய் - ஈற்றிலுள்ள ழிகரமானது, கெட - நீங்க, டகரம் - டகரமெய்யானது, மருவும் - வரும், உரியின்வழி - உரியென்னு மளவுப்பெயரின் பின், யகரவுயிர்மெய்யாம் - யகரவுயிர்மெய்வரும், ஏற்பன - அவ்வுயிர் மெய்

வருதற்கு ஏற்றமொழிகள், வரின் - வந்தால். எ-று. (பொ-ரை) உரியென்னுமளவுப்பெயர்வரி னாழியென்னுமளவுப்பெயரினீற்றுயிர்மெய்கெட அவ்வழி டகரவொற்றுவரும், உரியென்னுமளவுப்பெயரின்பின் யகரவுயிர்மெய்வரும் அவ்வுயிர்மெய் வருதற் கேற்ற வருமொழிகள் வருமாயின். எ-று. ❁ [உம்] நாடுரி (எ-ம்) உரியவுட்பு - உரியபயறு - உரியமிளகு - உரியவரகு - (எ-ம்) வரும். ஏற்பனவரினெனவே யேலாதனவரின் உரியரிசி - உரியாழாக்கு - உரியெண்ணெய் என இச்சிறப்புவிதி பெறாது பொதுவிதியே பெறுதல்கொள்க. நாடுரியென்பது நாவுரியென இக்காலத்துமரீஇயிற்று. பொதுவிதியான் வருமுடம்படுமெய்யை இச்சிறப்புவிதி விலக்கிலாமையின் நாழியுரியென்ப திலக்கணமன்றென்க. (௨௪)

(௱௭௫) சுவைப்புளி முன்னின மென்மையுந் தோன்றும். *

(எ-ன்.) எய்திய தன்மேற் சிறப்பு விதியுணர்-ற்று. (ப-ரை) சுவை - அறுசுவையு ளொன்றை யுணர்த்துகின்ற, புளிமுன் - புளியென்னும்பெயர்முன், இனமென்மையும் - வருகிறவல்லெழுத்துகள் மிகுதலல்லாமல் அவற்றிற்கு இனமாகிய மெல்லெழுத்துக்களும், தோன்றும் - ஒரோவிடத்து மிகும். எ-று. (பொ-ரை) புளியென்னு மரமும்பழமுமன்றி யறுசுவையுளொன்றையுணர்த்தும்பெயர்முன் வரும்வல்லின மிகுதலேயன்றி யவற்றிற்கினமாய மெல்லினமு மொரோவழிமிகும். எ-று. ❁ [உம்] புளிங்கறி - சோறு - தயிர் - பாளிதம் - எனவரும். பலசுவையு முடைத்தேனும் மிகுதிபற்றிப்புளிப்பாகிய கறியெனவும் புளிப்பையுடைய கறியெனவும் விரித்தலின் இருவழிக்கு மிதுவேயாமென்க. மென்மையுமென்றவிறந்தது தழீஇயவும்மை சிறப்புமைமையாற் புளிக்கறியெனப் பொதுவிதியான்வரும் வல்லெழுத்துப்பேறே சிறப்புடைத்தென்க. ()

(௱௭௬) அல்வழி இ ஐ முன்ன ராயி - னியல்பு மிகலும் விகற்பமு மாகும். *

(எ-ன்) இகர ஐகாரவீற் றஃறிணைப்பெயர்முன்வரும் வல்லினத்திற் கல்வழியெய்தியது விலக்கலுமெய்திய திகந்துபடாமற் காத்தலு மெய்தியதுவிலக்கலுடன் விலக்காமையுமுணர்-ற்று, (ப-ரை) இஐமுன்னர் - இகரஐகாரவீற் றஃறிணைப்பெயர்முன், அல்வழி - அல்வழியினிடத்து, ஆயின் - வல்லினம்வருமாயின், இயல்பும் - இயல்பாதலும், மிகலும் - பொதுவிதியான் மிகுதலும், விகற்பமும் - ஒன்றற்கே யொருகான் மிகாமையும் ஒருகான் மிகுதலும், ஆகும் ஆகும் எ-று (பொ-ரை) இகர ஐகாரவீற் றஃறிணைப்பெயர்முன் வல்லினம் அல்வழிக்கண் வருமாயின் இயல்பாயும் பொதுவிதியான் மிகுந்து மொன்றற்கே யொருகான் மிகாது மொருகான் மிகுந்தும் புணரும். எ-று. ❁ இவ்வீற்றுயர்திணைப்பெயர் பொதுப்பெயர்

விளைகட்குப்பொதுச்சூத்திரங்களான் இம்மூன்றுவிதியும் அடைந்துகிடந்தமையின் இச்சூத்திரத்தாற்கூறுதன் மிகுதியொன்றுமே யமைந்துகிடந்த அஃறிணைப்பெயர்க்கென்பது பெற்றாம். ஒப்பின்முடித்தலான் ஐகாரவீற்று முடன்கூறினார். [உ-ம்] பருத்தி-ஒந்தி-யானை-குதிரை-குறிது-சிறிது தீது-பெரிது-என இயல்பாயின. கிளிகுறிது-கிளிக்குறிது- திணைகுறிது- திணைக்குறிது எனவிகற்பித்தன. பிறவுமன்ன. மிகுதியெய்திய திகந்துபடாமைக் கூறினமையிற் காட்டிற்றிலம். (உ௫)

(௱௭௭) ஆமுன் பகரவீ யனைத்தும் வரக்குறுகு- மேலனவல் வழி யியல்பா கும்மே. ※

(எ-ன்) தொடர்மொழியுட் பின்னின்றஇடக்கர்ச் சொல்லினீற்றீகாரத்திற் கெட்டாத தெய்துவித்தலும் எய்தியவழி அதன்முன்வரும் வல்லினத்திற்கு மேலைச்சூத்திரத்தானெய்திய திகந்துபடாமைக் காத்தலு நுதலிற்று. (ப-ரை) ஆமுன்பகரவீ- ஆமுன்னின்ற பகரவீகாரம், அனைத்தும்- நாற்கணமும், வர- வந்தால், குறுகும்- குறுகும், அல்வழி- அல்வழியில், மேலன- மேலைச்சூத்திரத்துட்கூறியவிதிமூன்றனுள், இயல்பாகும்- வருகிறவல்லினம் இயல்பைப்பெறும், எ-று. (பொ-ரை) ஆவென்னும்பெயர் முன்னின்ற பகரவீகாரம் இருவழியும் நாற்கணங்களும் வரிற் குறுகும் குறுகி விதியிகரவீறாகநின்ற அதன்மேல்வரும் வல்லினம் அல்வழிக்கண் மேலைச்சூத்திரத்துட்கூறிய விதிமூன்றனுள் இயல்பைப்பெறும். எ-று. ※ குறுகுதற்குக்காரணம் அனைத்தும்வருதலேயன்றி மேனின்ற ஆவுமாமென்பார் ஆமுன்னென்றார். பகரவீயென்ற திடக்கரடக்கல். வருஞ்சூத்திரத்துட் பவ்வீயுமது. ஆவென்னுஞ்சொல்லும் நாற்கணத்தொன்று முன்னும்பின்னுந் தொடராதேற் குறுகாதென்பார் வரக் குறுகுமென்றார். இருமொழியை நிலைமொழியாக நிறீஇப்புணர்த்தலையான்வரும்விதி இகரவீறாதலி னெய்திய திகந்துபடாமை யியல்பாகுமென்றார். ஆகும்மே யென்றது விரித்தல் விகாரம். [உ-ம்.] ஆப்பியரிது- ஆப்பிகுளிரும்- ஆப்பிநன்று - ஆப்பிவலிது - (எ-ம்) ஆப்பியருமை- ஆப்பிக்குளிர்ச்சி - ஆப்பிநன்மை- ஆப்பிவன்மை - (எ-ம்) இருவழியும் ஈகாரங்குறுகுதலும் அல்வழிக்கண் வல்லின வியல்பிகந்துபடாமையுங் காண்க. (உ௭)

(௱௭௮) பவ்வீ நீமீ முன்ன ரல்வழி- யியல்பாம் வலிமெலி மிகலுமா மீக்கே. ※

(எ-ன்) ஈகாரவீற் றிடக்கர்ப்பெயர்க்கும் நீ என்னும்பெயர்க்கும் மீ என்னும்பெயர்க்கும் முன்னர்வரும் வல்லினத்திற் கொ

ருவழி இயல்பினும்விதியினுமென்னுஞ் சூத்திரத்தா னெய்தியது விலக்கலும் இவற்றுண் மீயென்பதன்முன்வரும் வல்லினத்திற்கு அச்சூத்திரத்தா னெய்திய திகந்துபடாமைக்காத்தலும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதியு முணர்-ற்று. (ப-ரை) பவ்வீ- பகரமெய்யின்மேலேறிநின்ற ஈகாரவீற் றிடக்கர்ப்பெயரும், நீ- நீ என்கிற முன்னிலைப்பெயரும், மீ- மீ என்கிற மேலாகிய பண்டையும்மேலிடத்தையும் உணர்த்தும்பெயருமாகிய, முன்னர்- இம்மூன்றன் முன்னும், அல்வழி- அல்வழியில், இயல்பாம்- வருகிறவல்லின மியல்பாகும், மீக்கு - இவற்றுள்ளே மீயென்னுஞ் சொல்லுக்கு, வலி- வல்லெழுத்து, (மிகலுமாம்)- மிகுதலுமாகும், மெலி- மெல்லெழுத்து, மிகலுமாம்- மிகுதலுமாகும், எ-று. (பொ-ரை) பகரவொற்றை யூர்ந்துநின்ற ஈகாரவீற் றிடக்கர்ப்பெயரும் நீயென்னு முன்னிலையொருமைப் பொதுப்பெயரும் மீயென்னு மேலாயபண்டையும் அப்பண்பாகுபெயராய் மேலா யவிடமுதலியவற்றையும் உணர்த்திநிற்கும் பலபொரு ளொருசொல்லுநிற்க இவற்றின்முன்வரும் வல்லினம் அல்வழிக்க ணியல்பாம் இங்ஙனம்புணரும் மீயென்னுஞ்சொற்குமுன் அல்வழிக்கண் வல்லெழுத்து மிகலுமாம் மெல்லெழுத்துமிகலுமாம், எ-று. ❀ [உ-ம்] பீகுறிது- சிறிது-தீது- பெரிது- (எ-ம்) நீகுறியை- சிறியை- தீயை- பெரியை- (எ-ம்) மீகண்- (எ-ம்) இயல்பாயின. மீக்கூற்று- மீக்கோள்- என எய்திய திகந்துபடாமை மிக்கது. மீந்தோல்- என மெலி மிகுந்தது. பிறவும் எற்றபெற்றிவருவன வுளவேற்கொள்க. மீகண் என்பது கண்ணினது மேலிடமெனப் பொருடந்துநிற்குமேனும் ஆறனுருபின் பயனிலையாம் மீயென்னும் வருமொழி நிலைமொழியாய்நின்று வல்லெழுத்துமிகாது புணர்ந்தமையின் இலக்கணப் போலியாய் அல்வழியாயிற்று. மீக்கூற்றென்பது புகழ். அதுமேலாய சொல்லாற்பிறந்த புகழென்னு மேம்பாடெனப் பொருடந்துநிற்றலிற் பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. மீக்கோளென்பது-மேற்போர்வை. அது யாக்கையின்மேற் கொள்ளுதலையுடைய போர்வையெனப் பொருடந்துநிற்றலின் ஏழாம்வேற்றுமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை ஈண்டுமீயென்றது இடப்பொருளோடு ஏழாம்வேற்றுமையுருபின் பொருள்பட நின்றதேனுங் கண்ணுதியுருபு வேண்டாமையின் வேற்றுமைத் தொகையாயிற்று. மீந்தோலென்பது- மேற்றோல். அது மேலாயதோலெனப்பொருடந்துநிற்றலிற் பண்புத்தொகை. இஃதிக்காலத்துப் பீந்தோலென மரீஇயிற்று. நீயென்பதன்முன் வல்லின மியல்பாதல் பொதுப்பெயருயர்திணைப்பெயர்க ளீற்றுமெய் யென்னுஞ்

சூத்திரத்தான் அமையாதோவெனின், விகாரமொழியன்றி அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் ஆவியரக்களி னேரீற்றதாய்நின்றுபுணரும் பொதுப்பெயர்களே வன்மைமிகாவென விருவழிக்குங்கூறிபது அமையுமன்றி அல்வழிக்கண் நீயென வுயிரீறாயும் வேற்றுமைக்கண் நின் என நெடில்குறுகி னகரவொற்றீறாயும் விகாரப்பட்டுநிற்கும் இப்பொதுப்பெயர்க்கு அவ்விதியமையாதென்க. (௨௮)

(௱௭௯) மூன்றா றுருபெண் வினைத்தொகை சுட்டீ - றாகு முகர முன்ன ரியல்பாம். *

(எ-ன், முற்றுகரவீற்றுட் சிலவற்றின்முன் வரும்வல்லினத்திற்கு இயல்பினும் விதியினுமென்னுஞ் சூத்திரத்தானெய்தியது விலக்க னுதலிற்று. (ப-ரை) மூன் (றுருபு) - மூன்றாம் வேற்றுமையுருபிற்கும், ஆறுருபு- ஆறாம்வேற்றுமை யுருபிற்கும், எண் - இயல்பாயும் விகாரமாயும்வருகிற எண்ணிற்கும், வினைத்தொகை -வினைத்தொகைக்கும், சுட்டு- சுட்டுப்பெயருக்கும், ஈறாகும்- ஈறாகிய, உகரமுன்னர்- முற்றியவுகரத்தின்முன்னே, இயல்பாம்- வருகிறவல்லினம் இயல்பாகும், எ-று (பொ-ரை) முற்றுகரவீற்று மூன்றனுருபே யாறனுருபே இயல்பாயும் விகாரமாயும் வருமெண்ணே வினைத்தொகையே சுட்டுப்பெயரோ வென்னும் இவற்றின்முன் வரும்வல்லின மியல்பாம் எ-று ❁ மூன்றாறுருபு என்புழி யாமென்னுஞ்சாரியைதொக்கன. [உ-ம்] சாத்தனொடுகொண்டான்-சென்றான்-தந்தான்-போயினான் (எ-ம்) சாத்தனதுகை-செவி-தலை-புறம்- (எ-ம்) எழு-ஒரு இரு-அறு-கை-செவி-தலை-புறம் (எ-ம்) அடுகளிறு-சேனை-தானை-படை (எ-ம்) அது-இது-உது-குறிது சிறிது-தீது-பெரிது (எ-ம்) கண்டான்- செகுத்தான்- தந்தான்-படைத்தான் (எ-ம்) வரும். உதுகாண்- உதுக்காண்- என இயல்பாயும் விகாரமாயும் வரப்பெறுமாலோவெனின், அஃதியல்பின்விகாரமு மென்னுஞ்சூத்திரத்தன்னபிறவுமென்பதனு னமையுமென்க. (௨௯)

(௱௮௰) அதுமுன் வருமன் றான்றாந் தூக்கின். *

(எ-ன்) அதுவென்னுஞ் சுட்டுப்பெயர்முன் வருமன்றென்னுஞ்சொற் கெட்டாத தெய்துவித்த னுதலிற்று. (ப-ரை) அதுமுன்- அதுவென்னுஞ் சுட்டுப்பெயர்முன், வரும்-வருகிற, அன்று- அன்றென்னும் வினைக்குறிப்புமுற்றானது, தூக்கின் - பாட்டினிடத்து, ஆன்றாம் முதனீளும், எ-று (பொ-ரை) அதுவென்னுஞ் சுட்டுப்பெயர்முன்வரும் அன்றென்னும் வினைக்குறிப்புச்சொன் முதனீளுஞ் செய்யுளகத்து. எ-று. ❁ [உ-ம்] அதான்று - என வரும். ஆன்றேயாமென இயல்பைவிலக்காமையின், அதுவன்

று- அதன்று- என வருவனவுங்கொள்க. அதுமுன்வருமன் றான்றுமென விதந்தமையான் ஏனை இது உது- முன் வருமன் றான்றாகாதென்பது பெற்றாம். (௫௰)

(௱அக) வன்றொட ரல்லன முன்மிகா வல்வழி. *

(எ-ன்) குற்றுகரவீற்றுட் சிலவற்றிற்கு இயல்பினும்விதியினு மென்னுஞ்சூத்திரத்தா னெய்தியதொருவழி விலக்குதனுதலிற்று (ப-ரை) வன்றொடரல்லனமுன்- வன்றொடரொழிந்த ஐந்துகுற்றிய லுகரவீற்றின்முன்னும், அல்வழி- அல்வழியில், மிகா- வருகிறவல்லினம் இயல்பாகும், எ-று- (பொ-ரை) வன்றொடரொழிந்த ஐந்தன்பகுதிக் குற்றுகரவீற்றின்முன்னும்வரும்வல்லின மிகா வல்வழிக்கண். எ-று. ❁ [உ-ம்] நாகு-எஃகு- வரகு- குரங்கு-தெள்கு-கடிது-சிறிது-தீது- பெரிது (எ-ம்) ஏகுகால் - அஃகுபிணி - பொருதுசென்றான்- அறிந்துதந்தான்- எய்துகொன்றான் - (எ-ம்) வரும். பிறவுமன்ன. (௫௧)

(௱அஉ) இடைத்தொட ராய்தத் தொடரொற் றிடையின்- மிகாநெடி லுயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) இடைத்தொடர் (முன்)- இடைத்தொடர்முன்னும், ஆய்தத்தொடர் (முன்) - ஆய்தத்தொடர்முன்னும், ஒற்றிடையின்மிகாநெடிற் (றொடர்முன்)- ஒற்றிடையே மிகாத நெடிற்றொடர்முன்னும், உயிர்த்தொடர்முன் -- உயிர்த்தொடர்முன்னும், வேற்றுமை- வேற்றுமையில், மிகா- வருகிறவல்லினம் இயல்பாம், எ-று. (பொ-ரை) இடைத்தொடர்முன்னும் ஆய்தத்தொடர் முன்னும் ஒற்றிடையே மிகாத நெடிற்றொடர் முன்னும் உயிர்த்தொடர்முன்னும் வரும்வல்லின மிகா வேற்றுமைக்கண். எ-று. ❁ [உ-ம்] தெள்கின்கடுமை எஃகின்கடுமை -நாகின்கடுமை- வரகின்கடுமை- சிறுமை- தீமை- பெருமை- என வரும். சாரியைப்பேறு இதற்கிதுசாரியையென்னுஞ் சூத்திரத் தானமைந்தன. சாரியைமிகுதலின் வல்லெழுத்து மிகாவென ஏதுவலாந்துகூறாது மிகாவென வாளாகூறினமையின்- வரகுகதிர் - எனச் சாரியை மிகாவழி வல்லினமிகாது வருவனவுளவேனுங் கொள்க. (௫௨)

(௱அ௩) நெடிலோ டுயிர்த்தொடர் குற்றுக ரங்களுட் - டற வொற் றிரட்டும் வேற்றுமை மிகவே. *

(எ-ன்) மேலைநிலைமொழிக்கோர் புறனடையாயெய்தாததெய்துவித்தலும் வருமொழிக்குமுத லுயிரேல் இந்நிலைமொழிக்கு உயிர்வரினுக்குறளென்னுஞ் சூத்திரத்தானெய்தியதன்மேற் சிறப்புவிதியுமுணர்- ற்று. (ப-ரை) நெடிற் (றொடர்) - நெடிற்றொடர்களும், உயிர்த்தொடர்- உயிர்த்தொடர்களுமாகிய, குற்றுகரங்க

ட்டணனும் ஏற்றபெற்றிகொள்க. வண்டிக்கால் - பந்தத்திரட்டு - முதலியவெல்லாம் வன்றொடராகாதனவென்க. சிலவன்றொடராமெனவே ஆகாதன பலவென்பதுதாமே போதரவும் மன்னேயென்ற மிகைபானே, எற்புடம்பு - அற்புத்தளை - குரக்குமனம் என அல்வழிக்கணருகி வன்றொடராதலுங் கொள்க. (௬௪)

(௱௮௫) ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே. *

(எ-ன்) இதுவுமேலே நிலைமொழிக்கு மூவினமும்வரி னெய்தாத தெய்துவித்தலும் உயிர்வரி னெய்தியதன்மேற் சிறப்புவிதியு முணர்-ற்று. (இ-ள்) ஐ - ஐகாரச்சாரியையை, ஈற்றுடை - இறுதியிலேபெற்றுவருகிற, குற்றுகரமும் - மென்றொடர்க் குற்றியலுகரமொழிகளும், உள சில உண்டு, எ-று. (பொ-ரை) ஐகாரச்சாரியையை இறுதியிலே பெற்றுவரு மென்றொடர் குற்றுகரமொழிகளுஞ் சிலவுள. எ-று. ※ மேலைச் சூத்திரத்தைச் சாரவைத்தமையான் இதுவுமென்றொடரென்பதுபெற்றாம். வருமொழி வரையாமையின் நாற்கணமுங்கொள்க. [உ-ம்] பண்டைக்காலம் - இற்றைநாள் (எ-ம்) அற்றைக்கூலி - இற்றைநலம் (எ-ம்) வரும். பிறவுமன்ன. மேலைச்சூத்திரத்தைச் சாரவைத்தாரேனும் ஐயீற்றுடைக்குற்றுகரமெனப் பொதுப்படக் கூறினமையின் மேற்றைப்பொழுதெனப் பிறதொடர்கள் ஐகாரம்பெறுதலும் ஐயீற்றுடைக்குற்றுகரமென உடைமையாக்கிக் கூறினமையின் வருமொழிப் புணர்ச்சியானன்றி, ஒற்றை - இரட்டை - வேட்டை - என ஒருமொழியாய்நின்று ஐகாரம்பெறுதலும் ஈராட்டை - மூவாட்டை - எனத் தொடர்மொழியாய்நின்று ஐகாரம்பெறுதலுங் கொள்க. ()

(௱௮௬) திசையொடு திசையும் பிறவுஞ் சேரி - னிலையீற் றுயிர்மெய் கவ்வொற்று நீங்கலும் - றகரம னலவாத் திரிதலு மாம் பிற. *

(எ-ன்) குற்றுகரவீற்றுத் திசைப்பெயர்க் கெய்தாத தெய்துவித்தனுதலிற்று. (இ-ள்) திசையொடு - திசைச்சொல்லோடு, திசையும் - திசைச்சொல்லும், பிறவும் - பிறசொல்லும், சேரின் - புணருமிடத்து, நிலையீற்று - நிலைமொழியீற்றிலேநின்ற, உயிர்மெய் - உயிர் மெய்யும், கவ்வொற்று - அதன்பின்னின்ற ககரமெய்யும், நீங்கலும் கெடுதலும், றகரம் - அவ்விடத்துநின்ற றகரமெய், னலவா - னகரமெய்யாகவும் லகரமெய்யாகவும், திரிதலும் திரிதலும், ஆம் - ஆம், எ-று. (பொ-ரை) திசைச்சொல்லோடு திசைச்சொல்லும் பிறசொல்லும் புணருமிடத்து நிலைமொழி யீற்றினின்ற உயிர்மெய்யும் அதன்பின்னின்ற ககரவொற்றுங் கெடுதலும் அங்ஙனம் நின்ற றகரவொற்று னகரவொற்றாயும் லகரவொற்றாயுந் திரிதலுமாம், எ-று. ※ [உ-ம்] வடகிழக்கு - வடமேற்கு - வடதிசை -

இருநாழி- ஒருவகை - இருவகை - எனவரும். ஓராயிரம் - ஈராயிரம்- என்புழி உகரக்கேடு முற்றுமற்றொரோவழி யென்பதனாற் கொள்க பிறவுமன்ன. (௩௯)

(௱௯௰) மூன்ற னுறுப் பழிவும் வந்தது மாகும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) மூன்றன்- இறுதியுயிர்மெய்கெடநின்ற மூன்றென்னு மெண்ணினது, உறுப்பு- மெய்யானது, அழிவும்- கெடுதலும், வந்ததும்- வருகிறமெய்யாகத் திரிதலும், ஆகும்- ஆகும், எ-று. (பொ-ரை) நால்வகைப்பெயரும் வருமிடத்திறுதியுயிர்மெய் கெடநின்ற மூன்றென்னு மெண்ணினது னகரவொற்றுக்கெடுதலும் வருமொற்றாகத் திரிதலுமாம். எ-று. ❀ [உ-ம்] மூவொன்று- மூவெட்டை- மூவுழக்கு- மூவுலகு (எ-ம்) முப்பது- முக்கழஞ்சு- முந்நாழி- மும்மொழி (எ-ம்) வரும். (௪௰)

(௱௯௧) நான்கன் மெய்யே லறவா கும்மே. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) நான்கன்- இறுதியுயிர்மெய் கெடநின்ற நான்கென்னு மெண்ணினது, மெய்- னகரமெய், லறவாகும்-லகரமெய்யாகவும் றகரமெய்யாகவுந் திரியும், எ-று. (பொ-ரை) நால்வகைப்பெயரும் வருமிடத் திறுதியுயிர்மெய் கெடநின்ற நான்கென்னு மெண்ணினது னகரவொற்று லகரவொற்றாயும் றகரவொற்றாயுந் திரியும். எ-று. ❀ [உ-ம்] நாலொன்று- நாலெட்டை - நானாழி- நான்மணி- (எ-ம்) நாற்பது-நாற்கழஞ்சு நாற்கலம்-நாற்கவி- (எ-ம்) வரும். (௪௧)

(௱௯௨) ஐந்தனொற் றடைவது மினமுங் கேடும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) ஐந்தன்- இறுதியுயிர்மெய்கெடநின்ற ஐந்தென்னு மெண்ணினது, ஒற்று- நகரமெய்யானது, அடைவதும் - வருகிறமெய்யாகியும், இனமும் - அதற்கினமாகியும், கேடும்- கெட்டும் வரும், எ-று. (பொ-ரை) நால்வகைப் பெயரும்வருமிடத் திறுதியுயிர்மெய் கெடநின்ற ஐந்தென்னு மெண்ணினது நகரவொற்று வருமொற்றாகியும் அதற்கினமாகியுங் கெட்டும் முடிவதாம். எ-று. ❀ [உ-ம்] ஐம்மூன்று- ஐம்பஞ்சாடி - ஐவ்வடி- ஐவ்வண்ணம் (எ-ம்) ஐம்பது - ஐங்கழஞ்சு - ஐங்கலம் - ஐம்பொறி- (எ-ம்) ஐயொன்று- ஐயெட்டை- ஐயாழாக்கு- ஐயம்பு (எ-ம்) வரும். அடைவதும் இனமுமென்றமையின் அருத்தாபத்தியான், ஐந்நூறு - ஐந்தூணி - என்புழி யொற்றுத் தன்னியல்பினிற்றல் கொள்க. (௪௨)

(௱௯௩) எட்ட னுடம்பு ணவ்வாகு மென்ப. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) எட்டன்- இறுதியுயிர்மெய் கெடநின்ற எட்டென்னு மெண்ணினது, உடம்பு-டகரமெய்யானது,

ணவ்வாகும்- ணகரமெய்யாகும், என்ப- என்றுசொல்லுவர்புலவர் எ-று. (பொ-ரை) நால்வகைப்பெயரும் வருமிடத் திறுதியுயிர்மெய் கெடநின்ற எட்டென்னு மெண்ணினது டகரவொற்று ணகரவொற்றாகுமென்று சொல்லுவர் புலவர். எ-று. ❁ [உ-ம்] எண்பது எண்கழஞ்சு- எண்கலம்- எண்குணம்- எனவரும. எண்ணிறையளவு மென்னுஞ்சூத்திரத்துட்கூறிய புணர்ச்சிக்குவேண்டும்விகார மிதுகாறுமென்பதுதோன்ற அச்சூத்திரத்துட் கூறிய புலவரென்னு மெழுவாயைச்சுட்டி யதன்பயனில்லையாக இச்சூத்திரத்திறுதிக்க ணென்ப வென்றார். (௪௯)

(௱௯௪) ஒன்பா னொடு பத்து நூறு மொன்றின் - முன்னதின் ஏனைய முரணி யொவ்வொடு-தகர நிறீஇப் பஃ தகற்றி னவ்வை நிரலே ணளவாத் திரிப்பது நெறியே. ❋

(எ-ன்) ஒன்பதென்னு மெண்ணுப் பெயர்க் கெய்தாத தெய்துவித்தலும் அதனோடுபுணரும் பத்து நூறென்னும் வருமொழிகட்கு இயல்பினும் விதியினு மென்னுஞ் சூத்திரத்தானு மெண்ணுமெழுத்திற் றென்னுஞ் சூத்திரத்தானு மெய்தியது விலக்கிப் பிறிதுவிதியு முணர்- ற்று. (ப-ரை) ஒன்பானொடு- ஒன்பஃதுடனே, பத்தும்- பத்தென்பதும், நூறும்- நூறென்பதும், ஒன்றின்- வந்துபுணருமாயின், முன்னதின்- முன்னதாகிய நிலைமொழியினின்றும், ஏனைய- மற்றைவருமொழிகளாகிய பத்தையும் நூற்றையும், முரணி - முறையே நூறெனவும் ஆயிரமெனவுந் திரித்து, ஒவ்வொடு- நிலைமொழிமுதலிலுள்ள ஒகரவுயிரோடு, தகரம்- தகரமெய்யை, நிறீஇ- அதற்கு ஆதாரமாகநிறுத்தி, பஃது- அந்நிலைமொழியிறுதியிலுள்ள பஃதை, அகற்றி- கெடுத்து, னவ்வை- அம்மொழிமுதற் கயனின்ற னகரமெய்யை, நிரலே - முறையே, ணளவா- ணகரமெய்யாகவும் ளகரமெய்யாகவும், திரிப்பது - திரிப்பது, நெறி- முறையாகும், எ-று. (பொ-ரை) ஒன்பஃதுடனே பத்தென்பதும் நூறென்பதும் வந்துபுணருமாயின் அந்நிலைமொழி வருமொழிகளுண் முன்னர்த்தாகிய நிலைமொழியினின்று மேனைவருமொழியாகிய பத்தையு நூற்றையு நிரனிறை வகையானே நூறெனவும் ஆயிரமெனவுந்திரித்து நிலைமொழிக்கு முதற்கணொகரவுயிரோடு தகரமெய்யை அதற்காதாரமாக நிறுத்தி அந்நிலைமொழியிறுதிக்கட் பஃதைக்கெடுத்து அம்மொழிமுதற்கயனின்ற னகரவொற்றை முறையே ணகரவொற்றாயும் ளகரவொற்றாயுந் திரிப்பது முறைமையாம். எ-று ❁ முன்னதினென்னு மின்னுருபுநீங்கற்பொருட்டா யேனையவென்னும் இடைச்சொல்லடியாகத்தோன்றியவினைக்குறிப்புப்பெயர்கொண்டது. நிலைமொழித்திரிபுபோல வருமொழித்திரிபும் வகைபடக்கூறாது பொது

ப்பட முரணியென்றாரேனும், "ஒன்பா னொகர மிசைத் தகர மொற்று - முந்தை யொற்றே ணகார மிரட்டும் - பத்தென் கிளவி யாய்த பகரங் கெட - நிற்றல் வேண்டு மூகாரக் கிளவி- யொற்றிய தகரம் றகரமாகும்," (எ-ம்) "ஒன்பான் முதனிலை முந்து கிளந் தற்றே-முந்தை யொற்றே ளகார மிரட்டு- நூறென் கிளவி நகார மெய்கெட- ஊவா வாகு மியற்கைத் தென்ப - வாயிடை வருத லிகார ரகர - மீறுமெய் கெடுத்து மகரமொற்றும்," (எ-ம்) ஆசிரியர் தொல்காப்பியர் கூறியவாற்றான் அவற்றின் றிரிபறிந்து திரித்துக்கொள்க. நெறியேயென்ற விலேசானே தவிக்குறின் முன்னொற்றிரட்டித்தலுங் கொள்க [உ-ம்] தொண்ணூறு (எ-ம்) தொள்ளாயிரம் (எ-ம்) வரும். தொளாயிரமென இக்காலத்து மரீஇயிற்று. ஒன்பஃது நின்றுபுணரினும் ஒன்பது நின்றுபுணரினு மிம்முடிபேயாமென்பார் பஃதகற்றி யென்பதனோடு பொருந்த வொன்பஃதொடென்னது - ஒன்பானொடென்றும் தகரவொற்றை ஒகரவுயிர்க்குடம்பாக நிறுத்துகவென்பார் ஒவ்வொடென்றும் இப்புணர்மொழிக ளொகரவுயிரொன் றொழிய விகாரப்பட்டுக் கிடந்தமையிற் குறிப்பின்றி முடியு மாறுஉமுடிபென்று கொள்ளற்க வென்பார் திரிவதென்றது-திரிப்பதென்றும் இவற்றை இலக்கணமுடிபாகத் தொல்லாசிரியர் முடித்தவாறே முடித்தாமென்பார் நெறியேயென்றுங் கூறினார். இச்சூத்திரத்து முன்னதினேனையமுரணியென்பதற் கிவ்வாறு பொருள்கொள்ளாது தொன்பஃதிறுமேனை பத்தையும் நூற்றையும் பெருக்கி யெனப் பொருள்கொள்வாருமுளர். முரணியென்னுஞ் சொற் கது பொருளன்றாதலானும் அதுபொருளாமேனு மதனல் வருமொழி யிவ்வாறு திரிந்ததெனத் தோன்றாமையானுந் தோன்றி னிலைமொழிக்கு விகாரங் கூறவேண்டாமையானு மதுபொருந்தாதென்க. இன்னும் முன்னதினேனைய முரணியென்பதற்கு நிலைமொழியாய வொட்டின்மேலொன்று ஒன்பஃதெனப் பஃதென்னு மிறுதிய தாய்த் திரிந்துநின்றாற்போல வருமொழியாய வெண்பதின்மேற் பத்தை நூறெனவும் எண்ணூற்றின்மே னூற்றை யாயிரமெனவுந் திரித்துப் பொருள்கோடலு மொன்று. (௬௪)

(௱௬௫) முதலிரு நான்கா மெண்முனரீப் பத்தி- னிடையொற் றேக லாய்த மாக - லெனவிரு விதியு மேற்கு மென்ப. *

(எ-ன்) ஒன்றுமுதலெட் டெண்களின் முன்வரும் பத்தென்னு மெண்ணிற்கு இயல்பினும்விதியினு மென்னுஞ் சூத்திரத்தா னெய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தனுதலிற்று. (ப-ரை) முதல்-ஒன்றுமுதலாகிய, இருநான்காமெண்முனர்- எட்டெண்களின் முன்

னும்வருகிற, பத்தின் - பத்தென்னுமெண்ணினது, இடை - நடு நின்ற, ஒற்று - தகரமெய்யானது, எகல் - கெடுதலும், ஆய்தமாகல் - தகரநின்றவிடத்து அதுகெட ஆய்தம்வருதலும், எனவிருவிதியும் - என்னுமிவ்விரண்டு விதியையும், எற்கும் - ஏற்கும், என்ப - என்றுசொல்லுவர்புலவர், எ-று. (பொ-ரை) ஒன்றுமுதலாகிய வெட்டெண்களின்முன்னும் வரும் பத்தென்னுமெண்ணிடைநின்ற தகரவொற்றொருகாற்கெடுதலு மொருகாலிடையேய தகரநின்ற நிலைக்களத் ததுகெட ஆய்தம் வருதலுமென்னு மிவ்விரண்டுவிதியையு மேற்குமென்று சொல்லுவர்புலவர். எ-று ❋ இடையெ ன்பதனைப் பின்னுங்கூட்டுக. இடையே யாய்தமாக லென்றமையி னவ்வழித் தகரக்கேடு கூறாதேயமையுமென்க. [உ-ம்] ஒருபது - இருபது - முப்பது - நாற்பது - ஐம்பது அறுபது - எழுபது - எண்பது (எ-ம்) ஒருபஃது - இருபஃது - முப்பஃது - நாற்பஃது - ஐம்பஃது - அறுபஃது - எழுபஃது - எண்பஃது (எ-ம்) வரும். (௪௫)

(௱௯௬) ஒருபஃதாதிமுன் னொன்றுமுதலொன்பா னெண்ணு மவையூர் பிறவு மெய்தி - னாய்த மழியவாண் டாகுந் தவ்வே.❋

(எ-ன்) மேலைச் சூத்திரத்தா னெய்திய வொருபஃதாதியாய நிலைமொழிக்கு உயிர்வரின் உயிர்வரி னுக்குறளொன்னுஞ் சூத்திரத்தா னெய்தியதன்மேற் சிறப்புவிதியு மெய்வரி னெய்தாததெய் துவித்தலு நுதலிற்று. (ப-ரை) ஒருபஃதாதிமுன் - ஒருபஃது முதலாகிய எட்டெண்களின்முன், ஒன்றுமுதல் - ஒன்றுமுதலாகிய, ஒன்பானெண்ணும் - ஒன்பதெண்களும், அவை - அவ்வெண்களை, ஊர் - ஊர்ந்த, பிறவும் - மற்றவையும், எய்தின் - வந்துபுணருமாயின், ஆய்தம் - நிலைமொழியிடையிலேநின்ற ஆய்தமானது, அழிய கெட, த - இயல்பாகியதகரம், ஆண்டு - அவ்வாய்தநின்றவிடத்து, ஆகும் - வரும், எ-று. (பொ-ரை) ஒருபஃதாதியாய வெட்டெண்களின்முன்னு மொன்றுதியொன்பதெண்ணு மவையூர்ந்த பிறவும்வந்துபுணருமாயி னாய்தங்கெட அந்நிலைக்களத்தியல்பாய தகரம் வரும். எ-று, ❋ ஐயமறுத்தற் கவையூர் பிறவுமென்றார். [உ-ம்] ஒருபத்தொன்று - இருபத்தொன்றேகாலேயரைக்கால் - முப்பத்தொருகழஞ்சு - எழுபத்தொன்பதின்கலனேதூணி - எண்பத்தொன்பதியாண்டு - எனவரும். பிறவுமன்ன. ஆய்த மழியவாண் டாகுந்தவ்வேயென்றமையா னாய்தமழிந்தவற்றிற்கும் ஒருபதுமுதலிய முற்றுகரவீற்றெண்ணுப்பெயர்கட்கும் வேற்றுமையிடைமையின் அருத்தாபத்தியா னவற்றோடு இவ்வருமொழிகள் புணரினு மாண்டாகுந் தவ்வே யென்றாராயிற்று. இவற்றிற்குங் காட்டவையேயா மென்க. (௪௬)

(௱௯௯) ஒன்றுமுதலீரைந் தாயிரங்கோடி- யெண்ணிறை யளவும் பிறவரிற் பத்தி- னீற்றுயிர் மெய்கெடுத் தின்னு மிற்று- மேற்ப தேற்கு மொன்பது மினைத்தே. *

(எ-ன்) பத்தென்னுநிலைமொழிக்கு உயிர்வரின் உயிர்வரினுக்குறளென்னுஞ் சூத்திரத்தா னெய்தியது விலக்கிப் பிறிதுவிதியு மெய்வரி னெய்தாத தெய்துவித்தலும் ஒன்பதென்னு நிலைமொழிக்கு உயிர்வரின் உயிர்வரினுக்குறளென்னுஞ் சூத்திரத்தா னெய்திய தன்மேற் சிறப்புவிதியு மெய்வரி னெய்தாத தெய்துவித்தலு முணர்-ற்று. (ப-ரை) ஒன்றுமுதலீரைந்து - ஒன்றுமுதலாகிய பத்தெண்களும், ஆயிரம்- ஆயிரமும், கோடி - கோடியு மாகிய, எண்- எண்ணுப்பெயரும், நிறை- நிறைப்பெயரும், அளவும்- அளவுப்பெயரும், பிற- பிறபெயரும், வரின்- வந்துபுணருமாயின், பத்தின்- நிலைமொழியாகிய பத்தினது, ஈற்றுயிர்மெய்- இறுதியிலுள்ள துகரவுயிர்மெய்யை, கெடுத்து- அழித்து, இன்னும்- இன்சாரியையாயினும், இற்றும்- இற்றுச்சாரியையாயினும், ஏற்பது - அவ்விடத்திற் கேற்பது, ஏற்கும் - ஏற்றுநிற்கும், ஒன்பதும்- ஒன்பதென்னுநிலைமொழியும், இனைத்து-இப்படியே எண்ணுப்பெயர் முதலானவை வந்துபுணருமாயின் இன்னாயினும் இற்றாயினும் அவ்விடத்திற்கு ஏற்பது ஏற்றுநிற்கப்பெறும், எ-று. (பொ-ரை) ஒன்றுமுதலாகிய பத்தும் ஆயிரமுங் கோடியு மென்னு மெண்ணுப்பெயரும் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் பிறபெயரும்வந்துபுணருமாயின் நிலைமொழியாகியபத்தென்னு மெண்ணின திற்றுயிர்மெய்யைக்கெடுத்து அந்நிலைக்களத் தின்சாரியையேனு மிற்றுச்சாரியையேனு மாண்டைக்கேற்ப தேற்றுநிற்கும் ஒன்பதென்னுநிலைமொழியு மிங்ஙனம்விதந்த வெண்ணுதிப்பெயர்வந்துபுணருமாயி னின்னேனு மிற்றேனு மாண்டைக்கேற்ப தேற்றுநிற்கப்பெறும். எ-று. ❁ [உ-ம்] பதினொன்று- பதின்மூன்று- பதினாயிரம்- பதின்கழஞ்சு- பதின்கலம் - பதின்மடங்கு- (எ-ம்) பதிற்றொன்று- பதிற்றிரண்டு- பதிற்றுமூன்று- பதிற்றுக்கோடி- பதிற்றுத்தூணி- (எ-ம்) ஒன்பதினாயிரம்- ஒன்பதின்கழஞ்சு- ஒன்பதின்கலம் - ஒன்பதின்மடங்கு (எ-ம்) ஒன்பதிற்றொன்று- ஒன்பதிற்றிரண்டு - ஒன்பதிற்றுக்குறுணி - (எ-ம்) வரும். பிறவுமன்ன. பதினொன்றென்பது - உம்மைத்தொகை. பதிற்றொன்றென்பது - பண்புத்தொகை. பிறவுங்கண்டுகொள்க. பத்துக்கோடி- ஒன்பதுகோடி- என இந்நிலைமொழிக டன்னியல்பினிற்றலேயன்றி வழக்கின்கண்ணும் சான்றோர்செய்யுட்கண்ணு மிவ்வாறமைந்து கிடந்தனவுங் கொள்கவென்பா ரேற்ப தேற்கு

மென்றும் ஒன்பதனீற்றுயிர்மெய்யைக்கெடாது குற்றுகரவீற்றுப் பொதுவிதியா னுயிரொன்றுமேகெட இன்னுமிற்று மேற்ப தேற்றுநிற்றலி னென்பதுமிற்றெனத் தன்மையணியாக்காது - உவமையணியாக்கி இனைத்தே யென்றுங் கூறினார். ஒன்பதென்பதனிறுதி பத்தென்பதுபோல முரணிநிற்றலி னதனோடிதனை மாட்டெறியப்பட்டதெனினு மமையும். (௪௭)

(௱௯௮) இரண்டு முன்வரிற் பத்தினீற் றுயிர்மெய் - கரந்திட வொற்று னவ்வாகு மென்ப. *

(எ-ன்) இதுவும் பத்தென்னு நிலைமொழிக்கு உயிர்வரி னுக்குறளென்னுஞ் சூத்திரத்தா னெய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்த னுதலிற்று. (ப-ரை) இரண்டு - இரண்டென்பது, முன்வரின் - முன்வருமாயின், பத்தின் - பத்தென்னு நிலைமொழியினது, ஈற்றுயிர்மெய் ஈற்றிலுள்ள துகரவுயிர்மெய்யானது, கரந்திட - கெட, ஒற்று - தகரமெய், னவ்வாகும் - னகரமெய்யாகத் திரியும், என்ப - என்றுசொல்லுவர் புலவர். எ-று (பொ-ரை) இரண்டென்பதுவரிற் பத்தென்னு நிலைமொழியினீற்றுயிர்மெய்கெடத் தகரவொற்று னகரவொற்றாகத் திரியுமென்றுசொல்லுவர் புலவர். எ-று. ❀ [உ-ம்] பன்னிரண்டு - எனவரும். உம்மைத் தொகைக் கண்ணும் பண்புத்தொகைக்கண்ணு மிரண்டென்னுமெண் வருமொழியாய் வருமேனு முன்வரினென வருதலைச் சிறப்பித்தமையா னொருசொன் னீர்மையாய்ச்சிறந்த உம்மைத்தொகைக் கிவ்விதி கூறினாரென்க. (௪௮)

(௱௯௯) ஒன்பதொழித்த வெண் ணொன்பது மிரட்டின் - முன்னதின் முன்னல வோட வுயிர்வரின் - வவ்வு மெய்வரின் வந்தது மிக னெறி. *

(எ-ன்) ஒன்பதொழித்த வொன்பதெண்களாய நிலைமொழிகளுண் மூன்றுமேழற் கெண்ணிறை யளவும் பிறவுமெய்தினென்னுஞ் சூத்திரத்துண் மூன்றுமேழுங் குறுகுமென வெய்தியதன்மேற் சிறப்புவிதியு மெல்லாவற்றிற்கு முயிர்வரி னெய்தியதுவிலக்கிப் பிறிதுவிதியு மெய்வரி னெய்தாத தெய்துவித்தலு நுதலிற்று. (ப-ரை) ஒன்பது - ஒன்பதென்கிற எண்ணென்றனையும், ஒழித்த - ஒழித்துநின்ற, எண்ணொன்பதும் - ஒன்றுமுதற் பத்தீறாகிய ஒன்பதெண்ணினையும், இரட்டின் - இரட்டித்துச்சொன்னால், முன்னதின் - நிலைமொழியினது, முன்னல - முதலெழுத்தல்லாதவையெல்லாம், ஓட - கெட, உயிர்வரின் - உயிர்முதலானவெண்வரின், வவ்வும் - வகரமெய்யும், மெய்வரின் - மெய்முதலானவெண்வரின், வந்ததும் - வந்தமெய்யும், மிகல் - மிகுதல், நெறி - முறையாம், எ-று. (பொ-ரை) ஒன்பதென்னு மெண்ணென்றனையு மொழித்

துநின்ற வொன்றுந் பத்தூறுன வெண்ணென்பதனையு மிரட்டித்துக்கூறி னிலைமொழி முதலெழுத் தொன்றுநிற்க அல்லனவெல்லாங்கெட வுயிர்முதலான வெண்வரின் வகரவொற்று மெய்முதலானவெண்வரினவ்வந்தவொற்று மிகுதன் முறைமையாம். எ-று. ❋ [உ-ம்] ஒவ்வொன்று-இவ்விரண்டு-மும்மூன்று-நந்நான்கு- ஐவைந்து- அவ்வாறு- எவ்வேழு- எவ்வெட்டு- பப்பத்து- எனவரும். நெறியென்றமையானே நான்கிற்குக்குறுக்கமும்ஐவைந்தென்புழி ஐகாரக் குறுக்கத்தின் முன்னெற் றிரட்டாமையும் ஒரோவொன்று- ஒன்றொன்று-கழக்கழஞ்சு- கலக்கலம்-என விரட்டித்துவருவனவுங் குற்றுகரப்புணர்ச்சிவிதியுட் கூறுந்தொழிந்து நெறிப்படவருவனவுளவேலவையுங் கொள்க. ஒவ்வொன்று கொடுவென்றுல் இம்முறையே பலவற்றையுங் கொடுவெனப் பொருடந்துநிற்றலின் இஃதடுக்கன்று வேற்றுமையல்லன வெல்லாம் அல்வழியாதலிற் றழாத்தொடராய அலவழியு ளொன்றுமென்க. (௪௯)

(௨௱) பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும். ❋

(எ-ன்) ஊகாரவீற்றுப் பூவென்னும் பலபொரு ளொருசொன்முன்வரும்வல்லினத்திற்கு இயல்பினும் விதியினு மென்னுந்துத்திரத்தா னெய்தியதன்மேற் சிறப்புவிதியுணர் - ற்று. (ப-ரை) பூப்பெயர்முன்- பூவென்னும் பலபொரு ளொருசொன்முன், இனமென்மையும்- வருகிறவல்லினமிகுதலல்லாமல்அவற்றிற் கினமாகிய மெல்லினமும், தோன்றும்- மிகும். எ-று.(பொ-ரை) பூவென்னும்பலபொருட் பெயர்ச்சொன்முன் வல்லினம்வரிற் பொதுவிதியான் கசதபமிகுதலேயன்றி யவற்றிற்கினமாகியமெல்லொற்றுக ளுமிகும் எ-று. ❋ இப்பொருட்டாய பூப்பெயரென விதவாமையிற் பலபொருளொருசொல் லென்பதுபெற்றும். [உ-ம்] பூங்கொடி- பூஞ்சோலை- பூந்தடம்- பூம்பணை- எனவரும். இவற்றுட்பூவென்பது மலரோ விரண்டாம்வேற்றுமை யுருபும் பயனு முடன்றொக்கதொகையாகவும் பொலிவேற பண்புத்தொகையாகவும் பூங்கணையென்பது மலரொன்னு மொருபொருட்டாய் மூன்றும்வேற்றுமையுருபும் பயனு முடன்றொக்க தொகையாகவும் பண்புத்தொகையாகவும் பூங்கரும் பென்பது பொலிவென்னு மொருபொருட்டாய்ப் பண்புத்தொகையாகவும் வருவனகாண்க. உம்மைவருமெனவுறுதிகூறுது பூக்கொடியென வல்லின மிகுதலே யும்மையாற் றழீஇக்கொண்டமையி னிவ்விருவகைத்தோற்றமுமேற்றுப்பெற்றி கொள்க. (௫௰)

(௨௱௧) இடைச்சொல் லேயோ முன்வரி னியல்பே. ❋

(எ-ன்) ஏகார ஓகார விடைச்சொற்கண் முன்வரும் வல்லினத்திற்கு இயல்பினும்விதியினு மென்னுஞ் சூத்திரத்தா னெய்தியது

விலக்கனுதலிற்று. (ப-ரை) இடைச்சொல்-இடைச்சொல்லாகிய, ஆ (முன்)-ஆறகாரத்தின்முன்னும், ஓமுன்-ஓகாரத்தின்முன்னும், வரின்- வல்லினம்வந்தால், இயல்பு-பொதுவிதியான்மிகாது இயல்பாகும். எ-று. (பொ-ரை) இடைச்சொலாய ஆறகாரத்தின்முன்னும் ஓகாரத்தின்முன்னும் வல்லினம் வருமாயிற் பொதுவிதியான் மிகாதியல்பாம். எ-று. ✲ [உ-ம்] அவனே கொண்டான் என்பது பிரிநிலையும் வினவுமீற்றசையுந் தேற்றமுமாம். அறமேபொருளே காமமேதுறவே என்பனவெண்.எயெதனையெண்ணோரிருடிவினவ என்பதிசைநிறை.அவனோகொண்டான் என்பதொழியிசைமுதலிய வெட்டுமாம். இவற்றுள் வல்லின மியல்பாதல்காண்க. இவ்விடைச்சொல்லொன்று பலபொருடருமா றிடைச்சொல்லியலுட் காட்டுதும். (௯௧)

(உ௱உ) வேற்றுமை யாயி னைகா னிறுமொழி - யீற்றழி வோடுமம் மேற்பவு முளவே. ✲

(எ-ன்) ஐகாரவீற்று நிலைமொழிக் கெய்தாததெய்து வித்தனுதலிற்று. (ப-ரை) ஐகானிறுமொழி - ஐகாரவீற்றுச்சொற்கள்,வேற்றுமையாயின் - வேற்றுமைக் கண்வருமாயின், ஈற்றழிவோடும்- ஈற்றைகாரங் கெடுதலுடனே, அம் - அம்முச்சாரியை,ஏற்பவும் பெற்றுமுடிவனவும், உள- சிலவுள. எ-று. (பொ-ரை) ஐகாரவீற்றுச் சொல்வேற்றுமைக்கண்வருமாயி னிறுதி ஐகாரங்கெடா தப்புச்சாரியைபெற்று முடிவனவும் ஐகாரங்கெட்டு அம்முச்சாரியைபெற்றுமுடிவனவுஞ் சிலவுளவாம்.எ-று. ✲ உம்மைகளிரண்டனுள் முன்னையதுஎதிர்மறைக்கண்ணும் பின்னையதுஎதிர்மறையோ டிழிவு சிறப்பின்கண்ணும் வந்தன. [உ-ம்] புன்னையங்கானல்-கொல்லையஞ்சாரல் - கொன்றையந்தீங்குழல்- முல்லையம்புறவம்- (எ-ம்) வழுதுணங்காய்- ஆவிரம்பூ- வேர் - (எ-ம்) வரும். ஏகுதியாக்காதேற்பன வென்றமையான் முல்லைப்புறவம் என வரினுங்கொள்க. அம்முமென்றமையி னும்மையான் வல்லினந் தழீஇய தன்றென்க. வருமொழி வரையாமையி னேற்கணைந்து ஏற்பன கொள்க. (௯உ)

(உ௱௩) பனைமுன் கொடிவரின் மிகலும் வலிவரி- னைபோ யம்முந் திரள்வரி னுறழ்வு- மட்டுறி னைகெட்டந் நீள்வுமாம் வேற்றுமை. ✲

(எ-ன்) பனையென்னு நிலைமொழிக்கும் அதனோடுபுணருஞ் சிலவருமொழிகட்கும் இயல்பினும் விதியினு மென்னுஞ் சூத்திரத்தானு மேலைச்சூத்திரத்தானு மெய்தியவற்றை இகந்துபடாமற் காத்தலும் இ ஈ ஐவழி யென்னுஞ் சூத்திரத்தா னெய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தலு நுதலிற்று. (ப-ரை) பனைமுன் - ப

னையென்னும் பெயர்முன், கொடிவரின்- கொடியென்னுப்பெயர்வருமாயின், மிகலும்- வந்ததுமிகுதலும், வலிவரின்-கசதபககள் வருமாயின், ஐபோய்- நிலைமொழியிற் றைகாரங்கெட்டு, அம்மும் - அம்முப்பெறுதலும், திரள்வரின்- திரளென்னும் பெயர்வருமாயின், உறழ்வும்- வந்ததுமிகுந்தும் ஐபோய் அம்முப் பெறறும் விகற்பித்தலும், அட்டுறின்- அட்டென்னும்பெயர்வருமாயின், ஐகெட்டு - ஐகாரங்கெட்டு, அந்நீள்வும்- வருமொழி அகரம் ஆகாரமாதலும், ஆம் - ஆகும், வேற்றுமை- வேற்றுமைக்கண் எ-று. (பொ-ரை) பனையென்னும்பெயர்முன் கொடியென்னும்பெயர் வருமாயின்வந்ததுமிகுதலும் க ச த பக்கள்வரின் நிலைமொழியீற் றைகாரங்கெட்டு அம்முப்பெறுதலும் திரளென்னுப்பெயர் வருமாயின் வந்ததுமிகுந்தும் ஐபோ யம்முப்பெற்றுந் தம்மு ளுறழ்தலும் அட்டென்னும் பெயர்வருமாயின் ஐகாரங்கெட வருமொழி அகரம் ஆகாரமாதலுமாம் வேற்றுமைக்கண். எ-று. ❀ கெட்டென்பது செயவெனெச்சந் திரிந்து நின்றது. [உ-ம்] பனைக்கொடி (எ-ம்) பனங்காய்-செறம்பு- தூண்- பழம் (எ-ம்) பனைத்திரள்- பனந்திரள்- (எ-ம்) பனாட்டு- (எ-ம்) வரும். பனைக்கொடியென்பது - பனையை யெழுதிய கொடி. பனாட்டென்பது - பனையினது தீங்கட்டி. (௫௧)

உயிரீற்றுப் புணரியன்

முற்றிற்று.



உ

நான்காவது

# மெய்யீற்றுப் புணரியல்.

(௨௱௪) - உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே. *

(எ-ன்.) மெய்யீற்றுப் பதம்புணருஞ் சிறப்புப்புணர்ச்சி இவ்வியலாற் கூறப்படுதலின் மெய்யீற்றுமுன் உயிர்முதல் வந்து புணருமாறுணர் - ற்று. (ப-ரை) உடன்மேல்- நிலைமொழியீற்றி னின்ற மெய்யின்மேல், உயிர் - வருமொழிமுதலுயிர், வந்து- வந்து, ஒன்றுவது - ஒன்றுபட்டிணங்கி நிற்பது, இயல்பே - இயல்பு புணர்ச்சியேயாம், எ-று. (பொ-ரை) நிலைமொழி யீற்றினின்ற மெய்யின்மேல் வருமொழிமுதலுயிர்வந்தொன்றுபட்டிணங்கிநிற்பது இயல்புபுணர்ச்சியேயாம். எ-று. ❁ [உ-ம்.] தோன்றலழகன் - உரிஞழகிது - புகழழகிது - (எ-ம்) வேலெறிந்தான் - (எ-ம்) இருவழியுங் காண்க. பிறவுமன்ன. இவ்வாறு மெய்யு முயிருங்கூடி யுயிர்மெய்யாய் மெய்யினதுபுள்ளியு முயிர்வடிவமுங்கெட்டுநிற்றலின் விகாரமாமெனபாரைவிலக்கிச் சிறந்த வொலிவடிவின் யாக்கையு முயிரும்போன் மெய்யினது மாத்திரையுள்ளடங்க வொன்றுபட் டிரட்டையிலைபோல் ஒற்றொலி முன்னும் உயிரொலிபின்னுமா யிணங்கிநிற்றலானு மொன்றுத தனிக்குறின்முன்னொற்று முதலியன விகாரப்படுதலானு மொன்றுவதியல்பே யென்றார். ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. (க)

(௨௱௫) தனிக்குறின் முன்னொற் றுயிர்வரி னிரட்டும். *

(எ-ன்) எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்- ற்று. (ப-ரை) தனிக்குறின்முன்- தனிக்குற்றெழுத்தின்முன்னின்ற, ஒற்று - மெய்யானது, உயிர்- உயிரானது, வரின்- வந்தால், இரட்டும் - இரட்டித்து நிற்கும், எ-று. (பொ-ரை) தனிக்குறின்முன் னொற்றுயிர் வரி னிரட்டித்துநிற்கும். எ-று. ❁ [உ-ம்] மண்ணரிது- பொன்னரிது (எ-ம்) மண்ணகம் - பொன்னொளி- (எ-ம்) வரும். பிறவுமன்ன. (உ)

(௨௱௬) தன்னொழி மெய்ம்முன் யவ்வரி னிகரந் - துன்னு மென்று துணிநரு முளரே. *

(எ-ன்) யகரமொழிந்த பதினொருமெய் முன்னும்வரும் யகரத்திற் கெண்மூ வெழுத்திற் றென்னுஞ் சூத்திரத்தா னெய்தியதன்மேற்

சிறப்புவிதி யுணர் - ற்று. (ப-ரை) தன்னொழி - தன்னையொழி
ந்த,மெய்ம்முன் - ஞ ண ந ம ன ர ல வ ழ ள என்கிறபத்து மெ
ய்களின்முன்னும், ய யகரமானது, வரின்-வந்தால், இகரம்-இகர
ச்சாரியையை, துன்னுமென்று - தன்முன் பொருந்துமென்று,
துணிநரும் - அறிதிற் கொள்வாரும், உளர் - சிலருளர். எ-று.
(பொ-ரை) யகரந்தன்னை யொழிந்த ஞ ண ந ம ன ர ல வ ழ ள
வென்னும் பத்துமெய்ம்முன்னும்வந்தாற் றன்முன்னிகரச்சாரியை
யைப் பொருந்துமென்றறிதிற்கொள்வாருஞ் சிலருளர். எ-று.
※ [உ-ம்] வேளியாவன் மண்ணியாது. (எ-ம்) வேளியானை-மண்
ணியானை - (எ-ம்) வரும். பிறவுமன்ன. எதிர்மறையாய விழிவு
சிறப்புமைமயா னிகரந் துன்றுது பொதுச்சூத்திரத்தா னிபல்
பா மென்பார் பெரும்பாலோன்க. (௯)

(உ௱எ) ஞ ண ந ம ல வ ள ன வொற்றிறு தொழிற்பெய-
ரேவல் வினைநனி யவ்வன் மெய்வரி- னுவ்வுறு மேவ லுறாசில
சில்வழி. ※

(எ-ன்) முதனிலைத் தொழிற்கு மேவற்கும் பொதுவாய சில
நிலைமொழிகட் கெய்தாத தெய்துவித்த னுதலிற்று. (ப-ரை.)
ஞ ண ந ம ல வ ள ன - ஞ ண ந ம ல வ ள ன என்கிற, ஒற்று -
எட்டுமெய்களும், இறு - இறுதியாகிய, தொழிற்பெயர் - முதனி
லைத்தொழிற்பெயர்களும், ஏவல்வினை- ஏவல்வினைகளும், யவ்வன்
மெய்- யகரமொழிந்தமெய்கள், வரின்- வருமாயின், நனி - பெரு
ம்பாலும், உ - உகரச்சாரியையை, உறும் - இறுதிக்கட்பொருந்து
ம், சிலவேவல்- சிலவேவல்வினைகள், சில்வழி- சிலவிடங்களில், உ
றா- அவ்வுகரச்சாரியையைப் பொருந்தாவாம், எ-று. (பொ-ரை)
ய ர ழக்களையொழிந்த வெட்டொற்று மிறுதியாகு முதனிலைத்
தொழிற்பெயரு மேவல்வினையு மேல்விதந்த யகரமொழிந்தமெ
ய்வருமாயிற் பெரும்பாலு முகரச்சாரியையை யிறுதிக்கட்பொ
ருந்தும் சிலவேவல்வினை யவ்வுகரச்சாரியையைப் பொருந்தாசி
லவிடங்களின். எ-று. ※ ஏவல்வினையோ டெண்ணி னமையின்
முதனிலைத் தொழிற்பெய ரென்பது பெற்றாம். [உ-ம்] உரிஞுக்
கடிது- உண்ணுக்கடிது- பொருநுக்கடிது- திருமுக்கடிது - தின்
னுக்கடிது- நீண்டது- வலிது- (எ-ம்) கடுமை-நீட்சி-வன்மை- (எ-
ம்) தொழிற்பெயர்க ளிருவழியு முகரம்பெற்றன. பிறவுமன்
ன. உரிஞுகொற்றா- உண்ணுகொற்றா- பொருநுகொற்றா - திரு
முகொற்றா- தின்னுகொற்றா- நாகா- வரவா - என வேவல்வினையு
கரம்பெற்றன. பிறவுமன்ன. உரிஞு - உண்ணு - என வருமொ
ழியின்றி யுகரம்பெறுதலும், மணலைவாரு - சருகைவாரு - எனச்
சிறுபான்மை விலக்கியவீ றுகரம்பெறுதலு முளவென்பார் நனி

யென்றும் யகரம்வருமொழிக்கிகரம்விதித்தலின் அதனோடுபுண
ரு மிந்நிலைமொழியிறுதி யுகரம்பெறுமென்பார் யவ்வன்மெய்
யென்றும், உண்ணுகொற்று- உண்கொற்று - என உகரம்பெற்று
ம்பெறுதும் வருவனவும், உரிஞுகொற்று - என உகரம்பெற்றே
வருவனவுமுளவென்பார் சிலவேவனுரு சில்வழியென்றுங் கூறி
னர். எவனுருவென்னது- எவற்குருவெனப் பாடமோதுவாரு
முளராலோவெனின், உறுமென்னும் வினைக்குத தொழிற்பெ
யர்களையு மேவல்வினைகளையும் வினைமுதலாக்கிக்கூறுதலானு மத
னைமறுத்த வுருவென்னும் பன்மைவினைக் கொருமையுகரம் வி
னைமுதலாகாமையானு மது பாட மன்றென்க. (௪)

(௨௱௮) நவ்விறு தொழிற்பெயர்க் கவ்வுமாம் வேற்றுமை *

(எ-ன்) நகரவீற்றுத் தொழிற்பெயர்க் கெய்தியதன்மேற் சி
றப்புவிதியுணர்- ற்று. (ப-ரை) நவ்விறு - நகரமிறுதியாகிய, தொ
ழிற்பெயர்க்கு- முதனிலைத்தொழிற்பெயர்க்கு, அவ்வுமாம் - உகர
ச்சாரியையல்லாமலும் அகரச்சாரியையுமாகும், வேற்றுமை- வே
ற்றுமைக்கண். எ-று (பொ-ரை) நகரமிறுதியாகு முதனிலைத் தொ
ழிற்பெயர்க்கு உகரச்சாரியையே யன்றி அகரச்சாரியையுமாய்வே
ற்றுமைக்கண். எ-று. [உ-ம்] பொருநக்கடுமை- நன்மை - வன்
மை- எனவரும். பிறவுமன்ன. பொருநதலொருவர் மற்றொரு
வர்போல வேடங்கொள்ளும் பொருநரது தொழிலாதலி னொத்
தலென்னும் பொருட்டு. (௫)

(௨௱௯) ணனவல் லினம்வரட் டறவும் பிறவரி - னியல்பு
மாகும் வேற்றுமைக் கல்வழிக் - கனைத்துமெய் வரினு மியல்பா
கும்மே. *

(எ-ன்) மேலைச்சூத்திரங்காறு மெய்யீற்றுட் பொதுப்புணர்ச்
சி கூறியவற்றிற் கேயுரிய ஞகர நகரங்களை யொழித் தேனையவற்றி
ற்கு முறையே தனித்தனிச் சிறப்புவிதி கூறுவான்றொடங்கி ணக
ர னகரவீறு புணருமாறுணர்- ற்று. (ப-ரை) ணன- ணகார னகார
ங்கள், வேற்றுமைக்கு- வேற்றுமைக்கண், வல்லினம்- வன்கணம், வ
ர- வந்தால், டறவும்- முறையே டகாரமும் றகாரமும், பிற- மெல்
லினமும் இடையினமும், வரின்- வந்தால், இயல்பும்- இயல்பும்,
ஆகும்- ஆம், அல்வழிக்கு- அல்வழிக்கண், அனைத்துமெய் - மூவி
னமெய்களும், வரினும்- வந்தாலும், இயல்பாகும்- இயல்பேயாகு
ம், எ-று. (பொ-ரை) ணகார னகாரங்கள் வேற்றுமைக்கண் வல்லி
னம்வந்தால் முறையே டகாரமும் றகாரமுமாம் மெல்லினமு
மிடையினமும்வந்தா லியல்பாம் அல்வழிக்கண் மூவினம்வந்
தாலு மியல்பேயாம். எ-று. ❀ [உ-ம்] சிறுகட்களிறு- பேரம
ர்க்கட்பேதை- (எ-ம்) பொற்றட்டு- பொற்றகடு - (எ-ம்) வேற்று

மைக்கண் வல்லினம்வரத் திரிந்தன. மண்-பொன்-ஞாற்சி-நீட்சி-மாட்சி யாப்பு-வன்மை-எனவேற்றுமைக்கண் மெல்லினமு மிடையினமும்வர வியல்பாயின. மண்- பொன்- கடிது- சிறிது- தீது- பெரிது ஞான்றது-நீண்டது-மாண்டது-யாது வலிது- (எ-ம்) உண்டான்கொற்றன்-ஞெள்ளன் வளவன் (எ-ம்) அல்வழிக்கண் மூவினமும்வர இயல்பாயின. பிறவுமன்ன ஒப்பின்முடித்தலா னகரமு முடன்கூறினார். இவ்வாறுபின்வருவனவு மன்ன. (௬)

(உ௱௰) குறிலணை வில்லா ணனக்கள் வந்த - நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே. *

(எ-ன்) ணகார னகார வீற்று ளொருசார னவற்றிற்கெய்தி யதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்த லுதலிற்று. (ப-ரை) குறில்- தனிக்குறிலொன்றனையும், அணைவில்லா- சாராமல் ஒருமொழி தொடர்மொழிகளைசசார்ந்த, ணனக்கள்- ணகார னகார மெய்களானவை, வந்த- வருமொழிக்குமுதலாகவந்த, நகரம்- நகரமானது, திரிந்துழி-மயக்கவிதியில்லாமையிலே திரிந்தவிடத்து, கேடு- கெடுதலை, நண்ணும்-பொருந்தும், எ-று. (பொ-ரை) தனிக்குறிலொன்றனையுமொழிந் தொருமொழி தொடர்மொழிகளைச்சார்ந்த ணகார னகாரங்கள் வருமொழிக்கு முதலாகவந்த நகரம் மயக்கவிதியின்மையிற் றிரிந்தவிடத் தியல்பாகாது கெடுதலைப்பொருந்தும். எ-று ❁ [உ-ம்] பாணன்று - தூணன்று - பசுமணன்று- (எ-ம்) நன்மை (எ-ம்) அரசனல்லன் - செம்பொனன்று - (எ-ம்) நன்மை (எ-ம்) இருவழியுங்கெட்டன. (எ)

(உ௱௰௧) சாதி குழூஉப்பரண் கவண்பெய ரிறுதி- யியல்பாம் வேற்றுமைக் குணவெண் சாண்பிற - டவ்வா கலுமா மல்வழி யும்மே. *

(எ-ன்) ணகார வீற்றுட் சிலவற்றிற்கு வேற்றுமைக்கணெய்தி யதுவிலக்கலுஞ் சிலவற்றிற் கல்வழிக்கணெய்திய தன்மேற் சிறப்புவிதியு முணர் - ற்று. (ப-ரை) சாதிப் (பெயர்) - சாதிபற்றி வரும்பெயர்களுக்கும், குழூஉப் (பெயர்)- திரள்பற்றிவரும் பெயர்களுக்கும், பரண்கவண்பெயர்- பரண்கவணென்னும்பெயர்களுக்கும், இறுதி- ஈற்றுணகரமானது, வேற்றுமைக் (கும்) - வேற்றுமைக்கண்ணும், இயல்பாம்- வல்லினம்வந்தா லியல்பாகும், உணவெண் (பெயர்) - உணவிற்குரிய வெள்ளின் றிரிசொல்லாகிய வெண்ணென்னும் பெயருக்கும், சாண் (பெயர்) - சாணென்னும் நீட்டலளவைப்பெயருக்கும், (இறுதி) - ஈற்றுணகரமானது, அல்வழியும்- அல்வழிக்கண்ணும், டவ்வாகலுமாம் - வல்லினம்வந்தால் திரிந்து டகரமாதலும் பொருந்தும், எ-று, (பொ-ரை) சாதி

பற்றியும் திரள்பற்றியும்வரும் பெயர்களும் பரண்கவணென்னும் பெயர்களுமானவற்றினிறுதி ணகரம் வேற்றுமைக்கண்ணும்வல்லினம்வந்தாலியல்பாம் எண்ணலளவையன்றி யுணவிற்குரியவெள்ளின் றிரிசொல்லாய வெண்ணென்னும் பெயருஞ் சாணென்னு நீட்டலளவைப்பெயரும் வல்லெழுத்துகள்வரிற் றிரிந்து டகரமாகலும் பொருந்துமல்வழிக்கண்ணும். எ-று. ❁ அல்வழிக்கணிறந்தது தழீஇய வெச்சவும்மையை வேற்றுமைக்கண்ணுங்கூட்டுக, [உ-ம்] பாண்- உமண்- குடி- சேரி- தோட்டம்- பாடி- (எ-ம்) அமண்குடி சேரி- தோட்டம் பாடி- (எ-ம்) பரண்கால்- கவண்கால்- (எ-ம்) வேற்றுமைக்கண்ணு மியல்பாயின. எட்கடிது- சிறிது- தீது- பெரிது (எ-ம்) சாட்கோல் - (எ-ம்) அல்வழிக்கண்ணுந் திரிந்தன. டவ்வாகலுமாமென்னு மிறந்தது தழீஇய வெச்சவிழிவுசிறப்பும்மையான், எண்கடிது- சாண்கோல் - என இயல்பாதலே வலியுடைத்தென்க. பிறவென்றமிகையானே வேற்றுமைக்கண்- பாணக்குடி என அகரச்சாரியைபெறுதலும், அட்டூண் பிழனி- என்னுமியல்பும், மண்குடம்- மட்குடம்- என்னு முறழ்வும் இருவழிக்கண்ணுமின்னும் ணகரவீற்று ளமையாதனவுளவே லவையுங்கொள்க. சாதியுங் குழூவும் ஆகுபெயரா யவற்றையுடையராய வுயர்திணைப் பொருளை யுணர்த்தி நின்றன வேனுந் தெய்வமென்றாற்போலச் சொல்லா னஃறிணையாதலிற் பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்வலிவரினியல்பாமென்பதனுளடையாவாயின. மேல்வரும்னஃகான்கிளைப்பெயருமது(அ)

(௨௱௰௨) னஃகான் கிளைப்பெய ரியல்பு மஃகா- னடைவு
மாகும் வேற்றுமைப் பொருட்கே. ❋

(எ-ன்) னகரவீற்றுச் சாதிப்பெயர்க்கு வேற்றுமைக்கணெய்தியது விலக்கலும் பிறிதுவிதி வகுத்தலு நுதலிற்று. (ப-ரை) னஃகான்- னகரத்தையிறுதியி லுடைய, கிளைப்பெயர்-சாதிப்பெயர், இயல்பும்- வல்லினம்வர வீறு திரியாதியல்பாதலும், அஃகானடைவும் - அகரச்சாரியைபெறுதலும், வேற்றுமைப்பொருட்கு- வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண், ஆகும்- ஆகும், எ-று. (பொ-ரை) னகரவீற்றுச் சாதிப்பெயர்வல்லினம்வர வீறுதிரியாதியல்பாதலும் அகரச்சாரியைபெறுதலுமாம் வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண். எ-று. ❁ [உ-ம்] எயின்குடி- எயினக்குடி - சேரி - தோட்டம்- பாடி - எனவரும். பொருட்கே யென்றமிகையானே, எயினமரபு- எயினவாழ்வு- எயினவணி - என ஏனைக்கணம்வரின் அகரச்சாரியை பெறுதலும், எயினக்கன்னி- யெயினப்பிள்ளை- எயினமன்னன்- என அல்வழிக்க ணகரச்சாரியை பெறு

பு- (எ-ம்) - தேன்மலர் தேமலர்- (எ-ம்) தேன்குடம் - தேக்குடம்- தேங்குடம்- (எ-ம்) வேற்றுமைக்கண் வந்தன. பிறவுமன்ன. தேனென்பது பலபொருளொருசொல்லாதலின்மணங்கமழ் சோலையென்னும் பொருட்டாய்த் தேங்கமழ்சோலையென இவ்விகாரங்களேற்றுவருவனவுங் கொள்க. (௰௧)

(௨௱௰௫) மரமல் லெகின்மொழி யியல்பு மகர-மருவ வலி மெலி மிகலு மாகும். ✱

(எ-ன்) எகினென்னுஞ் சொற்கு வேற்றுமைக்கண்ணே வல்லினம்வரின் டறவுமென மெய்திரிதலை விலக்கலும் அகரமருவவென்றமையின் அச்சூத்திரத்தால் இருவழிக்கண்ணும் மெய்திரிதலை விலக்கிப் பிறிதுவிதிவகுத்தலும் வருவல்லினத்திற்கு இயல்பினும் விதியினு மென்னுஞ் சூத்திரத்தானெய்தியதன்மேற் சிறப்புவிதியுமுணர்-ற்று. (ப-ரை) மரமல் - மரமல்லாத, எகின்மொழி- அன்னத்தை யுணர்த்து மெகினென்னுஞ் சொல, இயல்பும் வேற்றுமையிலும் வல்லினம்வர இறுதியியல்பாதலும், அகரமருவ- இருவழியிலும் அகரச்சாரியைபொருந்த, வலிமெலிமிகலும்-வல்லெழுத்தாவது அதற்கு இனமாவதுமிகுதலும், ஆகும் ஆகும், எ-று (பொ-ரை) மரமன்றிப் பறவையாய அன்னத்தை யுணர்த்து மெகினென்னுஞ்சொல் வேற்றுமைக்கண்ணும் வல்லினம்வர இறுதியியல்பாதலுமிருவழியும் அகரச்சாரியையைப்பொருந்த வரும்வல்லெழுத்தாதல அவற்றிற் கினமாதல் மிகுதலுமாம். எ-று. ❁ [உ-ம்] எகின்கால் சிறை-தலை-புறம்- எனவேற்றுமைக்கண்ணுமியல்பாயிற்று. எகினப்புள்-எகினம்புள்- (எ-ம்) எகினக்கால்-எகினங்கால்- (எ-ம்) இருவழியும் அகரமருவ வலிமெலிமிகுந்தன. அகரமருவுதற்கு வருமொழிவரையாமையின் நாற்கணமுங்கொள்க. எகினமாட்சி-வாழ்க்கை- அழகு- எனவரும். பிறவுமன்ன. (௰௨)

(௨௱௰௬) குயினூன் வேற்றுமைக் கண்ணு மியல்பே. ✱

(எ-ன்) குயினூனென்னுஞ் சொற்கட்கு வல்லினம்வரின் டறவுமென மெய்திரிதலை விலக்கனுதலிற்று. (ப-ரை) குயின் - குயிலென்னும்பெயரும், ஊன்- ஊனென்னும்பெயரும், வேற்றுமைக்கண்ணும்- வேற்றுமையினிடத்தும், இயல்பு - இயல்பாகும், எ-று. (பொ-ரை) குயிலென்னும்பெயரும் ஊனென்னும் பெயரும் வல்லினம்வரி னல்வழிக்கணியல்பாதலேயன்றி வேற்றுமைக்கண்ணு மியல்பாம். எ-று ❁ [உ-ம்] குயின்கடுமை - ஊன்கடுமை- சிறுமை- தீமை- பெருமை- எனவரும். குயின்மேகம். (௰௩)

(௨௱௰௭) மின்பின் பன்கன் றொழிற்பெயரனைய - கன்னவ் வேற்று மென்மையோ டுறழும். ✱

(எ-ன்) மின்பின் பன்கன்னென்னு நான்குசொற்கும் னனவல்லினம்வரட் டறவுமென்னுஞ் சூத்திரத்தா னெய்தியது விலக்கிப் பிறிதுவிதிவகுத்தலு மீண்டகரச்சாரியை புணருமவ்வலி னத்திற்கு இயல்பினும் விதியினு மென்னுஞ் சூத்திரத்தா னெய்தியதன்மேற் சிறப்புவிதியு முணர்-ற்று. (ப-ரை) மின் பின் பன் கன் - மின்முதலியநான்குசொற்களும், தொழிற்பெயரனைய - தொழிற்பெயர்போல யகரமல்லாத மெய்களின்வரின் உகரச்சாரியைபொருந்தப், கன் - இவற்றுட்கன்னென்னுஞ்சொல், அவ்வேற்று - அகரச்சாரியையும்பெற்று, மென்மையோடுறழும் - வருகிற வல்லெழுத்தாவது அதற்கு இனமாவது மிகப்பெறும் எ-று. (பொ-ரை) இந்நான்கு சொல்லுந் தொழிற்பெயர்போல யவ்வன்மெய்வரி னுகரச்சாரியையைப் பொருந்தும் இவற்றுட் கன்னென்னுஞ்சொல் உகரச்சாரியையேயன்றி அகரச்சாரியையும் பெற்று வல்லினம்வந்தால் வருமெழுத்தாதல் அதற்கினமாதல் மிகப்பெறும். எ-று. ❀ அவ்வுமென்னு மும்மையும் பெறுமென்னு முற்றும் விகாரத்தாற் றொக்கன. [உ-ம்] மின்னுக்கடிது - பின்னுக்கடிது - பன்னுக்கடிது - கன்னுக்கடிது - நன்று - வலிது - (எ-ம்) கடுமை - நன்மை - வன்மை - (எ-ம்) கன்னத்தட்டு - கன்னந்தட்டு - (எ-ம்) கன்னத்தூக்கு - கன்னந்தூக்கு - (எ-ம்) அல்வழிவேற்றுமைக்கண் முறையே வந்தன. பிறவுமன்ன. கன்னென்பது சிறுதராசுத்தட்டு. முன்னென்னுஞ்சொல்லை முன்னமென்றாற் போல இதனைக் கன்னமென்றுங் கூறுப. (௰௪)

(௨௱௰௮) தன்னென் னென்பவற் றீற்றுனவ் வன்மையோ டுறழு நின்னீ றியல்பா முறற்கே. ❀

(எ-ன்) தன்னென்றும் என்னென்றும்வரும் விகாரமொழிகட்கு னனவல்லினம்வரட் டறவுமென வெய்திய தொருவாற்றான்விலக்கலும் நின்னென்றுவரும் விகாரமொழிக் கெய்தியது விலக்கலு நுதலிற்று. (ப-ரை) தன்னென் னென்பவற்று - தன் என் என்பவைகளினுடைய, ஈற்று - இறுதியிலுள்ள, ன - னகரமெய்யானது, வன்மையோடுறழும் - வல்லினம்வரிற் பொதுவிதியால் றகரமாகத்திரிதலும் அவ்விதியேலா தியல்பாதலுமாய், நின் - நின்னென்பதனது, ஈறு - இறுதியிலுள்ள னகரமெய்யானது, இயல்பாம் - வல்லினம்வரிற் றிரியா தியல்பேயாகும், எ-று (பொ-ரை) தானென்பது - தன்னென்றும் யானென்பது - என்னென்றும் வரும் விகாரமொழிகளி னீற்றுனகரம் வல்லினம்வரிற் பொதுவிதியானே றகரமாய்த்திரிதலும் அவ்விதியேலா தியல்பாதலுமாம் நீயென்பது - நின்னெனநின்ற விகாரமொழி யீற்று னகரம் வல்

வினம்வரித் திரியா தியல்பேயாம். எ-று. ✽ வன்மையென்றது-னகரத்திற் கினமாய றகரத்தை. [உ-ம்] தன்பகை - தற்பகை - என்பகை - எற்பகை - (எ-ம்) நின்பகை - (எ-ம்) வரும். உறவேயென்ற மிகையானே, மின்பின்முதலியன - மின்கடிது - மின்மிகிமை- என இருவழியுஞ் சாரியைப்பேறுந் திரிபுமின்றி வருதலும் மான்குளம்பு- அழன்கை- எனவேற்றுமைக்கண் விதவாதன வியல்பாதலும் வரிற்கொள்ளும் எனச் செயினென்னும் வாய்பாட்டுவினையெச்சம்பொதுச்சூத்திரத்தானியல்பாகாதுதிரிதலும் இன்னும் னகரவீற்று ளமையாதனவுளவே லவையுங் கொள்க. நின்னென்பது விகாரமொழியாதலிற் பொதுப்பெய ருயர்திணைப் பெயர்களீற்றுமெய் வலிவரினியல்பா மென்பதனு ளடங்காதாயிற்று. (௰௫)

(உ௱௰௯) மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்- வன்மைக் கினமாத் திரிபவு மாகும். ✽

(எ-ன்) மகரவீறு புணருமா றுணர்- ற்று. (ப-ரை) மவ்வீறு -மகரவீற்றுச்சொற்கள், ஒற்று- இறுதியிலுள்ளமகரமெய், அழிந்து - கெட, உயிரீறொப்பவும் - விதியுயிரீறுநின்று இயல்புயிரீறுபோலப் புணர்வனவும், வன்மைக்கினமாத்திரிபவும் - வல்லினம்வரிற்கெடாது அவற்றிற்கு இனமாகத் திரிவனவும், ஆகும்- ஆகும், எ-று. (பொ-ரை) மகர வீற்றுச்சொற்க ளிறுதி மகரங்கெட விதியுயிரீறாய்நின்று இயல்புயிரீறுபோல வுயிர்வரினுடம்படு மெய்தோன்றவும் வல்லினம்வரின் அவைமிகவும் மெல்லினமும் இடையினமும்வரின் இயல்பாகவும்புணர்வனவும் வல்லினம்வரிற்கெடாதவற்றிற் கினமாய்த் திரிவனவுமாம் எ-று. ✽ [உ-ம்] வட்டவாழி- வட்டக்கடல்- நேமி- வாரி- (எ-ம்) மரவடி- மரக்கால்- நார் -வேர்- (எ-ம்) நாங்கடியம்- அமிங்களிறு - (எ-ம்) தங்கை - (எ-ம்) முறையே யிருவழியும் வந்தன. பிறவுமன்ன. வன்மைக்கினமாத் திரியுமென்றமையின் அருத்தாபத்தியால், நாம்பெரியம்- எனப்பகரம் வரும்வழித்திரியா தென்பது பெற்றாம். (௰௬)

(உ௱உ௰) வேற்றுமை மப்போய் வலிமெலி யுறழ்வு - மல்வழி யுயிரிடை வரினியல் பும்முள. ✽

(எ-ன்) சிலமகரவீற்றிற்கு மேலைச்சூத்திரத்தா னெய்திய திரிந்துபடாமற் காத்தலும் விலக்கலும் வரும் வல்லினத்திற்கு இயல்பினும் விதியினு மென்னுஞ் சூத்திரத்தா னெய்திய தன்மேற் சிறப்புவிதியு முணர் - ற்று. (ப-ரை) வேற்றுமை- வேற்றுமைக்கண், ம- மகரவிறுதி, போய்- கெட, வலிமெலியுறழ்வும்- வல்லினமாவது அவற்றிற்கு இனமாவது மிகுதலும், அல்வழி- அல்வழிக்கண், உயிர்- உயிரும், இடை - இடையினமும், வரின் - வந்தால்,

தின் கண்ணவன்றி யகத்தின்கண்ணவாகலின் ஏழாம்வேற்றுமைத் தொகை. (பி-க)

(௨௱௨௩) ஈமுங், கம்மு முருமுந் தொழிற்பெயர் மானு முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே ※

(எ-ன்) இம்மூன்றுசொற்கு மல்லீற்றொற்றழிந் தென்னுஞ் சூத்திரத்தா னெய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத் ததுதலிற்று (ப-ரை) ஈமுங்கம்மு முருமும்- ஈம் கம் உரும் என்கின்ற மூன்றும், தொழிற்பெயர்மானும்- இருவழியிலுந்தொழிற்பெயர்போலயகரமல்லாதமெய்கள்வந்தால் உகரச்சாரியை பெற்றுமுடியும், முதலன- இவற்றுள்ளேமுதற்கணின்ற ஈமுங்கம்மும், வேற்றுமைக்கு- வேற்றுமைக்கண், அவ்வும்பெறும்- உகரச்சாரியையல்லாமலும் அகரச்சாரியையும் பெறும், எ-று. (பொ-ரை) இம்மூன்றுசொல்லு மிருவழியு முதனிலைத்தொழிற்பெயர்போல யவ்வொழிந்தமெய்வரி னுகரச்சாரியைபெற்றுமுடியும் இவற்றுண் முதற்கணின்ற ஈமுங்கம்மும் வேற்றுமைக்கண் உகரச்சாரியை யன்றி அகரச்சாரியையும் பெறும். எ-று. ※ இவற்றுட் கம்மென்பது பலபொருளொருசொல்லாதலின் எப்பொருளை யுணர்த்திற்றெனினு மிவ்விதிகொள்க. [உ-ம்.] ஈமுக்கடிது- கம்முக்கடிது- உருமுக்கடிது- நீண்டது- வலிது- (எ-ம்) கம்மை- நீட்சி- வன்மை- (எ-ம்) ஈமக்குடம்- கம்மக்குடம்- (எ-ம்) முறையே காண்க. பிறவுமன்ன. கம்மென்பது- கம்மியரதுதொழில். அத்தொழிலாற் சமைந்த குடமென்க. இது- முதனிலைத்தொழிலன் றாதலின் மானுமென்றார். (உ-ய)

(௨௱௨௪) யரழ முன்னர்க் கசதப வல்வழி யியல்பு மிகலு மாகும் வேற்றுமை - மிகலு மினத்தோ டுறழ்தலும் விதிமேல். ※

(எ-ன்) யரழ மெய்யீற்றுமுன் கசதபக்கள் புணருமாறுணர்- ற்று. (ப-ரை) யரழமுன்னர்- யகர ரகர ழகரமெய்களின் முன், கசதப- ககர சகர தகர பகரங்கள்வரின், அல்வழி- அல்வழியில், இயல்பும் - இயல்பாதலும், மிகலும் - மிகுதலும், வேற்றுமை- வேற்றுமையில், மிகலும் - மிகுதலும், இனத்தோடுறழ்தலும்- வல்லினமாவது மெல்லினமாவது மிகுதலும், விதியாகும் விதியாகும், எ-று. (பொ-ரை) இம்மூன்றீற்றின்முன்னுங் கசதபக்கள்வரின் அல்வழிக்கணியல்பாதலு மிகுதலும் வேற்றுமைக்கண் மிகுதலும் வல்லினமாதன் மெல்லினமாதன் மிகுதலும் விதியாம். எ-று. ※ [உ-ம்] வேய்கடிது- வேர்கடிது வீழ்கடிது- (எ-ம்) மெய்க்கீர்த்தி - போய்க்கொண்டான்- கார்ப்பருவம்- பூழ்ப்பறவை (எ-ம்) நாய்க்கால் தேர்க்கால்- பூழ்க்கால்- (எ-ம்) வேய்க்குழல்- வேய்ங்குழல்- ஆர்க்கோடு- ஆர்ங்கோடு- (எ-ம்) முறையே வந்தன. பிறவுமன்ன. மேலென்ற மிகையானே, “வாய்புகு வ

தனினுங்கால்பெரிது கெடுக்கும்." என வேற்றுமைக்கணியல்பாதலும், பாழ்க்கிணறு - பாழ்ங்கிணறு - எனப் பண்புத்தொகைக்கணாதலும் இன்னுமமையாதன வுளவேலவையுங்கொள்க. (உக)

(௨௱௪௫) தமிழவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே - தாழுங் கோல்வந் துறுமே லற்றே. *

(எ-ன்) இவ்விருசொற்கு மெய்தாத தெய்துவித்த னுதலிற்று. (ப-ரை) தமிழ் - தமிழென்கிறசொல், வேற்றுமைக்கு - வேற்றுமைக்கண்ணே நாற்கணமும்வந்தால், அவ்வுறவும் - அகரச்சாரியை பொருந்தவும், பெறும் - பெறும், தாழும் - தாழென்னுஞ் சொல்லும், கோல் - கோலென்னுஞ்சொல்லானது, வந்து - வந்து, உறுமேல் - பொருந்துமாயின், அற்று - அவ்வகரச்சாரியை பெறும், எ-று. (பொ-ரை) தமிழென்னுஞ்சொல் நாற்கணமும்வரின் வேற்றுமைக்கண் அகரச் சாரியையைப் பொருந்தவும் பெறும் தாழென்னுஞ் சொல்லும் கோலென்னுஞ் சொல்வந்து பொருந்துமாயின் அவ்வகரச்சாரியையைப் பெறும். எ-று. ❁ தமிழிற்கு வருமொழி வரையாமையின் நாற்கணமு மென்றும். [உ-ம்] தமிழப்பல்லவதரையர் - தமிழநாகன் - தமிழவளவன் - தமிழவரசன் - (எ-ம்) தாழக்கோல் - (எ-ம்) வரும். பிறவுமன்ன. அவ்வுறவுமென்னு மெதிரதுதழீஇய வெச்சவும்மையானே தமிழின் சுவையென இன்சாரியைபெறுதலுங் கொள்க. தமிழையுடைய பல்லவதரையர் தாழைத்திறக்குங்கோல் எனவிரியும். தாழசகோலெனினும் திறவுகோலெனினுமமையும். தாழாயகோலெனவொரு பொருட் கிருபெய ரொட்டாக்கவு மொன்று. (உஉ)

(௨௱௪௬) கீழின்முன் வன்மை விகற்பமு மாகும். *

(எ-ன்) கீழென்னுஞ் சொன்முன்வரும் வல்லினத்திற்கு யரழ முன்ன ரென்னுஞ் சூத்திரத்தா னெய்தியது பெரும்பாலும் விலக்க னுதலிற்று. (ப-ரை) கீழின்முன் - கீழென்கிற சொல்லின் முன்வருகிற, வன்மை - வல்லினம், விகற்பமுமாகும் - ஒருகாலியல்பாகியும் ஒருகான்மிக்கும் வருகிற விகற்பத்தையும் பொருந்தும், எ-று. (பொ-ரை) கீழென்னுஞ் சொன்முன்வரும் வல்லினம் ஒருகாலியல்பாகியுமொருகான்மிகுத்தும் வரும் விகற்பத்தையும் பொருந்தும். எ-று. ❁ [உ-ம்] கீழ்குலம் - கீழ்க்குலம் - கீழ்சாதி - கீழ்ச்சாதி - என வரும். பிறவுமன்ன. இழிவு சிறப்பும்மையான் இவற்றுளியல்பே சிறப்புடைத்தென்க. கீழ்மையென்னும் பண்பொடு புணர்தல் பதவியலுண் முடிந்து போதலையிற் "கீழிருந்துங் கீழல்லார் கீழல்லவர்." என்றற்போலக் கீழென்பது பண்பாகுபெயராய் இருதொடருமொட்டிப்பண்புத்தொகையாமென்க.

[ ௯ள ]

(௨௱௨௭) லள வேற்றுமையிற் றடவு மல்வழி - யவற்றோ டுறழ்வும் வலிவரி னாமெலி- மேவி னணவு மிடைவரி னியல்பு- மாகு மிருவழி யானு மென்ப. ✻

(எ-ன்) லள வீறு புணருமா றுணர் - ற்று. (ப-ரை) லள - லகர ளகரமாகிய இரண்டுமெய்யீறுகளும், வலிவரின் - வல்லினம் வந்தால், வேற்றுமையில்- வேற்றுமைக்கண், றடவும் - முறையே றகார டகாரமெய்களும், அல்வழி - அல்வழிக்கண், அவற்றோடுறழ்வும்- றகார டகாரங்களுடனே யுறழ்வனவும், ஆம் - ஆகும், இருவழியானும்- இருவழிக்கண்ணும், மெலிமேவின்- மெல்லினம்வந்தால், னணவும் - முறையே னகார ணகாரமெய்களும், இடைவரின்- இடையினம்வந்தால், இயல்பும்- இயல்பும், ஆகும்- ஆகும், என்ப- என்றுசொல்லுவர்புலவர், எ-று. (பொ-ரை) லகார ளகாரமானவிரண்டீறும் வல்லினம்வரின் வேற்றுமைக்கண் முறையே றகார டகாரங்களாம் அல்வழிக்கண்ணே றகார டகாரங்களுடனே யுறழ்வனவாம் இருவழிக்கண்ணு மெல்லினம்வரி னகார ணகாரங்களாம் இடையினம்வரின் இயல்பாமென்று சொல்லுவர்புலவர் எ-று. ❁ [உ-ம்] கற்றுறை-முட்டுறை- (எ-ம்) கல்குறிது-கற்குறிது- முள்குறிது- முட்குறிது - (எ-ம்) கன்ஞெரிந்தது - முண்ஞெரிந்தது- (எ-ம்) கன்ஞெரி - முண்ஞெரி- (எ-ம்) கல்யாது- முள்யாது- (எ-ம்) கல்யாப்பு முள்யாப்பு- (எ-ம்) முறையே வந்தன. பிறவுமன்ன. அல்வழியவற்றோ டுறழ்வுமென்றோனும் இவற்றோ ரமைந்ததெனவிலக்கிய தகரம்வரின் வற்புழிக் கோடலா னுறழ்ச்சியு ளியல்பொழித்துத் திரிபொன்றுமே பெறுதல்கொள்க. கற்றீது முட்டீது எனவரும். (௨௪)

(௨௱௨௮) குறில்வழி லளத்தவ் வணையி னாய்த- மாகவும் பெறூஉ மல்வழி யானே. ✻

(எ-ன்) இவ்விரண்டீற்றிற்கு மேலைச்சூத்திரத்தானெய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர் - ற்று. (ப-ரை) குறில்வழி- தனிக்குறிலின்பின்னின்ற, லள - லகர ளகர மெய்களானவை, அல்வழியான்- அல்வழிக்கண், த- தகரமானது, அணையின்- வருமாயின், ஆய்தமாகவும்- றகர டகரங்களாகத் திரிதலல்லாமலும் ஆய்தமாகத்திரிதலையும், பெறூஉம் - பொருந்தும், எ-று. (பொ-ரை) தனிக்குறிலின் பின்னின்ற லகர ளகரங்கள் அல்வழிக்கண்ணே தகரம்வருமாயின் றகர டகரங்களாகத்திரிதலேயன்றி யாய்தமாகத் திரிதலையும் பொருந்தும் எ-று. ❁ [உ-ம்] கஃறீது- முஃடீது- எனவரும்.

(௨௱௨௯) குறில்செறி யாலள வல்வழி வந்த - தகரந் திரிந்தபிற் கேடுமீ ரிடத்தும்- வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரி- னியல்புந் திரியு மாவன வுளபிற. ✻

(இ-ள்) லள வேற்றுமையிற் றடவுமென்னுஞ் சூத்திரத்தா னெய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்த னுதலிற்று. (ப-ரை) தூறில்செறியா - தனிக்குறிலொன்றனையுஞ் சாராத, லள - லகார ளகாரமெய்களானவை, அல்வழி - அல்வழிக்கண், வந்த - வருமொழிக்கு முதலாய்வந்த, தகரம் - தகரமானது, திரிந்தபின் - திரியுமிடத்து, கேடும் - கெடுதலும், ஈரிடத்தும் - இருவழிக்கண்ணும், வரு - வருமொழிக்குமுதலாய்வந்த, ந - நகரமானது, திரிந்தபின் - திரியுமிடத்து, மாய்வும் - கெடுதலும், வலி - வல்லெழுத்து முதன்மொழி, வரின் - வந்தால், இயல்புந்திரிபும் - அல்வழிக்கண் ணுறழா தியல்பாதலுந் திரிதலும் வேற்றுமைக்கண்ணே திரியா தியல்பாதலும் ஆவனவுள - பொருந்துவனவுள, எ-று (பொ-ரை) தனிக்குறிலொன்றனையுஞ் சாராதுவரும் லகார ளகாரங்கள் அல்வழிக்கண்வந்த தகரந்திரியு மிடத்துக் கெடுதலும் இருவழிக்கண்ணும் வந்த நகரந்திரியு மிடத்துக் கெடுதலும் வல்லினம்வரின் அல்வழிக்கண்ணுறழா தியல்பாதலுந்திரிதலும் வேற்றுமைக்கட் டிரியா தியல்பாதலும் பொருந்துவனவுள. எ-று. ✻ திரியு முற்கெடுவனவற்றைத் திரிந்தபிற்கெடு மாய்வுமென்றமையிற் காலவழுவமைதி. [உ-ம்] தோன்றறீயன் - வேடீயன் (எ-ம்) தோன்றனல்லன் - வேணல்லன் - (எ-ம்) தோன்றனன்மை - வேணன்மை - (எ-ம்) கால்கடிது - மரங்கள்கடிய - (எ-ம் வேற்படைக் குமரன் - வாட்படைக் கையன் - (எ-ம்) "கால் குதித் தோடிக் கடல்புக மண்டி", "வாள்போழ்ந் தட்ட நீள்கழன் மறவர்." (எ-ம் முறையே காண்க. பிறவென்றமிகையானே, தோன்றறீமை - வேடீமை - என வேற்றுமைக்கண்ணுந் தகரந்திரியுமிடத்துக் கெடுதலும், காற்றுணை - தாட்டுணை - எனக் கெடாமையும், விற்படை - என உறழாதுதிரிதலும், கொல்களிறு - கொள்பொருள் - எனவினைத்தொகை யியல்பாதலும் இன்னு மிவ்விரண்டூற்றான் அமையாதன பிறவுங்கொள்க. இங்ஙன முயர்திணைச்சொல்லின்கட் காட்டியவிகாரங்கள் மயக்கவிதியின்மையிற் படுவனவாதலிற் சிலவிகாரமா முயர்திணையென்பதனு ளடங்காவென்க. (உசு)

(உ௱௩௰) லள விறுதொழிற்பெய ரீரிடத்து முவ்வுறு-வலிவரினல்வழி யியல்புமா வனவுள. ✻

(இ-ள்) விகுதிபெற்ற தொழிற்பெயர்க்கு முதனிலை திரிந்த தொழிற்பெயர்க்கும் வருவதோர் ஐயமறுத்தலு மொருவாற்றால் அல்வழியவற்றோ டிறப்புமென வெய்தியது விலக்கலு நுதலிற்று (ப-ரை) லளவிறுதொழிற்பெயர் - லகாரத்தை யிறுதியாகவுடைய விகுதிபெற்ற தொழிற்பெயரும் ளகாரத்தை யிறுதியாக வுடைய முதனிலை திரிந்த தொழிற்பெயரும், ஈரிடத்தும் - இருவழியினும்,

உயிரீறு- யகரமல்லாதமெய்கள்வந்தால் உகரம்பெறுவாம், வலி- மெலியிடையும், வரின்-வந்தால், அல்வழி-அல்வழிக்கண், இயல்புமாவன- உகரம்பெறா தியல்பாவனவும், உள- சிலவுள, எ-று (பொ-ரை) லகாரத்தையிறுதியாகவுடைய விகுதிபெற்ற தொழிற்பெயரும் ளகாரத்தையிறுதியாகவுடைய முதனிலைதிரிந்த தொழிற்பெயரும்முதனிலைத் தொழிற்பெயர்போல யவ்வன்மெய்வரி னுகரம்பெறுமோ பெறாவோ வென்றையுறற்க இருவழியுமுகரம் பெறுவாம் வலிமெலியிடைவரின் அல்வழிக்க ணுறழா தியல்பாவனவுஞ் சிலவுள. எ-று. ❁ [உ-ம்] ஆடல்சிறந்தது- ஆடற்சிறந்தது- ஆடனன்று- ஆடல்வலிது- (எ-ம்) ஆடற்சிறப்பு- ஆடனன்மை- ஆடல்வன்மை- (எ-ம் கோள்கடிது- கோட்கடிது- கோணன்று- கோள்வலிது- (எ-ம்) கோட்கடுமை- கோணன்மை- கோள்வன்மை- (எ-ம்) இருவழியு முகரம்பெறாது பொதுவிதியான் முடிந்தன. நடத்தல்கடிது- நடப்பித்தல்கடிது- எனச் சிலவுறழாது அல்வழிக்கணியல்பாயின. இறந்தது தழீஇய வெச்சவும்மையாமேன, பின்னல்கடிது பின்னற்கடிது- உன்னல்கடிது- உன்னற்கடிது - எனப் பொதுவிதியா னுறழ்தலேற்பருட்பாலவெனக. (உ௭)

(உ௱கக) வல்லேதொழிற்பெயர் ரிருவழியும்- பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம். ✻

(எ-ன்) லவேற்றுமையிற் றடவு மென்னுஞ் சூத்திரத்தா னெய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்த னுதலிற்று. (ப-ரை) வல் வல்லென்கிற சூதாடுகருவிப்பெயர், இருவழியும் இருவழிக்கண்ணும், தொழிற்பெயரற்று யகரமல்லாத மெய்கள்வந்தால் தொழிற்பெயர்போல உகரச்சாரியைபெறும், பலகைநாய்வரினும்- பலகைநாயென்கிற விருபெயர்வரினும் பிறபெயர்கள்வரினும், வேற்றுமைக்கு- வேற்றுமைக்கண், அவ்வுமாம் உகரச்சாரியை யல்லாமலும் அகரச்சாரியையும்பெறும், எ-று. (பொ-ரை) வல்லென்னுஞ் சூதாடுகருவிப்பெயர் யவ்வன்மெய்வரிற் றொழிற்பெயர்போல இருவழியுமுகரச்சாரியைபெறும் பலகைநாயென்னு மிருபெயர் வரினும் பிறபெயர்வரினும் வேற்றுமைக்கண் அகரச்சாரியையும் உகரச்சாரியையும் பெறும். எ-று. ❁ வரினுமென்னு மெதிரது தழீஇய வெச்சவும்மையாற் பிறபெயரென்பதூஉம் அவ்வுமென்னு மிறந்தது தழீஇய வெச்சவும்மையான் உகரச்சாரியையென்பதூஉம் பெற்றாம். [உ-ம்] வல்லுக்கடிது- நன்று- வலிது (எ-ம்) வல்லுக்கடுமை- நன்மை- வன்மை- (எ-ம்) வல்லப்பலகை- வல்லநாய்- வல்லப்புலி- வல்லக்குதிரை- (எ-ம்) வல்லுப்பலகை- வல்லுநாய்- வல்லுப்புலி- வல்லுக்குதிரை- (எ-ம்) முறையேகாண்க. வல்லினதுறை வனாந்த பலகை- வல்லினுநாய்- எனவும் விரியும். வேற்று

மைக்கென் றமையின் வல்லாயதாய்-என இருபெய் ரொட்டாய வழி யகரச்சாரியை பெறுமெனக்க, (௨௯)

(௨௱௬௨) நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லு-மல் வழி யானும் றகர மாகும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) நெல்லுஞ்செல்லுங் கொல்லுஞ் சொல்லும்- நென்முதலிய நான்குசொற்களி னீற்றுலகரமெய்யா னது, அல்வழியானும் அல்வழிக்கண்ணும், றகரமாகும்- பொது விதியாலுறழாது வேற்றுமைபோல றகர மெய்யாகத் திரியும், எ-று. (பொ-ரை) இந்நான்குசொல்லும் வல்லினம்வரிற் பொது விதியா னுறழாது அல்வழிக்கண்ணும் வேற்றுமைபோல றக ரமாய்த் திரிந்துமுடியும். எ-று ❁ [உ-ம்] நெற்-செற்-கொற்-சொற்-கடிது சிறிது தீது-பெரிது- எனவரும். செல்லென்பது -மேகம். கொல்லென்பது - குருயிர்குடித்த வென்றாற்போலக் கொல்லெனன்னு முயர்திணைப் பொருளை யுணர்த்தி நின்றதோர் அஃறிணைச்சொல்.

(௨௱௬௩) இல்லெ னின்மைச் சொற்கை யடைய- வன்மை விகற்பமு மாகா ரத்தொடு- வன்மை யாகலு மியல்புமாகும். (௨௧) *

(எ-ன்) இல்லென்னும் பண்புச்சொற்கு லள வேற் றுமையிற் றடவுமல்வழி யவற்றோ டுறழ்வுமென வெய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தலும் அவற்றின்முன் வரும் வல்லினத்திற்கு அல் வழி இ ஐ முன்னரயிரெனன்னுஞ் சூத்திரத்தானும் இயல்பினும் விதியினு மென்னுஞ் சூத்திரத்தானு மெய்திய திகந்து படாமற் காத்தலு நுதலிற்று (ப-ரை) இன்மை- இன்மைப் பண்பை யு ணர்த்துகின்ற, இல்லென்சொற்கு - இல்லென்கிறசொல்லுக்கு, ஐ - ஐகாரச்சாரியையானது, அடைய - பொருந்த, வன்மை - அவ்வி டத்துவருகிறவல்லினம், விகற்பமும் - விகற்பித்தலும், ஆகாரத் தொடு- ஆகாரச்சாரியை பொருந்த, வன்மையாகலும் - அவ்விட த்துவருகிறவல்லினமிகுதலும், இயல்பும்- இவ்விருவிதியும் பெறு தியல்பாதலும், ஆகும- பொருந்தும், எ-று. (பொ-ரை) இவ்வி லென்னுஞ்சொற்கு ஐகாரச்சாரியைபொருந்த அவ்வழிவரும்வல் லினம் விகற்பித்தலும் ஆகாரச்சாரியைபொருந்த அவ்வழிவரும் வல்லினமிகுதலும் இவ்விருவிதியும்பெறு தியல்பாதலும் பொ ருந்தும். எ-று. ❁ சாரியைப் பேற்றிற்கு வருமொழி வரையா மையின் நாற்கணமுங்கொள்க. [உ-ம்] இல்லைப்பொருள் - இல் லாப்பொருள்- இல்லாப்பொருள்- இல்பொருள்- ஞானம்-வன்மை- அணி - எனவரும். இல்லென்னும் பண்படிநின்று வருமொழி

யோடு புணர்வழிவருஞ் சாரியையாதலின் இவ்விருசாரியையுந்தோன்றியவழியும் இல்பொருளென்னு மியல்புப் புணர்ச்சியோடு பண்புத் தொகையேயாமென்க. இது - மெய்யீற்றுப் புணரியலாதலானும் லகரவீற்றிற்குப் பொதுவிதிகூறிச் சிறப்புவிதிகூறும்வழி யின்மைப்பொருளைத்தரும் இல்லென்னுஞ்சொற்கெனவித்தந்தமையானும் விகுதியடைதல் பதவியலுளன்றி யீண்டுக்கூறவேண்டாமையானும் ஆகாரத்தொடு வன்மையாகலுமென வல்லினப்பேற்றோடு ஆகாரத்தையுமுடனிகழ்த்திக் கூறுதலானு மியல்புமாகுமென்றமையானும் மறைப்பொருளை இல்லென்னும் பகுதியன்றி யாகாரந்தரவேண்டாமையானுந்தருமேல் இன்மைக்கு மறையாய உண்மைப்பொருளைத் தரவேண்டு மாதலானும் ஆகாரமறைவிகுதி தெரிநிலைக்கன்றிக் குறிப்பிற்கு வாராமையானு மீண்டுப்பெறும் ஐகார ஆகாரங்கள் சாரியையேயன்றிக் குறிப்புமுற்றுவிகுதியும் எச்சத்தின்கண்வந்த மறைவிகுதியுமல்லவென்க இலைபொருள் - இல்லைப்பொருள் - என்பன இங்ஙனங்கூறியவாறே பண்புத்தொகையாகவும் ஐகாரவீற்றுக் குறிப்புமுற்றுப் பயனிலையோடுமுடிந்த தொகாநிலையாகவுங் கொள்ளப்படுமாதலிற் றம்முள்வேற்றுமை யாதோவெனிற் றொகைநிலை யொருமொழிபோனடத்தலுந் தொகாநிலை விட்டிசைத்து நடத்தலுந் தம்முள்வேற்றுமையென்க. இல்லாப்பொருளென்பது இங்ஙனங்கூறியவாறே பண்புத்தொகையாகவு மில்லாதவென்னும் பெயரெச்சக் குறிப்பின திறுதிகெட்டுப் பயனிலையோடுமுடிந்த தொகாநிலையாகவுங் கொள்ளப்படும். இவற்றிற்குந் தம்முள் வேற்றுமை யதுவாமென்க. இவ்வாறே யாசிரியர் தொல்காப்பியரும், "இல்லென் கிளவி யின்மை செப்பின் - வல்லெழுத்து மிகுதலு மையிடைவருதலு - மியற்கை யாதலு மாகாரம் வருதலுங் - கொளத்தகு மரபி னாகிட னுடைத்தே." என்றார். (௩௰)

(௨௱௩௪) புள்ளும் வள்ளுந் தொழிற்பெயரு மானும். *

(எ-ன்) லளவேற்றுமையிற் றடவுமென்னுஞ் சூத்திரத்தானெய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று (ப-ரை) புள்ளும்வள்ளும் - இவ்விருசொற்களும், தொழிற்பெயருமானும் - யகரமல்லாதமெய்கள்வந்தாற் பொதுவிதியான் முடிதலல்லாமலுந் தொழிற்பெயர்போல உகரச்சாரியையும் பெற்றுப்புணரும், எ-று. (பொ-ரை) இவ்விருசொற்களு மிருவழியும் யவ்வன்மெய்வரிற் பொதுவிதியான் முடிதலேயன்றித் தொழிற்பெயர்போல உகரச்சாரியை பெற்றும்புணரும். எ-று. * [உ-ம்] புள்ளுக்கடிது - வள்ளுக்கடிது - நன்று - வலிது - (எ-ம்) சிறுமை - நன்மை - வன்மை (எ-ம்) வரும். (௩௧)

**(உ௱௩௫) சுட்டு வகரமூ வினமுற முறையே- யாய்தமு மென்மையு மியல்புமாகும்.** *

(எ-ன்) வகரவீற்றுச் சுட்டுப்பெயர் மூவினத்தோடும் புணருமாறுணர்- ற்று. (ப-ரை) சுட்டுவகரம்- அவ் இவ் உவ் என்கிற அஃறிணைப்பன்மைச் சுட்டுப்பெயர்களீற்று வகரமெய், மூவினம்- வல்லினமும் மெல்லினமும் இடையினமும், உற- வர, முறை- முறையாக, ஆய்தமும் - தனிநிலையும், மென்மையும் - மெல்லினமும், இயல்பும்- இயல்பும், ஆகும் - ஆகும், எ-று. (பொ-ரை) அவ் இவ் உவ் என்னு மஃறிணைப்பன்மைச் சுட்டுப்பெயரீற்று வகரம் வல்லினமு மெல்லினமு மிடையினமும் வர முறையானே ஆய்தமும் வருமெல்லினமு மியல்புமாம், எ-று. [உ-ம்] அஃகடிய- இஃகடிய- உஃகடிய- (எ-ம்) அஞ்ஞானம் இஞ்ஞானம்-உஞ்ஞானம்- (எ-ம்) அவ்யாவை- இவ்யாவை- உவ்யாவை- (எ-ம்) வரும். வேற்றுமைப்புணர்ச்சிக்கு அற்றுச்சாரியை பெறுமென மேல் விதத்தலி னிவ்விதி யல்வழிக் கென்க. (௯௨)

**(உ௱௩௬) தெவ்வென் மொழியே தொழிற்பெய ரற்றே-மவ்வரின் வஃகான் மவ்வு மாகும்.** *

(எ-ன்) தெவ்வென்னுஞ் சொல் யவ்வன்மெய்யோடு புணருமாறுணர் - ற்று. (ப-ரை) தெவ்வென்மொழி - தெவ்வென்கிற பகையையுணர்த்தும்பெயரானது, தொழிற்பெயரற்று- யகரமல்லாத மெய்களோடு புணருமிடத்துத் தொழிற்பெயர்போல உகரச் சாரியைபெற்றுமுடியும், மூ- மகரமெய்யானது, வரின்- வந்தால், வஃகான்- வகரமெய்யானது, மவ்வு மாகும் உகரச்சாரியைபெறுத லல்லாமலும் ஒரோவிடத்து மகரமெய்யாகவுந் திரியும், எ-று. (பொ-ரை) தெவ்வென்னுஞ்சொல் யவ்வன்மெய்யொடு புணருமிடத்துத் தொழிற்பெயர்போல உகரச்சாரியைபெற்றுமுடியும் அவற்றுள் மகரம்வருங்கால் உகரச்சாரியை பெறுதலேயன்றி ஒரோர்வழியீற்று வகர மகரமாகத் திரியவும்பெறும். எ-று. ※ [உ-ம்] தெவ்வுக்கடிது-மாண்டது-வந்தது- (எ-ம்) தெவ்வுக்கடுமை-மாட்சி-வன்மை- (எ-ம்) தெவ்வுமன்னர்-தெம்மன்னர் (எ-ம்) தெவ்வுமுனை-தெம்முனை- (எ-ம்) இருவழியினு முறையேகாண்க. இப்பகையென்னும் பண்பிப்பெயர் பண்பியாய்ப் பகைப்பொருளையுணர்த்தி யாகுபெயராய்நின்ற வழியுமிவையேகாட்டென்க.()

**(உ௱௩௭) னலமுன் றனவும் ணளமுன் டணவு- மாகுந் தநக்க ளாயுங் காலே.** *

(எ-ன்) முன்னர்ப் புணர்த்திய வருமொழிக்குமுதலாய மெய்களுட் சிலதற்பாலன இவையென விதந்துணர்- ற்று. (ப-ரை) னலமுன் - னகர லகரமெய்களின்முன், (த) - வருகிறதகரம், ந

(வ்வும்)- றகரமும், (ந)-வருகிற நகரம், ன (வ்வும்)- னகரமும், ணளமுன்- ணகர ளகர மெய்களின்முன், த- வருகிறதகரம், ட (வ்வும்)- டகரமும், ந- வருகிறநகரம், ணவ்வும் - ணகரமும், ஆகும்- ஆகும், ஆயுங்கால்- ஆராயுமிடத்து, எ-று. (பொ-ரை) னலகரங்களின்முன்னர்வருந் தகரம் றகரமாம் அவற்றின் முன்னர் வரும் நகரம் னகரமாம் ணகர ளகரங்களின்முன்னர்வருந் தகரம் டகரமாம் அவற்றின்முன்னர்வரும் நகரம் ணகரமா மாராயுங்காலத்து, எ-று, ❁ [உ-ம்] பொன்றீது-கற்றீது- பொன்னன்று- கன்னன்று-மண்டீது- முட்டீது-மண்ணன்று- முண்ணன்று- என வரும். இலம-நன்மை-என வருவித்துவேற்றுமைக்கண்ணுந் திரியுமாறுகாண்க. ஆயுங்காலே யென்றதனான் அவை யிவ்வேற்றுமைப்பொருளுக்கதானன்றி மயங்கவிதியின்மையின் இங்ஙனம்புணருமுதலீறிரண்டனு ளொன்றேனும் இரண்டனும் விகாரப்பட்டு மயங்குதற் குரியனவாகின் றுபுணருமென்பதூஉ மயக்கவிதி யில்லனவற்றிற்குவரும் விகாரமல்வழிவேற்றுமைப் பொருட்கொக்கத்தான் வருமென்பதூஉம்பெற்றாம். (௯௪)

(௨௱௯௮) உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும். ❋

(எ-ன்) உயிரீற்றுப்புணரியற்கண்ணும் இவ்வியற்கண்ணு முடிந்த வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக் கெய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று. (ப-ரை) உருபின் முடிபவை - மேலுருபு புணர்ச்சிக்கண் முடியுமுடிபுகள், அப்பொருளினும்-அப்பொருட் புணர்ச்சிக்கண்ணும், ஒக்கும்- ஒத்துமுடியும், எ-று. (பொ-ரை) மேலுருபு புணர்ச்சிக்கண் முடியுமுடிபுகள் அப்பொருட்புணர்ச்சிக்கண்ணு மொக்கும். எ-று. ❁ [உ-ம்] எல்லாவற்றதும்- எல்லாவற்றுக்கோடும்- என அவ்விரண்டனை மற்றமுருபின்மேலும் மும்பெற்றுநின்றாலப் பொருட் புணர்ச்சிக்கும் பெற்றன. எல்லாநமதும் எல்லாநங்கையும்- என உயர்திணைக்கண் நம்முமுருபின் மேலும்மும் பெற்றுநின்றாலப் பொருட் புணர்ச்சிக்கும் பெற்றன. எல்லார்தமதும்- எல்லார்தங்கையும்- எல்லீர்நுமதும்- எல்லீர் நுங்கையும்- தனது-தங்கை- தமது தங்கை நமது-நங்கை எனது- எங்கை- எமது-எங்கை-நினது நுங்கை-நுமது நுங்கை- என உருபு புணர்ச்சிப்பாற் பொருட்புணர்ச்சியு முடிந்தவாறு காண்க. பிறவுமன்ன. (௯௫)

(௨௱௯௯) இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும் போலிய மரூஉம் பொருந்தியவாற்றிற்- கியையப் புணர்த்த லியாவர்க்கு நெறியே. ❋

(எ-ன்) இப்புணரியல்கட்கு ஆவதோர்புறனடை யுணர்-ற்று (ப-ரை) இடை (ச்சொல்லின்) - இடைச்சொற்களுள்ளும், உரி

(ச்சொலின்) - உரிச்சொற்களுள்ளும், வடசொலின் - வடசொற்களுள்ளும், இயம்பிய - உயிரீறு மெய்யீறுமான புணரியலிலே தோன்றல் திரிதல் கெடுதல் இயல்பாதல் எனச்சொல்லிய புணர்ச்சி யிலக்கணங்களுள், கொளாதவும் - பொருந்தாது வேறுபட்டு வருவனவும், போலியும்-இலக்கணப்போலிமொழிகளும், மரூஉம் - மரூஉமொழிகளும், பொருந்திய- இருவகைவழக்கினு நடக்கின்ற, ஆற்றிற்கு- முறைமைக்கு, இசைய- பொருந்துமாறு, புணர்த்தல்- புணர்க்கை, யாவர்க்கும்- அறிவுடையோ ரெல்லார்க்கும், நெறி - முறை, எ - று. (பொ-ரை) இடைச்சொல்லினும் உரிச்சொல்லினும் வடசொல்லினும் உயிரீறு மெய்யீறுமான புணரியலில் தோன்றல் திரிதல் கெடுதல் இயல்பென வோதியபுணர்ச்சி யிலக்கணங்கள் பொருந்தாது வேறுபட்டுவருவனவும் இலக்கணப் போலிமொழிகளு மரூஉமொழிகளு மிருவகைவழக்கினு நடக்கு முறைமை யறிந்து அதற்குப் பொருந்துமாறு புணர்க்கை அறிவுடையோ ரெல்லார்க்கு முறைமை. எ-று. ❁ [உ-ம்] ஆன்கன்று- வண்டின்கால்- என வேற்றுமைப்புணர்ச்சிக்கட் சாரியை யிடைச்சொற் றிரியா தியல்பாயின. மழகளிறு- தடந்தோள்- என அகரவீற்று உரிச்சொன்முன் வல்லெழுத்துமிகா தியல்பாய் மெல்லெழுத்து மிகுந்தும் வந்தன. அளிகுலம்- தனதடம்- என இயல்பீறும் விதியீறுமான உயிரீற்று வடசொன்முன் வல்லெழுத்துமிகா தியல்பாயின. இன்முன்- முன்றில்- பொது இல் - பொதியில் - என இலக்கணப் போலிமொழிகளும், அருமருந் தன்னபிள்ளை- அருமந்தபிள்ளை- குணக்குள்ளது- குணாது- தெற்குள்ளது- தெனாது- வடக்குள்ளது- வடாது - சோழநாடு - சோணாடு - பாண்டியநாடு - பாண்டிநாடு - மலையமாநாடு - மலாடு- தஞ்சாவூர் - தஞ்சை- ஆற்றூர் - ஆறை - ஆதன்றந்தை- ஆந்தை- பூதன்றந்தை- பூந்தை - வடுகன்றந்தை - வடுகந்தை - என மரூஉ மொழிகளும் நிலைமொழி வருமொழிகளை நோக்கிச் செய்கை யறிந்துமுடிக்க. பிறவுமன்ன. (௧௭)

மெய்யீற்றுப்புணரியல்

முற்றிற்று.



ஐந்தாவது

# உருபுபுணரியல்.



(உ௱சய.) ஒருவ னொருத்தி பலரொன்று பலவென - வருபெய ரைந்தொடு பெயர்முத லிருநான் - குருபு முறழ்தர நாற்பதா முருபே. ✻

(எ-ன்.) வேற்றுமையுருபுக ணிலைமொழி யோடும் வருமொழியோடும் புணருமா றிவ்வியலாற் கூறுவான்றொடங்கி அவ்வேற்றுமையுருபுகளுஞ்சாரு மிடவகையான் இத்துணைத்தென்பதுணர்-ற்று. (ப-ரை) ஒருவன்- ஒருவனும், ஒருத்தி- ஒருத்தியும், பலர்- பலரும், ஒன்று- ஒன்றும், பல- பலவும், என- என்றுசொல்ல, வரு- வருகின்ற, பெயரைந்தொடு- ஐந்துபெயரோடும், பெயர்முதல- எழுவாய்வேற்றுமையான பெயர்முதல விளியீறாகநின்ற, இருநான் குருபு- எட்டுருபுகளோடும், உறழ்தர- பெருக்க, உருபு - வேற்றுமையுருபுகளானவை, நாற்பதாம் - நாற்பதாகும், எ-று. (பொ-ரை) இப்பாற்பொருளின வென்றுகருதவரும் ஐந்துபெயருடனே எழுவாய்வேற்றுமையான பெயர்முதலாக விளியீறாகநின்ற வெட்டுருபினையு முறழ வேற்றுமையுருபுக ணாற்பதாம். எ-று. ✻ சொன் மேல்வைத்தோதின் இப்பெயர்களோ டன்றிப் பொதுப்பெயர்களே யிருப வாராவெனப் பொருள்படுமாதலின் எல்லாப்பெயருமடங்குதற்குப் பொருண் மேல்வைத்து என வருபெய ரென்றார். [வ-று] நம்பி- சாத்தி- மக்கள்- மரம்- மரங்கள்- என்னுமிவற்றுள், நம்பி- நம்பியை- நம்பியால்- நம்பிக்கு- நம்பியின்- நம்பியது- நம்பிகண்- நம்பீ- என ஒருவனென்னும்வாய்பாட் டுயர்திணை யாண்பாற்பெயரோ டெட்டுருபுகளும்வந்தன. ஏனைநான்குபெயரோடு மிவ்வாறே யொட்டுக. (க)

(உ௱சக) பெயர்வழித் தம்பொரு டரவரு முருபே. ✻

(எ-ன்) வேற்றுமையுருபுகள் வருதற்குக்காரணமும் வருமிடமு முணர்-ற்று. (ப-ரை) உருபு- வேற்றுமையுருபுகளானவை, தம்பொருள்- தம்பொருளை, தர- கொடுக்க, பெயர்வழி - பெயர்க்குப்பின், வரும்- வரும், எ-று. (பொ-ரை) வேற்றுமை யுருபுகடம்பொருளைத்தரப் பெயர்க்குப்பின் வரும். எ-று. ✻ [வ-று.] நம்பிபெற்றான்- நம்பியைப்பெற்றான்- நம்பியாற்பெற்றான் - எ

ணவரும். பிறவுமன்ன. தம்பொருடர வருவன எழுவாய்முதலிய வெட்டுருபும் வழிவருவன பெயர்முழுவதூஉ முருபாய வெழுவாயொழிந்த வேழுருபுமெனக் கொள்க. (உ)

(உ௱௪௨) ஒற்றுயிர்முதலீற் றுருபுகள்புணர்ச்சியி- னொக்குமன்னப்பெயர் வேற்றுமைப்புணர்ப்பே. ※

(எ-ன்) ஐம்முதலிய ஆறுருபும் நிலைமொழிவருமொழியோடு புணருமா றுணர் - ற்று. (ப-ரை) ஒற்றுயிர்முதலீற்று - நிலைமொழியோடும் வருமொழியோடும் புணருகிற மெய்யுயிர்களை முதலுமீறுமாகவுடைய, உருபுகள் - ஐம்முதலிய ஆறுருபுகளும் இடைச்சொல்லாயினும், புணர்ச்சியின் - இயல்பொடு விகாரத்துணையும்புணர்ச்சிவகையால், மன்- பெரும்பாலும், ஒக்கும்- ஒக்கும், வேற்றுமைப்புணர்ப்பு-போனவிரண்டியலுள்ளும்வேற்றுமைப்புணர்ச்சிக்கண், அப்பெயர்- இயல்பொடுவிகாரத்திணைந்தமெய்யுயிர்முதலீற்றுப்பெயர்களை, எ-று (பொ-ரை) தொகாநிலையாய வேற்றுமைப்புணர்ச்சிக்கண் இடையேநின்று நிலைமொழியோடும் வருமொழியோடும் புணருமொற்றுயிர்களை முதலு மீறுமாகவுடைய ஐம்முதலிய வேற்றுமை யுருபாறு மிடைச்சொல்லேனும் இயல்பொடுவிகாரத் திணையும்புணர்ச்சி வகையாற் பெரும்பாலுமொக்கும் போன விரண்டியலுள்ளும் வேற்றுமைப் புணர்ச்சிக்கண் இயல்பொடுவிகாரத் திணைந்த வொற்றுயிர்முதலீற்றுப் பெயர்களை. எ-று. ※ மன்னென் றமையாற் சிறுபான்மை யொவ்வா வென்பதாம். [உ-ம்] நம்பிகண்வாழ்வு - என்புழி "ஆவி யரமுன் வன்மை மிகா" என்றும் "ண ன வல் லினம்வரட்டறவும் பிறவரி னியல்பு மாகும் வேற் றுமைக்கு" என்றுங் கூறியவாறே கண்ணுருபின் முதலுமீறு மியல்பாயின. உறிக்கட்டயிர்- என்புழி "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன் க ச த ப மிகும்" என்றும் "ண ன வல்லினம் வரட் டறவும்" என்றுங் கூறியவாறே கண்ணுருபின் முதலு மீறும்விகாரமாயின. பழிக்குஞ்சி - என்புழி "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன் க ச த ப மிகும்" என்றும் "முற்றுமற் றொரோவழி" என்றுங்கூறியவாறே குவ்வுருபின் முதலு மீறும் விகாரமாயின. நம்பிக்குப்பிள்ளை- என்புழி "ஆவி யரமுன் வன்மை மிகா" என்ற விதியொவ்வாது குவ்வுருபின்முதல் வல்லொற்றுமிக்கது. பிறவுமன்ன. இவ்வுருபு, சாத்திக்கு- கிளிக்கு - எனப் பொதுப்பெயரஃறிணைப் பெயர்க்கண்ணு மிகுதலிற் சிலவிகாரமா முயர்திணையெல்லாம் விதியன்று. ஒற்றுயிர் முதலீற் றுருபுக ளென்றமையின் நாற்பதா முருபேயெனத் தொகைகொடுத்துக் கொணர்ந்தவற்றுள் எழுவாயும் விளியுமொழித்துத் தமக்கெனவுருபு முதலீறு முடைய ஐம்முதலிய

ம்போது அதனோடு ஆறுருபுகளும்புணரின், (இடை) - இடையி
லே, அற்று - அற்றுச்சாரியையும், உருபின்மேல் - உருபின்மேல்,
உம் - முற்றும்மையும், உறும் - பெறும், அன்றேல் - உயர்திணையில்
வரும்போது, இடை - இடையிலே, நம் - நம்முச்சாரியை, அடைந்
து - அடைந்து, அற்றுதும் - உருபின்மேல் முற்றும்மையும்பெறு
ம், எ-று. (பொ-ரை) எல்லாமென்னும்பொதுப்பெய ரஃறிணை
க்கண் ஆனகாலை யதனோடு ஆறுருபும்புணரின் இடையே அற்று
ச்சாரியையும் உருபின்மேல் முற்றும்மையும்பெறும் உயர்திணை
க்கண் ஆனகாலையிடையே நம்முச்சாரியையும் உருபின்மேன்மு
ற்றும்மையும்பெறும் எ-று. ✿ [உ-ம்] எல்லாவற்றையும் - எல்லா
வற்றொடும் - (எ-ம்) எல்லாநம்மையும் - எல்லாநம்மொடும். - (எ-ம்)
வரும். இனி இரட்டுறமொழிதலென்னுமுத்தியான் எல்லாமெ
ன்ப திரிதிணைபாற் (எ-ம்) இன்னற்றோடு (எ-ம்) பிரித்து அஃறி
ணைக்கண்ணேகி இச்சாரியை அற்றுச்சாரியையோடெனப்பொரு
ளுரைத்து எல்லாவற்றினையும் எனவருதலுங்கொள்க. ஏனையவற்றோடு
மிவ்வாறே யொட்டுக. இச்சொற்கு இருதிணைக்கண்ணும் அற்றுச்
சாரியையும் நம்முச்சாரியையும் உருபு புணர்ச்சிக்கண் பதமு
ன்விகுதியுமென்னுஞ் சூத்திரத்திற் கூறியவாறே வேண்டியவ
ருதலோடன்ற வின்றியமையா முற்றும்மையோ டெனிகழ்ச்சிப்
பொருளவா யற்றோடென்றும் அடைந்தற்றுமென்றுங் கூ
றினார். தாம் நாம் நீர் என்னுமூவிடப்பெயர் வேற்றுமைப்பு
ணர்ச்சிக்கண் வந்தமையானே தம் நம் நும் என விகாரப்பட்டுத்
தமக்கினமான மூவிடப்பெயர்களை முறையேசார்ந்து சிறப்புப்
பொருடாராமையின் ஒருபொருட் பன்மொழி யல்லவாய்வரு
தலின் இம்மூன்றுஞ் சாரியையிடைச்சொல் லெனப்படுமாதலிற்
தம்மென்பதைப் படர்க்கைப்பெயர்க்கும் நும்மென்பதை முன்
னிலைப்பெயர்க்கும் வருஞ்சூத்திரத் தமைத்தாற்போல நம்மென்
பதனை மீண்டுந் தன்மைப்பெயர்க் கமைத்தா னென்பதூஉம் தன்
மையாயினுந் திணைப்பொதுமையி னில்லாது, பாணோம்-என்
றற்போல எல்லாநம்மையுமென்ற துணையானே யுயர்திணைத்த
ன்மையை புணர்த்துமென்பதூஉம் பெற்றாம். (௯)

(௨௱௪௯) எல்லாரு மெல்லீரு மென்பவற் றும்மை-தள்ளி
நிரலே தம்நும் சாரப்- புல்லு முருபின் பின்ன ரும்மே. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) எல்லாருமெல்லீருமென்பவற்
று - ஆறுருபும்புணருமிடத்து எல்லாரும் எல்லீருமென்கிற இரு
பெயர்களினுடையவிறுதியிலுள்ள, உம்மை - முற்றும்மைகளை, த
ள்ளி-தள்ளி, நிரல் முறையாக, தம் - தம்முச்சாரியையும், நும் - நும்
முச்சாரியையும், சார - அவையிருந்த விடங்களிலேபொருந்த, உம்

-அவற்றினோடுதள்ளுண்ட முற்றும்மைகள், உருபின்பின்னர் - உருபுகளின்பின்னே, புல்லும் - வந்துபுணரும், எ-று. (பொ-ரை) எல்லாருமென்னு முயர்திணைப்படர்க்கைப் பெயரோடும் எல்லீருமென்னு முன்னிலைப்பொதுப்பெயரோடும் ஆறுருபும் புணருமிடத்து அவ்விருபெயரினிறுதிகளினின்ற முற்றும்மைகளோடுதள்ளி அந்நிலைக்களங்களிற் படர்க்கைப்பெயர்க்குத் தம்முச்சாரியையும் முன்னிலைப்பெயர்க்கு நும்முச்சாரியையும் பொருந்த அவற்றாற் றள்ளுண்ட முற்றும்மைகளுருபின் பின்னேவந்து பொருந்தும். எ-று. ※ [உ-ம்] எல்லார்தம்மையும்-எல்லாரையும்- (எ-ம்) எல்லீர்நும்மையும்-எல்லீரையும்- (எ-ம்) விகற்பித்துவந்தன. ஏனையவற்றோடு மிவ்வாறேயொட்டுக. தந்தம்மை- நுந்தம்மை-எனப் படர்க்கைக்குரிய தம்முச்சாரியை தன்மைமுன்னிலைகளின்வருத லோரிடம் பிறவிடந் தழுவலு முளவேயெனினும் வழுவமைதி யென்க. (எ)

(உ௱சஎ) தான் தாம் நாம் முதல் குறுகும் யான்யாம்- நீ நீர்
என் எம் நின் நு மாம்பிற- குவ்வி னவ்வரு நான்கா றிரட்டல. ※

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) தான்தாம்நாம்-தான்முதலியமூன்றுபெயர்களும், முதல்குறுகும் - உருபுகள்புணருமிடத்துநெடுமுதல்குறுகிமுறையே தன்னை தம்மை நம்மை எனவரும், யான்யாம் நீ நீர்- யான்முதலியநான்குபெயர்களும், என்எம் நின்நுமாம்- உருபுகள்புணருமிடத்துமுறையே என்னை எம்மை நின்னை - நும்மை- எனவரும், குவ்வின்- இவ்வேழுபெயரோடும் குவ்வுருபுபுணருமிடத்து, அவ்வரும்-நடுவே தனக்கு என அகரச்சாரியைவரும், நான்கு- குவ்வுருபின் அகரச்சாரியைவரினும், ஆறு - ஆறுமுருபுகள்வரினும், இரட்டல- அவ்வேழுசொற்களினு மிறுதியாகிய தனிக்குறின்முன் னொற்றுக்கள் இரட்டாவாம், எ-று. (பொ-ரை) இங்ஙனங்கூறிய இருதிணைப்பொதுவாய மூவிடப்பெயர் ஏழோடு மாறுருபும் புணருமிடத்துத் தான் தாம் நாம் என்னு மூன்றுபெயரும் நெடின்முதல்குறுகி முறையே தன்னை தம்மை நம்மை யெனவரும் யான் யாம் நீ நீர் என்னுநான்குபெயரும் முறையே என்னை எம்மை நின்னை நும்மை எனவரும் இவ்வேழுபெயரோடுங் குவ்வுருபுபுணருமிடத்து இடையே தனக்கு என அகரச்சாரியைவரும் குவ்வுருபின் அகரச்சாரியைவரினும் ஆறுமுருபுயிர்கள்வரினும் இவ்வேழுவிகாரமொழிகளி னிறுதியவாய தனிக்குறின்முன் னொற்றுக்க ளிரட்டாவாம். எ-று. ※ ஒழிந்தவுருபுகளோடு மிவ்வாறேயொட்டுக. பிறவென்ற மிகையானே, நீயென்பது- உன்னையென்றும், நீர் என்பது - உம்மையென்றும், வருதல்கொள்க. மூன்றும்பின்னுஞ் சாரியைப்பேறு கூறுவார்சாரியை

புகள்புணருமிடத்து ஆன்சாரியைவரின் அதன் பகரமெய்நிற்க மேனின்ற வெல்லாவெழுத்துங் கெடும், எ-று. (பொ-ளா) ஒன்றுமுத லெட்டீறாமெண்களோடுபுணர்ந்த பத்தென்னுமெண் முன்னர் உருபுகள்புணருமிடத்து இடையே ஆன்சாரியைவரின் அப்பத்தென்னுமெண்ணினது பகரவொற்றொன்றுமேநிற்க மேனின்ற வெல்லாவெழுத்துங்கெடும் ஒன்பதென்னுமெண்முன்னருமுருபுகள் புணருமிடத்து ஆன்சாரியைவரின் அதன்பகரவொற்றுநிற்க மேனின்ற வெல்லாவெழுத்துங் கெடும். எ-று ❁ [உ-ம்] ஒருபானை- ஒருபதை- ஒருபஃதை - இருபானை- இருபதை- இருபஃதை- (எ-ம்) ஒன்பானை- ஒன்பதை- ஒன்பஃதை- (எ-ம்) விகற்பித்து வரும். பிறவற்றோடு மிவ்வாறே யொட்டுக. ஒருபது - ஒருபஃது - எனக்காரப்பட்டவற்றும் பத்தென்பார் எண்ணூர்பத்தென்றார். வரினென்றமையான் வருதற்கு மிகுதியும் விதியென்பதூஉம் இவ்வாறுவருதலைப் பரூடமாகக் கூறினமையின் உகரச்சாரியை யின்சாரியைகளும் வேண்டுழிவருமென்பதூஉங் கொள்க. (௰)

(௨௱௫௰) வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே. ❋

(எ-ன்) இதுவுமது. (ப-ளா) வவ்விறுசுட்டிற்கு- வகரமெய்யீற்று மூன்றுசுட்டுப் பெயர்களுக்கும், அற்றுறல் - உருபுகள்புணருமிடத்து அற்றுச்சாரியை பொருந்தல், வழி - முறைமையாம், எ-று. (பொ-ளா) அஃறிணைச்சுட்டன்மையவாய வகரவீற்று மூன்றுசுட்டுப்பெயர்க்கும் உருபுகள்புணருமிடத்து அற்றுச்சாரியை பொருந்தன் முறைமையாம். எ-று, ❁ [உ-ம்] அவற்றை இவற்றை-உவற்றை- என அற்றுச்சாரியைவேண்டியே வருதல் காண்க. வழியேயென்றமிகையானே, அவற்றினை- இவற்றினை- உவற்றினை- என இன்சாரியைவருதலுந் தனிக்குறின்முன்னொற் றுயிர்வரி னிரட்டலையுங்கொள்க பிறவற்றோடு மிவ்வாறே யொட்டுக. (௰௧)

(௨௱௫௰௧) சுட்டின்முன் னாய்த மன்வரிற் கெடுமே. ❋

(எ-ன்) இதுவுமது. (ப-ளா) சுட்டின்முன் - அஃது இஃது உஃது என்கிற சுட்டுப்பெயர்களின் மொழிமுதற் சுட்டெழுத்தின் முன்னின்ற, ஆய்தம் - ஆய்தமானது, அன்வரின் - அச்சுட்டுப் பெயர்களோடு உருபுகள்புணருமிடத்து அன்சாரியைவரின், கெடும் கெடும், எ-று. (பொ-ளா) அஃது இஃது உஃது எனவரு மூன்றுசுட்டுப் பெயர்களோடு உருபுகள் புணருமிடத்து இடையே அன்சாரியைவரின் மொழிமுதற் சுட்டெழுத்துக்கண் மூன்றின் முன்னின்ற ஆய்தங் கெடும். எ-று. ❁ [உ-ம்] அதனை - அஃதை இதனை- இஃதை- உதனை- உஃதை- எனச் சாரியைவிகற்பி

த்து வருதலும் வந்தவழி யாய்தங்கெடுதலுங் காண்க. அன்சாரியை வருதனீக்கி ஆய்தங்கெட்டவழி அது இது உது என ஆய்தமில்லாச் சுட்டுப்பெயர்களாம் பின்னர் அன்சாரியைபெறுதலின் அவற்றிற்கும் இதுவேவிதியெனக்கொள்க. [வ-று.] அதனை -அதை- இதனை-இதை- உதனை-உதை - எனவிகற்பித்து வருதல்காண்க. அன்வருதலைப் பராமுகமாகக்கூறினமையின் குவ்வுருபுபுணர்வழி அதற்கு என அன்சாரியை தனித்துவருதலேயன்றி அதனுக்கு என உகரச்சாரியை யுடன்வருதலுங் கொள்க. (௰௨)

(௨௱௫௨) அத்தி னகர மகரமுனை யில்லை. ✻

(எ-ன்) அத்துச்சாரியைக்கு இஃ ஐவழி யென்னுஞ்சூத்திரத்தானெய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்துணர் - ற்று. (ப-ரை) அத்தின் - அத்துச்சாரியையினது, அகரம் - அகரவுயிரானது, அகரமுனை - இயல்பினும் விதியினுநின்ற அகரவுயிரீற்றின்முன்வரின், இல்லை - வகரவுடம்படுமெய் பெறாது கெடும், எ - று. (பொ-ரை) அத்துச்சாரியையின் அகரவுயிர் இயல்பினும் விதியினுநின்ற அகரவுயிரீற்றின் முன்வரின் வகரவுடம்படுமெய் பெறாது கெடும். எ-று. ❈ [உ-ம்] மகத்துக்கை - மரத்துக்குறை - என இரண்டு அகரவீற்றின் முன்னுங்கெட்டது. (௰௩)

(௨௱௫௩) இதற்கிது சாரியை யெனினள வின்மையின் - விகுதியும் பதமு முருபும் பகுத்திடை - நின்ற வெழுத்தும் பதமு மியற்கையு - மொன்ற வுணர்த்த லுரவோர் நெறியே. ✻

(எ-ன்) சாரியைக் காவதோர் புறனடை யுணர் - ற்று. (ப-ரை) இதற்கிதுசாரியையெனின் - விகுதிமுதலிய புணர்ச்சிக்கண் இதற்கு இது சாரியையென்று அளவுசெய்து விதித்தனவற்றுள்ளும் ஒழிந்தனவற்றுள்ளுந் தனித்தனி சொல்லப்புகின், அளவின்மையின் - அளவுபடாமையால், விகுதியும் - விகுதிப்புணர்ச்சியையும், பதமும் - பதப்புணர்ச்சியையும், உருபும் - உருபுபுணர்ச்சியையும், பகுத்து - கண்டவிடத்துப்பகுத்து, இடைநின்ற - நடுவேநின்ற, எழுத்தும் - எகாரம் அகரம் முதலிய வெழுத்துச்சாரியையினையும், பதமும் - அன் ஆன் முதலிய பதச்சாரியையினையும், இயற்கையும் - இவ்விரண்டுசாரியையுந் தோன்றாத இயல்பினையும், ஒன்றவுணர்த்தல் - தெரியவறிவித்தல், உரவோர் - பெரியோரது, நெறி - கடனாகும், எ-று. (பொ-ரை) விகுதிமுதலியபுணர்ச்சிக்கண் இதற்கு இதுசாரியையென்று வரையறுத்து விதித்தனவற்றுள்ளு மொழிந்தனவற்றுள்ளுந் தனித்தனி சொல்லப்புகின் வரையறைப்படாமையின் விகுதிப்புணர்ச்சியினையும் பதப்புணர்ச்சியினையும் உருபுபுணர்ச்சியினையுங் கண்டுழிப்பகுத்து இடையே நின்ற எகாரம் அகரம் முதலியவெழுத்துச்சாரியையினையும் அன்

ஆன் முதலிய பதச்சாரியையினையும் இவ்விரண்டு சாரியையுந் தோன்றா வியல்பினையுந் தெரிய வறிவித்தல் பெரியோரது நெறியாம் எ-று ※ [உ-ம்] "ஆனமணி யியம்புங் கானத் தான" (எ-ம்) "ஆனெநெய் தெளித்து நான நீவி" (எ-ம்) விதித்தபொருட் புணர்ச்சிக்கண் "உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்" என்றமாட்டேற்றான் அமைந்த னகரச்சாரியை யன்றி அகரச்சாரியையுமுடன் வந்தன. இனி விதியார் தொழிற்தன வற்றின்கண் பாட்டின்பொருளெனக் குற்றியலுகரத் தின்சாரியையும், மரத்தில்- என மக்கான்புள்ளிகரு அத்துச்சாரியையும் வந்தன. தன்கை- என்கை- எனச்சாரியையின்றி யியல்பாய் வந்தன. இவ்வாறே மூவகைப்புணர்ச்சியும் பகுத்துணர்ந்து கொள்க. எல்லாச்சாரியையும் இடைப்பதமேயும் எழுத்துச்சாரியை பதச்சாரியையெனப் பகுத்தல் வேறாதற்கு இட்ட விலச்சினையா மென்க. (௰௪)

(உ௱௫௪) விகுதி பதஞ்சா ரியையுரு பனைத்தினு- முரைத்த விதியினோர்ந் தொப்பன கொளலே. ※

(எ-ன்) இங்ஙனங்கூறிய நான்கின் புணர்ச்சிக்கு மாவதோர் புறனடையுணர்- ற்று. (ப-ரை) விகுதி-விகுதியும், பதம்- பதமும், சாரியை-சாரியையும், உருபு-உருபுமாகிய, அனைத்தினும்- நான்கின்புணர்ச்சிகளிடத்தும், உரைத்த- பொதுப்படச் சொல்லப்பட்ட, விதியின்-விதிகளுள், ஓர்ந்து- இவ்விதி இதற்குப்பொருந்தும் இவ்விதி இதற்குப்பொருந்தாது என உய்த்துணர்ந்து, ஒப்பன- எவ்விதி எதற்குப்பொருந்துமோ அவ்விதியை, கொளல்- அதற்குக்கொள்க. எ-று. (பொ-ரை) விகுதியே பதமே சாரியையே உருபே யென்னு நான்கின் புணர்ச்சிக்கண்ணும் விதிகள்பொதுப்படக் கூறப்பட்டவேனும் அவ்விதிகளுள் இவ்விதி இதற்குப்பொருந்தும் இவ்விதி இதற்குப்பொருந்தா தென வுய்த்துணர்ந்து எவ்விதி எதற்குப்பொருந்துமோ அவ்விதி அதற்குக்கொள்க. எ-று. ※ விகுதிப்புணர்ச்சியுள் "றவ்வொடுகர வும்மைநிகழ் பல்லவும்" எனப்பொதுப்பட விதித்தாரேனும் விதியுளதென்றுகருதி இவ்விகுதி வந்தவழியெல்லாம் இவ்விருகாலமும் பொருந்துமென்று கொள்ளற்க. சென்று- என்புழி இறந்தகாலமும், சேறு- என்புழி எதிர்காலமும் பொருந்துமென்றுகொள்க. பதப்புணர்ச்சியுள், "அவ்வழி இ ஐம் முன்னராயி - னியல்பு மிகலும் விகற்பமு மாகும்." எனப்பொதுப்பட விதித்தாரேனும் விதியுளதென்றுகருதி. ஆடிதிங்கள்- என இயல்பாமென்றும், பருத்திக்குறிது- என மிகுமென்றுங் கொள்ளற்க. பருத்திகுறிது என எழுவாய்க்கண் இயல்பாமெனவும், ஆடித்திங்கள்- எனப் ப

ணப்புத்தொகைக்கண் மிகுமெனவுங்கொள்க. சாரியைப் புணர்ச்சியுள் "பதமுன் விகுதியும் பதமு முருபும் புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை - வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்." எனப் பொதுப்பட விதித்தாரேனும் விதியுளதென்றுகருதி நாட்டினினீங்கினான் - என இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்கின்சாரியை வருமென்றும், நாட்டின்கணிருந்தான் - எனக் கண்ணுருபிற் கின்சாரியை வாராதென்றுங்கொள்ளற்க. நாட்டின்கணிருந்தான் - எனக் கண்ணுருபிற்கின்சாரியை வருமென்றும், நாட்டினீங்கினான் என இன்னுருபிற் கின்சாரியை வாராதென்றுங் கொள்க. உருபுபுணர்ச்சியுள் "ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியி - னொக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே." எனப் பொதுப்படவிதித்தாரேனும் விதியுளதென்றுகருதி நம்பிகு - என உயீற்று உயர்திணைப்பெயர்முன்வந்த குவ்வுருபு மிகாவென்றும், நம்பிக்கண் - என மன்னென்றமையாற் கண்ணுருபு மிகுமென்றுங்கொள்ளற்க, நம்பிகண் - எனக் கண்ணுருபு மிகாதென்றும், நம்பிக்கு - எனக் குவ்வுருபு மன்னென்றமையான் மிகுமென்றுங்கொள்க பிறவுமன்ன. சாரியைப்புணர்ச்சி யேனை யிருவகைப் புணர்ச்சியினுஞ் சார்ந்து இடையே தோன்றல்விகாரமாய்வந்து புணர்தலின் விகுதிபதஞ்சாரியை யுருபென வுருபிற்கு முற்கூறினர். இச்சூத்திரத்திற் கிவ்வாறு பொருள்கொள்ளாது இந்நான்கைப்புணர்ச்சியுள் ஒன்றற்குச்சொல்லும் விதி மற்றொன்றற்குங்கொள்கவெனப் பொருளுங்கொள்வாருமுளர். அப்பொருட் கமைந்தசொல் இச்சூத்திரத் தின்கணில்லையாதலானும், "சார்ந்த விகாரமாயினும் பொருந்தப் பட - முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்." என்றும், எனப் பொதுவென்னுஞ் சூத்திரத் தவ்விகாரம் விகுதிப்புணர்ச்சிக்கு மன்றிப் பதப்புணர்ச்சிக்கண்ணும் வருமென்பது தோன்றப் "பணைபிற்கியல்பே." என்றும், புணரியல்விதி பெயர் வினையிடையுரிதாங்கிற்கும் பொருந்துமென்பது தோன்ற "மெய்யுயிர்முதலீ றாமிருபதங்களும்." என்றும் விதந்து வைத்த சிறப்புவிதிகளுள் "உருபுமுடிபவை யொக்குமப் பொருளினும்." என்றும் "ஒற்றுயிர் முதலீற் றுருபுகள்புணர்ச்சியி - னொக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே." என்றுங்கூறியவாற்றான் அப்பொருளமைத்துக் கிடத்தலானும், அது பொருந்தாதென்க. (௰௫)

(௨௱௫௫) இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பு - முயர்திணை யிடத்து விரிந்துந் தொகுமே - விரவுப் பெயரின் விரிந்து நின்று - மன்ன பிறவு மாகுமை யுருபே. *

(எ-ன்) வேற்றுமைப் புணர்ச்சிக் காவதோர்புறனடைபுணர்த்து. (இ-ள்) இயல்பின்விகாரமும் - பொதுவிதியாய முடிந்த

லையன்றி அப்படிவிதித்த இயல்பிலேவிகாரமாகியும், விகாரத்தி யல்பும்- விகாரத்திலே யியல்பாகியும், உயர்திணையிடத்து-உயர்தி ணையினிடத்து, விரிந்தும்-வெளிப்பட்டும், தொக்கும்- மறைந்து ம், விரவுப்பெயரின்- பொதுப்பெயர்கண், விரிந்தும்- வெளி ப்பட்டும், தொக்கும்- மறைந்தும், அன்னபிறவும் - அவைபோல்வ ன பிறவேறுபாடுகளும், ஆகும்- ஆகிவரும், ஐயுருபு- இரண்டாம் வேற்றுமைப்புணர்ச்சி. எ-று (பொ-ரை) வேற்றுமைப் புணர் ச்சிக்கு விதித்த பொதுவிதியாம் தானுமொருங்குமுடிதலே ய ன்றி அங்ஙனம்விதித்த இயல்பின்கண் விகாரமாயும் விகாரத்தின் கண் இயல்பாயும் உயர்திணைக்கண் விரிந்துந் தொக்கும் விரவுப் பெயர்க்கண் விரிந்தும் விரிதலொழிந்தும் இவைபோல்வனபிற வேறுபாடாயும்வரும் இரண்டாம்வேற்றுமைப்புணர்ச்சி. எ-று. இஃது உயிரே ஒற்றே சாரியையே யென்றிவை தோன்றல் திரிதல் கெடுத லுறழ்ச்சி விகற்பங்களையெல்லா முள்ளடக்கி இயல்பின் விகாரமும் விகாரத்தியல்புமென்றும் எல்லாவேற்றுமையும் வி ரிந்துந் தொக்கும் வருதல்போலாது இவ்வேற்றுமை உயர்திணை ப்பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் விரிதலே தகுதி யாய்த் தொகுதற்குறியாயும் வலிந்துகோடலாயும் வருமென்ப துதோன்ற விரிந்துந் தொக்கும் விரிந்தும் விரிதலின்றும் என் றும் நெருநலளவும் வருந்தியபிணி யின்று தீர்ந்ததென்பதுபோ ல ஒழிந்தபொருடோன்ற நின்றென்றுங் கூறினார் மேலைச் சூத்திரத் தொப்பனகொளலே யென்றமையான் இவ்விதிகளை இரண்டாம்வேற்றுமைப்புணர்ச்சி வந்துழியெல்லாங்கூட்டாது வேற்றுமைப்பொதுப்புணர்ச்சியோடொருங்கொத்து முடிவன இவை இப்புறனடைச்சிறப்புவிதியான் முடிவன இவையென வு ய்த்துணர்ந்து ஏற்பனவற்றொடு கூட்டுக. [வ-று] "வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப" என இயல்பின் விகாரமாயிற்று. மண் கொணர்ந்தான்- என விகாரத்தியல்பாயிற்று. நம்பியைக்கொண ர்ந்தான்- என உயர்திணைக்கண் விரிந்தது. ஆடூஉவறிசொல் - மக டூஉவறிசொல்- பல்லோரறியுஞ்சொல்- நாற்பெருமூது- என அதனைக்கட்டொக்கது. கொற்றனைக்கொணர்ந்தான் - என விரவுப் பெயர்க்கண் விரிந்தது. ஆண்பெற்றாள்- பெண்பெற்றாள்- "தற் கொண்டான் வரைந்தக்கால் வாழ்க்கைத் துணை"—"வழிபடு தெ ய்வ நிற்புறங் காப்ப"—என அதனைக்கட்டொக்கது. இவ்விரண்டி டத்துந் தொகையுட் சில தகுதியாயுஞ் சில வலிந்துகோடலாயும் வருதல்காண்க. அன்னபிறவுமென்றமையானே, தற்கொண்டான் - ஏற்பணியாளாய்- என உறழப்படுவன திரிந்தேவருதலு மின்று

கண்ணும் மூன்றாம்வேற்றுமைக்கண்ணுங் கருத்தாவுளவாகலிற் றந்தொழிலையே யீண்டுத் தப்பிநிற்கிய தொழிலென்றானின், மெய்ப்பிடித்ததென்னு மொழுவாய்க்கட் பெயாற்பிடித்ததென மூன்றாமுருபும் விரித்தற் கமையும். அங்ஙனம் விரித்தல்கூடாமையிற் றந்தொழிலுந் தப்பிநிற்கிய தொழிலு மெழுவாய்க்கட் கருத்தாவு மூன்றாம்வேற்றுமைக்கட் கருத்தாவுந் தம்முள் வேறுபாடுடையவாம். அவ்வேறுபாடு அவ்விலக்கணங் கூறுமவழிக் காட்டுதும். (௰௭)

(உாருஎ) இதற்கிது முடிபென் றெஞ்சா தியாவும்-விதிப்பள வின்மையின் விதித்தவற் றியலான்- வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே. ※

(எ-ன்) இவ்வதிகாரத்திற் காவதோர் புறனடை யுணர்-ற்று.

(ப - ரை) இதற்கிதுமுடிபென்று - இதற்கு இதுமுடிபென்று, யாவும் - இவ்வதிகாரத்துள் விதிக்கத் தகுவனவற்றையெல்லாம், எஞ்சாது-குறையாமல், விதிப்பு-தனித்தனி அளவுசெய்து விதிக்கப்புகின், அளவின்மையின்- அதற்கு ஓரளவில்லாமையால், விதித்தவற்று- வகுத்துவிதித்தவற்றினுடைய, இயலான்- இலக்கணங்களை ஏதுவாகக்கொண்டு, வகுத்துரையாதவும்- வகுத்துவிதி உரையாதனவற்றையும், வகுத்தனர்கொளல்- கருதலளவையால் வகுத்துவிதியுரைத்துக்கொள்க. எ-று. (பொ - ரை.) இதற்கிதுமுடிபென்று இவ்வதிகாரத்துள் விதிக்கத் தகுவனவற்றையெல்லாந் தனித்தனி வரையறுத்து விதிக்கப்புகின் அதற்கோர் வரையறையின்மையின் வகுத்து விதித்தனவற்றின் இலக்கணங்களை ஏதுவாகக்கொண்டு வகுத்து விதியுரையாதனவற்றையுங் கருதலளவையான்வகுத்து விதியுரைத்துக்கொள்க. எ-று. ※ [வ-று] எழுத்தியலுள் "மொழிமுதற்காரண மாமணுத் திரளொலி" எழுத்தெனவுரைத்தமையானே "கட்புல னில்லாக் கடவுளைக் காட்டு - சட்டகம் போலச் செவிப்புல வொலியை- யுட்கொளற் குருவாம் வடி வெழுத்தே" எனப்பிறர்கூறியவாறு இவ்வொலிவடிவைக் காட்டுதற்கோர் கருவியாக வரைந்துகொள்ளப்பட்டது வரிவடிவெழுத்தெனவும், பதவியலுள் "அன் ஆன் அள் ஆள்" என்னுஞ்சூத்திரத்துமுறையே அன் ஆன் விகுதியாண்பாற்கென உரைத்தமையானே, பெருமானென்னும்பதம் பெருமையையுடையானென்னும் பொருடோன்றநின்ற பெருமானென்னும் பதத்திலே நிற்றும் ஆன்விகுதி ஆள்விகுதியாயொரோவிடங்களிற் றிரிந்து ஆண்பாலையேயுணர்த்தி நின்றதெனவும், உயிரீற்றுப்புணரியலுள் "இயல்பினும் விதியினுநின்றவுயிர்முன் க ச த ப மிகும்" என உரைத்தமையானே, "ணனவல்லினம்வரட்டறவும்" என்புழிடகரமும்வல்லினமாதலின்

பிறந்ததெனவும், மெய்யீற்றுப்புணரியலுள் "நுந்தம் எம் நம்மீ றாவவ்வரு ஞநவே" என உரைத்தமையானே, அம்மென்னுஞ் சொல்லீற்று மகரமும் குற்றொற்றாதலிற் றன்னொடுமயங்காத மெல்லொற்றுவரின் அதுவாய்த் திரிந்து அந்தலம் என அழகினது நலமென்றுப்பொருட்டாய் வருமெனவும், உருபுபுணரியலுள் - "வவ்வீறு சுட்டிற் கற்றுறல்வழியே" என உரைத்தமையானே அதுபோலும் விறுவும், எவற்றை என அற்றுச்சாரியை பெறுமெனவும், இரண்டாம்வேற்றுமைக்கும் மூன்றாம்வேற்றுமைகளும் புறனடை யுரைத்தமையானே ஏழாம்வேற்றுமையும் "மண்புகுந்தும் விண்பறந்து மாலுமயனுங் காணா வொருபொருள்" என வேற்றுமைப் பொதுவிதி யேலாது சிறுபான்மை வருமெனவுங் கொள்க இன்னும் இவ்வைந்தியலுள்ளும் வகுத்துரையாதனவற்றையெல்லாம் இடர்ப்படாது இதுவேநிலையாக வகுத்துரைத்துக் கொள்க. (௰௮)

உருபுபுணரியல்

முற்றிற்று.

முதலாவது எழுத்ததிகாரம் - முற்றிற்று.

---

(கட்டளைக்கலித்துறை.)

அடையென் பெயர்முறை தோற்றம்வடிவளவாதியந்தம் *
இடைநிலைபோலியென் றீரைந்தெழுத்துமிருபதமும் *
படப்புணர்மூன் றினியல்புவிகாரமுஞ்சாரியையும் *
உடனுணர்வாரெழுத்தறிவாரொன் பருத்தமரே. *

---



உ

இரண்டாவது

# சொல்லதிகாரம்.



சொல்லதிகாரமென்பது - சொல்லினதிகாரத்தை யுடையதென அன்மொழித்தொகையாய்ப் படலத்திற்குக் காரணக்குறியாயிற்று. சொல்லென்றது - எழுத்தினாலாக்கப்பட்டு இருதிணைப்பொருட்டன்மையும் ஒருவனுணர்தற்குக்கருவியாமோசையாகிப்; பெயர் வினை இடை உரி என்று நால்வகைச்சொல்லும் பிறவுமாம். அவை "இயற்சொற் றிரிசொல்" என்னுஞ்சூத்திரத்தாற் பிற்கூறுபவாகலின் ஈண் டெதிரது போற்றியாளப்பட்டது. அதிகாரம் - அதிகரித்தல். அதனை மேலே அதிகாரமுகத் துரைத்தாங் குரைத்துக்கொள்க. எனவே சொல்லை நுதலிவரும் பல ஓத்தினது தொகுதி சொல்லதிகாரமென்றவாறாயிற்று. எழுத்தினாலாக்கப் படுதன் மேலே அதிகாரத்திற்போந்த பதவியலுட் காண்க. இருதிணைப்பொருண்முதலியன பின்வருஞ் சூத்திரங்களா னுணர்க. இனிப் பொருட்டன்மையாவது ஒருபொருட்குக் கேடுபிறந்தாலுந் தனக்குக்கேடின்றித் தானொன்றேயாய்ப் பலவகைப்பட்ட பொருடோறு நிற்குமென்றுணர்க. *

முதலாவது

# பெயரியல்.



(௨௱௫௮) முச்சக நிழற்று முழுமதி முக்குடை - யச்சுதனடிதொழு தறைகுவன் சொல்லே. *

(என்) கடவுள்வணக்கமும் அதிகாரமுமுணர் - ற்று. (ப-ரை) முச்சகம் - மூன்றுலகத்திற்கும், நிழற்றும் - நிழலைச்செய்கின்ற, முழுமதி - நிறைந்தமதிபோலும், முக்குடை - மூன்றுகுடையையுடைய, அச்சுதன் - அழியாதகடவுளுடைய, அடி - அடிகளை, தொ

உயர்திணைச்சொல் அஃறிணைச்சொல் ஆண்பாற்சொல் பெண்பாற்சொல் பலர்பாற்சொல் ஒன்றறிசொல் பலவறிசொல் தன்மைச்சொல் முன்னிலைச்சொல் படர்க்கைச்சொல் வழக்குச்சொல் செய்யுட்சொல் வெளிப்படைச்சொல் குறிப்புச்சொல் (எ-ம்) உயர்திணைப்பொருள் அஃறிணைப்பொருள் ஆண்பாற்பொருள் பெண்பாற்பொருள் பலர்பாற்பொருள் ஒருபொருள் பலபொருள் தன்மைப்பொருள் முன்னிலைப்பொருள் படர்க்கைப்பொருள் வழக்குப்பொருள் செய்யுட்பொருள் வெளிப்படைப்பொருள் குறிப்புப்பொருள் (எ-ம்) வழங்கப்படுமென்பதூஉம் உயிர்க்கறிவு கருவியாய்நின்று தன்னையும் பொருளையு முணர்த்துமாறுபோல ஒருவற்குச் சொற் கருவியாய்நின்று தன்னையும், உளபொருள் இலபொருள் மெய்ப்பொருள் பொய்ப்பொருள் சித்துப்பொருள் சடப்பொருள் நித்தியப்பொருள் அநித்தியப்பொருள் உருவப்பொருள் அருவப்பொருள் காட்சிப்பொருள் கருத்துப்பொருள் இயற்கைப்பொருள் செயற்கைப்பொருள் முதற்பொருள் சினைப்பொருள் இயங்கியற்பொருள் நிலையியற்பொருள் எனப்பல்வாற்றானும் பகுத்துக் கூறப்படும் இருதிணை ஐம்பாற்பொருளையு முணர்த்துமென்பதூஉம் பெற்றாம். (உ)

(உ௱௬௰) ஒருமொழி யொருபொரு ளனவாந் தொடர்மொழி - பலபொரு ளனபொது விருமையு மேற்பன. *

(எ-ன்) மேலைச் சூத்திரத்து நிறுத்தமுறையானே மூவகை மொழிகளாமா றுணர்-ற்று. (ப-ரை) ஒருமொழி - ஒருமொழிகளாவன, ஒருபொருளனவாம் - பகாப்பதமாவது பகுபதமாவது ஒன்றுநின்று தத்த மொருபொருளைத் தருவனவாம், தொடர்மொழி - தொடர்மொழிகளாவன, பலபொருளன - அவ்விருவகைப் பதங்களுந் தன்னேடும் பிறிதோடும் அல்வழி வேற்றுமைப் பொருண்மைக்கத்தால் இரண்டு முதலியவாகத் தொடர்ந்துநின்று இரண்டுமுதலிய பலபொருளைத் தருவனவாம், பொது (மொழி) - பொதுமொழிகளாவன, இருமையுமேற்பன - ஒன்றாய்நின்று ஒருபொருளைத்தரும் அதுவே தொடர்ந்துநின்று பலபொருளைத்தரும் இவ்விரண்டற்கும் பொதுவாய் நிற்பனவாம். எ - று. (பொ-ரை) ஒருமொழிகளாவன பகாப்பதமேனும் பகுபதமேனு மொன்றுநின்று தத்த மொருபொருளைத்தருவனவாம் தொடர்மொழிகளாவன அவ்விருவகைப்பதங்களுந் தன்னேடும் பிறிதோடும் அல்வழி வேற்றுமைப்பொருண்மைக்கத்தான் இரண்டுமுதலியவாகத் தொடர்ந்துநின்று இரண்டுமுதலிய பலபொருளைத்தருவனவாம் பொதுமொழிகளாவன வொன்றாய்நின்று ஒருபொரு

ப்பதத்துள்ளும் அல்வழிவேற்றுமைப் பொருள்களுள்ளு மடங்குமாறுந் தந்துணர்க. (௫)

(உ௱௬க) மக்க டேவர் நரக ருயர்திணை - மற்றுயி ருள்ளவு மில்லவு மஃறிணை. *

(எ-ன்.) திணைக்கூறுமுறையானே இருதிணையாமாறுணர் - ற்று, (ப-ரை) மக்கள் - மக்களும், தேவர் - தேவரும், நரகர் - நரகரும், உயர்திணை - உயர்திணையாகும், மற்றுயிருள்ளவும் - அவரொழிந்தவிலங்கு முதலாகிய வுயிருள்ளவையும், இல்லவும் - நிலம் நீர் முதலாகிய வுயிரில்லாதவையும், அஃறிணை - அஃறிணையாகும், எ-று. (பொ-ரை) மக்களுந் தேவரும் நரகரும் உயர்திணையாம், அவரையொழிந்தவிலங்கு முதலிய வுயிருள்ளவும் நிலம் நீர் முதலிய வுயிரில்லவு மஃறிணையாம், எ-று. ❁ மக்கள் தேவர் நரகர் எனப்படுதலெல்லாம் உயிருங்கூடி நின்றவழியாதலின் அவை பிரிந்தவழியும் வேறுகருதியவழியும் அவருயிரொடும் உடம்பையு முயிரில்லனவாகிய அஃறிணையாகக் கொள்ளப்படுமெனக. விலங்கு முதலியவற்றி னுயிருடம்புகளுமன்ன. மக்களாகப் பிறந்து புண்ணிய பாவ மியற்றிப் புண்ணிய மிகுதியாற் றேவராயும் பாவ மிகுதியால் நரகராயும் பிறத்தலின் மக்க டேவர் நரகரெனச் சாதன சாத்திய முறைமையே வைத்தாரெனக. அன்றியும் ஆசிரியர் தொல்காப்பியர் "உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே" என முன்னர்க்கூறிப் பின்னர் "இவ்வென வறியு மந்தந் தமக்கிலவே - தெய்வஞ் சுட்டிய பெயர்முத லியவை - முயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்" எனக்கூறலின் உயர்திணைப்பாற்படுத்து மக்கடேவர் நரகருயர்திணையென முறைதெரித் தோதினுமெனக் கோடலுமாமெனக. "திணை நிலங் குலமொழுக்கம்" என்பவாகலின் திணையென்னும் பலபொருளொருசொல் லீண்டுக் குலத்தினை யுணர்த்தி நின்றது. உயர்திணையல்லாத திணை அஃறிணையெனப்பட்டது. இவ்விரண்டும் பண்புத்தொகை. உயர்வாய குலம் அஃதின்மையவாய குலம் எனவிரியும் அடையடுத்த இவ்விரண்டுசாதிப் பண்புகளும் ஆகுபெயராய்ப் பண்பிகளையுணர்த்தி நின்றன. திணையென்பது - ஒழுக்கம். அஃதாகுபெயரா யொழுக்கத்தையுடைய பொருள்களையுணர்த்தி நின்றதெனவும், உயர்திணையென்பது - வினைத்தொகையெனவுங் கூறுவாருமுளர். சாதிவேற்றுமைகளுநி உலகப்பொருள்களையெல்லாம் உயர்திணை அஃறிணை என இரண்டுசாதியாகவகுத்து அவ்வேற்றுமைகளுநி அவற்றை ஐம்பாலாகப் பகுத்தல்லே யெல்லா வாசிரியர்க்குங் கருத்தாதலின் நன்மொழுக்கங்கருத வேண்டுவ தின்மையானும் அவ்வொழுக்கமும் உயி

னில்லனவற்றிற்குப் பொருந்தாமையானும் ஈண்டுத் திணையென்பதற்கு அதுபொருளன்றெனவும் உயர்திணை யெப உயர்ந்த திணையென இறந்தகால வினைத்தொகையாக விரிக்கின் மரந்தாமோருமுயர்ந்தமைகருதி உயர்மர மெனவும் கல்வி அறிவு நாடோறுமுயர்ந்தமைகருதி அதனையுடையார்மேலேற்றி உயர்மக்களெனவுங்கூறும் வினைத்தொகைபோல உயர்திணையென்பதற்கு உயருமுடைபெயர்ச்சிவினை காட்சிவகையானும் கருத்துவகையானும் இன்மையின் அது வினைத்தொகை யன்றெனவுங் கொள்க. (௪)

(௨௱௬௨) ஆண் பெண் பலரென முப்பாற் றுயர்திணை. *

(எ-ன்) திருத்தமுறையானே ஐம்பாலுட் சிலபாலும் அவற்றிற்குரிய திணைபுமுணர்-ற்று (ப-ரை) ஆண் - ஆண்பாலும், பெண் பெண்பாலும், பலர் - பலர்பாலும், என - என்று, முப்பாற்று - மூன்றுபாலினையுடைத்தாகும், உயர்திணை - உயர்திணை. எ-று. (பொ-ரை) ஆண் பெண் பலர் என்று மும்மூன்றுபாலினையுமுடைத்து உயர்திணை. எ-று ❁ ஆடவர் என்றற்றொடக்கத்து ஆண்பன்மையும், பெண்டிர் என்றற்றொடக்கத்துப் பெண்பன்மையும், மக்கள் என்றற்றொடக்கத்து இருவர்பன்மையு மடக்கிப் பலரெனப்பட்டதென்க. மேற்பலவென்பது மது. (௫)

(௨௱௬௩) ஒன்றே பலவென் றிருபாற் றஃறிணை. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) ஒன்று - ஒன்றன்பாலும், பல - பலவின்பாலும், என்று - என்று, இருபாற்று - இரண்டுபாலினையுடைத்தாகும், அஃறிணை - அஃறிணை. எ-று. (பொ-ரை) ஒன்றும்பலவும் என்னு மிரண்டுபாலினையுடைத்து அஃறிணை. எ-று ❁ அஃறிணைக்கண்ணும் சேவல் என்றற்றொடக்கத்து ஆண்பாலும், பெடை என்றற்றொடக்கத்துப் பெண்பாலு முளவேனு மவ்வாண்பாலும் பெண்பாலு முயிருள்ளனவற்றுட் சிலவற்றிற்கு முயிரில்லனவற்றிற்கு மின்மையி னப்பகுப்பொழித் தெல்லாவற்றிற்கும்பொருந்த ஒன்றெனப்பட்ட தென்க. (௬)

(௨௱௬௪) பெண்மைவிட் டாணவா வுவபே டாண்பா - லாண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பா - லிருமையு மஃறிணை யன்னவு மாகும். *

(ன் - ன்.) திணைபால்கட் காவதோர் புறனடை யுணர்-ற்று. (ப-ரை) பெண்மை- பெண்டன்மையை, விட்டு- விட்டு, ஆண்-ஆண்டன்மையை, அவாவுவ- அவாவுவனவாகிய, பேடு-பேடுகள், ஆண்பால் - உயர்திணை யாண்பாலாகும், ஆண்மை - ஆண்டன்மையை, விட்டு- விட்டு, அல்லது- பெண்டன்மையை, அவாவுவ - அவாவுவனவாகிய, பேடு- பேடுகள், பெண்பால்- உயர்திணைப் பெண்பாலாகும், இருமையும்- இவ்விருவகைப்பேடுகளும், அஃறிணை

யன்னவும் - அஃறிணையையொப்பனவும், ஆகும்- ஆம், எ-று, (பொ-ரை) பெண்டன்மையினைவிட்டு ஆண்டன்மையினை அவாவுவனவாகிய பேடிகள் உயர்திணை யாண்பாலாம். ஆண்டன்மையினைவிட்டுப் பெண்டன்மையினை அவாவுவனவாகிய பேடிகள் உயர்திணைப்பெண்பாலாம் இவ்விருவகைப்பேடிகளும் உயர்திணையாமன்றி அஃறிணையையொப்பனவுமாம், எ-று. ஆணிலக்கணமும் பெண்ணிலக்கணமும் விரவி ஒருவகையே னுநிரப்பாது நிற்கும் பேட்டினைப் பாற்பொதுமையினீக்கி உயர்திணை யாண்பாலோடும் பெண்பாலோடுஞ்சேர்த்தமையின் அவ்விலக்கணங்களுள்விட்ட இலக்கணமும் அவாவு மிலக்கணமுஞ் சிறந்தனவென்பதூஉம் விடாத இலக்கணமும் அவாவாத இலக்கணமுமுள அவை அத்துணைச்சிறப்பினவல்லவென்பதூஉம் விடுதலும் அவாவுதலும் இலக்கணமென்பதூஉம் பேட்டிலக்கணங்களுட் சிறந்ததொன்றையே கருதாது சிறவாதனவற்றையுமுடன்கருதியவழி இருவகைப்பேடும் ஆண்பெண்ணென்னு மிரண்டனு ளொன்றன்பாற்படுதல் கூடாமையின் அப்பாலினவாமுயர்திணையுமன்றி அஃறிணையிலக்கண மின்மையின் அஃறிணையுமன்றி உயிருள்ளனவற்றுள் ஆண்பெண்ணென்னும் பகுப்பிலவாகிநின்ற அஃறிணையை யொக்குமென்பதூஉம் பெற்றும். பேடி- அலி- அதூஉ- அலி-மகண்மா- என்பன வொருபொருட் கிளவி. அலி மகண்மா என்பனவற்றை வேறுகூறுவாருமுளர். "பெண்ணவா யாணிழந்த பேடியணியாளோ- கண்ணவாத் தக்க கலம்.,, எனப் பெண்ணிலக்கணஞ்சிறந்தமையிற் பெண்பாற்பட்டது, ஆண்பாற்பட்டதற்கும் அஃறிணையொத்துநின்றதற்கு மிலக்கியம் வந்தவழிக் காண்க.

(௱௬௫) படர்க்கை வினைமுற்று நாமங் குறிப்பிற்- பெறப்படுந் திணைபா லனைத்து மேனை- யிடத்தவ் வொருமைப் பன்மைப் பாலே. ※

(எ-ன்) நிறுத்தமுறையானே மூன்றிடத்துஞ் சொற்றன்னேயும் பொருளையுமுணர்த்துமாறுணர் - ற்று. (ப-ரை) படர்க்கை வினைமுற்று - படர்க்கைவினை முற்றுச்சொல்லேயும், (படர்க்கை) நாமம்- படர்க்கைப்பெயர்ச்சொல்லேயும், குறிப்பின்- முன்குறித்தால், திணைபாலனைத்தும்- இருதிணையைம்பாலும், பெறப்படும்-பின் அவ்விருவகைச்சொல்லாலும்பெறப்படும், ஏனையிடத்து-ஒழிந்ததன்மைமுன்னிலைகளின், (வினைமுற்று)- வினைமுற்றுச்சொல்லேயும், (நாமம்)- பெயர்ச்சொல்லேயும், (குறிப்பின்) - முன்குறித்தால், அவற்று- அவ்விருதிணை யைம்பாலுள், ஒருமைப் (பால்)- ஒருமைப்பாலும், பன்மைப்பால்-பன்மைப்பாலும், (பெறப்படும்)- அந்நால்வகைச்சொல்லாலும் பெறப்படும், எ-று (பொ-ரை) வெளி

ப்படைச்சொல்லாயுங் குறிப்புச்சொல்லாயும் வழக்கின்கண்ணும் செய்யுட்கண்ணு நிற்கும்படர்க்கை வினைமுற்றுச்சொல்லையும் படர்க்கைப்பெயர்ச்சொல்லையும் முன்குறித்தாற் பின் அவ்விருவகைச்சொல்லுங் கருவியாக இருதிணையும் ஐம்பாலும் பெறப்படும் ஒழிந்த தன்மைமுன்னிலை வினைமுற்றுச்சொல்லையுந் தன்மைமுன்னிலைப்பெயர்ச்சொல்லையும் முன்குறித்தாற் பின்பு அந்நால்வகைச்சொல்லுங் கருவியாக இருதிணை ஐம்பாலுள் ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் பெறப்படும் எ-று. ☼ வினைமுற்று நாமமென்பவற்றையுங் குறிப்பினென்னும் வினையெச்சத்தையும் பெறப்படுமென்பதனையு மேனையிடத்துங் கூட்டுக. [வ-று.] நடந்தான்-நடந்தாள்-நடந்தார்-நடந்தது நடந்தன-(எ-ம்) அவன்-அவள்-அவர்-அது-அவை-(எ-ம்) படர்க்கை வினைமுற்றுச்சொல்லும் படர்க்கைப்பெயர்ச்சொல்லு முன்பு தம்மையுணர்த்திப் பின்பு இருதிணையும் ஐம்பாலுமாகிய பொருள்களையுணர்த்தின. நடந்தேன் நடந்தேம்-(எ-ம்) யான்-யாம்-(எ-ம்) நடந்தாய்-நடந்தீர்-(எ-ம்) நீ-நீர்-(எ-ம்) தன்மைவினைமுற்றுச்சொல்லுந் தன்மைப்பெயர்ச்சொல்லும் முன்னிலைவினைமுற்றுச்சொல்லும் முன்னிலைப்பெயர்ச்சொல்லும் முன்பு தம்மையுணர்த்திப் பின்பு இருதிணை ஐம்பாலு ளொருமைப்பாலும் பன்மைப்பாலு முணர்த்தின. பிறவுமன்ன. வினைமுற்றை முற்கூறினமையா னவை யிருதிணைமருங்கின் ஐம்பாலறிய வீற்றினின்றிசைக்கும் விகுதிகளை யுடையவென்பதூஉம் இருதிணை ஐம்பாற்பொருள்களையுணர்த்துநெறி பிறபெயர்களிற் சிறந்தன வென்பதூஉம் குறிப்பினென்றமையாற் சொற்றம்மையுணர்த்து மென்பதூஉம் தன்னை முன்னுணர்த்திப் பொருளைப்பின் னுணர்த்துமென்பதூஉம் ஒலியெழுத்தை உணர்த்தற்கு வரிவடிவோர் குறியாய் நின்றாற்போலப் பொருளை உணர்த்தற்குச் சொல்லோர் குறியாய் நின்றதென்பதூஉம் அக்குறிப்பைக் குறித்தாலன்றி யிருதிணை ஐம்பாலாகிய பொருட்பேறின்றென்பதூஉம் பெறப்படுமென்றமையாற் செவிப்புலனாகிய சொல்லை யாப்புறுத்து கட்பொறிமாத்திரையாயின் இருதிணை ஐம்பாற் பொருள்களை ஒருவனுணருமுணர்ச்சி விலங்குணர்ச்சிபோலு மன்றி அது பொருட்பேறாகா தென்பதூஉம் ஒருமைப்பன்மைப் பாலென்றமையாற் றன்மைமுன்னிலைகளின் ஆண் பெண் பலர் ஒன்று பல என்னும் பால்விகற்பத்தோடு இருதிணையுந் தோன்றுமென்பதூஉம் அவ்விடங்களினிற்றற்குரிய வினைமுற்றும் பெயருந் தம்மையும் பொருளையு முணர்த்துமாறு இவ்வாறெனவே இவ்விடங்கட்குப் பொதுவாகிய வினைமுற்றுக்களும்பெயர்களும் பொதுமைநீங்கி யோரிடத்திற் குரியவாகி இவ்வாறு

தம்மையும் பொருளையு முணர்த்துமென்பதூஉம் பெயரெச்சமும் வினையெச்சமும் வினைத்தொகையும் பண்புத்தொகையுங் குறைச்சொல்லாதலிற் றம்படனிலையாகிய வருமொழியொடு புணர்ந்து பொருண்முற்றி இம்மூவிடவினைமுற்றுள்ளும் பெயருள்ளுமடங்குதலின் இவ்வாறு தம்மையும் பொருளையு முணர்த்துமென்பதூஉம் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயர்வினையு ளடங்குதலின் அவ்வாறு தம்மையும் பொருளையு முணர்த்துமென்பதூஉம் இவ்வாறெல்லாச்சொல்லையும் வினைமுற்றுள்ளும் பெயருள்ளுமடக்கி மூவகையிடத்துநின்றசொல் லிருதிணை யைம்பாற்பொருளையுந் தன்னையுமுணர்த்துஞ் சிறப்புவிதிகூறிற்றென்பதூஉம் பெற்றாம். "வயிர வூசியு மயன்வினை யிரும்புஞ்-செயிரறு பொன்னைச் செம்மைசெய் யாணியுந்-தமக்கமைகருவியுந் தாமா மவைபோ-லுரைத்திற முணர்த்தலு முரையது தொழிலே." என்றார் ஆசிரியரகத்தியனாரு மெனக. இனி இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி இருதிணை ஐம்பாலைப் பொருளகத்தறிவித்ததன்றிச் சொல்லகத்தறியுமாறு கூறினானெனப் பொருள்கூறின் "இருதிணை மருங்கி னைம்பா லறிய-வீற்றினின் றிசைக்கும் பதினோரெழுத்துந் -தோற்றந் தாமே வினையொடு வருமே." என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியவாறே படர்க்கைவினைமுற்றொன்றுமேகூறி லமையும் படர்க்கைநாமமென்றன் மிகைபடக்கூறலாம் ஏனையிடத்தவற்றொருமைப் பன்மைப்பாலை யென்றல் தன்மை முன்னிலை யொருமை பன்மைமாத்திரையன்றி இருதிணை ஐம்பாலை விளக்காமையின் மற்றொன்றுவிரித்தலாம். இவ்வாறன்றி மூவிடங்களின் ஒவ்வொன்றற்குரிய முற்றும் பெயருமே இருதிணை ஐம்பாற்பொருளினை விளக்கு மொழிந்தன விளக்காவெனப் பொருள்கூறின், எல்லாச்சொல்லு மூவகையிடத்து நின்றிருதிணை ஐம்பாற்பொருளை விளக்குமெனக்கூறிய "ஒருமொழி தொடர்மொழி" என்னும் பொதுச்சூத்திரத்தோடு மாறுகொளக்கூறலாம். இச்சூத்திரத்துட் குறிப்பினென்னுஞ்சொல்லை வினையெச்சமாக்காது குறிப்பினானு மிருதிணை யைம்பாலும் விளக்குமெனப் பொருள்கூறின் வெளிப்படையுங் குறிப்புமாஞ்சொற்கள் இருதிணை ஐம்பாற்பொருள்களை விளக்குநெறியன்றி மூவிடச்சொற்போலக் குறிப்புச்சொல்லென வேறொன்றின்மையானும் ஒருவ ரறிவுதந்தாரென்றால், "நுண்ணுணர் வுடையோர் நூலொடு பழகினும்-பெண்ணறி வென்பது பெரும்பேதைமைத்தே." என்பவாகலின் அறிவு பெண்பாலாற் பெறுதல்கூடாமையின் அதனையொழித்து ஒருவனென்னும் படர்க்கைப் பெய

ரும் அதன்பயனிலையாகிய தந்தானொன்றும் படர்க்கைமூற்றும் உயர்திணையினையும் ஆண்பாலினையுங் குறிப்பான் விளக்குதலின் இப்பெயர்வினைகளை யொழித்துப் படர்க்கைவினைமுற்று நாமமென்றாரல்லராதலானுஞ் சொற்கள் வெளிப்படையானுங் குறிப்பினானும் இருதிணை ஐம்பாற்பொருள்களை விளக்குத னிறுத்தமுறையே "ஒன்றொழி பொதுச்சொல்„ என்னுஞ் சூத்திரத்தாற் பின்கூறுதலானும் ஈண்டிங்கூறுதல் கூறியதுகூறலா மாதலானும், அது பொருளன்றென்க. (அ)

(௨௱௬௬) தன்மை முன்னிலை படர்க்கைமூ விடனே. *

(எ-ன்) நிறுத்தமுறையானே மூவிடமாமாறுணர்-ற்று. (ப-ரை) மூவிடன் - மூவிடமாவன, தன்மை - தன்மையும், முன்னிலை - முன்னிலையும், படர்க்கை - படர்க்கையுமாம், எ-று. (பொ-ரை.) மூவிடமாவன தன்மையும் முன்னிலையும் படர்க்கையுமாம் எ-று. ※ [வ-று] யான் - நீ - அவன் - (எ-ம்) வந்தேன் - வந்தாய் - வந்தான் - (எ-ம்) வரும். சொல்வானுங் கேட்பானுமாகிய இருவர்கூட்டத்துப் பிறந்தசொல் அவ்விருவரிடத்து நில்லாது அயலானிடத்திற் படர்தலிற் படர்க்கையெனப்பட்டது. (க)

(௨௱௬௭) இலக்கண முடைய திலக்கணப் போலி மரூஉவென் றாகு மூவகை யியல்பு-மிடக்க ரடக்கன் மங்கலங் குழூஉக் குறி - யெனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல். *

(எ-ன்) நிறுத்தமுறையானே வழக்காமாறுணர்-ற்று. (ப-ரை) இலக்கணமுடையது - இலக்கணவழியால் வருவதும், இலக்கணப்போலி - இலக்கணமில்லையாயினும் இலக்கண முடையதுபோல வருவதும், மரூஉ - இலக்கணஞ்சிதைந்து பரீஇயதும், என்றாகும் - என்றுவழங்குகிற, மூவகையியல்பும் - மூவகையியல்புவழக்கும், இடக்கரடக்கல் - சொல்லத்தகாததைமறைத்துச் சொல்வதும், மங்கலம் - மங்கலமில்லதையொழித்து மங்கலமாகக்கூறுவதும், குழூஉக்குறி - ஒருகூட்டத்திலுள்ளோர் யாதாயினுமொருகாரணத்தால் ஒருபொருளினது சொற்குறியையொழித்து வேறொருசொற்குறியாற்கூறுவதும், எனும் - என்றுவழங்குகின்ற, முத்தகுதியோடு - மூன்றுதகுதிவழக்குடனே, ஆறும் - ஆறும், வழக்கியல் - வழக்கிலக்கணம், எ-று. (பொ-ரை) இலக்கணமுடையதென்றும் இலக்கணப்போலியென்றும் மரூஉவென்றும் வழங்கு மூவகையியல்புவழக்கும் இடக்கரடக்கலென்றும் மங்கலமென்றும் குழூஉக்குறியென்றும் வழங்கு மூன்று தகுதிவழக்குடனேகூட அறுவகைப்படும் வழக்கிலக்கணம். எ-று. ※ [வ-று.] நிலம் - நீர் - தீ - காற்று - ஆகாயம் - நன்னிலம் - தண்ணீர் - என்றற்றொடக்கத்தன இலக்கணமுடையன. இல்முன் என்பதனை முன்றிலென்றும், நகர்ப்

புறமென்பதனைப் புறநகரென்றும், புறவுலா வென்பதனை உலாப்புறமென்றும், கண்மீயென்பதனை மீகண்ணென்றும், கோவி லென்பதனைக் கோயிலென்றும், பொதுவி லென்பதனைப் பொதியிலென்றும், வழங்குமித்தொடக்கத்தன இலக்கணப்போலி. அருமருந்தன்னபிள்ளை யென்பதனை அருமந்தபிள்ளை யென்றும், மலையமாநாடு என்பதனை மலாடென்றும், சோழநாடு என்பதனைச் சோணாடென்றும், பாண்டியநாடு என்பதனைப் பாண்டிநாடென்றும், இந்நாடு என்பதனை இந்தநாடென்றும், ஆதன்றந்தை யென்பதனை ஆந்தையென்றும், பூதன்றந்தை யென்பதனைப் பூந்தையென்றும், மரவடி யென்பதனை மராடியென்றும், குளவாம்பல் என்பதனைக் குளாம்பலென்றும், யாவரென்னும் பெயரை யாரென்றும் ஆரென்றும், யாரென்னுங் குறிப்புவினையை ஆரென்றும், எவனென்னுங் குறிப்புவினையை என்னென்றும் என்னவென்றும், ஆற்றூர் என்பதனை ஆறையென்றும், வழங்குமித்தொடக்கத்தன மரூஉ. கண்கழீஇவருதும் - கால்கழீஇவருதும் - வாய்பூசிவருதும் - ஊர்முன்பகரவீ - பவ்வீ - புலிநின்றிறந்த நீரல்லீரத்து - கருமுகமந்தி - செம்பினேற்றை - என்றற்றொடக்கத்தன இடக்கரடக்கல். செத்தாரைத் துஞ்சினாரென்றும், ஓலையைத் திருமுகமென்றும், காராட்டை வெள்ளாடென்றும், இடுகாட்டை நன்காடென்றும், வழங்குமித்தொடக்கத்தன மங்கலம். பொற்கொல்லர் பொன்னைப் பறியென்றும், யானைப் பாகர் ஆடையைக் காரையென்றும், வேடர் கள்ளைச் சொல்விளம்பியென்றும், வழங்குமித்தொடக்கத்தன குழூஉக்குறி. இலக்கணநெறியால் வருவதனை இலக்கணமுடையதென்றும், இலக்கணமுடையதன்றிப் படைப்புக்காலத் திலக்கணமுடையதோடொருங்கு படைக்கப்பட்டதுபோல வருவதனை இலக்கணப்போலியென்றும், தொன்றுதொட்டதன்றி இடையேயிலக்கணஞ் சிதைந்து மரீஇயதனை மரூஉவென்றும் இம்மூன்றுந் தகுதிவழக்குப் போலாது எப்பொருட்கு எச்சொல்லுரைத்ததோ அப்பொருளை அச்சொல்லாற்கூறுதலின் இயல்புவழக்கென்றும் "இடக்கர் என்பது மறைத்துமொழி கிளவி," என்பவாகலின் இடக்கர்தோன்றுதனைமறைத்ததை இடக்கரடக்கலென்றும் இடக்கர்போற் கூறத்தகாத தன்றேனும் மங்கலமில்லதைப் பழித்து மங்கலமாகக் கூறுவதை மங்கலமென்றும், ஒவ்வொரு குழுவினர் யாதானுமொருகாரணத்தான் ஒருபொருளினது சொற்குறியையொழித்து வேறோர்சொற்குறியாற் கூறுவதைக் குழூஉக்குறியென்றும், இம்மூன்று மப்பொருளையறிதற் கமைந்த இச்சொல்லாற் கூறுதற்றகுதியன்று வேறோர்சொல்லாற் கூறுதற்றகுதியெனக

கருதிக்கூறுதலிற் றகுதிவழக்கென்றும் பெயர்பெற்றன. இலக்க
ணப்போலியினையும் மரூஉவினையும் வேறறிதற்குச் சான்றோரா
ட்சியேகாரணமென்க. அன்றி நிலைமொழி வருமொழிகண் முன்
பின்னாக மாறிநிற்பன இலக்கணப்போலி ஒழிந்தசிதைவெல்லாம்
மரூஉவென்று கோடலுமொன்று. இவ்வறுவகைவழக்குந் திரி
சொற்கண்ணும் வருதலின் இயற்சொல்லாகிய உலகவழக்கையுந்
திரிசொல் திசைச்சொல் வடசொல்லாகிய செய்யுள்வழக்கையுந்
தொகுத்து இச்சூத்திரத்தான் வழக்கெனப் பட்டதென்க. அங்ஙன
மாயிற் செய்யுளென வேறுகூறுவ தியாதுகருதியெனின் இவ்
வுலகவழக்குஞ் செய்யுள்வழக்கும் வழக்காய்நில்லாது தொடைப்
பட்டமை கருதியென்க. வழக்கென்பது- சொன்னடை. இனி
ஆசிரியர் தொல்காப்பியர் இடக்கரென்பதனை "அவையல்கிளவி"
எனவும் அவையல்கிளவியாவ திழிந்தோர்சொல்லு மிழிந்தசொ
ல்லாதலான் அதனை நன்மக்களிடை மறைத்துக்கூறுக வென்பார்
"அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்" எனவும் மறைத்துக்கூ
றுங்கால் மேற்றொட்டுமரீஇ வழங்கியதனை மறைத்தலை நீக்குகவெ
ன்பார் "மறைக்குங் காலை மரீஇய தொரால்." எனவுங்கூறுவர்.
மேற்றொட்டுமரீஇ வழங்கியது "ஆப்பிநீரொடுகுந் தெளித்துச் சிறு
காலை" யானைப்பிலண்டம் - யாட்டுப்பிழுக்கை- எனவரும். தம்பொ
ருண்மேலில்லாத வணிகுறித்துநின்ற "பகல்கான் றெழுதரும் பல்கதி
ர்ப் பரிதி" என்றற்போல்வன தம்பொருளையுணர்த்துங்கால்
மறைத்துக் கூறப்படுமாறுமுணர்க. (௰)

(௨௱௬௮) பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல-
சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்-வல்லோ ரணிபெற
ச் செய்வன செய்யுள். *

(எ-ன்) நிறுத்தமுறையானே செய்யுளாமாறுணர்- ற்று. (ப-ரை)
பல்வகைத்தாதுவின் தோல் இரத்தம் இறைச்சி மேதை எலும்
பு மச்சை சுவேதநீர் என்கிற எழுவகைத்தாதுக்களினாலே, உயிர்க்
கு-உயிருக்கு இடமாகச்செய்யப்பட்ட, உடல்போல்-உடம்புபோ
ல, பலசொல்லால்-இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொ
ல் என்கிறநால்வகைச்சொற்களால், பொருட்கு-பொருளுக்கு, இட
னாக-இடமாக, உணர்வினின்- கல்வியறிவினால், வல்லோர்- செய்யு
ள்செய்யவல்லவர், அணிபெற- அலங்காரம்பெற, செய்வன- உண்
டாக்குவன, செய்யுள்-செய்யுளாம், எ-று (பொ-ரை) தோல் இர
த்தம் இறைச்சி மேதை எலும்பு மச்சை சுவேதநீர் என்னும்
எழுவகைத்தாதுக்களினால் உயிர்க்கிடனாக இயற்றப்பட்ட உடம்பு
போல இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்னும்
நால்வகைச்சொற்களாற் பொருட்கிடனாகக் கல்வியறிவினாற் செ

யே.,,—"பல்சான் றீரே பல்சான் றீரே- கயன்முள் ளன்ன நரை
முதிர் திரைகவுட் பயனின் மூப்பிற் பல்சான் றீரே.,,—"அறனொ
மற்றிது விறன்மாண் குடுமி யின்னா வாகப் பிறர்மண் கொண்
டினிய செய்திநின் னார்வலர் முகத்தே.,,—"நீயுந் தகுதியோ நின்னை
ப் புறங்கடைப் போதர விட்ட நுமருந் தகுதியர் நிறையழி கொ
ல்யானை நீர்க்குவிட் டாங்குப்-பல ருபவறைந் தல்லது செல்லற்கவெ
ன்று - விளறுமிய தவறுடை யாமே.,,—"உமையார் தடங்கண் மயில
ன்னார் நீத்தனர் - கையார் பிரிவித்தல் காண்.,,—"சோலையை
யோவெழுத்தா லேசொல்லுந் தொக்கதன்மே லீலப்பேயோவ்
வெழுத்தி ரணிரட்டு மாலைக - குடை வேந்தன்சென்னி குலநதி
யின் பேரைக்- கடைசேர்ந்த வோரெழுத்தாற் காண்.,, கா- காவி-
காவிரி-என்பதுபொருள். இஃதெழுத்துப் பெருக்கம். "ஆற்றி
ன்பேரீற் றினெழுத் தொழிய வின்பஞ்சேர்-நாற்கால தாமீற் று
யிர்நடப்ப- வேற்புடைய- வுண்பயறு மாங்கதனி னீரொழிந்தா
லோதுநூற்- இன்பஞ்சேர் செய்யுளா மின்று,, பாலாறு- பாலா-
பால்-பா- என்பது பொருள். இஃதெழுத்துச் சுருக்கம். "வாம
மணிமே கலையார் மயிர்குறுகி - நுமைவர் பெய்யு மணிதுழை.யே
ம- மயிர்திறுவி மற்றதற்கோர் புள்ளி கொம்பிற்- செயிர்தீர் மா
மாகுஞ் சென்று,,—கூழை-குழை- ஓதி-ஒதி- என்பது பொருள்
இது மாத்திரைச் சுருக்கம். "பூமேலா ளாமென்பார் பூப்போர்வை
பென்செய்யுந்- தீமே படிற் கொடுத்தாற் கொள்வ தெவ்-னுமே
-நலந்திகழுஞ் செங்கை நயதீர னெங்கோன்- சிலம்பன் திருவேங்
கடன்.,, இது விலவுத்தரம். "நீத்தொழிந்த வாறைந் தடக்கிப்
பின் னிச்சயமே- வாய்த்தவமைந்த வாயில்பெண் ணுனையுங்-கூத்தந்
கு- வாளோரு டோசைவினை நில மில்லலாற்- சேனா யுடன்வரு
வ தில்.,, நிலையாமைகடைப்பிடி - சிவபுண்ணியஞ்செய்-என்பது
பொருள், இத்தொடக்கத்தனவெல்லாங்குறிப்பிறைற் றந்தபொரு
ள்களையுணர்த்தின இன்னபிறவுமென்றமையானே தெரிநிலைவினை
குறிப்புவினையாலணையும்பெயரும்வினைமுற்றுங்குறிப்புமுற்று
ம் வருமெச்சங்களுஞ்செய்யுமென்னுமுற்றும், அன்று-இன்று-
என்னும்வினையெச்சக்குறிப்புங்கேட்குநபோலவுங்கிளக்குநபோ
லவும் இயங்குநபோலவும் இயற்றுநபோலவும் அஃறிணைமருங்கி
னுமறையப்பட்டதன்முதலிய இலக்கணைகளும் இவைபோல்வனபிற
வுங்கொள்க. இவ்வாறன்றி, நிலம்-நீர்-தீ-காற்று-ஆகாயம்- என்றற்
றொடக்கத்தனவெல்லாம் வெளிப்படையிற் பொருளுணர்த்தின.
வடநூலார் சொற்பொருளை, வாச்சியம் வேங்கியம்- இலக்கணை-எ
னமூன்றெனவு மிலக்கணையை வேங்கியத்துளடக்கி யிரண்டென
வுங்கூறுப. இவற்றுள் வாச்சியமென்பது வெளிப்படை. வேங்

பெயர்த்திரிசொல் வினையியற்சொல் வினைத்திரிசொல் இடையியற்சொல் இடைத்திரிசொல் உரித்திரிசொல்என எழுவகைப்படுமென்பதூஉம் திசைச்சொல்லும்வடசொல்லும் அணுகியவழிஒன்பதுவகைப்படுமென்பதூஉம்பெறற்ரும். உரியியற்சொல் இவ்விருகவும் உரித்திரிசொல் என்றது இயற்சொல் திரிசொலென்னும் பொதுவிலக்கணநோக்கியென்க. இச்சொற்களை யொருங்கோதாது முறைதெரித்தோதிய தென்னையெனின், ஒருவன் ஒருத்தியென்றமாத்திரையின் அவர் கைகான்முதலிய அகத்துறுப்பும் ஆடை அணிமுதலிய புறத்துறுப்படங்குதல்போலப் பெயர்வினை யென்றமாத்திரையின் அவற்றின்அகத்துறுப்பாகிய விகுதியுருபுமுதலிய இடைச்சொற்களும் புறத்துறுப்பாகியவேற்றுமையுருபுமுதலிய இடைச்சொற்களு மடங்குதலானும் உரிச்சொல் "பல்வகைப்பண்பும் பகர்பெயராகி" என்பவாகலிற் பெயருளடங்குதலானுந் திசைச்சொல்லும் வடசொல்லும் இவற்றுள் யாதானுமொன்றுளடங்குதலானும் இவற்றை அடக்கிநின்றதலைமையுஞ் சிறப்புந்தோன்றப் பெயர்வினையெனவிரண்டாகுமென வரையறுத்தும் பெயர்வினையுளடங்கிநின்றவற்றையே வேறுபாடறிதற்கு வேறுபடுத்துத் தொகைகோடலின் இடையுரிக்கு அத்தலைமையுஞ் சிறப்புமின்றென்பதுந்தோன்றஅமித்து நான்குமாமென்றுங் கொடுந்தமிழ் முதலியசொற் செந்தமிழோடுவிராயவழி அவற்றைத்திசைச்சொலென்றும் ஆரியச்சொற் றமிழ்நடைபெற்றுச் செந்தமிழோடுவிராயவழி யதனை வடசொலென்றுந் தமிழோடுதழுவப்படுமாயினுஞ் செந்தமிழ்ச்சொல்லோடுதொகைகோட லொருதலையன்றென்பதுதோன்ற அணுகாவழியென்று முறைதெரித்தோதினரென்க. வடக்குமோர்திசையன்றோ திசைச்சொல்லன்றி வடசொலலெனவேறுகூறுவ தென்னையெனின், தமிழ்நாட்டிற்குவடதிசைக்கட்பதினெண்மொழிகளுள் ஆரியமுதலிய பலமொழியுமுளவேனுந் தென்றமிழ்க்கெதிரியது கடவுட்சொலலாகிய ஆரியமொன்றுமேயென்பதுந்தோன்ற அவற்றுட் டமிழ்நடைபெற்றதைவடசொலென்றும் ஏனையவற்றுட்டமிழ்நடைபெற்றதைத் திசைச்சொலென்றுஞ் சான்றோரால் நியமிக்கப்பட்டனவென்க. அன்றியும், ஆரியச்சொல் எல்லாதேயத்திற்கும் விண்ணுலகமுதலியவற்றிற்கும் பொதுவாகலான் அவ்வாரியச்சொற்றமிழ்நடைபெற்றதைத்திசைச்சொலென்றல் கூடாதெனக் கோடலுமாம். அங்ஙனமாயின் வடசொலென்ற தென்னையெனின், ஆண்டைப் பயிற்சிமிகுதிபற்றி யெனக்கொள்க. இச்சொற்களைப்பெயர்முதலியவாக வைத்ததென்னையெனின், பெயர்ச்சொல்பொருளை விளக்குதலானும்வினைச்சொல்

பொருளது புடைபெயர்ச்சியைவிளக்குதலானும் இடைச்சொல் பொருளையும் பொருளதுபுடைபெயர்ச்சியையுந் தம்மாலன்றித் தத்தங்குறிப்பான்விளக்குதலிற் பெயர்ச்சொல் வினைச்சொற்களும் ஆகாது அவற்றின்வேறுமாகாது இடைநிகரனவாய் நிற்றலானும் உரிச்சொல்பொருட்பண்பாகிய இசை குறிப்புப்பண்புமூன்றனையும் விளக்கிப் பொருட்குரிமைபூண்டுநிற்றலானும் திசைச்சொற் கொடுந்தமிழ்மொழியாயும் அன்னியமொழியாயும் வருதலானும் வடசொல் அன்னியமொழியேயாய் வருதலானும் இம்முறை வைக்கப்பட்டனவென்க. "சொல்லெனப் படுப பெயரே வினையென் றாயிரண் டென்ப வறிந்திசி னோரே.,,— "இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியு - மவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப.,, என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரு மென்க. (௰௫)

(உ௱எக) செந்தமிழாகித் திரியாதியார்க்கும்- தம்பொருள்விளக்குந் தன்மையவியற்சொல். *

(இ-ன்) மேலைச்சூத்திரத்து நிறுத்தமுறையானே இயற்சொல்லாமாறுணர்-ற்று. (ப-ரை) செந்தமிழாகி- செந்தமிழ்நிலத்து மொழியாகி, திரியாது-திரிசொற்போலாகாது, யார்க்கும்- கற்றோருக்குங் கல்லாதோருக்கும், தம்பொருள் - தம்பொருளை, விளக்கும்- ஒப்பவிளக்குகின்ற, தன்மைய- தன்மையையுடையவுலகவழக்கே, இயற்சொல்- இயற்சொல்லாகும், எ-று, (பொ-ரை) செந்தமிழ்நிலத்துமொழியாகி அந்நிலத்து மொழியுண் மேற்கூறப்படுந் திரிசொற்போலாது கற்றார்க்குங் கல்லாதார்க்கு மொப்பத் தம்பொருளை விளக்குந்தன்மையினையுடைய வுலகவழக்கியற்சொல்லாம். எ-று. ❁ யார்க்குமென்றதனால் உலகவழக்கென்பது பெற்றாம். [வ-று.] மண்-பொன்- என்றற்றொடக்கத்தன பெயரியற்சொல். நடந்தான்-வந்தான்- என்றற்றொடக்கத்தன வினையியற்சொல். அவனை- அவனால் - என்றற்றொடக்கத்துவரும் வேற்றுமையுருபு முதலியன இடையியற்சொல். — செந்தமிழ்நிலமாவதியாதெனில்—"சந்தனப் பொதியச் செந்தமிழ் முனியுஞ்- சவுந்தர பாண்டிய னெனுந்தமிழ் நாடனுஞ் - சங்கப் புலவருந் தழைத்தினி திருக்கு- மங்கலப்பாண்டி வளநா டென்ப.,, இவ்வாறன்றிச் செந்தமிழ்நிலம் வையையாற்றின் வடக்கெனக் கூறுவாருமுளர். கொடுந்தமிழ்நிலத்துப் புனனாடெனப்படுவது சோணாடாதலானும் பாண்டியனையே தமிழ்நாடனெனச் சான்றோர் கூறுதலானு மஃதுஞாயன்றென்க. (௰௬)

(உ௱எஉ) ஒருபொருள்குறித்த பலசொல்லாகியும் - பலபொருள்குறித்த வொருசொல்லாகியு-மரிதுணர்பொருளன திரிசொல்லாகும். *

(எ-ன்) நிறுத்தமுறையானே திரிசொல்லாமாறுணர் - ற்று. (ப-ரை) ஒருபொருள்- ஒருபொருளை, குறித்த-கருதிய, பலசொல்லாகியும் பலசொற்களாகியும், பலபொருள்-பலபொருள்களை, குறித்த-கருதிய, ஒருசொல்லாகியும்- ஒருசொல்லாகியும், அரிது-அரிதாக- உணர்-கற்றோர் அறிகின்ற, பொருளன - பொருளினவாய்வருவன, திரிசொல்லாகும்- திரிசொல்லாகும், எ-று. (பொ-ரை) ஒருபொருளைக் கருதிய பலசொல்லாகியும் பலபொருளைக் கருதிய ஒருசொல்லாகியுங் கற்றுணரும் பொருளவாய் வருவன திரிசொல்லாம் எ-று. ※ அரிதுணர்பொருளன வென்றமையான் ஒருபொருள்குறித்த பலசொல்லுள்ளும் பலபொருள் குறித்த ஒருசொல்லுள்ளும் வருமியற்சொல் லொழியக்கொள்க [வ-று.] கிள்ளை-சுகம்- தத்தை- என்றற்றொடக்கத்தன ஒருபொருள்குறித்த பலபெயர்த்திரிசொல். யானையுங் கோழியுஞ் சங்கும் வாரணம் என்றற்றொடக்கத்தன பலபொருள்குறித்த ஒருபெயர்த் திரிசொல். படர்ந்தான்- சென்றான்- என்றற்றொடக்கத்தன ஒருபொருள் குறித்த பலவினைத் திரிசொல். வரைந்தான்- ஆர்த்தான் - என்றற்றொடக்கத்தன பலபொருள்குறித்த ஒருவினைத்திரிசொல். சேறும்- வருதும்-என்றற்றொடக்கத்து விகுதிகள் ஒருபொருள்குறித்த பலவிடைத்திரிசொல். "கொல்லே லையய மசைநிலைக் கூற்றே." என்றற்றொடக்கத்தன பலபொருள்குறித்த ஓரிடைத்திரிசொல். "சாலவுறுதவநனிகூர்கழி மிகல்" என்றற்றொடக்கத்தன ஒருபொருள்குறித்த பலவுரித் திரிசொல். "கடியென் கிளவி காப்பே கூர்மை" என்றற்றொடக்கத்தன பலபொருள் குறித்த ஓருரித்திரிசொல். திசைச்சொல்லும் வடசொல்லும் ஒருபொருள் பலபொருளென்னும் விகற்பத்தான் வந்தனவேற் காண்க. ஈண்டியற்சொல் திரிசொலென்ற தவற்றினெழுத்துக்க டிரியாமையுந் திரிந்தமையுங் கருதியன்று வானரத்தின்முகந்தன்னியல்பா யிருந்ததேனும் நரர்முகச்செவ்விக்கு மறுதலைப்பட்டமைகருதி வலிமுகமெனப்பட்டதுபோலக் கல்வியேதுவானன்றி இயல்பாகத் தம்பொருளையுணர நிற்றலின் இயற்சொல்லென்றும் அவ்வியல்பிற்கு மறுதலைப்பட்டுக் கல்வியேதுவாற் றம்பொருளை யுணர நிற்றலிற் றிரிசொல்லென்றுங் கூறப்பட்டதென்க. (௯௫)

(உ௱எகூ) செந்தமிழ்நிலஞ்சேர் பன்னிருநிலத்தினு - மொன்பதிற்றிரண்டினிற் றமிழொழிநிலத்தினுந்-தங்குறிப்பினவே திசைச்சொலென்ப. ※

(எ-ன்) நிறுத்தமுறையானே இயற்சொற் றிரிசொலென்றவற்றின் பின்னின்ற அவ்வியல்பினவாய பெயர்வினையிடையுரிகளை

இவ்வியலுள் இடுகுறி காரணமென்னுஞ் சூத்திரந்தொட் டிவ்வதிகாரத்தைந்தியலானு முணர்த்த நிறீஇ யொழிந்ததிசை வடசொற்களுட் டிசைச்சொல்லாமா றுணர் - ற்று. (ப - ரை) செந்தமிழ் நிலம் - செந்தமிழ்நிலத்தை, சேர் - சேர்ந்த, பன்னிருநிலத்தினும் - பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலங்களிலும், ஒன்பதிற்றிரண்டினில் - பதினெண்மொழிகளுள், தமிழ் - தமிழ்நிலமானது, ஒழி - ஒழிந்த, நிலத்தினும் - நிலங்களிலுமுள்ளோர், தங்குறிப்பின - தங்குறிப்பினவாய் அத்திசைகளினின்றுஞ் செந்தமிழ்நிலத்து வந்து வழங்குவன, திசைச்சொலென்ப - திசைச்சொல்லென்று சொல்லுவர் புலவர். எ-று. (பொ-ரை) செந்தமிழ்நிலத்தைச்சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலத்தின்கண்ணும் பதினெண்மொழியுட் டமிழு மேற்கூறும் வடசொற்குக் காரணமாகிய ஆரியமும் ஒழிந்த பதினாறுமொழியும் வழங்கும் பதினாறுநிலத்தின்கண்ணு முள்ளோர்தங்குறிப்பினவாய்ச் செந்தமிழோர் குறிப்பினவன்றி அத்திசைகளினின்றுஞ் செந்தமிழ்நிலத்து வந்துவழங்குவன திசைச்சொல்லென்று கூறுவர் புலவர். எ-று. ※ செந்தமிழென்றமையாற் கொடுந்தமிழென்பதூஉம் ஆரியத்தின்காரியமாய வடசொல்லை வேறுகூறுதலிற் றமிழொழிநிலம் பதினாறென்பதூஉம் கற்றோரையு மற்றோரையுந் தழீஇத் தங்குறிப்பினவெனப் பொதுமையிற்கூறினமையின் இத்திசைச்சொற்கள் அந்நிலத்தோர்க் கியற்சொல்லாய்ச் செந்தமிழோர்க் கவ்வாறு குறிக்கப்படாத திரிசொல்லாய் நிற்குமென்பதூஉம் பெற்றாம். கொடுந்தமிழ்நிலம் பன்னிரண்டாவன "தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி- பன்றி யருவா வதன்வடக்கு - நன்றாய - சீத மலாடு புனனாடு செந்தமிழ்சே - ரேதமில் பன்னிருநாட் டெண்." — என்பனவாம். இவற்றுட் செந்தமிழ்ப்பாண்டிநாட்டின் றென்றிசைக்கண்ணதாகிய தென்பாண்டிநாட்டார் ஆவினைப் பெற்றமென்றும் சோற்றைச் சொன்றியென்றும், குட்டநாட்டார் தாயைத் தள்ளையென்றும், குடநாட்டார் தந்தையை அச்சனென்றும், கற்காநாட்டார் வஞ்சரைக் கையரென்றும், வேணாட்டார் தோட்டத்தைக் கிழாரென்றும், பூழிநாட்டார் சிறுகுளத்தைப் பாழியென்றும், அருவாநாட்டார் செறுவைச் செய்யென்றுஞ் சிறுகுளத்தைக் கேணியென்றும், அருவாவடதலையார் புளியை எகினென்றும், சீதநாட்டார் தோழனை எலுவனென்றுந் தோழியை இகுளையென்றும், வழங்குவர் இவைமுதலியனவுந் தமிழொழிந்த பதினாறுநிலத்துமொழிகளுள் ஏற்பனவுஞ் செந்தமிழோடு விரவிவருதல் காண்க. (௨௭௩)

(௨௱௭௪) பொதுவெழுத்தானுஞ் சிறப்பெழுத்தானு - மீரெழுத்தானு மியைவனவடசொல். ※

(எ-ன்) வடசொல்லாமாறுணர்-ற்று. (ப-ரை) பொதுவெழுத்தானும் - ஆரியத்திற்குந் தமிழிற்கும் பொதுவெழுத்தானும், சிறப்பெழுத்தானும் ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்துத்திரிந்த வெழுத்தானும், ஈரெழுத்தானும் - இவ்விரண்டெழுத்தினாலும், இயைவன- செந்தமிழ்ச்சொல்லை ஒப்பனவாகி வடதிசையிலிருந்து செந்தமிழ்நிலத்து வந்து வழங்குவன, வடசொல்-வடசொல்லாம், எ-று (பொ-ரை) ஆரியத்திற்கும் தமிழிற்கும் பொது வெழுத்தானும் ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்துத்திரிந்த வெழுத்தானும் இவ்விரண்டானுஞ் செந்தமிழ்ச்சொல்லை ஒப்பனவாகி வடதிசைக்கண்ணின்றுஞ் செந்தமிழ்நிலத்துவந்து வழங்குவன வடசொல்லாம். எ-று ※ பதவியலுள் "பொதுவெழுத்தொழிந்த நாலேழுந்திரியும்" எனக்கூறினமையிற் சிறப்பெழுத்துத்திரிந்தவெழுத்தானுமென்பது பெற்றாம். அவ்வடசொற்கு ஆரியச்சிறப்பெழுத்துத் திரிந்தவெழுத்து ஆதிகாரணமாயும் அச்சிறப்பெழுத்து அநாதிகாரணமாயும் நிற்றலிற் சிறப்பெழுத்தானுமென்றார். அது பருத்தியாலியன்ற படாமென்றாற்போலும். ஆரியச்சொற் சிதைந்து வடசொல்லாதலின் இவைசொல்லாற் செந்தமிழ்ச் சொல்லை ஒவ்வாமைகருதி யெழுத்தானுக்குமென்பார் எழுத்தானியைவன வென்றார். [வ-று.] அமலம்- உருவம்- கமலம்- காரணம்- காரியம்- என்றற்றொடக்கத்தன பொதுவெழுத்தானியைந்தன. சுகி- போகி-சுத்தி-, என்றற்றொடக்கத்தன சிறப்பெழுத்தானியைந்தன. அரன்- அரி- கடினம்-சலம்- என்றற்றொடக்கத்தன ஈரெழுத்தானுமியைந்தன. அரன்- என்புழித் தமிழின்சிறப்பாகிய னகரவீறு பதவியலுள் "உவ்வுமாம்பிற" என்றமையானமைந்தமையின் ஈண்டு விதந்துகூறாராயினார். பிறவுமன்ன. "வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ - யெழுத்தொடுபுணர்ந்த சொல்லாகும்மே." — "சிதைந்தன வரினு மியைந்தன வரையார்." — என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரு மென்க. (௰௭)

(௨௭௫) இடுகுறிகாரண மரபோடாக்கந் - தொடர்ந்துதொழி லல காலந்தோற்று-வேற்றுமைக்கிடனாய்த் திணைபாலிடத்தொன்- றேற்பவும்பொதுவு மாவனபெயரே. ※

(எ-ன்) இவ்வதிகாரத்தைத்திடலானுணர்த்தநிறீஇய பெயர் வினை இடை உரி என்னு நான்கனுட் பெயரிலக்கணமுணர்த்து வான்றொடங்கி அதன்பொதுவிலக்கணமுணர்-ற்று. (ப-ரை) இடுகுறி- இடுகுறியும், காரண(க்குறி)- காரணக்குறியும், மரபு-மரபினையும், ஆக்கம்- ஆக்கப்பாட்டினையும், தொடர்ந்து-தொடர்ந்து, தொழிலல- வினையாலணையுங் காரணக்குறியல்லாதவை, கால

ம்-காலத்தை, தோற்றா - காட்டாமல், வேற்றுமைக்கு - எட்டுவேற்றுமையுஞ்சார்தற்கு, இடனாய்-இடமாகி, திணை- இருதிணையிலும், பால்- ஐம்பாலிலும், இடத்து- மூவிடத்திலும் - ஒன்ற ஒன்றனை, ஏற்பவும் ஏற்பனவும், பொதுவும்-பலவற்றினை யேற்பனவும், ஆவன- ஆகிவருவன, பெயர்-பெயர்களாம், எ - று. (பொ-ரை) இடுகுறியுங் காரணக்குறியும் மரபினையும் ஆக்கப்பாட்டினையுந் தொடர்ந்து வினையாலணையுங் காரணக்குறியொன்றுங் காலந்தோற்ற அல்லன காலந்தோற்றாவாய் எட்டுவேற்றுமையுஞ் சார்தற்கிடமாயிருதிணை யைம்பான் மூவிடத்து மொன்றனையேற்பவும் பலவற்றினையேற்பவுமாய் வருவன பெயர்களாம். எ - று. ❁ [வ-று]. ஆண்- பெண்- மரம்- தெங்கு-கமுகு- என்றற்றொடக்கத்தன இடுகுறி மரபுதொடர்ந்துவந்தன. அவன்-அவள் காளை- காரிகை- விலங்கு-பறவை- என்றற்றொடக்கத்தன காரணக்குறி மரபுதொடர்ந்துவந்தன. "பொன்போலுங் கள்ளிப் பொறிபறக்குங் கானலிலே- யென்பேதை செல்லற் கிசைந்தனளே - மின்போலு - மானவேன் முட்டைக்கு மாறாய தெவ்வர்போங் கானவேன் முட்டைக்குங் காடு" என்னும் பொய்யாமொழிப் புலவன்பாட்டில் வேட்டுக்குமரன் றன்பெயர்முட்டை என்றற்றொடக்கத்தன இடுகுறியாக்கந் தொடர்ந்தன. பொன்னன் - பூணன் - "மலைமகண் மகனை மாற்றோர் கூற்றே" என்றற்றொடக்கத்தன காரணக்குறியாக்கம் தொடர்ந்தன. நடந்தவனை- நடந்தானை - என்றற்றொடக்கத்தன வினையாலணையுங் காரணக்குறி காலங்காட்டின. ஏனையிலக்கணங்கண் முன்னும் பின்னும் பெறப்படுதலின் ஈண்டுக்காட்டிற்றிலம். ஆண் பெண்முதலிய இடுகுறிப்பெயரும், அவன் அவள் முதலிய காரணப்பெயரும், இடையே யொருவரால் ஆக்கப்பட்டனவன்றி அவ்விலக்கணங்களோடு தோன்றிய பொருள்கட்கெல்லாந் தொன்றுதொட்டு மரபுபற்றி வருதலானும், முட்டை யென்றற்றொடக்கத்து இடுகுறிப்பெயரும், பொன்னன்- என்றற்றொடக்கத்துக் காரணப்பெயரும், மரபுபோலத் தொன்றுதொட்டனவன்றி அப்பொருள்கட்கு இடையே ஒருவரால் ஆக்கப்பட்டு வருதலானும், இடுகுறிகாரணமிரண்டும் மரபையும் ஆக்கத்தையுந்தொடர்ந் தென்றார். இதற்கு இவ்வாறன்றி இடுகுறிப்பெயர் காரணப்பெயர் இரண்டுமொழிய இடையன்-பாகன்- என்னு மரபுப்பெயர் தெங்கு கடுவென்னும் ஆக்குப்பெயரெனப் பொருள்கொள்வாருமுளர், எல்லாப்பெயரும் இடுகுறிப்பெயர் காரணப்பெயர் என்னுமிரண்டாய் அடங்குவதன்றி வேறின்மையானும் — "இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின" — என வரையறைகூறிப் போந்தமையானும், அது பொருந்தாதென்க. (௰௮)

(௨௱௭௰௨) அவற்றுள், கிளையெண்குழூஉமுதற், பல்பொருடிணைதே- மூர்வானகம்புற முதலநிலன்யாண - டிருதுமதிநா ளாதிக்காலந் - தோள்குழன்மார்புகண் காதுமுதலுறுப் - பளவறிவொப்பு வடிவுநிறங்கதி - சாதிகுடிசிறப் பாதிப்பல்குண - மோதலீத லாதிப்பல்வினை - யிவையடைசுட்டு வினாப்பிறமற்றொ - டுற்றனவ்வீறு நம்பியாடூஉ - விடலைகோவேள் குரிசிறோன்ற - லின்னனவாண்பெய ராகுமென்ப. *

(எ-ன்) மேற் றிணைபாலிடத்தொன் றேற்பவுமென்றவற்றுள் உயர்திணை யாண்பாற் குரிய பெயர்களுணர் - ற்று. (ப - ரை) அவற்றுள்- மேற் பெயரென்றவற்றுள், கிளை- சுற்றமும், எண்- எண்ணும், குழூஉ - கூட்டமும், முதல் - முதலாகிய, பல்பொரு (ளோடு)- பலபொருள்களோடும், திணை - ஐந்திணையும், தேம்- தேயமும், ஊர்- ஊரும், வான்-வானும், அகம்- அகமும், புறம்- புறமும், முதல- முதலியனவாகிய, நில (னோடு)- இடங்களோடும், யாண்டு- வருடமும், இருது- பருவமும், மதி-மாதமும், நாள்- நாண்மீனும், ஆதி- முதலாகிய, கால (மோடு) - காலங்களோடும், தோள் -புயமும், குழல் - மயிரும், மார்பு- மார்பும், கண் - கண்ணும், காது-காதும், முதல்-முதலாகிய, உறுப் (போடு)- அவயவங்களோடும், அளவு- அளவும், அறிவு- அறிவும், ஒப்பு- ஒப்பும், வடிவு வடிவும், நிறம்-நிறமும், கதி - நாற்கதியும், சாதி- குலமும், குடி- குடியும், சிறப்பு- சிறப்பும், ஆதி- முதலாகிய, பல்குண (மோடு)-பலகுணங்களோடும், ஓதல் - ஓதுதலும், ஈதல் - கொடுத்தலும், ஆதி- -முதலாகிய, பல்வினை (யோடு)- பலதொழில்களோடும், இவை-இவற்றை, அடை - அடைந்த, சுட்டுவினாப்பிறமற்றொடு- சுட்டும் வினாவும் பிறவும் மற்றும் ஆகியநான்கனோடும், உற்ற- பொருந்திய, னவ்வீறு- னகரமெய்யீற்றுப்பெயர்களும், நம்பி யாடூஉ விடலை கோ வேள் குரிசி றோன்றல்- நம்பிமுதலாகச்சொல்லப்பட்ட இப் பெயர்களும், இன்னன - இவைபோல்வனபிறவும், ஆண்பெயராகும்- உயர்திணை யாண்பாற்பெயர்களாகும், என்ப - என்றுசொல்லுவர் புலவர். எ-று. (பொ - ரை.) மேற் பெயரென்றவற்றுள் இங்ஙனம் பகுத்துக்கூறிய பொருளாதி ஆறனோடும் இவற்றையடையுஞ் சுட்டினோடும் வினாவினோடும் பிறவென்பதனோடும் மற்றென்பதனோடும் பொருந்திய னகரவீற்றுப்பெயர்களும் நம்பிமுதலாக வெடுத்தோதியபெயர்களும் இவைபோலவனபிறவும் உயர்திணையாண்பாற் பெயர்களாமென்று சொல்லுவர் புலவர் எ-று. ❁ "த ந நு எம் முதன் மகரமிடை யிட்டு - னளரவாமீற்றன சுற்றப் பெயரே;" என்பவாகலிற் கிளைப்பெயர் அறிக

பிறபொருளன்- மற்றப்பொருளன்- என உதாரணங் காட்டுவாரு முளர். சுட்டுமுதலிய நான்கும்பற்றும் னகரவீறுறுத லின்மையா னவற்றிற்கு அவைகாட்டாகாமை யென்க. (௰௯)

(௨௭௭) கிளைமுதலாகக் கிளந்தபொருள்களுள் - ளவ்வொற்றிகரக் கேற்றனவீற்றனவுந் - தோழிசெவிலி மகடூஉநங்கை - தையலோ டின்னன பெண்பாற்பெயரே. *

(எ-ன்) உயர்திணைப் பெண்பாற் குரியபெயருணர் - ற்று. (ப-ரை) கிளைமுதலாக - சுற்றமுதலாக, கிளந்த - முன்சூத்திரத்திலே பகுத்துச்சொல்லப்பட்ட, பொருள்களுள் - அறுவகைப்பொருள்களுள், ளவ்வொற்றிகரக்கு - ளகரமெய்யும் இகரவுயிரும்பொருந்தற்கு, ஏற்ற - ஏற்ற, னவீற்றவும் - னஈற்றுப்பெயர்களும், தோழி செவிலி மகடூஉ நங்கை தையலோடு - தோழிமுதலாக எடுத்துச்சொல்லப்பட்டபெயர்களும் ஆகிய இவற்றுடனே, இன்னன - இவைபோல்வனபிறவும், பெண்பாற்பெயர் - உயர்திணைப்பெண்பாற் பெயர்களாம், எ-று. (பொ-ரை) மேலைச்சூத்திரத்துக் கிளைமுதலாகப் பகுத்துக்கூறிய அறுவகைப்பொருள்களுள் ளகரவொற்றும் இகரவுயிருமுறுதற் கேற்றஅவ்விரண்டீற்றவாட்ருப்பெயர்களும் தோழிமுதலாக எடுத்தோதியபெயர்களும் இவற்றுடனே இவை போல்வனபிறவும் உயர்திணைப்பெண்பாற் பெயர்களாம். எ-று. ※ [வ-று.] தமள்-நமள் நுமள்-எமள்- அவையத்தாள்- அத்திகோசத்தாள்-பொருளாள்-பொன்னள்- (எ-ம்) ஒருத்தி - அவையத்தி- அத்திகோசத்தி - பொன்னி - (எ-ம்) பொருளாட்டி யாறனுள்ளும் ளகரவொற்றிற்றும் இகரவுயிர்க்கும் ஏற்பனவறிந் தொட்டிக்கொள்க. ஏற்றவீற்றவென்றமையாற் கிளைப்பெயர் இகரவீறேலாமையும் எண்ணுப்பெயர் ளகரவொற்றேலாமையுங்காண்க. பிறவுமன்ன. தோழிமுதலிய ஐந்துபெயரும் உரைக்கிடையிற் காண்க. இன்னன வென்றமையான், இருளை - மாது - அங்கனை - என்றற்றொடக்கத்து உயர்திணைப்பெண்பால்குறித்து வருவனவெல்லாங் கொள்க. (௨௰)

(௨௭௮) கிளந்தகிளைமுத லுற்றரவ்வீற்றவுங் - கள்ளெ னீற்றி னேற்பவும்பிறவும் - பல்லோர்பெயரின் பகுதியாகும். *

(எ-ன்) பலர்பாற்குரியபெயருணர்- ற்று. (ப-ரை) கிளந்த - முன்னே சொல்லப்பட்ட, கிளைமுதல்- சுற்றமுதலாகிய அறுவகைப் பொருளையும், உற்ற- பொருந்திய, ரவ்வீற்றவும் - ரகரமெய்யீற்றுப்பெயர்களும், கள்ளெனீற்றின்- கள்ளென்னும்விகுதியையிறுதியாகவுடையபெயர்களுள், ஏற்பவும்- இவ்விடத்திற்குப் பொருந்திவருவனவும், பிறவும்- இவைபோல்வனபிறவும், பல்லோர்பெயரின்

பகுதியாகும் - பலர்பாலின்பெயர்களாம், எ-று. (பொ-ரை) மேற்கூறப்பட்டகிளைமுதலிய அறுவகைப்பொருளையும் பொருந்திய ரகரவொற்றீற்றுப்பெயர்களும் கள்ளென்னும்விகுதியை யீறாகவுடையபெயர்களுள் ஈண்டைக்குப்பொருந்தி வருவனவும் இவைபோல்வனபிறவும் பலர்பாலின்பெயர்களாம் எ-று. ❁ கள்ளீறு பகுதிப்பொருள் விகுதியாயும் விகுதிமேல் விகுதியாயும் வருதலின் உம்மையிடையிட்டு வேறோதினார் கள்ளெனீற்றினைத்தவுமென்றார் அஃறிணைக்கண்ணும்கள்ளீற்றுப்பெயர்வருதலின். பல்லோர்பகுதியின் பெயராமெனக்கூட்டுக. பகுதியென்பது பால். தொகுப்புத்தொகுதியெனநின்றாற்போலப் பகுப்புப்பகுதியெனநின்றது. பகுப்புப் பல்லோர்பெயரின் பகுப்பாகுமெனினுமமையும். [வ-று.] தமர்-நமர்-நுமர்-எமர்- இருவர்-மூவர்-எனப் பொருளாதியாறனோடுமொட்டுக. கோக்கள்-மனுக்கள்- என்றற்றொடக்கத்தன பகுதிப்பொருள் விகுதியீற்றுப்பெயர்கள். தமர்கள்-நமர்கள்-அரசர்கள்-மறவர்கள்- என்றற்றொடக்கத்தன விகுதிமேல் விகுதியீற்றுப்பெயர்கள். இவ்விகுதிமேல் விகுதியிடைச்சொல்லாதலின்,—"ஒருபொருட் பன்மொழி சிறப்பினின்வழா," என்னுஞ் சூத்திரத்தாற்கூறும்வழுவமைதியாய்வந்தன. பிறவுமென்றமையான், மாந்தர்-மக்கள்- என்றற்றொடக்கத்துப் பலர்பாற் குறித்து வருவனவெல்லாங் கொள்க. (உக)

(௨௭௯) வினாச்சுட்டுடனும் வேறுமாம்பொருளாதியுறுதுச் சுட்டணையாய்த- வொன்றெனெண்ணின்னன வொன்றன்பெயரே.

(எ-ன்) அஃறிணை யொருமைப்பாற் குரியபெயருணர்-ற்று. (ப-ரை) வினாச்சுட்டுடனும், வினாவிலுஞ் சுட்டிலு மறைந்து அவற்றுடனாகியும், வேறுமாம் - வினாவுஞ் சுட்டவும்படாது வேறாகியும்வருகிற, பொருளாதி - பொருளாதியாறனையும், உறு - பொருந்திய, து - துவ்விகுதியீற்றுப்பெயரும், சுட்டணையாய்தம்-சுட்டோடுகூடிய ஆய்தத்தைப்பொருந்திய துவ்விகுதியீற்றுப் பெயரும், ஒன்றெனெண்-ஒன்றென்கிற எண்ணுப்பெயரும், இன்னன- இவைபோல்வனபிறவும், ஒன்றன்பெயர் - அஃறிணை யொருமைப்பாற் பெயராகும், எ-று. (பொ-ரை) வினாவின்கண்ணுஞ் சுட்டின்கண்ணும் கரந்தவற்றினுடனும் வினாவுஞ் சுட்டவும்படாதுவேறாயும்வரும் பொருளாதியாறனையும் பொருந்திய துவ்விகுதியீற்றுப்பெயருஞ் சுட்டோடுகூடிய ஆய்தத்தைப்பொருந்திய துவ்விகுதியீற்றுப்பெயரும் ஒன்றென்னு மெண்ணுப்பெயரும் இவைபோல்வனபிறவும் அஃறிணையொருமைப்பெயராம். எ-று. ❁ [வ-று.] எது-யாது எது- (எ-ம்) - அது-இது உது- (எ-ம்) குழையது- நிலத்தது- மூலத்தது-கோட்டது-குறியது-ஆடலது- (எ-ம்)

அஃது - இஃது - உஃது - (எ-ம்) ஒன்று - (எ-ம்) வரும். இன்னனவென்றமையாற், பிறிது - மற்றையது - என்றற்றொடக்கத்து அஃறிணையொருமைப்பொருள்குறித்து வருவனவெல்லாங்கொள்க. சுட்டணையாய்தம் இப்பகுதி விகுதிப்புணர்ச்சிக்கட் சந்திவகையான் வந்ததன்மையின் இச்சுட்டுப்பெயர்கள் வேறோதப்பட்டனவென்பதூஉம் இவைபோலெடுத்தோதாமையின் ஆய்தமணையாச் சுட்டுப்பெயர்களை வினாச்சுட்டுடனு மென்றவாற்றுள் அமைந்துகிடந்தனவென்பதூஉம் வினாச்சுட்டுடனு மென்பதற்கு, எக்குழையது - அக்குழையது - என உதாரணங்காட்டுவது பொருந்தாதென்பதூஉம் பெற்றாம் (௨௨)

(௨௮௰) முன்னரவ்வொடு வருவையவ்வுஞ் சுட்டிறுவவ்வுங் கள்ளிறுமொழியு மொன்றலெண்ணு முள்ளவில்ல - பல்லசில்ல வுள விலபலசில - வின்னவும்பலவின் பெயராகும்மே. ❋

(எ-ன்) அஃறிணைப் பன்மைப்பாற் குரியபெயருணர் - ற்று. (ப-ரை) முன்னர் - முன்னேசொல்லப்பட்ட, அவ்வொடு - வினாச்சுட்டுடனும் வேறுமாம்பொருளாதி யாறனோடும், வரு - ஏற்றபடி வருகிற, வை (யும்) - வைவிகுதியீற்றுப்பெயர்களும், அவ்வும் - அகரவீற்றுப்பெயர்களும், சுட்டிறுவவ்வும் - வகரமெய்யீற்றுச சுட்டுப்பெயர்களும், கள்ளிறுமொழியும் - கள்ளென்னும் பகுதிப்பொருள் விகுதியீற்றுப்பெயர்களும், ஒன்றலெண்ணும் - இரண்டுமுதலாகிய எண்ணுப்பெயர்களும், உள்ள வில்ல பல்ல சில்ல வுள வில பல சில - உள்ளவென்பதுமுதலாகிய குறிப்புவினையாலணைந்தவெட்டுப்பெயர்களும், இன்னவும் - இவைபோல்வனபிறவும், பலவின்பெயராகும் - அஃறிணைப்பன்மைப்பாற்பெயர்களாகும், எ-று. (பொ-ரை) முன்னர்க்கூறிய வினாச்சுட்டுடனும் வேறுமாம் பொருளாதி யாறனோடும் ஏற்றபெற்றிவரும் வகரவைகாரவீற்றுப்பெயர்களும் அகரவீற்றுப்பெயர்களும் வகரவொற்றீற்றுச் சுட்டுப்பெயர்களும் கள்ளென்னும்பகுதிப்பொருள் விகுதியிறுதியாகிய பெயர்களும் ஒன்றல்லாத இரண்டுமுதலிய வெண்ணுப்பெயர்களும் உள்ளவென்பதுமுதலிய குறிப்புவினையாலணைந்த வெட்டுப்பெயர்களும் இவைபோல்வனபிறவும் அஃறிணைப்பன்மைப்பெயர்களாம், எ-று. ❋ மேலைச்சூத்திரங்களுட் கூறியவாறே உறுதிகூறாது வருவையென்றதனை லேற்றபெற்றி யென்பதூஉம் உள்ளவில்லமுதலிய பண்பொடுவரும் அகரவீற்றுப்பெயர்கள் முன்னரவ்வொடு வருவையவ்வு மென்பவற்று ளடங்குதலிற் பின்னர்க்கூறிய வுள்ள வில்ல முதலியவெட்டுங் குறிப்புவினையாலணையும் பெயரென்பதூஉம் பெற்றாம். [வ-று.] எவை - யாவை - (எ-ம்) அவை - இவை - உவை - (எ-ம்) நெடியவை - கரியவை -

நல்லவை தீயவை-உள்ளவை-இல்லவை- (எ-ம்) பொருள - பொருளன-அகத்த-அகத்தன-மூலத்த-மூலத்தன-கோட்ட- கோட்டன-கரிய-கரியன-உள்ள-உள்ளன-இல்ல-இல்லன-ஒருவ-ஒருவன-ஈவ-ஈவன- (எ-ம்) அவ் இவ் உவ்- (எ-ம்) யானைகள்- குதிரைகள்- (எ-ம்) இரண்டு-மூன்று-பத்து-நூறு-ஆயிரம்- (எ-ம்) வரும், உள்ளமுதலியவெட்டும் உரைக்கிடையிற்காண்க. இன்னவுமென்றமையான் யா பிற மற்றைய - என்றற்றொடக்கத்து அஃறிணைப்பன்மைப் பொருளுணர்த்தி வருவனவெல்லாங் கொள்க. (௨௫)

(௨௮௧) பால்பகாவஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய. *

(எ-ன்) மேற் பொதுவுமாவன பெயரென்றார் அவற்றுள் அஃறிணையிருபாற்கு முரியபொதுப்பெயருணர்-ற்று. (ப-ரை) அஃறிணை- அஃறிணைப்பெயர்களுள், பால்பகா - பால்பகுக்கப்படாத, பெயர்கள்-பெயர்களனைத்தும், பால்- அத்திணையிருபாலுக்கும், பொதுமைய - பொதுப்பெயர்களாம், எ-று. (பொ-ரை) அஃறிணைப்பெயர்களுள் இங்ஙனம் பால்பகுத்தலையொழிந்து நின்றபெயர்கள் அனைத்துமத்திணையிருபாற்குமுரியபொதுப்பெயர்களாம், எ-று. [வ-று.] யானைவந்தது-யானைவந்தன-குதிரைவந்தது-குதிரைவந்தன-மரம்வளர்ந்தது-மரம்வளர்ந்தன- கண்சிவந்தது-கண்சிவந்தன-எனவரும். இச்சூத்திரந் திணைப்பொதுப்பெயரின் பின்கூறாது ஈண்டுக்கூறிய தென்னையெனின், விளங்குதற்பொருட் டொன்றினைமுடித்த றன்னினமுடித்த லென்னு முத்தியாற் கூறப்பட்டதென்க. (௨௬)

(௨௮௨) முதற்பெயர் நான்குஞ் சினைப்பெயர் நான்குஞ் சினைமுதற்பெயரொரு நான்குமுறையிரண்டிற்- றன்மைநான்கு முன்னிலையைந்து-மெல்லாந்தாந்தா னின்னனபொதுப்பெயர். *

(எ-ன்) இருதிணைக்குமுரிய பொதுப்பெயர்களைத் தொகுத்துணர்-ற்று. (ப-ரை) முதற்பெயர்நான்கும்- முதற்பெயராகிய நான்குபெயரும், சினைப்பெயர் நான்கும் - சினைப்பெயராகிய நான்குபெயரும், சினைமுதற்பெயரொருநான்கும் - சினைமுதற்பெயராகிய நான்குபெயரும், முறைப் (பெய) ரிரண்டும் - முறைப்பெயராகிய இரண்டுபெயரும், தன்மைப் (பெயர்) நான்கும்- தன்மைப்பெயராகிய நான்குபெயரும், முன்னிலைப் (பெய) ரைந்தும்- முன்னிலைப்பெயராகிய ஐந்துபெயரும், எல்லாந்தாந்தான் -எல்லாம் தாம் தான் என்கிறமூன்றுபெயரும், இன்னவை - இவைபோல்வனபிறவும், பொதுப்பெயர் - இருதிணைக்கும் பொதுப்பெயர்களாம். எ-று, (பொ-ரை) முதற்பெயர்முதலாக வொன்பதுகூற்றுப்பெயர்களும் இவைபோல்வனபிறவும் இருதிணைக்குமுரியபொதுப்பெயர்களாம். எ-று. * பெயரொன்பதனை முறை

முதலியவற்றினோடுங் கூட்டுக. எல்லாமென்பதுமுதல் இன்னனவென்பதீறாகநின்ற செவ்வெண்ணின் இறுதிக்கணுன்குமென்னுந் தொகைமேயாய் உம்மைதொக்கன. எல்லாம்-தாம்-தான்- என விதந்த மூன்றுபெயருமொழிய இன்னனவென்றமையாற், சூரியனுதித்தான் - சூரியனுதித்தது - என ஒருபொருளையே உயர்திணைப்பொருளாக்கியும் அஃறிணைப்பொருளாக்கியுங் கூறப்படும் பொதுப்பெயர்முதலியனவும், ஊமைவந்தான் - ஊமைவந்தாள்- என உயர்திணையிருபாலையும் உணர்க்கும்பொதுப்பெயர்முதலியனவுந் தன்மை முன்னிலைவினையாலணையும்பெயரும் பிறவுங் கொள்க. முதற்பெயர்முதலாக முன்னிலைப்பெயரீறாகக் கூறிய அறுவகைப்பெயர்கட்கு முதாரணம் பின்வருந்தத்தம் வகைச்சூத்திரங்களுட் காண்க. உயர்திணைக்குச் சிறந்தபெயர் அஃறிணைக்கண் விரவியும் அஃறிணைக்குச்சிறந்தபெயர் உயர்திணைக்கண் விரவியும்வருதலின் இவற்றை விரவுப்பெயரென்றுங்கூறுப. அங்ஙனம்வருதல் காட்டுமுதாரணங்களுட் காண்க. (௨௫)

(௨௬) ஆண்மைபெண்மை யொருமைபன்மையி - னாமந்
நான்மைக வாண்பெண் முறைப்பெயர். *

(எ-ன்) மேற்றொகுத்துணர்த்தியவற்றுண் முதற்பெயர்முதன் முறைப்பெயரீறாகக் கிடந்தவற்றை வகுத்துணர் - ற்று. (ப-ரை) ஆண்மை பெண்மை யொருமை பன்மையின் - ஆண் முதலாகிய இந்நான்குபாலுங்காரணமாக, அவ் - அம்முதற்பெயருஞ் சினைப்பெயருஞ் சினைமுதற்பெயரும், நான்மைகளாம்- நந்நான்காகும், ஆண்பெண் - ஆண்மை பெண்மை யென்கிற இருபாலுங் காரணமாக, முறைப்பெயர்- முறைப்பெயர், (இரண்டாம்) - இரண்டாகும், எ-று. (பொ-ரை) ஆண்மைமுதலிய இந்நான்குபாலுங் காரணமாக முற்கூறிய முதற்பெயர் சினைப்பெயர் சினைமுதற்பெயர் என்னுமூன்றும் ஒவ்வொன்று நந்நான்காம் ஆண்மை பெண்மையென்னு மிருபாலுங் காரணமாக முறைப்பெயர் இரண்டாம், எ-று. ❁ மேலைச்சூத்திரத் திரண்டென்பதனையும் இச்சூத்திரத்தாமென்பதனையுங்கூட்டி முறைப்பெயர் இரண்டாமெனவுரைத்துக் கொள்க. உயர்திணைக்கேயுரிய பலர்பாலையும் அஃறிணைக்கேயுரிய ஒன்றுபலவென்னும் இருபாலையுமொழித்து இருதிணைக்கும்பொதுவாகிய ஆண்மை பெண்மை ஒருமை பன்மையென்னு நான்குபாலினையும் இவற்றுண் முறைகூறுதற்குரிய ஆண்மை பெண்மையென்னு மிருபாலினையுங்காரணமாக இச்சூத்திரத்துட் கூறினார் இவற்றின்காரியங்களை இனைத்தென்றறி பொருளாக மேலைச்சூத்திரத்துட் கூறியவாறு உய்த்துணர்தற் கெய்க.

எனவே, ஆண்மைமுதற்பெயர் - பெண்மைமுதற்பெயர் - ஒருமைமுதற்பெயர்- பன்மைமுதற்பெயர் (எ-ம்) ஆண்மைச்சினைப்பெயர்- பெண்மைச்சினைப்பெயர்- ஒருமைச்சினைப்பெயர்- பன்மைச்சினைப்பெயர்- (எ-ம்) ஆண்மைச்சினைமுதற்பெயர்- பெண்மைச்சினைமுதற்பெயர் - ஒருமைச்சினைமுதற்பெயர் - பன்மைச்சினைமுதற்பெயர்- (எ-ம்) ஆண்மைமுறைப்பெயர் - பெண்மைமுறைப்பெயர்- (எ-ம்) பெயர்பெறு மென்பதாயிற்று. [வ-று.] சாத்தன்- சாத்தி- கோதை- கோதைகள்- இவை முதற்பெயர்நான்கு. முடவன்- முடத்தி- செவியிலி- செவியிலிகள்- இவை சினைப்பெயர்நான்கு. முடக்கொற்றன்- முடக்கொற்றி- கொடும்புறமருதி- கொடும்புறமருதிகள் - இவை சினைமுதற்பெயர்நான்கு. தந்தை- தாய்- இவை முறைப்பெயரிரண்டு. கள்விகுதி அஃறிணைப்பன்மைக்குச் சிறந்ததாய் உயர்திணைப்பன்மைக்கண்ணும்விரவி வருதலின் ஒருமைப்பொதுப்பெயரோடு கள்விகுதி புணர்ந்தனவாயினே அவை பன்மைப்பொதுப்பெயராயின. (௨௬)

(௨௮௪) அவற்றுள், ஒன்றேயிருதிணைத் தன்பாலேற்கும். *

(எ-ன்) திணைப்பொதுவாய்நின்றபெயர்கள் பாற்பொதுவாய் நிற்குமாறுணர்- ற்று. (ப-ரை) அவற்றுள்- முதற்பெயர்முதலாகச்சொல்லப்படு மிருபத்தாறும் பிறவுமாகிய பொதுப்பெயர்களுள்; ஒன்றே- ஒவ்வொன்றே, இருதிணை- இருதிணையினும், தன்பால்-தன்றன்பாலை, ஏற்கும்- ஏற்றுவரும். எ-று. (பொ-ரை) முதற்பெயர்முதலவாகக்கூறப்படு மிருபத்தாறும் பிறவுமாகியபொதுப்பெயர்களுள் ஒவ்வொன்று இருதிணைக்கண்ணும் தன்றன்பால்களை ஏற்கும். எ-று. ❊ எனவே ஆண்மைப்பொதுப்பெயர் உயர்திணை யாண்பாலினையும் அஃறிணை யாண்பாலினையும் பெண்மைப்பொதுப்பெயர் உயர்திணைப்பெண்பாலினையும் அஃறிணைப் பெண்பாலினையும் ஒருமைப் பொதுப்பெயர் உயர்திணை யாணொருமை பெண்ணொருமையினையும் அஃறிணை யொருமையினையும் பன்மைப்பொதுப்பெயர் உயர்திணைப்பன்மையினையும் அஃறிணைப் பன்மையினையும் ஏற்குமென்பதாயிற்று. [வ-று.] சாத்தனிவன்- சாத்தனிவ்வெருது- (எ-ம்) சாத்தியிவள்- சாத்தியிப்பசு- (எ-ம்) கோதையிவன் - கோதையிவள்- கோதையிது- (எ-ம்) கோதைகளிவர்-கோதைகளிவை (எ-ம்) தந்தையிவன்- தந்தையிவ்வெருது (எ-ம்) தாயிவள்- தாயிப்பசு- (எ-ம்) யானம்பி- யானங்கை-யான்பூதம் (எ-ம்) யாமக்கள்- யாம்பூதங்கள் (எ-ம்) நீநம்பி நீநங்கை- நீபூதம்- (எ-ம்) நீயிர்மக்கள்- நீயிர்பூதங்கள்- (எ-ம்) அவரெல்லாம்- அவையெல்லாம்- (எ-ம்) அவர்தாம்- அவைதாம் (எ-ம்) அவன்றான்- அதடான்- அதுதான்- (எ-ம்) வரும். இவற்றுட் காட்

டாதொழிந்தனவும் பிறவு மிவ்வாறேயொட்டிக்காண்க. ஆண்மைப்பொதுப்பெயர் பெண்மைப்பொதுப்பெயர்கட்கு, ஆண்மக்கள்- ஆண்விலங்கு- பெண்மக்கள்- பெண்விலங்கு- காளைவந்தான்- காளைவந்தது மான்வந்தாள்-மான்வந்தது- என இக்காலத்துப்பயின்றுவருவன காட்டலுமொன்று. பிறவுமன்ன. செஞ்ஞாயிறு என்றாற்போலத் தன்னொடியையின்மைநீக்கிய விசேடணத்தான் விசேடிக்கப்பட்டனவன்றிச், செந்தாமரை- என்றாற்போலப் பிறிதொடியைபுநீக்கிய விசேடணத்தான் விசேடிக்கப்பட்டனவாகி ஆண்மைப்பொதுப்பெயர் பெண்மைப்பொதுப்பெயர் என்றும், ஒருமைப்பொதுப்பெயர் பன்மைப்பொதுப்பெயரென்றும், இனச்சுட்டுளவாய்வருதலிற் றன்பாலேற்குமெனக் கூறிற்றென்க. இனி ஆசிரியர் தொல்காப்பியர் பன்மைசுட்டியபெயரென்றது பலபாலையுஞ் சுட்டிநிற்றலிற் பிறிதினியைபுநீக்கிய விசேடணமடுத்து நின்றதென்பார்.—"பன்மை சுட்டிய வெல்லாப் பெயரு- -மொன்றே பலவே யொருவ னென்னு - மென்றிப் பாற்கு மோரன் னவ்வே.,, எனக்கூறித் தன்பாலேற்றலை யும்மையாற் றழீஇயினார். அவ்வாசிரியர் கருத்தறியாது பன்மைப்பொதுப்பெயருட் பன்மையென்பது பிறிதொடியைபுநீக்கிய விசேடணமன்றெனத் தோன்றியவாறே விசேடண இலக்கணஞ் சிதைத்து இடர்ப்பட்டு உரைகூறுவாருமுளர். அதனைத் தோன்றக்கூறிற் பெருகும் அவ்வாசிரியர் கூறியவாறே பன்மைப்பொதுப்பெயர்க் குதாரணம், யானைவந்தது- யானைவந்தன- யானைவந்தான்- யானைவந்தாள்- எனவருமாறும் இங்ஙனம் யானையென்னும் பாற்பகா அஃறிணைப்பெயர்க்குக் கள்விகுதியின்மையின் அஃறிணை ஒருமைக்கே சிறந்ததாய் அதன்பன்மைக்கண்ணும் விரவி ஆகுபெயரா யுயர்திணை ஆணொருமை பெண்ணொருமையினும் விரவிவருமாறுங் காண்க பலபாலையுஞ் சுட்டிநிற்றலின் அவற்றையும் பன்மைசுட்டியபெயரெனல் வேண்டுமாலெனின் அது பொருந்தாது. நான்குபாலுஞ் சுட்டிநிற்குந் தன்னைநோக்க எனைமூன்றுபாலுஞ் சுட்டிநிற்கும்பெயர்கள் சின்மைசுட்டிய பெயரெனப்படுவன வல்லது பன்மைசுட்டிய பெயரெனப்படா வாகலானென்க. அற்றேல் அவற்றைச் சின்மைசுட்டியபெயரெனவே யமையும்பிறவெனின், அவற்றுள் ஆண்மைசுட்டுதன்முதலிய பகுப்புண்மையின் அவற்றைப் பகுத்துக்கூறவேண்டுதலான் அமையாவென்க. இக்கருத்தேபற்றியன்றே பஃறொடைவெண்பாவென்றாற்போல எனையவற்றையும் பஃறொடைவெண்பாவெனக்கூறுதலூஉம் பகுப்புண்மையிற் சிஃறொடைவெண்பாவென்றொழியாதலூஉம் பஃறாழிசைக்கொச்சகமென்றதனைநோக்கி அதிற் குறைந்ததனைப்பகுப்

பின்மையாற் சிஃறுழிசைக்கொச்சகமென்றே போந்ததூஉமெ ன்க. இனி இவ்வாறன்றி ஆணொருமை பெண்ணொருமை அஃறி ணையொருமையென்ற மூன்று மொருமைப்பாலென வொன்றாய டங்குதலிற் பலபால்களையுஞ் சுட்டிநின்றன வல்லவாகலான் அம் மூன்றொருமையுஞ் சுட்டியபெயர்களை ஒருமைசுட்டியபெயரெ னவும் இஃதொருமையும் பன்மையுமென்னும் இருபால்சுட்டி நிற்றலாற் பன்மைசுட்டியபெயரெனவுங்கொள்ளினு மிழுக்காது.

(உஅரு) தன்மையானான் யாநாமுன்னிலை - யெல்லீர்நீயிர் நீவி ர்நீர்நீ - யல்லனபடர்க்கை யெல்லாமெனல்பொது. *

(ள்-ன்) தன்மைநான்கு முன்னிலை யைந்தென்றார் அவையிவை யென்பதூஉம் இடந்தோன்றேற்பவும் பொதுவுமென்றார் அ வையிவையென்பதூஉ முணர் - ற்று. (ப-ரை) தன்மை-தன்மைப் பெயர்நான்காவன, யானான்யாநாம்-யான் நான் யாம் நாம் என்ப னவாம், முன்னிலை- முன்னிலைப்பெயரைந்தாவன, எல்லீர் நீயிர் நீவிர் நீர் நீ - எல்லீர் நீயிர் நீவிர் நீர் நீ என்பனவாம், அல்லன- இவ்வொன்பதுமல்லாத பெயர்களெல்லாம், படர்க்கை-படர்க்கை யிடத்திற் குரியனவாம், எல்லாமெனல்- அவற்றுள் எல்லாமென் னும்பெயரொன்றும், பொது- மூவிடத்திற்கு முரித்தாம், எ-று, (பொ-ரை) தன்மைப்பெயர்நான்காவன யான் நான் யாம் நாம் என்பனவாம், முன்னிலைப்பெயரைந்தாவன எல்லீர் நீயிர் நீவிர் நீர் நீ என்பனவாம், திணைபாலு மொன்றற்கேற்பவும் பொதுவு மாகியபெயர்களுள் இவ்விரண்டிடத் தொன்பதுபெயருமல்லா த பெயர்களனைத்தும் படர்க்கையிடத்திற்குரியவாம் அவற்றுளெ ல்லாமென்னும்பெய ரொன்று மூவிடத்திற்கு முரித்தாம். எ-று.

※ எல்லாமென்னும்பெயர் மூவிடத்தும்வருமாறு, யாமெல்லா ம்- நீயிரெல்லாம்- அவரெல்லாம்-அவையெல்லாம்-எனவரும். இத் தன்மைமுன்னிலைப்பெயர்களை யுரைத்தலுங் கேட்டலும் இல்லா வஃறிணைக்கண் இவ்வொன்பதுபெயரும்விரவிப் பொதுப்பெய ராமா றென்னையெனின், ஆசிரியர் தொல்காப்பியர் "அவ்வழி, அவனிவ னுவனென வரூஉம் பெயரும்" என்னுஞ் சூத்திரத்து யான் யாம் நாமென வரூஉம்பெயரும் உயர்திணைப்பெயரெனக் கூறினோ னுமரபியலுள் "மக்கடாமே யாறறிவுயிரே-பிறவு முள வே யக்கிளைப் பிறப்பே"— என்றுஞ் சூத்திரங்களின் விலங்கினு ளொருசாரன கிளியுங் குரங்கும் யானையு முதலாயினவும் மனவு ணர்வுடையனவாயின் அவையு மீண்டாறறிவுயிரா யடங்குமெனக் கூறலின் அம்மரபுபற்றிப் பொதுப்பெயரெனப் பட்டனவென்க. மேல்வருந தன்மை முன்னிலைவினைகளும் அவ்வினையாலணையும்பெ யர்களு மன்ன. அங்ஙனமாகவே "மெட்டுந போலவுங் கிளக்குந

போலவு- மியங்குநபோலவு மியற்றுநபோலவு- மஃறிணைமருங்கி
னு மறையப்படுமே,,—என்பது புணைந்துரைவகையால் வழுவ
மைதியாகக்கூறப்பட்டனவே யாமாதலின் அவைபற்றிப்பொது
ப்பெயரெனப்பட்டன வெனக்கோடல் பொருந்தாமையுமறிக. ()

(௨௮௬) வினையின்பெயரே படர்க்கைவினையா - லணையும்பெ
யரே யாண்டுமாகும். ❋

(எ-ன்) சிலவினையின்பெயர்க்கு அல்லன படர்க்கையென்பதனு
னெய்தியவிடம் யாண்டுமாகுமென்பதனுன் இகந்துபடாமற் ப
டர்க்கையென்பதனுற் காத்தலும் வினையாலணையும்பெயர்க்கு அ
தனைவிலக்கி யிடப்பொருத்தலு நுதலிற்று. (ப-ரை) வினையின்பெய
ரே- தொழிற்பெயர்களே, படர்க்கை- படர்க்கையிடத்திற் குரிய
வாகும், வினையாலணையும்பெயர் - வினைமுற்றாலணையும் பெயர்க
ளானவை, யாண்டுமாகும் - தனித்தனி மூவிடத்திற்கு முரியவா
கும், எ-று. (பொ- ரை.) யானுணல் நீயுணல் அவனுணல் என
மூவிடத்துவினையாயினும் அவ்வுணல் தினலென்றற்றொடக்கத்து
வினையின்பெயர் படர்க்கைக்கே யுரியவாம் அவ்வினையா லணையு
ம்பெயர் அவ்வினையின்பெயர்போற் படர்க்கைக்கே யுரியவாகா
து உண்டேனை உண்டாயை உண்டானையெனத் தனித்தனி மூவி
டத்திற்கு முரியவாம். எ-று ❋ யானுண்டேன்- நீயுண்டாய்- அவ
னுண்டான்-என இடத்தால் ஒன்றுபடநின்ற நிலைமொழிவருமொ
ழிபோல அம்மூவிடமுற்றின்கட்டொழில் பயனிலையாகி, யானு
ணல்- நீயுணல்- அவனுணல்- என ஒன்றுபடநிற்பனவற்றிற் சென்றி
னதுணல்- நினதுணல்-அவனதுணல்என்றும்,உணல்என்றும்,வே
றுபட்டு நிற்றலின் வினையின்பெயர்கட்கெய்தியவிடம்இகந்துபடுதல்
இன்றென வுணர்க. இவ்வாறன்றி வினையின்பெயரே படர்க்கையெ
ன்பதற்கு வினையின்பெயரனைத்தும் படர்க்கையெனப்பொருள்
கொள்ளிற் கூறியதுகூறலாம் அது பொருந்தாதென்க. (௨௯)

(௨௮௭) தான்யானீ யொருமைபன்மைதாம் - யாநாமெலா
மெலீர் நீயிர்நீர்நீவிர். ❋

(எ-ன்) இப்பன்னிரண்டு பொதுப்பெயர்களும் இருதிணைக்கு
ப்பொதுவாகிய ஆண்மை பெண்மை ஒருமை பன்மை என்னு
நான்கும்பொதுப்பாலுள் இப்பாலுடைத்து கிடந்தனவென்
பதுணர்- ற்று. (ப-ரை) தான்யானீ- தான் யான் நான் நீ என்
கின்றநான்கும், ஒருமை- இருதிணைக்குமொருமைப்பெயர்களா
ம், தாம் யாநாமெலாமெலீர்நீயிர்நீர்நீவிர் - தாம் யாம் நாம் எல
லாம் எல்லீர் நீயிர் நீர் நீவிர் எனகின்றவெட்டும், பன்மை- இருதி
ணையிருகூற்றும் பன்மைப்பெயர்களாம், எ-று (பொ-ரை) தான்

யான் நான் நீ என்னு நான்கும் இருதிணைமுக்கூற்றொருமைப்பெயராம் தாம் யாம் நாம் எல்லாம் எல்லீர் நீயிர் நீர் நீவிர் என்னுமெட்டும் இருதிணையிருகூற்றுப் பன்மைப்பெயராம். எ-று. ※ இதனை — "அவற்றுள், ஒன்றே யிருதிணைத் தன்பா லேற்கும்.,, — என்னுஞ்சூத்திரத்தின் முற்கூறாது எண்பிக்கூறிய தென்னையெனின், தன்மைமுன்னிலைப்பெயர்களின் வகையுணர்த்தன்றி ஒருமை பன்மை தோன்றாமையின் எண்பிக்கூறி யவற்றின்பின்னின்றவாகலின். எல்லாம் நான் தாம் என்பவற்றிற்குமீண்டு ஒருமைபன்மையுடன்கூறினாரென்க. (கூ௰)

(உ அ அ) ஒருவனொருத்தி பெயர்மேலெண்ணில. ※

(எ-ன்) எண்ணுன்வரு முயர்திணைப்பெயர்க்காவதோர் புறனடையுணர் - த்று, (ப-ரை) ஒருவனொருத்தி- ஒன்றென்னுமெண்ணால் ஒருவன் ஒருத்தி எனவருவனவன்றி, மேல் - இவற்றின்மேல், எண்- இரண்டுமுதலாகிய எண்களால், பெயர் - இவ்வாண்பாற்பெயரும் பெண்பாற்பெயரும், இல - வருவன இலவாம், எ-று. (பொ-ரை) எண்ணு னுயர்திணையாண்பாற்பெயரும் பெண்பாற்பெயரும் வருங்காலத்து ஒன்றென்னுமெண்ணனோ ஒருவன் ஒருத்தியென வருவனவன்றி இவற்றின்மேல் இரண்டுமுதலிய எண்களான் இப்பெயர்கள்வருவன இலவாம் எ-று. ※ இருவன்-இருத்தி- என்றற்றொடக்கத்தனவாகிவரிற் பன்மைப்பகுதியா டொருமைவிகுதிபுணர்ந்து பால்வழூவாமாதலின் எண்ணிலவென்றார்.

(உ அகூ) ஒருவனென்ப துயரிருபாற்றுப் - பன்மைவினை கொளும் பாங்கிற்றென்ப. ※

(எ-ன்) இதுவுமது. (பு-ரை) ஒருவனென்பது- ஒருவனெனவழங்குஞ்சொல், உயரிருபாற்றுப்- உயர்திணையாண்பெண்ணிவ்விருபாற்கும்பொதுவாய், பன்மைவினை - அத்திணைப்பன்மைவாய்பாட்டுவினையை, கொளும்- கொண்டுமுடிகின்ற, பாங்கிற்று - பாங்கினையுடைத்தாகும், என்ப-என்றுசொல்லுவர்புலவர். எ-று. (பொ-ரை) ஒருவனெனவழங்குஞ்சொல் உயர்திணையாண்பால்பெண்பால் இரண்டற்கும்பொதுவாய் அத்திணைப்பன்மைவாய்பாட்டு வினையைகொண்டுமுடியும் பாங்கினையுடைத்து என்றுசொல்லுவர்புலவர். எ-று ※ [வ-று.] ஆடவருளொருவர றத்தின்வழிநிற்பார்-ஒருவர்நில்லார்- பெண்டிருளொருவர் கொழுநன்வழிநிற்பார்- ஒருவர்நில்லார் (எ-ம்) "யாஅரொருவ ருலகத்துத்தார் சொல்லில்லார்,, (எ-ம்) வரும். இவ்வொருவ ரென்னுஞ்சொற் பொதுவிய வுட்கூறுமுவப்புயர்வுமுதலியவற்றுன்வரும் ஒருவரென்னுஞ் சொல்லன்றித் தன்னியல்பாய்வந்ததாகலின் எண்பிக்கூறப்பட்டதென்றுணர்க. இச்சொல்லின்கட் பகுதிக்கேற்ப இருபாற்றுயென்றும்,விகு

திக்கேற்பப் பன்மைவினைகொளுமென்றும், உயர்திணைமுப்பாலுட் பன்மையைப்பின்விதந்தலின் ஆண்பெண்ணென விதவாது உயரிருபாற்குமென்றும், உயமொனருன்விதத்தலின் உயர்திணைப்பன்மையெனவிதவாது பன்மையென்றும்,ஒருவர்வந்தார்ஒருவரவர்- என வினையும்பெயருங் கொளவருவஅு உவப்புயர்வுமுதலியவற்றான்வருவதாம் இங்ஙனம் தன்னியல்பாய்வரும் ஒருவமென்பது வினையும் வினைக்குறிப்புமே கொள்ளுமென்பார் பெயரையொழித்து வினைகொளுமென்றும்,இச்சொல் லொருமைப்பகுதியோடு பன்மைவிகுதிமயங்கிப் பால்வழுவாய்நின்றதேனுந் தன்னியல்பாய் மயங்கிநின்றமையின் வழாநிலைபோலுமென்பதூஉம் பன்மைவினையென்றது சொன்மாத்திரையிற் பன்மைவினையன்றிப் பொருண்மாத்திரையின் ஒருமைவினையாமாதலின் இப்பயனில்லை ஒருவனொன்றுஞ்சொற்கொள்ளுதல் வழுவன்றென்பதூஉந்தோன்றப் பாங்கிற்றென்றும், இங்ஙனமாதல் சான்றோர்க் கொப்பமுடிந்ததென்பா ரென்பவென்றுங் கூறினர். (௫௨)

(௨௯௰) பொருண்முதலாறோ டளவைசொற்றானி- கருவிகாரியங் கருத்தனுளிய - வொன்றன்பெயரா னதற்கியைபிறிதைத் - தொன்முறை யுரைப்பன வாகுபெயரே. *

. (எ-ன்) மேற்கூறிய வொன்றற்கேற்பவும் பொதுவுமாகியபெயர்க்கண்வருங்காரணப்பெயர்களுள் ஆகுபெயராமாறுணர் த்து, (ப-ரை) பொருண்முதலாறோடு - பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் என்னு மாறுடனே, அளவை- இவற்றின் பகுதியவாகிய நால்வகையளவையும், சொல்- சொல்லும், தானி - தானியும், கருவி- காரணமும், காரியம் - காரியமும், கருத்தன் - வினைமுதலும், ஆதியுள்- ஆதியாகவரும்பொருள்களுள், ஒன்றன் - ஒருபொருளினது, பெயரான்- இயற்பெயரால், அதற்கு - அப்பொருளினுக்கு, இயை - இயைந்த, பிறிதை - பிறிதொருபொருளை, தொன்முறை - தொன்றுதொட்டு வருமுறையே, உரைப்பன - சொலலப்பட்டுவருவன, ஆகுபெயர் - ஆகுபெயர்களாம், எ-று. (பொ-ரை) பொருளே இடமே காலமே சினையே குணமே தொழிலென்னு மாறுடனே இவற்றின்பகுதியவாகிய நால்வகை அளவையே சொல்லே தானியே கருவியே காரியமே கருத்தாவே யென்னுமாறும் ஆதியாகவரும்பொருள்களுள் ஒருபொருளின் இயற்பெயரானே அப்பொருளினுக்கு இயைந்தபிறிதொருபொருளைத் தொன்றுதொட்டு வருமுறையே கூறிவருவன ஆகுபெயர்களாம் எ-று. ※ பொருளாதியாறன்றி வேறுபொருளின்றேனும் அவற்றுட் பயின்றுவருவனவற்றைப் பிரித்து அளவைமுதலாக விதந்தமையிற் பொருண்முதலாறென்பன இவையொழிந்

திருவாய்மொழி - என அடையடுத்த வாசகம் மொழியென்னு மு
தற்கருவியின்பெயர் அவற்றின்காரியமாகிய யாப்பிற்காயின.—
இந்நூலலங்காரம்-இந்நூல்பாட்டியல்-என இவ்விலக்கணங்களாகிய
காரியத்தின்பெயர் இவற்றைத்தருதற்குக் கருவியாகிய நூல்கட்கா
யின. இந்நூல் திருவள்ளுவர்-என கருத்தாவின்பெயர் காரியத்திற்
காயிற்று.— ஆதிடென்றடைமானே, காளைவந்தான் - என்றற்றொட
க்கத்து உவமையான்வருவனவுந் தேவர்முதலியோர்படவரை மக்
கட்கிட்டு வழங்குவனவும் பிறவுங்கொள்க. அறுபதமுதலியனவற்
றைப் பொற்றொடிமுதலியனபோல் அன்மொழித்தொகைப்பெ
யரொன்று லென்னைமெனின், அன்மொழித்தொகைப்பெயர் செய்
யுளியற்றவோன் ஒருவனை விடப்பட முதலியவற்றாற் றன்கூற்றும்
பிறர்கூற்றும் உரைப்புழி யாங்காங்குவருவதன்றி இதுபோல நி
யதிப்பெயராய் வருவதன்றென்க. அங்ஙனமாயினும் ஆகுபெயரு
ம் அன்மொழித்தொகையுந் தம்பொருளுணர்த்தாது பிறிதுபொ
ருளுணர்த்துதலான் ஒக்குமாதலின் அவைதம்முள் வேற்றுமை யா
தோவெனின், ஆகுபெயர் ஒன்றன்பெயரான் அதனோடியைபுப
ற்றிப் பிறிதொன்றனையுணர்த்தி ஒருமொழிக்கண்ணதாம் அன்
மொழித்தொகை யியைபுவேண்டாது இருமொழியுந்தொக்கதொ
கையாற்றலாற் பிறிதுபொருளுணர்த்தி இருமொழிக்கண்ணதாம்
இவை தம்முள்வேற்றுமையென்க. இருபெயரொட்டாகுபெயர் இ
ருமொழிக்கண்வந்ததன்றோவெனின் அன்று; என்னை, வகரக்கிளவி
-அதுவாகுகிளவி மக்கட்சுட்டு-என்னும் இருபெயரொட்டாகுபெ
யருள் வகரமுமதுவாதலும் மக்களுமாகிய அடைமொழிகள்கிளவி
சுட்டென்னு மியற்பெயர்ப்பொருளை விசேடித்துநில்லாது எழு
த்துஞ் சொற்பொருளும் பொருளுமாகிய ஆகுபெயர்ப்பொரு
ளை விசேடித்துநிற்பக் கிளவிசுட்டென்பனவே ஆகுபெயர்ப்பொ
ருளையுணர்த்த இருபெயருமொட்டிநிற்குமாதலின். இனிப்பொற்
றொடியென்னும் அன்மொழித்தொகையிற் பொன்னென்பது அ
வ்வாறு அன்மொழித்தொகைப்பொருளை விசேடித்துநில்லாது தொ
டியினையேவிசேடித்துநிற்ப அவ்விரண்டன்றொகையாற்றலான் அ
ன்மொழித்தொகைப்பொருளையுணர்த்துமாறுமறிக. இக்கருத்தேப
ற்றி மக்கட்சுட்டுமுதலியவற்றைப் பின்மொழியாகுபெய ரென்பா
ருமுளரெனவறிக. இப்பட்டுச்சீனம்-இப்பொன்கழஞ்சு-இந்நென்
னாழி-இம்மணைபைங்கோல்- இப்புண்ணேரம்பு- இந்நெல்லவல்- இ
வ்வாடைகோலிகன்- என வருவனவற்றுள், சீனம்- கழஞ்சு- நாழி-
கோல்- அம்பு- அவல்- கோலிகன்- என்பனவற்றை ஆகுபெயரெ
னவும் எழுத்துச் சொற்பொருள் யாப்பலங்காரம் எனஐந்ததிகா

ரங்கட்கும்வருங் காரியஆகுபெயரைச் சொல்லாகுபெயரெனவும், அகத்தியம் - தொல்காப்பியம் - என்பனவற்றை ஆகுபெயர்த்திரிபெனவுங் கூறுவாருமுளர். இப்பட்டிச்சினைத்துள்ளதென்பார் இசையெச்சமாக்கி இப்பட்டிச் சினையெனக்குறைத்துக்கூறலான் இப்பட்டென்னு மொழிவாய்க் குள்ளதென்பது பயனிலையன்றிச் சினையென்பது பயனிலையன்றாதலானுஞ் சுட்டிக்கூறாது சினையெனவாளாகூறினது பலபொருளொருசொற்போல் அவ்விடத்தினையும் பட்டினையு முணர்த்தாமையானும் இத்தொடக்கத்தனவாகிய இசையெச்சங்களை ஆகுபெயரென்பார்க்கு—"திருவளர் தாமரை சீர்திகழ் காவிக ளீசர்தில்லைக் - குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்குதெய்வ- மருவளர் மாலை.,,—எனவருமுருவகங்களையும் ஆகுபெயரெனக் கூறல்வேண்டுமாதலானும் இவையெல்லாம் ஆகுபெயரிலக்கணத்தான் வந்தனவல்லவெனவும் சொல்லாகுபெயர்க்கு அவர்காட்டியவற்றுட்சொல்லினதுபெயர் அவற்றிற்கானதின்மையின் அவைசொல்லாகுபெயராகாவெனவும் வெளிப்படைச்சொல் குறிப்புச்சொல் என்னுமிரண்டனுள் ஆகுபெயர் குறிப்புச்சொல்லாதலானும், அகத்தியம் - தொல்காப்பியம் - என்பன கருத்தாவோ காரியமோவென ஐயமுற் றின்றனைக் குறிப்பானுணரவேண்டாது காரியமாகிய நூல்களை வெளிப்படையானுணர்த்தலானுங் கருத்தாவின்மேற் செல்லாமையானும் விகுதிச்சூத்திரத்துப் பிறவென்பதனான்வரும் அம்விகுதியோடு பகுதிபுணர்ந்து இந்திரனாற்செய்யப்பட்ட நூலுக்கு ஐந்திரமெனவந்த ஆரியச்சொற்போல வந்தனவன்றி ஈறுதிரிந்தன வல்லவெனவுமுணர்க. இவற்றுள் எழுத்துச்சொற்பொருள் யாப்பலங்காரமென்பன காரியவாகுபெயரெனக் கோடலன்றி அப்பெயர்களான் அவ்விலக்கணங்களைக் கூறுதற்குத் தானமாகியபடலங்களைக் கூறினமையான் இவை தானியாகுபெயரெனக் கோடலுமாமென்க. இனித்திருவாசகம் - திருவாய்மொழி - என்பன வுண்மையானோக்குவார்க்கு அன்மொழித்தொகையாவனவன்றி ஆகுபெயராகாமையுமுணர்க. இனி ஆகுபெயர்கடாந் தத்தம்பொருளை நீங்காதுநின்று தம்பொருளின் வேறல்லாதபொருளோடுபுணர்தலும் பொருத்தமில்லாதகூற்றானின்று பிறிதுபொருளை யுணர்த்தலுமாகிய அவ்விரண்டிலக்கணத்தையுடைய விடாதவாகுபெயரும் விட்டவாகுபெயருமென இருவகையவெனவும் அவற்றிற்குதாரணமுறையே, கடுத்தின்றான்- குழிப்பாடிநேரிது- எனவுங்கூறுவர். அவ்வாறாகு பெயர்கள் வருமாறு மாய்ந்துணர்ந்துகொள்க. (௩௩)

(உ௯௧) ஏற்குமெவ்வகைப் பெயர்க்குமீறாய்ப்பொருள்-வேற்றுமைசெய்வன வெட்டேவேற்றுமை. *

(எ-ன்) மேல் வேற்றுமைக்கிடனென்றார் அவ்வேற்றுமையி
னையவெனவும் இத்துணையவெனவு முணர் - ற்று. (ப-ரை) ஏற்கு
ம்- தம்மையேற்றுக்கொள்ளுதற்குரிய, எவ்வகைப்பெயர்க்கும் - எ
வ்வகைப்பட்ட பெயர்களுக்கும், ஈறாய்- இறுதியாய், பொருள் அ
ப்பெயர்ப்பொருளை, வேற்றுமைசெய்வன - வேற்றுமைப்படு
த்துவனவாகிய, வேற்றுமை --வேற்றுமைகள், எட்டே - எட்டே
யாகும், எ-று. (பொ-ரை) தம்மை யேற்றுக்கோடற்குரிய எவ்வ
கைப்பட்டபெயர்கட்கும் இறுதியாய் அப்பெயர்ப்பொருளை வே
ற்றுமைப்படுத்துவனவான வேற்றுமைகளெட்டேயாம். எ-று. ❁
வேற்றுமைசெய்வனவேற்றுமை யெட்டேயெனக்கூட்டுக. எல்லா
ப்பெயரும் எல்லாவேற்றுமையும் ஏலாதென்பார் ஏற்குமென்றும்
வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொற்களுட் பெயர்படநின்ற
னவுந் தழீஇக்கோடற்கு எவ்வகையென்றும் வினைமுதலிய மூன்
றும் வேற்றுமைகொள்ளாதென்பார் பெயரொன்றும் ஏற்குமெவ்
வகைப்பெயர்க்குமீறுயென வெய்தியதனைவிலக்கி "எழுவாயுரு
பு திரிபில்பெயரே" எனப்பிறிதுவிதிவகுத்தலிற் பெயர்முழுவ
துஉம் உருபாம் எழுவாயுருபினையொழித்து விளியுருபிற்குப்
பெயரிறுதியாகிய அகப்பாட்டெல்லையினையும் ஏனையாறுருபிற்
கும் அதன் இறுதியாகிய புறப்பாட்டெல்லையினையுந் தழீஇக்
கோடற்குப் பொதுமையின் ஈறுயென்றும் பொருளையேயன்றிச்
சொல்லையும் ஒரோவழி வேறுபடுப்பது ஐம்முதலிய எழுருபிற்கு
மேயன்றி எழுவாய்க்கு ஒவ்வாமையானும் பொருளொன்றனையும்
வேறுபடுத்தல் எட்டுருபிற்கு மொப்பமுடிந்தமையானுஞ் சொ
ல்லையுமுடன்கூறாது பொருளென்றும் வேற்றுமையென்னுங் காரி
யத்தைச்செய்யுங்கருத்தாவாகிய எட்டுவேற்றுமையுருபிற்கும்வேற்
றுமையெனவும்பெயர்போந்தது காரியவாகுபெயராகியகாரணக்
குறியென்பார் வேற்றுமைசெய்வனவேற்றுமையென்றும் "ஏழிய
ன்முறைய தெதிர்முக வேற்றுமை-வேறெனவிளம்பான்பெயரது
விகாரமென் -- றோதியபுலவனு முளனொருவகையா-னிந்திரனெட்
டாம் வேற்றுமையென்றனன்"-- என ஆசிரியர் அகத்தியனார்
கூறுபவாகலின் விளியுருபுபடர்க்கைச்சொல்லையும் பொருளையும்
முன்னிலைச்சொல்லும் பொருளுமாக வேற்றுமைசெய்தலின் அத
னையெழுவாயுளடக்காது வேறுகோடலே தந்துணிபென்பார் எட்
டேயென்றுங்கூறினார். வேற்றுமையென்னும்பண்புப்பெயர் ப
ண்பிக்காகாமையிற் பண்பாகுபெயரன்றாயிற்று. இனி இரட்டுற
மொழிதலான் வேற்றுமைசெய்வனவேற்றுமை யெட்டேயெனக்
கொண்டுகூட்டாது ஆற்றொழுக்காகநிறீஇ யேகாரத்தைத் தேற்ற
மாக்காது-பிரிநிலையாக்கி இங்ஙனம் வருவனவாகியஎட்டுருபும் வே

ற்றுமை அவையன்றி ஒருசாரார்கூறும் உருபடைந்தபெயரும் உருபின் பயனிலையும் வேற்றுமையல்லவெனவும் பொருளுரைத்துக்கொள்க. (௯௪)

(உ௯உ) பெயரே ஐ ஆல் கு இன் அது கண் - விளியென்றுரு மவற்றின்பெயர்முறை. *

(எ-ன்) வேற்றுமைக ளெட்டின்பெயரு முறையு முணர் - ற்று. (ப-ரை) அவற்றின் - முன்னே யெட்டுவேற்றுமையென்னப்பட்டவைகளினுடைய, பெயர் - பெயர்களும், முறை - முறையுமாவன, பெயர் - பெயரும், ஐ - ஐயும், ஆல் - ஆலும், கு - குவ்வும், இன் - இன்னும், அது - அதுவும், கண் - கண்ணும், விளி - விளியும் - என்றுரும் - என்றிப்படிச்சொல்லப்பட்டவையாகும், எ-று. (பொ-ரை) மேல் எட்டேவேற்றுமை யென்றவற்றின் பெயரென்னை கிடக்கைமுறை யென்னை யெனிற் பெயர்முதலாக விளியீறாக இங்ஙனங்கூறியபெயருமுறையுமாம். எ-று. ❋ எகார மெண். மேல் எட்டேயென்றதொகைக்கு வகைதோன்றப் பெயர்கூறினாரன்றி அவ்வேற்றுமைகளின் பெயர்விகற்பமெல்லாங் கூறப்புகுந்தாரல்லராதலின் அவையெல்லாம் வருஞ்சிறப்புச்சூத்திரங்களானுணர்க. இவை இம்முறைநிற்றற்குக் காரணமும் அங்ஙனங்காட்டுதும். அன்றியும், "நாராயணன்பூ வோராயிரத்தைக் - கரத்தாற்கொய்தோ ரற்கே கொடுத்துச் - சக்கரச்சிறுமையி னீங்கிநற்சுவைப் - பாற்கடற்கண்ணே பள்ளிகொண்டான்,, என்பதனானு மறிக. (௯௫)

(உ௯௩) ஆறனுருபு மேற்குமவ்வுருபே. *

(எ-ன்) மேற்கூறிய வேற்றுமையுருபு எட்டனுள் எழுவாயுருபே பேனையுருபுகளையு மேற்குமென்ப துணர் - ற்று. (ப-ரை.) அவ்வுருபே - பெயராய்நிற்கின்ற அவ்வெழுவாயுருபே, ஆறனுருபு - ஐம்முதலாகிய ஆறுவேற்றுமையுருபுகளையும், ஏற்கும் - ஏற்கும், எ-று. (பொ-ரை) எழுவாய்வேற்றுமையாவது பெயர்மாத்திரையாய்த் தோன்றிநிற்றனிலையென்பவாகலின் அவ்வெழுவாயாய்நின்ற உருபே ஐம்முதலிய ஆறுவேற்றுமைகளினுருபுமேற்கும். எ-று. ❋ ஏனமே விளியுருபாவது பெயரது விகாரமேயாதலின் அவ்வெழுவாயுருபின் வேறல்லவெனவும் படுமென்பதுபற்றி ஆறனுருபுமேற்குமவ்வுருபேயென்றார். இங்ஙனம் ஆறனுருபுமென அஞ்சாரிலைபதவிர்வழிவந்தமையாற்செய்யுள்விகாரம். இனி இச்சூத்திர சதிற்றுஇவ்வாறுபொருள்கொள்ளாது பெயரேயன்றி ஆறும்வேற்றுமையுருபும் அவ்வுருபுகளையேற்குமெனட்டொருள்கொண்டு, சாத்தனது - சாத்தனதால் - சாத்தனதற்கு - சாத்தனதனின் சாத்தனதனது சாத்தனதன்கண் - சாத்தலதே - என உதாரணங்காட்டினாருமுளர். உருபேற்றல் பெயர்க்கேயுரிய இலக்கணம

ன்றி வினைமுதலியவற்றிற்குரிய இலக்கணமின்றாமாதலானும் "பெயர்வழித் தம்பொருடரவரு முருபே." என்றும்—"ஏற்கு மெய்வகைப்பெயர்க்குமீறாய்." என்றும் வரையறைகூறிப் போந்தமையானு மீண்டு இடைச்சொல் உருபேற்குமெனின் மாறுகொளக்கூறலாமாதலானும், சாத்தனதை-சாத்தனதால்-என்புழி, சாத்தனதென்பது, குழையது கோட்டது- என்றாற்போல துவ்விகுதியும் அகரச்சாரியையும்பெற் றுருபேற்றுநின்ற வினைக்குறிப்புப்பெயராமாதலானும் அன்றியும், உருபு ஏற்புழிப்பெயர்போலத் தனித்துநின்று உருபேற்றல் வேண்டுமாதலானும், அதனை-அதனால்-என உருபேற்குமெனிற் சுட்டுப்பெயர் உருபேற்றதாமன்றி உருபு உருபேற்றதன்றாமாதலானும், அது பொருந்தாதென்க. (௬௧)

(௨௯௪) நீயிர்நீவிர்நா னெழுவா யலபெறா. ※

(இ-ள்) மேல் ஏற்குமெய்வகைப்பெயர்க்கு மென்றமையின் எலாப்பெயரு முளவென்றாராதலின் அவற்றுள் இரண்டாவதுமுதலிய எழுருபுமேலாதன இவையென வுணர்- ற்று. (ப-ரை) நீயிர் நீவிர் நான் - நீயிர்முதலாகிய இம்மூன்றுபெயர்களும், எழுவாயல- எழுவாயல்லாதவேற்றுமைகளை, பெறா - ஏலாவாம், எ-று. (பொ-ரை) இம்மூன்றுபெயரும் எழுவாய்வேற்றுமையினையன்றி ஏனையேழுவேற்றுமையினையும் ஏலா எ-று. ※ எனவே நீயென்னும் ஓரெழுத்தொருமொழி அதுபோல ஓரெழுத்தொருமொழியாகிய நும்மெனவும், யானென்னும் யகரமுதன்மொழி யகரத்தோடு பிறப்பொத்த எகரமுதன்மொழியாகிய என்னெனவுந்திரிந்து ஐம்முதலிய ஆறுருபுமேற்றாற்போல நீயிர் நீவிர் நான் என்னு மூன்றும் அங்ஙனம்வாராமையின், நும்- என்- எனத்திரிதலும் அவ்வுருபுகளை ஏற்றலும் இலவென்பதாயிற்று. (௬௨)

(௨௯௫) அவற்றுள், எழுவாயுருபு திரிபில்பெயரே- வினைபெயர்வினாக்கொள லதன்பயனிலையே. ※

(இ-ள்) நிறுத்தமுறையானே பெயர் வேற்றுமை யிலக்கணமுணர்- ற்று. (ப-ரை) அவற்றுள்- முன்சொல்லப்பட்ட எட்டுவேற்றுமைகளுள், எழுவாய்-முதல்வேற்றுமையினது, உருபு-உருபாவது, திரிபில்- ஐம்முதலாகிய உருபேற்றுத்திரிதலில்லாத, பெயரே- பெயரேயாம், வினை- வினையையும், பெயர்- பெயரையும், வினா- வினாவையும், கொளல்- கொள்ளவருதல், அதன்- அவ்வுருபினது, பயனிலை- பொருணிலையாய்வருதலாம், எ-று. (பொ-ரை) மேற்கூறிப்போந்த எட்டுவேற்றுமையுள் முதல்வேற்றுமையின் உருபாவது திரிபில்லாதபெயரேயாம் அதன்பொருளாவது, வினையை

யும்பெயரையும்வினையையுங் கொளப்பொருணிலையாய்வருதலாம்.
எ-று. ❀ திரிபில்லாமையாவது உருபும் விளியும் ஏலாது முடிக்கு
ஞ்சொல்லுநோக்காது ஆ என்றாற்போலத் தன்னிலையினிற்றலா
ம். பயனிலையென்றது ஈண்டு முடிக்குஞ் சொல்லன்று பொருணி
லையெனவுணர்க. பொருணிலையெனினும் பயனிலையெனினுமொ
க்கும். பொருளென வாளாகூறாது பொருணிலையென்றதென்
னையெனின், ஏனை வேற்றுமையின் பொருள்கட்கெல்லாம் அப்
பொருண்முதற்கண் நிலைபெறுதலினென்க. கொளவருதலாவது-
முடிக்குஞ்சொற் கொளவருந்தன்மை எனவே எழுவாய்வேற்று
மையுருபாவது தன்னிலையினிற்கும் பெயரேயென்பதூஉம் பெய
ரேயென்றமையான் இதற்கிதனைவேறுருபின்றென்பதூஉம் அ
தன்பொருளாவது வினைமுதற்பொருண்மையாகத் தன்னைத் தா
னே வேற்றுமைசெய்தலென்பதூஉம் பெற்றாம். தன்னைத்தானே
வேற்றுமைசெய்தல்—"தன்னிலைக்கட் டன்னை நிறுப்பானுந் தன்
னை- நிலைகலக்கிக் கீழிடுவானு நிலையினு- மேன்மே லுயர்த்தி நி
றுப்பானுந் தன்னைத்- தலையாகச் செய்வானுந் தான்"—என்பத
னானுமுணர்க. வினவெனப் பொதுப்படக்கூறினமையின் வி
னையும் வினைக்குறிப்புமாகிய விகற்பமெல்லாங் கொள்க. இவ்வா
றே ஆசிரியர் தொல்காப்பியரும்—"எழுவாய் வேற்றுமை பெய
ர்தோன்று நிலையே" (எ-ம்) "பொருண்மைசுட்டல் வியங்கொள
வருதல் - வினைநிலையுரைத்தல் வினாவிற்கேற்றல் - பண்புகொளவ
ருதல் பெயர்கொளவருதலென் - றன்றியனைத்தும் பெயர்ப்பய
னிலையே" (எ-ம்) கூறியமுறைமையும் பொருண்மை சுட்டன்மு
தலியவாகக் கூறியவாறும் இம்மூன்றுளடங்குமாறுங்காண்க [வ-
று] ஆவுண்டு என்பது - ஒருபொருளின் பண்புமுதலாயின சு
ட்டாதப்பொருட்டன்மையது உண்மைத்தன்மையேசுட்டி நிற்
கவருதலாய். ஆசெல்க என்பது - தான் ஏவலைக்கொள்ள வருத
லாம். ஆகிடந்தது என்பது - தனது தொழில்வினைச் சொல்வருத
லாம். ஆகரிது என்பது - தனது பண்பினைத் தான் கொள்ள வருத
லாம். வினைக்குறிப்பாதல் ஒப்புமையான், ஆவில்லை - ஆவல்ல- எ
ன்னுந் தொடக்கத்துக் குணப்பொருளவல்லா வினைக்குறிப்புக்
கொளவருதலுங்கொள்க. இவையெல்லாம் வினைப்பாற்பட்டன.
ஆபல என்பது- தான்பெயரைக்கொண்டு முடியவருதலாம். ஆ
யாது- ஆவெவன்- என்பன தான்வினவுதற்குப் பொருந்தி வருத
லாம் எனப்பகுத்துக்காண்க. அங்ஙனம்பகுத்துக் காணபுழி யவி
காரியாய்நின்றபெயர் இம்முடிக்குஞ் சொற்களை அவாவியகாலத்
து விகாரியின்றும் விகாரியாகத் தன்னைத்தானே வேற்றுமைசெ
ய்து நின்றமையுங்காண்க. இதனை முதல்வேற்றுமையென்ற தெ

ன்னையெனின், பெயரேயாய் நிற்றலானும் வினைமுதற்பொருளுடைமையைத் தருதலானுமென்க. இனிப் பயனிலையென்றது முடிக்குஞ்சொல்லெனக்கூறுவாருமுளர். வினைபெயர்விளக்கிச் [illegible] னமுற்றுச்சொல்லாற்கூறுதுவினைபெயர்விளக்கிக்கொளலெ [illegible] ழிற்பண்புச்சொல்லாற்கூறுதலானும் இரண்டாம்வேற்றுமை முதலியவற்றிற்கு உருபும்பொருளுங்கூறலான் இம்முதல்வேற்றுமைக்கும் உருபும்பொருளுங்கூறவேண்டுமாதலானும் எவ்வெட்டும்வேற்றுமைக்கு முடிக்குஞ்சொல் "எல்லையின்னு மதுவும் பெயர்கொளு மல்ல வினைகொளும்" என்னுஞ்சூத்திரத்தாற் பிற்கூறுதலானும் ஈண்டிங்கூறிற் கூறியதுகூறலா மாதலானும், அது பொருந்தாதென்க. இன்னும் அவருட் சிலர் விளிகொள்வதென்பதற்குச், சாத்தனேயென விளிவிடைச்சொற்களைக்கொள்ளுமென உதாரணங்காட்டுவர். அங்ஙனமாயிற் றெரிநிலைத்தற்முதலிய பொருடரும் இடைச்சொற்களையுங் கொள்ளுமெனக் கூறல்வேண்டுமாதலானும் இஃது இடைச்சொற்சந்தியன்றி யெழுவாய்ச்சந்தியன்றாமாதலானும் அவர்க்கு அது கருத்தன்றென்க. இவ்வினைமுதற்பொருள்—"பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா- -பிற்பகற் றாமே வரும்."—"பெரியவர் கேண்மை பிறைபோல நாளும் - வரிசை வரிசையா நந்தும் - வரிசையா - வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே - தானே சிறியார் தொடர்பு."—என்பவற்றுள் இன்னாத மேவரும் கேண்மைதானே நந்தும் தொடர்புதானேதேயும் எனச் செயப்படுபொருட்கண்ணும், ஆசிரியன் கற்பிப்பித்தான் - காற்றுப்பழமுதிர்த்தது - என ஏதுவின்கண்ணும், சாத்தனுண்டான் - எனத் தன்வசமென்பதன்கண்ணும், மாடஞ்செய்யப்பட்டது - என வினைமுதலென்று தெரியப்படாமல் வினைமுதலாயே நிற்பதாகியதெரியாநிலைக்கண்ணும்—"ஒத்தகிழவனுங் கிழத்தியுங் காண்ப."—என ஓர்பொருளே ஒருகால் வினைமுதலாயும் ஒருகாற்செயப்படுபொருளாயும்நிற்குந் தடுமாற்றத்தின்கண்ணும்—"அறவினையாதெனிற் கொல்லாமைகோறல் - பிறவினை யெல்லாந் தரும்."— என்பதனுட் கொல்லாமை அறவினையெல்லாந் தரும், கோறல் பிறவினையெல்லாந் தரும், எனத்தொழிற்பெயர்க்கண்ணும், கண்காணும் - செவிகேட்கும் - எனக்கருவியின்கண்ணும், குன்றுகுவட்டைத்தாங்கும் - தூண்போதிகையைத்தொட்டது - என இடத்தின்கண்ணும்—"இரப்பவ னென்பெறினுங் கொள்வர்."—எனக் கொள்பவன்கண்ணும் வருமெனவும், தாய் மகவுக்கூட்டினாள் - ஆசிரியன் மாணாக்கனைப்படிப்பித்தான் - தலைவன் றலைவியைப்புல்லினான் - என இருவினைமுதலா லொருவினையுமுளவெனவும், அரசன்றேர்செய்தான் - தச்சன்றேர்செய்தான் - சாத்த

னுறங்கினான்- என "ஏவுதலியற்றுத லிவையின்வேறுதல்" என வினைமுதன்மூவகையாமெனவுங் கொள்க. இவையெல்லா முரையிற்கோடலென்னுந் தந்திரவுத்தி. இவ்வாறு பிறவருவனவு மன்ன. ()

(உகூரு) இரண்டாவதனுரு வையேயதன்பொரு - ளாக்கலழித்த லடைதனீத்த - லொத்தலுடைமை யாதியாகும். ✻

(எ-ன்) இரண்டாம்வேற்றுமை யிலக்கண முணர்- ற்று. (ப-ரை) இரண்டாவதன்- இரண்டாம்வேற்றுமையினது, உருபு-உருபாவது, ஐயே - முன்சொல்லப்பட்ட ஐயொன்றுமேயாம், அதன்- அதனுடைய, பொருள்- பொருள்களாவன, ஆக்கல்- ஆக்கப்படுபொருளும், அழித்தல்- அழிக்கப்படுபொருளும், அடைதல்-அடையப்படுபொருளும், நீத்தல்- துறக்கப்படுபொருளும், ஒத்தல்--ஒக்கப்படுபொருளும், உடைமை- உடைமைப்பொருளும், ஆதியாகும்- முதலியனவாக அவ்வுருபையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்டசெயப்படு பொருள்களாம், எ-று. (பொ-ரை) இரண்டாம்வேற்றுமையினது உருபுமேற்கூறிய ஐயுருபொன்றுமே அதன்பொருள்களாவன தன்னையேற்ற பெயர்ப்பொருளை ஆக்கப்படுபொருளாகவும் அழிக்கப்படுபொருளாகவும் அடையப்படுபொருளாகவும் துறக்கப்படுபொருளாகவும் ஒக்கப்படுபொருளாகவும் உடைமைப்பொருளாகவும் இவைபோல்வன பிறவாகவும் வேற்றுமைசெய்தலாம். எ-று. ✻ ஈண்டுத்தந்துரைத்தனவெல்லா மேற்போந்த வற்குமெய்வகை யென்னுஞ் சூத்திரத்திற்கு இயையவந்த விசையெச்சம். மேல்வருவனவு மன்ன. [வ-று.] குடத்தைவனைந்தான் - உடைத்தான்- அடைந்தான்- துறந்தான்- ஒத்தான்- உடையான்-எனவரும். குடத்தையொத்தானென் புழிச் சுதந்தரமின்றி ஒழுகினானென்பது பொருள் — ஆதியென்றமையான் இவ்வாறுசெயப்படுபொருளாக வேற்றுமைசெய்தலெல்லாங் கொள்க. ஒருவனோர்வினைசெய்யவதனாற்றோன்றிய பொருள்யாது அது செயப்படுபொருளென்பதாம். ஒருவனோர் வினைசெய்யத் தொழிற்படுபொருள்யாதது செயப்படுபொருளெனினுமுடையும். செயப்படுபொருள்- செய்பொருள்- கருமம்- காரியம்- என்பன வொருபொருட் கிளவி. அழித்தன்முதலிய வினைசெய்தவழித் தோன்றியகாரியங்க ளென்னையெனின், அழிபொருளாதன் முதலியனவுங் குறிப்புவினையு மொன்றனையுடையனாகியகாலத்தவ் வுடைமையாதலுமாம். பிறவுமன்ன. இச்செயப்படுபொருள்கருத்துண்டாதல் கருத்தின்றாதல் இருமையுமாதல் ஈருருபிணைதல் கருத்தாவாதல் அகநிலையாதல் தெரிநிலை என இவைமுதலாகியும் வருமெனக்கொள்க. இவற்றிற்கு உதாரணம், சோற்றையுண்டான் (எ-ம்)

சோற்றைக்குழைத்தான் (எ-ம்) எறும்பைமிதித்து வழியைச்சென்றான்- சுட்டலைமிதித்துப் பலதுயரடைந்தான்- தூளொடு கூழையுண்டான்- நஞ்சினைக்கலந்த பாலைக்குடித்தான்- கத்தரிக்காயையும் புழுவையுங்கறித்தான்- பதரையுநெல்லையும் பணத்திற்குக்கொண்டான் - (எ-ம்) ஆரியனை ஐயுற்றபொருளை வினவினான் - (எ-ம்) பசுவினைப் பாலினைக் கறந்தான் - யானையைக்கோட்டைக்குறைத்தான் - (பசுவினது யானையது என்பனபோல ஆரியனது எனவாராமைபற்றி இங்ஙன மீருருபினைத லிருவகைப் பட்டன.) (எ-ம்) தன்னைப்புகழ்ந்தான்-தன்னைக்குத்தினான்- தன்னைப்பேணினான்-தன்னைக்காதலித்தான்- (எ-ம்) வருதலைச்செய்தான் - (எ-ம்) மாடஞ்செய்யப்பட்டது (எ-ம்) முறையேகாண்க. தெரிநிலையாவது வினைமுதலுருபேற்றுஞ் செயப்படுபொருளேயெனத்தெரிய நிற்றல். கயிலையிழைத்தான்- பொருளைப்பெற்றான்- கயிற்றை யறுத்தான் - எனமுறையே யியற்றப்படுதலும் எய்தப்படுதலும் வேறுபடுக்கப்படுதலு முதலியனவற்றுள்ளேயடங்கும். முதலியனவென்றதனால், ஆரியன்மாணாக்கனையூர்க்குப்போக்கினான்- தாய்மகளையூர்க்குப்போக்கினாள்- என்புழி இருவருப்போதலாலே வினைமுதலாயும், ஏவப்படுதலாற் செயப்படுபொருளாயும், ஏவித்துக்கொள்ளுதலால் ஏவுதற்கருத்தாவாயும், ஏவப்போதலால் இயற்றுதற்கருத்தாவாயும் வந்தன. இவ்வேற்றுமை தன்பெயர்ப்பொருளைமேற்போந்த கருத்தனாலாகிய காரியமாக்குதலின், இரண்டாம் வேற்றுமையெனப்பட்டது. (௫௯)

(உ௯௭) மூன்றாவதனுரு பாலானோடொடு - கருவிகருத்தா வுடனிகழ்வதன்பொருள். *

(எ-ன்) மூன்றாம்வேற்றுமைய திலக்கணமுணர்-ற்று. (ப-ரை) மூன்றாவதன் மூன்றாம்வேற்றுமையினுடைய, உருபு-உருபுகளானவை, ஆலானோடொடு- முன்சொல்லப்பட்ட ஆலேயன்றி ஆனும் ஒடும் ஓடுவுமாகும், அதன்-அவ்வுருபுகளுடைய, பொருள்-பொருள்களானவை, கருவி- கருவிப்பொருளும், கருத்தா - வினைமுதற்பொருளும், உடனிகழ்வு - உடனிகழ்ச்சிப்பொருளும் ஆகிய அவ்வுருபுகளையேற்ற பெயர்ப்பொருள்கள்வேறுபட்ட மூன்றுமாகும், எ-று (பொ-ரை) மூன்றாம்வேற்றுமையின் உருபு மேற்கூறிய ஆலேயன்றி ஆனும் ஒடும் ஓடுவுமாம் அவற்றின்பொருள்களாவன தம்மையேற்றபெயர்ப்பொருளை கருவியாகவும் ஏதுப்பொருட்டாகிய கருத்தாவாகவும் உடனிகழ்வதாகவும் வேற்றுமைசெய்தலாம். எ-று. ❁ மூன்றாம்வேற்றுமைப்பொருளாதலின் ஏதுப்பொருட்டாகிய கருத்தாவென்றும் அதன்பொருளென்பது தொகுதி

ஒருமையாதலின் அதற்கு அவற்றின்பொருளென்றும் பொருள் கூறினும். கருவி-காரணம்-ஏது-நிமித்தம்-என்பன வேறுபொருட் கிளவியாயும், ஒருபொருட்கிளவியாயும்வருதலிற் காரணமூன்றனுள் முதற்காரணந் துணைக்காரணமென்னும் இரண்டனையுங் கருவியென்றும் ஏவுதற்கருத்தாவும் இயற்றுதற்கருத்தாவுமாகிய நிமித்தகாரண மிரண்டனையுங் கருத்தாவென்றுங் கூறினார். வனைந்தான் என்புழிக் குடமாகியகாரியத்திற்கு அதுவதுவாகியமண் முதற்காரணம். குலாலனதறிவு மந்தக்கரணமுமுதலிய ஞாபகக்கருவியும் தண்டசக்கரமுதலிய காரகக்கருவியும், அம்முதற்காரணத்துக்குத் துணையாய்நின்று காரியத்தைத்தருதலிற் றுணைக்காரணம். குலாலனிமித்தமாக அக்காரியந்தோன்றுதலின் அவனிமித்தகாரணம். ஞாபகக்கருவியென்பது அறிதற்கருவி. காரகக்கருவியென்பது செய்தற்கருவி. நடந்தான் என்புழிக் குடம்போல்வதோர் காரியமின்றேனும் நடத்தலைச்செய்தானென்பது பொருளாதலில் நடத்தல் காரியம். அவயவத்தாற் பலவேறுவகைப்பட்ட குடமுதலியகலன்களிற் பொதுமையினிற்கு மண்போலப் பலவேறுவகைப்பட்ட வினைகளிற் பொதுமையினிற்குந்தொழில் நடத்தற்குமுதற்காரணம். அறிவுங் காலுமுதலியன துணைக்காரணம். வினைமுத னிமித்தகாரணம். பிறவுமன்ன. [வ-று.] அறிவாலாக்கியகாட்சி- அறிவாலாகியகாட்சி- என்புழி ஆலுருபு பெயர்ப்பொருளை ஞாபகமுதற்கருவியாக வேற்றுமைசெய்தது. கண்ணாலாக்கியகாட்சி - கண்ணாலாகியகாட்சி- என்புழி ஞாபகத்துணைக்கருவியாக வேற்றுமைசெய்தது. காட்சியென்றது காட்சியுணர்வை. மண்ணாலாக்கியகுடம்- மண்ணாலாகியகுடம்-என்புழிக்காரகமுதற்கருவியாக வேற்றுமைசெய்தது. திரிகையாலாக்கியகுடம்- திரிகையாலாகியகுடம்- என்புழிக் காரகத்துணைக்கருவியாக வேற்றுமைசெய்தது. இங்ஙனம் ஆக்குதற்குவினைமுத லறிவனுங் குலாலனுமாம். ஆதற்குவினைமுதல்காட்சியுணர்வுங் குடமுமாம். இக்காட்சியுணர்வுங் குடமும் வினைமுதலாயகாலத்து இக்கருவிகள் ஏதுப்பொருளவாய்நின்றன. அரசனாலாகியதேவகுலம்- தச்சனாலாகியதேவகுலம்- என்புழிமுறையே ஏதுப்பொருளவாகிய ஏவற்கருத்தாவாகவும் இயற்றுதற்கருத்தாவாகவும் வேற்றுமைசெய்தது. ஆக்கியதேவகுலமெனவரின் மூன்றுமுருபேலாவாய் அரசனுந் தச்சனு மெழுவாயாம். இஃதெழுவாய்க்கண்வருங் கருத்தாவிற்கும் இவ்வேற்றுமைக்கண்வருங் கருத்தாவிற்குந் தம்முள்வேற்றுமையென்க.— "தூங்குகையா னோங்குநடைய" — "உறழ்மணியா னுயர்மருப்பின." — "பண்டறியேன் கூற்றென்பதனை யினியறிந்தேன் - பெண்டகையாற் பேரமர்க்கட்டு." என்புழி உடனிகழ்வதாகவேற்றுமைசெய்தது. ஆனுருபையும் இவ்

வாறேயொட்டிக் காண்க.— "நாவிற் றிருந்த கலைமாமக ளோடு நன்பொற் - பூவிற் றிருந்த திருமாமகள் புல்ல நாளும்" (எ-ம்) "மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு - தானஞ்செய் வாரிற் றலை." (எ-ம்) முறையே ஓடும் ஒடுவும் உடனிகழ்வதாக்கின. எற்புழிக்கோடலான் இவ்விரண்டுருபிற்கும் உடனிகழ்ச்சிப்பொருளொன்றுமே கொள்க. இங்ஙனம்வருங் கருத்தா ஏதுப்பொருட்டாய்வருதலின் விதந்துகூறாது கருவியின்பாற் படுத்தினும்அமையுமென்பதுதோன்ற இவ்வுருபிற்குச் சிறந்தகருவிப்பொருளை முற்கூறினர். இக்கருவிப்பொருள் அகக்கருவி புறக்கருவி ஒற்றுமைக்கருவியென மூன்றாயும் வருமெனக்கொள்க. அவையாவன, மனத்தானினைத்தான்- வாளால்வெட்டினான்- அறிவாலறிந்தான்- எனமுறையே காண்க. இரண்டாம்வேற்றுமைப் பொருளாகிய காரியத்திற்குவேண்டுங் கருவிப்பொருளைத்தருதலின் இது மூன்றாம்வேற்றுமையெனப்பட்டது.—"ஆலு மானு மோடு மொடுவுஞ்- சாலு மூன்றாம் வேற்றுமைக் கதுவே - செய்வோன் காரணஞ் செயத்தகுகருவி-யெய்திய தொழின்முத லியைபுடைத்ததன்பொருள்."- என்றார் ஆசிரியர் அகத்தியனாருமென்க. முதற்காரணத்தைக் காரணமென்றும் ஏவற்கருத்தாவைத் தொழின்முதலென்றும் விதந்துகூறினாராதலின் இங்ஙனம்பொருள் ஐந்தாயின. (௪௰)

(உ௯அ) நான்காவதற்குரு பாகுங்குவ்வே - கொடைபகை நேர்ச்சி தகவதுவாதல்- பொருட்டுமுறையாதியி னிதற்கிதெனல் பொருளே. *

(எ-ன்) நான்காம்வேற்றுமைய திலக்கணமுணர்-ற்று. (ப-ரை) நான்காவதற்கு- நான்காம்வேற்றுமைக்கு, உருபு- உருபாவது, குவ்வேயாகும்- முன்சொல்லப்பட்ட குவ்வொன்றுமேயாகும், பொருள்- அவ்வுருபின்பொருள்களாவன, கொடை-கொடையும், பகை-பகையும், நேர்ச்சி- நட்பும், தகவு- தகுதியும், அதுவாதல்-முதற்காரணமும், பொருட்டு - நிமித்த காரணமும், முறை-முறையும், ஆதியின்- முதலானபொருட்சொற்களின் புணர்ச்சியில், இதற்கிதெனல்- இதற்கு இதுவென்கிறதுபட வருகின்றவையாகிய அவ்வுருபேற்றபெயர்ப்பொருள் வேறுபட்டபலவுமாம், எ-று. (பொ-ரை) நான்காம்வேற்றுமைக்கு உருபு மேற்கூறியகுவ்வொன்றுமேயாம் அதன்பொருளாவது கொடையும் பகையும் நேர்ச்சியுந் தகவு மதுவாதலும்பொருட்டு முறையுமுதலாயபொருடோன்றப் புணரும்புணர்ச்சிக்கண் இதற்கிதென அங்ஙனம்வருதற்குரிய எப்பொருளினையும் ஏற்றுக்கொள்ளும்பொருளாகத்தன்னையேற்றபெயர்ப்பொருளை வேற்றுமைசெய்தலாம். எ-று. * இதற்கிது என்றமையான் ஏற்றுக்கொள்ளும் பொருளென்பது பெற்றாம். *

[வ-று] "இரப்பார்க்கொன் றீவார்மே னிற்கும்புகழ்." என்பது கொடை.—பிணிக்குமருந்து என்பது— பகை.— விளக்கிற்கெண்ணெய் என்பது— நேர்ச்சி.—நட்பென்பது மிது. "அருங்கலமுலகின்மிக்க வரசர்க்கேயுரிய" என்பது தகுதி.— ஆடைக்குநூல் என்பது— அதுவாதல். கூழிற்குக்குற்றேவல்செய்யும்— என்பதுபொருட்டு.—சாத்தற்குமகன்— என்பதுமுறை.— ஆதியென்றமையானே, கைக்கியாப்புடையதுகடகம் என்னும் யாப்புடைமைமுதலியவாய் இதற்கிதென்பதுபட வருவனவெல்லாங்கொள்க. இவற்றுள் ஏற்றுக்கொள்ளும்பொருளாக வேற்றுமைசெய்தல்காண்க. இவ்வேற்றுக் கோடற் பொருள்,— "கேளாதேற்றல் கேட்டேயேற்ற—லிலாதேற்ற லீவோனேற்ற— லுயர்ந்தோனேற்ற லிழிந்தோனேற்ற— லொப்போனேற்ற லுணர்வின்றேற்றல்— விருப்பாயேற்றல் வெறுப்பாயேற்றல்" என இவைமுதலாகப் பலவுமாமெனக்கொள்க. [உ-ம்] ஆவிற்குநீர்விட்டான்— (எ-ம்) வறியார்க்கீந்தான் (எ-ம்) மாணாக்கனுக்கு அறிவைக்கொடுத்தான்— (எ-ம்) தனக்குச்சோறிட்டான்— தனக்கரிசிகொடுத்தான்— "அருமறை சோரு மறிவிலான் செய்யும்— பெருமிறை தானே தனக்கு" (எ-ம்) அரனுக்குக் கண்மலர்கொடுத்தானரி (எ-ம்) அரிக்குச்சக்கரங்கொடுத்தானரன்— (எ-ம்) சோழற்குவிருந்துகொடுத்தான்சேரன்— (எ-ம்) சோற்றிற்குநெய்விட்டான்— நீர்க்குவாசமூட்டினான்— வாளிற்குறைபூண்டினான்— தண்டிற்குத் தங்கங்கட்டினான்— சுவர்க்குச்சித்திர மெழுதினான் (எ-ம்) மாணாக்கனுக்குக்கசையடிகொடுத்தானாசிரியன்— (எ-ம்) கள்ளனுக்குக்கசையடிகொடுத்தானரசன் (எ-ம்) முறையேகாண்க. முதலென்றதனால், மருகனுக்குமகட்கொடுத்தான்—என்பதுவழக்கு. மகனுக்கு அரசுகொடுத்தான் — என்பது உரிமை அரசற்குத் திறைகொடுத்தான்— என்பது அச்சம். தந்தைதாய்க்குத் திதிகொடுத்தான்—என்பது பாவனை— எனவும் வரும். ஒருவனோர்காரியத்தை ஒருகருவியாற்செய்தல் அக்காரியந் தனக்கேனும் பிறர்க்கேனும் உதவுதற்பொருட்டன்றி வீண்காரியஞ் செய்யானாதலின் இஃது இம்முறையானே நான்காம்வேற்றுமை யெனப்பட்டது. (சக)

(உசகூ) ஐந்தாவதனுரு பில்லு மின்னு - நீங்கலொப்பெல்லை
யேதுப்பொருளே. *

(என்) ஐந்தாம்வேற்றுமைய திலக்கணமுணர்-ற்று. (ப-ரை) ஐந்தாவதன்—ஐந்தாம்வேற்றுமையினுடைய, உருபு— உருபுகளானவை, இல்லு மின்னும்—இல்லும் மூன்சொல்லப்பட்ட இன்னுமாம், பொருள்— அவ்வுருபுகளின் பொருள்களாவன, நீங்கல்— நீக்கப்பொருளும், ஒப்பு— ஒப்புப்பொருளும், எல்லை— எல்லைப்பொருளும், ஏது ஏதுப்பொருளுமாகிய அவ்வுருபுகளையேற்றபெயர்ப்பொருள்

கள் வேறுபட்ட இந்நான்குமாம். எ-று. (பொ-ரை) ஐந்தாம்வேற்றுமையி னுருபாவன இல்லும் மேற்கூறிய இன்னுமாம் அவற்றின் பொருளாவன நீங்கற்பொருளாகவும் உவமைப்பொருளாகவும் எல்லைப்பொருளாகவும் ஏதுப்பொருளாகவுந் தம்மையேற்றபெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம். எ-று. ※ ஏதுப்பொருண் மூன்றாம்வேற்றுமைக்கன்றி இதற்கு அத்துணைச்சிறப்பின்மையிற் பிற்கூறப்பட்டது. [வ-று.] தமரிற்றீர்ந்தானிவன் - வரையின்வீழருவி — "தலையினிழிந்த மயிரனையர்மாந்தர் - நிலையினிழிந்தக்கடை." - (எ-ம்) அரசரிற் பெரிய ரந்தணர் - ஆவினிழிந்தது மேதி - (எ-ம்) வருவழி இன்னுருபு நீங்குதற்பொருளவாக வேற்றுமை செய்தது.— பாலின்வெளிது கொக்கு - காக்கையிற்கரிது களம்பழம் - நாயிற்கடைப்பட்ட நம்மை - என்பனவும் ஒப்புமைகருதாது உயர்வுந் தாழ்வுங்கருதிவழி நீங்குதற்பொருளவாம். இந்நீக்கப்பொருள் நிலைத்திணை இயங்குதிணை பண்பாதியின்வருமெனவுங் கொள்க. அவையாவன, மலையினிழிந்தான் - (எ-ம்) யானையினிழிந்தான் - (எ-ம்) சிறுமையினீங்கிய - (எ-ம்) வரும். ஆதியென்றமையான், — "குடிப்பிறந்து குற்றத்தினீங்கி." — ஐயத்தினீங்கி - என வருமெனவுங்கொள்க இவ்விலக்கணத்தான் முன்னர்க்காட்டிய உதாரணங்களையு மூட்டித்துணர்ந்து கொள்க.— "திறல்வேலுநுதியிற் பூத்தகேணி" — "பொன்னிற்பிறிந்த பொறிசுணங்கிளமுலை" — என்புழி உவமைப்பொருளாக வேற்றுமைசெய்தது.— கருவூரின் கிழக்கு - மருவூரின்மேற்குச் சோலை - என்புழி எல்லைப்பொருளாகவேற்றுமைசெய்தது.— "கோட்டிற்செய்த கொடிஞ்சிநெடுநற்றேர்." — அறிவிற்பெரியன் - என்புழி யேதுப்பொருளாக வேற்றுமைசெய்தது.— இல்லுருபினையும் இவ்வாறேயொட்டிக்கொள்க. இங்ஙனங்கூறவே எல்லாப்பொருளையும் இதனினிற்றிதென விகற்பித்துணர்தற்குவருவன இவ்வுருபென்பதாயிற்று ஆகவே நான்காம்வேற்றுமைப்பொருளாகிய கொள்வோனையுங் கொடைப்பொருளினையும் இவ்வாறு விகற்பித்துணர்ந்தல்லது தொகுத்தல் கூடாமையின், இஃது ஐந்தாம்வேற்றுமையெனப்பட்டது. (௪௨)

(௪௩.) ஆறனொருமைக் கதுவுமாதுவும் - பன்மைக்கவ்வு முருபாம்பண்புறுப்- பொன்றன்கூட்டம் பலவினீட்டந் - திரிபினாக்கமாந்தற்கிழமையும்- பிறிதின்கிழமையும் பேணுதல்பொருளே ※

(எ-ன்) ஆறாம்வேற்றுமையி லக்கண முணர் - ற்று (ப-ரை) ஆறன் - ஆறாம்வேற்றுமையினது, ஒருமைக்கு - ஒருமொழியின் ஒருமைப்பொருண்மைக்கு, அதுவுமாதுவும் - முன்சொல்லப்பட்ட அதுவேயன்றி ஆதுவும், பன்மைக்கு - பன்மொழியின்

பன்மைப்பொருண்மைக்கு, அவ்வும்- அகரமும், உருபாம்-உருபுகளாகும், பொருள்- அவற்றின்பொருள்களாவன, பண்பு-குணமும், உறுப்பு- அவயவமும், ஒன்றன்கூட்டம் - ஒருபொருட்கூட்டமும், பலவினீட்டம்- பலபொருட்கூட்டமும், திரிபினாக்கம் - ஒன்றுதிரிந்தொன்றாதலும், ஆந்தற்கிழமையும் - ஆகியவைந்துதற்கிழமைப்பொருள்களையும், பிறிதின்கிழமையும்- அவையல்லாதபிறிதின்கிழமைப்பொருள்களையும், பேணுதல் - உடையனவாக அவ்வுருபுகளையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட இவ்விருவகைச் சம்பந்தப்பொருள்களுமாகும், எ-று (பொ-ரை.) ஆறாம்வேற்றுமையினது ஒருமைப்பொருண்மைக்கு மேற்கூறிய அதுவென்பதேயன்றி ஆதுவென்பதும் பன்மைப்பொருண்மைக்கு அகரமு முருபாம். அவற்றின்பொருளாவன குணமுந் தொழிலுமாகிய பண்புஞ் சினையும் ஒருபொருட்கூட்டமும் பலபொருட்கூட்டமும் ஒன்றுதிரிந்தொன்றானதுமாகிய ஐந்துதற்கிழமைப்பொருளினையும் பிறிதின்கிழமைப்பொருளினையு முடையதாகத் தம்மையேற்ற பெயர்ப்பொருளை வேற்றுமைசெய்தலாம் எ-று. ❁ கிழமையென்பது ஆகுபெயர். [வ-று.] நிலத்தகலம் சாத்தனதியல்பு- சாத்தனதுநன்மை - சாத்தனதிருக்கை சாத்தனதுநிலை- சாத்தனதுவரவு - கபிலரதுபாட்டு - (எ-ம்) சாத்தனது கை- சாத்தனது கால் (எ-ம்) மாந்தரது தொகுதி- நெல்லது குப்பை-(எ-ம்) படையது தொகை - விலங்கினதீட்டம் - (எ-ம்) நெல்லினது பொரி- கோட்டது நூறு - (எ-ம்) ஐவகைத்தற்கிழமையு முறையே வந்தன. ஒன்றன்கூட்டத்தற்கிழமைமாறிக் குப்பையதுநெல் - எனவரினுறுப்புத்தற்கிழமை. பலவினீட்டமாறி நிற்பினு மது. சாத்தனதாடை - சாத்தனதுபிள்ளை- எனப்பிறிதின்கிழமைவந்தன. பாட்டென்பது வரிவடிவை நோக்கியகாலத்துப் பிறிதின்கிழமையாம். எனதுகை- தனதுதாள் - எனதுநிலம் - தனதெயில் - என ஆறுருபோடும், எனகைகள்- தனதாள்கள் எனயானைகள் - தனதானைகள் என அகரவுருபோடு மொட்டுக. சாத்தனதாடை என்புழிச் சாத்தனதுகையென்றற்போலாது ஆடைக்குச் சாத்தன் பிறிதாதலின் அப்பிறிதினதுகிழமை பிறிதின்கிழமையெனப்பட்டது. அஃறிணையொருமைபன்மைகட்கு இயைந்தவுருபு இங்ஙனங்கூறவே உயர்திணை யொருமை பன்மையாகிய கிழமைப்பொருட்கு இவ்வுருபுகள் வராவென்பது பெற்றாம். அவ்வருங்கால், அவனுடையவிறலி - அவனுடையவிறலியர் - என மூன்றுசொல்லாய் இரண்டுசந்தியாய் முன்னது எழுவாய்ச்சந்தியும் பின்னது பெயரெச்சக்குறிப்புச்சந்தியுமாமெனக, அவன்விறலி- என்புழி உடையவென்பது இசையெச்சம், சாத்தனுடையவியல்பு-

-சாத்தனுடையகை - என்றற்றொடக்கத்தனவு மன்ன.—இவற்றை ஆறாம்வேற்றுமைச்சந்தியென்றும் உடையவென்பதனைச் சொல்லுருபென்றுங் கூறுவாருமுளர். ஆசிரியர் தொல்காப்பியனாரும் உயர்திணையொருமை பன்மைகட்கு இவ்வுருபுகளோ வலாவென்பது கருதி—"அதுவென்வேற்றுமை யுயர்திணைத்தொகையி னது வெனுருபுகெடக் குகரம்வருமே." என்றார்.—இவ்வாறாம்வேற்றுமைப் பொருளாகிய குறைப்பொருள் ஒற்றுமை வேற்றுமையென உரைக்கப்படுமெனவும், அவற்றுள் ஒற்றுமையாவ தோர் பொருளேயாகுமெனவும், வேற்றுமையாவது ஒன்றாய்த்தோன்றல் உரிமையாய்த்தோன்றல் வேறாய்த்தோன்றல் என மூவகைப்படுமெனவும், அம்மூவகையுள் ஒன்றாய்த்தோன்றல் ஒன்றன் கூட்டம் பலவின்கூட்டம் திரிபினாக்கம் சினை குணந் தொழில் என அறுவகைப்படுமெனவும், உரிமையாய்த்தோன்றல்- பொருள் இடம் காலம் இருவகைநூல் என ஐவகைப்படுமெனவும், வேறாய்த்தோன்றல் வேறிடத்துஞ்செல்லும் நிலைமையினுடைமைகள் பலவுமாமெனவுங் கொள்ளப்படும். [உ-ம்.] என்னுயிர் - இராமன் தலை- என்றாற்போல்வன வேற்றுமை.—வேற்றுமைவகையுள் ஒன்றாய்த்தோன்றலுக் குதாரணம்- முன்னர் ஐவகைத் தற்கிழமைக்குக் காட்டியனவேயாம்.— உரிமையாய்த்தோன்றலுக் குதாரணம், முருகனதுவேல்- குறிஞ்சி- வெள்ளியதாட்சி- சம்பந்தனது தமிழ்- சம்பந்தனதுபிள்ளைத்தமிழ் எனமுறையேகாண்க. வேறாய்த்தோன்றலுக் குதாரணம், சாத்தனது பசு- சாத்தனது சோறு- சாத்தனதுபொன்- எனவரும். இவை முன்னொருவர்க்குரிமையாயும், பின் வேறொருவர்க்குரிமையாயும்வருதலின் நிலைமையினுடைமையாயின. இம்மூவகைவேற்றுமையை வடநூலார் நூற்றொருபேதமாக் கூவர் மேற்போந்த கொள்வோனையுங் கொடைப்பொருளினையும் இதனினிற்றிதுவென விகற்பித்துணர்ந்து கொடுத்தல இவ்விரு கிழமைப்பொருளுடையோர் செயலென்பதுதோன்ற இஃது ஆறாம்வேற்றுமையெனப் பட்டது.— "ஆறனுருபே யதுவாதுவ்வும் - வேறொன்றுடையதைத் தனக்குரியதையென - விருபாற் கிழமையின் மருவுறவருமே."—என்றார் ஆசிரியர்அகத்தியனாருமென்க. (௩௱)

(௩௱௧) ஏழனுருபுகண் ணாதியாகும் - பொருண்முதலாறு மோரிருகிழமையி - னிடனாய்நிற்ற லிதன்பொருளென்ப. ※

(எ-ன்) ஏழாம்வேற்றுமைய திலக்கணமுணர்-ற்று. (ப-ரை) ஏழன்-ஏழாம்வேற்றுமையினுடைய, உருபு உருபுகளாவன, கண்ணாதியாகும்- முன்சொல்லப்பட்டகண்ணையன்றி அதுமுதலாகிய பிறவுமாம், இதன் - இவ்வுருபுகளுடைய, பொருள் - பொருளாவ

கட்டீதம் - (எ-ம்) முறைமே காண்க.— இவையெல்லா முற்கூறி யவற்றுளடங்கும் இனி இடமல்லாவிட முவகைப்படும், கூட்டிப் பிரித்தல - பிரித்துக்கூட்டல் - இருவரின் முடியும் ஒருவினைத் தொழிற்பெயர் என. அவையாவன,—"உடையா னரசு, ளோறு.,,— "அவற்றுள், அ இ உ எ ஒக்குறில்,, (எ-ம்) "வானுறையுந் தெய்வத்துள் வைக்கப்படும்,,—"மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்.,, (எ-ம்) "புல்லி விடாப் புலவியுட் டோன்றும்.,,— தட்டுப்படைக்கண் வந்தான்- புல்லுதற்கண் வேர்வைவந்தது - பொருதற்கண் மழைபெய்தது- சூதாடற்கட் டுக்கம்வந்தது- (எ-ம்) முறையே காண்க. (சசு)

(நாஉ) கண்கால்கடையிடை தலைவாய்திசைவயின்- முன்சார் வலமிட மேல்கீழ்புடைமுதல்- பின்பாடளைதே முறைழுவழியுழி யுளி - யுள்ளகப்புறமில் லிடப்பொருளுருபே. *

(ள்-ன்) மேற்கண்ணுதியென்றார் அவையிவை யென்பதுணர் -ற்று. (ப-ரை) கண்- இல்- கண்முதலாக இல்லீறாகச்சொல்லப்பட்ட இவ்விருபத்தெட்டும், இடப்பொருளுருபு - தம்மையேற்ற பெயர்ப்பொருளை இடப்பொருளாக வேற்றுமைசெய்கின்ற உருபுகளாம், எ-று. (பொ-ரை) இங்ஙனம் கண்முதலாக இல்லீறாக எண்ணப்பட்ட இருபத்தெட்டும் இடப்பொருளாக வேற்றுமை செய்யு முருபுகளாம். எ-று. ❀ தொடர்புதோன்றக் கண்ணுருபையீண்டும் அநுவதித்தார். [வ-று.] ஊர்க்கானிவந்தபொதும்பருள் - வேலின் கடைமணிபோற் றிண்ணியான்- நல்லாரிடைப்புக்கு வலைத்தலைமானன்னநோக்கியர்- குணாகடல்வாயமுதென்கோ- தேர்த்திசையிருந்தான்- அவர்வயிற்செல்லாய்- கற்றார்முற் றோன்றாகழிவிரக்கம் காட்டுச்சாரோடுங் குறுமுயால்- "காழ்வரை நில்லாக் கவிறனின்றுன் கைவலத்தி - யாழ்வரை நின்றது.,, இல்லிடப்பரத்தை- தன்மேற் கடுவரைநீரிற் கடுத்துவரக்கண்டும் - "பிண்டிக்கண்ணார் நிழற்கீழ் ழெழுந்த மடிகள்,, - கடைப் புடை கொள்ளியநீர் - "சுரன்முதல்வந்த வுரன்மாய் மாலை.,, - காதலிபின் சென்றதம்ம - தம்பாடணையாதநாள் - கல்லளைச்சுனைநீர் கையிலுண்மையான் - தோழிக்குரியவை கோடாய்தேத்து - அவனுழை வந்தான்- நின்றதோர் நறவேங்கை நிழல்வழி யசைந்தன்ன - உறையுழி யோலைபோல்- குயில்சேர் குளிர்காவுளிசேர்புறையும்- முல்லையங்குவட்டுள்வாழும்- "பயன்சாராப் பண்பில்சொற் பல்லாரகத்து,,—"செல்லு மென்னுயிர்ப் புறத்திறுத்த மருண்மாலை,,—ஊரிலிருந்தார் என இவை பலதிறத்தனபோலுமேனும் அவையாகாதொருதிறத்தனவாய்க்கண்ணுருபின் பரியாயவுருபாய்வருதல்காண்க.—இனிக்

கண் கான்முதலியன இடவிகற்பங்களை யுணர்த்தின் ஒருதிறத்தவாகிய உருபாகாது பலதிறத்தவாகிய இடங்களை யுணர்த்தும்பெயராகி, கண்ணகன்ஞாலம்- கண்டநாள்- இடைச்சுரம்- தலையாயார் - தென்றிசை - என்றற்றொடக்கத்தனவாய் வருதல் காண்க.—மணியின் கண்ணொளி- என்புழிக் கண்ணென்பது பெயராயின் மணியினிடத்தொளி யென்பது பொருளாய் மூன்றுசொல்லாய் இரண்டு சந்தியாமெனக. ஏனையவு மன்ன.

இனிப் பெயர்முதலாகக்கூறிய ஏழுருபுகளுந் தமக்குரியபொருளல்லனவற்றையு முணர்த்துமெனக் கொள்வர். அவையாவன, மாடஞ்செய்யப்பட்டது- என்புழி வினைமுதலன்றிச் செயப்படுபொருளு முணர்த்திற்று.—வீட்டைவிரும்பினன்- என்புழிச் செயப்படுபொருளை யன்றி வேறுபொருளை விளக்கிற்று.—மலையொடுபொருதமால்யானை- தொடியொடு தொல்கவின் வாடியதோள்- பாலொடுதேன்கலந்தற்றே- மதியோடொக்கு முகம்- விலங்கொடு மக்களனையர்- எழுத்தொடுபுணர்ந்தசொல்- என்புழிக் கருவிகருத்தாவுடனிகழ்வதன்றி, வினையின்மை-வேறுவினை-மயக்கம்- ஒப்பு-ஒப்பலொப்பு-ஒற்றுமை- எனப் பலபொருளு முணர்த்தின.—சோற்றிற்கரிசி- கூழிற்குக்குற்றேவல் - பூவிற்குப்போனான் - உணற்கு வந்தான்- பிணிக்குமருந்து- உணற்குக்கருவிலை- என்புழிக் கொள்வோனை விட்டு, ஆதிகாரணகாரியம் - நிமித்தகாரணகாரியம் - இருவகைப்பெயர்ப்பின் வினையெச்சம் இருவகைப்பெயர்ப்பின் பெயரெச்சம் எனப் பலபொருளு முணர்த்தின.—பித்தரிற் பேதையாரில்- வேங்கடத்தின் றெற்கு- குமரியின்வடக்கு - வாணிகத்திலாயினான்- காக்கையிற்கரிது களம்பழம்- என்புழி, ஒப்பு - எல்லை- ஏது- ஒப்பின்மை- எனப்பலபொருளு முணர்த்தின.—வாளது வெட்டு - என்புழிக் குறையேயன்றி வேறுபொருளு முணர்த்திற்று.—அறிவின்கட்டிரிவு' என்புழி- இடமேயன்றி வேறுபொருளு முணர்த்திற்று எனக்கூறுவர். அவையெல்லாம் இவ்வாசிரியர் கூறியவற்றுட் சிலவருமாறும் ஏனையவற்றை இலக்கியங்களுள்ளுங் காண்க. (௪௫)

(௩௱௩) எட்டனுருபே யெய்துபெயரீற்றின் - றிரிபுகுன்றன் மிகுதலியல்பயற் - றிரிபுமாம்பொருள் படர்க்கையோரைத் - தன் முகமாகத் தானழைப்பதுவே. *

(எ-ன்) எட்டாம்வேற்றுமைய திலக்கணமுணர்த்து. (ப-ரை) எட்டன் - எட்டாம் வேற்றுமையினுடைய, உருபு - உருபுகளானவை, எய்துபெயரீற்றின்-விளியடைந்த பெயரீற்றினுடைய, திரிபு திரிதலும், குன்றல்- கெடுதலும், மிகுதல்- மிகுதலும், இயல்பு-இயல்பாதலும், அயற்றிரிபும்-ஈற்று அயலெழுத்துத்திரிதலும், ஆம்-

இடங்களினீறுகெடாதென மேலே அதிகாரத்துவிலக்கிய எகரமுமொழிந்த இருபத்தோரீற்றஃறிணைப்பெயரும் விளிக்கப்படுவனவாம். எ-று. ❁ இ உ ஊவோடென்புழிக் குற்றுகரமுற்றுகரமென உகரத்தை விதவாமையின் இரண்டுங் கொள்க. பெயரொன்பதனையிருதிணைக்கண்ணுங் கூட்டுக. விளிப்பனவென்பது வினைமுதல் வினையைச் செய்யப்படுபொருண்மே லேற்றப்பட்டது. இவ்வீற்றுப்பெயர்கள் விளிக்கப்படுமெனவே யேனையீற்றுப்பெயர்கள் விளிக்கப்படாவென்பது பெற்றாம். (௪௭)

(௩௱௫) இம்மூப்பெயர்க்கண் ணியல்புமேயு - மிகர நீட்சியு முருபாமன்னே. ❋

(எ-ன்.) மூவகைப்பெயர்க்கும் பொதுவாகிய விளியுருபு தொகுத்துணர்-ற்று. (ப-ரை) இம்மூப்பெயர்க்கண்- மூன்விளிக்கப்படுமென்ற மூவகைப்பெயர்களிடத்தும், இயல்பும் - இயல்பாதலும், ஏயும்- ஏகாரமிகுதலும், இகரநீட்சியும்-இகரம் ஈகாரமாதலும், உருபாமன்.பெரும்பாலும் விளியுருபுகளாகும், எ-று. (பொ-ரை) மேல் விளிக்கப்படுமென்ற மூவகைப்பெயர்க்கண்ணும் இயல்பாதலும் ஏகாரமிகுதலும் இகரவீறு ஈகாரவீறாய்த் திரிதலும் விளியுருபாம் பெரும்பாலும். எ-று. ❁ [வ-று.] முனிகூறாய்- வேந்துகூறாய்- ஆடூஉக்கூறாய்- விடலைகூறாய் - கோக்கூறாய் - கோன்கூறாய்- வேள்கூறாய்- யாந்தர்கூறீர்- தோன்றல்கூறாய்- சேய்கூறாய்- முனியே- வேந்தே- நம்பீ - என உயர்திணைக்கண் மூன்றுருபும் வந்தன —பிதாக்கூறாய்- ஆண்கூறாய்- பிதாவே- ஆணே- சாத்தீ - எனப் பொதுப்பெயர்க்கண் மூன்றுருபும் வந்தன.— விளக்கொடியை- புறாக்கொடியை- புல்வாய்கொடியை - விளவே- புறாவே- புல்வாயே- மந்தீ- என அஃறிணைக்கண் மூன்றுருபும் வந்தன.— பிறவு மன்ன. மன்னேயென்றமையான் இவ்வுருபுகள் சிலவற்றிற் கேலாமையும் இப்பொதுவிதியினு மேல்வருஞ் சிறப்புவிதியினும் அடங்காதுவரும் உருபுகள் சிலவுளவே லவையுங்கொள்க. (௪௮)

(௩௱௬) ஐயிறுபொதுப்பெயர்க் காயுமாவு- முருபா மல்லவற் றேயுமாகும். ❋

(எ-ன்) ஐகாரவீற்றிற் கெய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று. (ப-ரை) ஐயிறுபொதுப்பெயர்க்கு- பொதுவிதியால் இயல்பும் ஏகாரமிகுதலுமன்றி ஐகாரவீற்றுப்பொதுப்பெயர்க்கு- ஆயுமாவும்- ஐகாரம் ஆயாதலும் ஆவாதலும், அல்லவற்று - உயர்திணை அஃறிணைப்பெயர்களுக்கு, ஆயும்- அவ்விரண்டு மல்லாமல் ஐகாரம் ஆயாதலும், உருபாகும்-விளியுருபுகளாம், எ-று (பொ-ரை) ஐகாரவீற்றுப் பொதுப்பெயர்க்கு இயல்பும் ஏகார மிகுதலுமன்றி ஐகாரம் ஆயும் ஆவுமாய்த்திரிதலும் உயர்திணை அஃறிணைப்பெயர்க்

கு அவ்வுருபுகளன்றி ஐகாரம் ஆயெனத்திரிதலு முருபாம். எ-று.
❁ [வ-று.] அன்னாய்- தந்தாய்- (எ-ம்) "ஆவன்னுவல்ந்தே னை
மூந்திராய்." - (எ-ம்) விரவுப்பெயர்க்கண் இரண்டுருபும்வந்தன.
விடலாய்- டடந்தாய்- (எ-ம்) - "சிறுமீன்கவுட்கொண்ட செந்தா
விநாரரீய்."—"கொன்றுய்குருந்தே கொடிமுல்லாய்." (எ-ம்) இ
ருதிணைப்பெயர்க்கண்ணும் ஆயுருபுவந்தது. (சூ கூ)

(௩௱எ) ஒருசார்னவ்வீற் றுயர்திணைப்பெயர்க்கண் - ணளபி
றழிவய னீட்சியத்தே- டீறுபோத லவற்றோடோவுற - லீறழிந்
தோவுற லிறுதியவ்வாத - லதனோடயதிரிந் தேயுறலீறழிந் - தய
லேயாதலும் விளியுருபாகும். ❋

(எ-ன்) னகரவீற்றுயர்திணைப்பெயர்க் கெய்தியதன்மேற் சிற
ப்புவிதியுணர்- த்து. (ப-ரை) னவ்வீற்றுயர்திணைப் பெயர்க்கண்
- பொதுவிதியன்றி னகரமெய்யீற்று உயர்திணைப்பெயர்களுள்,
ஒருசாரளபு- சிலவளபெடுத்தலும், (ஒருசா) ரீறழிவு- சில ஈறுகெ
டுதலும், (ஒருசா) ரயனீட்சி - சில ஈற்றயனீளுதலும், (ஒருசா) ரீ
றுபோதல்- சில ஈற்றயனீண்டு ஈறுகெடுதலும், (ஒருசா) ர
வற்றோடோவுறல்- சில ஈறுகெட்டு ஈற்றயனீண்டு ஓகாரமிகுதலு
ம், (ஒருசா) ரீறழிந்தோவுறல் - சில ஈறுகெட்டு ஓகாரமிகுதலும்,
(ஒருசா) ரிறுதியவ்வாதல்- சில இறுதினகரமெய் யகரமெய்யாத
லும், (ஒருசா) ரதனோடயதிரிந்தேயுறல் - சில ஈற்று னகரமெய்
யகரமெய்யாய்த்திரிந்து அயலில் ஆகாரம் ஓகாரமாய் ஏகாரமிகு
தலும், (ஒருசா) ரீறழிந்தயலேயாதலும்- சில ஈறுகெட்டு அயலி
ல் அகரம் ஏகாரமாதலும், விளியுருபாகும் - விளியுருபுகளாகும்,
எ-று. (பொ- ரை) பொதுவிதியன்றி னகரவீற்று உயர்திணைப்
பெயர்களுட் சில அளபெழுதலும், சில ஈறுகெடுதலும், சில ஈ
ற்றயனீடலும், சில ஈற்றயனீண்டு ஈறுகெடுதலும், சில ஈற்றயனீ
ண்டு ஈறுகெட்டு ஓகாரமிகுதலும், சில ஈறுகெட்டு ஓகாரமிகுதலு
ம், சில இறுதினகரவொற்று யகரவொற்றாய்த்திரிதலும், சில இறு
தினகரவொற்று யகரவொற்றாய்த்திரிந்து அயலில் ஆகாரம் ஓகார
மாய் ஏகாரமிகுதலும் சிலவீறுகெட்டயலி லகரம் ஏகாரமாதலும்
விளியுருபாம். எ-று. ❁ ஒருசாரென்பதனை விளியதிகாரமனை
த்திலுங்கூட்டுக. [வ-று] அப்பாகிழாஅன்- வல்லங்கிழாஅன்- என
அளபாயின. எலுவ சிறாஅரொப் மூறுநண்ப- புலவ- தோழ- என ஈ
றழிந்தன — நம்பான் - பெருமான் - என ஈற்றயனீண்டன.— இ
றைவா-மன்ற- என அயனீண்டு ஈறுகெட்டன. ஐயாவோ - அப்பா
வோ - என ஈறுகெட்டு அயனீண்டு ஓகாரமிக்கன.—திரையவோ -
ஐயவோ- என ஈறழிந்து ஓகாரமிக்கன.—வாயிலாய்- ஆதிரையாய்-

என இறுதியவ்வாயின.—வாயிலோயே - என இறுதியவ்வொற்று யீற்றயல் ஆகாரமோகாரமா யேகாரமிக்கது.—"ஐயே யெமக்கருண்மடவை,,—"மன்றவாழியமுருகே,, என ஈறழிந்து அயலில் அகரம் எகாரமாயின. (ருஎ)

(ரு௱அ) ளஃகானுயர்பெயர்க் களபீறழிவய - னீட்சியிறுதி யவ்வொற்றாத- லயலிலகரமே யாதலும்விளித்தனு. *

(எ-ன்) ளகரவீற்றுயர்திணைப்பெயர்க் கெய்தியதன்மேற்சிறப்புவிதிபுணர்- த்து (ப-ரை) ளஃகானுயர்பெயர்க்கு - பொதுவிதியன்றி ளகரமெய்யீற்றுயர்திணைப்பெயர்களுள், (ஒருசா) ரளபு-சில அளபெடுத்தலும், (ஒருசா) ரீறழிவு- சில ஈறுகெடுதலும், (ஒருசா) ரயனீட்சி- சில ஈற்றயனீளுதலும், (ஒருசா) ரிறுதியவ்வொற்றாதல்- சில இறுதி ளவ்வொற்று யவ்வொற்றாதலும், (ஒருசா) ரயலிலகரமேயாதலும்- சில ஈற்றயல் அகரம் ஏகாரமாதலும், விளித்தனு- விளியுருபுகளாகும். எ-று. (பொ-ரை) ளகரவீற்றுயர்திணைப்பெயர்க்குப் பொதுவிதியன்றி அளபெழலும் ஈறுகெடலும் அயனீடலும் இறுதி ளகரவொற்று யகரவொற்றாதலும் ஈற்றயலகரமேகாரமாதலும் விளியுருபாம். எ-று. ❁ [வ-று] "மேவார்த்தொலைத்த விறன்மிதுவேளீ.,, என அளபாயிற்று.—"துனிகொள்ளலெல்லாதீ.,, என ஈறுகெட்டது.—நமர்காள் - எமர்காள்- என ஈற்றயனீண்டன.—குழையாய்- வாயிலாய்- என இறுதி ளகரவொற்று யகரவொற்றாயின.—"தலைமீது கொள்வமடிகேள்,, என ஈற்றயலகர மேகாரமாயிற்று.—எல்லாவென்பது தோழி முன்னிலைப்பெயரன்றோ விளிவேலாதெனை விலக்கப்பட்ட அம்முன்னிலைப்பெயரை யீண்டெடுக்காட்டிய தென்னையெனின், "முன்னிலையெல்லீர்நீயிர்நீவிர்நிர்நீயல்லனபடர்க்கை,, என வரையறுக்கப்பட்டமையிற் றோழியென்னும்பொருட்டாகிய ஏடென்னும்படர்க்கைப்பெயர் விளியேற்றமையின் ஏடாவென்பதுதோழன்முன்னிலைப்பெயரன்றும் தோழியென்னும் பொருட்டாகிய எல்லாள் ஏடியென்னும் படர்க்கைப்பெயர்கள் விளியேற்றமையின் "எல்லாவுமேடியுந்தோழிமுன்னிலைப்பெயர்,,என்றுங்கூறப்பட்டனவன்றி அவை யியல்பாய்நின்ற முன்னிலைப்பெயரல்லவென்க.()

(ரு௱அ) ரவ்வீற்றுயர்பெயர்க் களபெழவீற்றய- லகரம் இஈயாத லாண்மையா- வியாதலதன்றே டேயுறவீற்றே- மிக்கயல்யாக்கெட் டதனயனீட - லீற்றினீருற விவையுமீண்டுருபே. *

(எ-ன்) ரகாரவீற்றுயர்திணைப்பெயர்க் கெய்தியதன்மேற் சிறப்புவிதிபுணர்- த்து. (ப-ரை) ரவ்வீற்றுயர்பெயர்க்கு - (பொதுவிதியன்றி) ரகரமெய்யீற்று உயர்திணைப்பெயர்களுள், (ஒருசா) ரளபெழல்-சில அளபெடுத்தலும் (ஒருசா) ரீற்றயலகரம் இஈயாத

ல்-சில ஈற்றயல் அகரமானது இகரமாதலும் ஈகாரமாதலும், (ஒருசா) ரான்மடையாவீயாதல்- சில அவ்வீற்றயல் ஆகாரம் ஈகாரமாதலும், (ஒருசா) ரதனோடேயுறல்-சில அதனொடு ஏகாரமேற்றலும், (ஒருசா) ரீற்றுமிக்கயல்யாக்கெட் டதனயலீட்டல்- சில ஈற்றில் ஏகாரமிக்கு அயலில்யாக்கெட்டு அதனயல் இகரம் ஈகாரமாதலும், (ஒருசா) ரீற்றினீருறல்-சில ஈற்றில் ஈர் ஆதலும், இவையும்- ஆகிய இவையும், ஈண்டு- இவ்விடத்து, உருபு- விளியுருபுகளாகும், எ-று. (பொ-ரை) பொதுவிதியன்றி ரகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கு அளபெழலும் ஈற்றயலகரம் இகரமாதலும் ஈகாரமாதலும் அவ்விடத்து ஆகாரம் ஈகாரமாதலும் அதனோடு ஏகாரமேற்றலும் ஈற்றில் ஏகாரமிக்கு அயலில்யாக்கெட்டதனயலிகரம் ஈகாரமாதலும் ஈற்றினீராதலும் விளியுருபாம். எ-று. ❀ [வ-று.] சிறாஅர்- மகாஅர்- என அளபாயின.—"என்னை முன்னில்லன் மின்றெவ்விர்.," என ஈற்றயலகரம் இகரமாயிற்று.—வேந்தீர்- நாட்டீர் - என அகரம் ஈகாரமாயின.—சான்றீர்- மடவீர்- என ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாயின.—"பல்சான்றீரே பல்சான்றீரே.," கணியீரே- என ஈற்றயல ஆகாரம் ஈகாரமாய் ஏகாரமேற்றன.—நம்பீரே - தம்பீரே- தோழீரே- தொழும்பீரே- என ஈற்றில் ஏகாரமிக்கயல்யாக்கெட்டதனயல் இகரம் ஈகாரமாயின.—எமரீர்- தமரீர் - என ஈரேற்றன.—ஈண்டென்றமிகையானே, கடலாரே- கடலீரே- கழியாரே- கழியீரே-சாத்தியாரே-சாத்தியீரே-கொற்றியாரே-கொற்றியீரே-என அஃறிணைப்பெயர் விரவுப்பெயர்களைச் சிறப்பித்து ரகரவீற்றுயர்திணைப்பெயர்போலக் கூறியவழியும் இவ்வுருபேற்றல்கொள்க.()

(௩௱௰) லகாரவீற்றுயர்பெயர்க் களபயனீட்சியும்- யகாரவீற்றிற் களபுமாகுருபே. ❀

(எ-ன்) லகாரயகாரவீற்றுயர்திணைப்பெயர்க்கெய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று. (ப-ரை) லகாரவீற்றுயர்பெயர்க்கு-பொதுவிதியன்றி லகரமெய்யீற்று உயர்திணைப்பெயர்க்கு, (ஒருசா) ரளபு- சில அளபெடுத்தலும், (ஒருசா) ரயனீட்சியும்- சில ஈற்றயனீளுதலும், யகாரவீற் (றுயர்பெயர்க்கு) - யகரமெய்யீற்று உயர்திணைப்பெயர்க்கு, அளபும்- அளபெடுத்தலும், உருபாம் - விளியுருபுகளாகும், எ-று. (பொ-ரை) பொதுவிதியன்றி லகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கு அளபெழலும்ஈற்றயனீடலும்யகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கு அளபெழலு முருபாம். எ-று ❀ உயர்திணைப்பெயரென்பதனை யகாரவீற்றின்கண்ணும் உம்மையை யளபென்பதன் கண்ணுங் கூட்டுக. [வ-று.] "வலம்புரித் தடக்கை மாஅனின்னிறம்.," (எ-ம்) தோன்றால் மடவரால்-தாழ்குழால்- (எ-ம்) சேஎய்- (எ-ம்) வரும். (௩௱௰)

(௩௱௰௧) னவ்வீற்றுயர்திணை யல்விருபெயர்க்கண் - ணிறுதிய
ழியத னோடயனீட்சி. *

(எ-ன்) னகரவீற்றஃறிணைப்பெயர்க்கும் விரவுப்பெயர்க்கு மெய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று. (ப-ரை) னவ்வீற்றுயர்திணையல்விருபெயர்க்கண் - பொதுவிதியன்றி னகரமெய்யீற்று அஃறிணைப்பெயர் பொதுப்பெயர்களிடத்து, (ஒருசா) ரிறுதியழிவு சில ஈறுகெடுதலும், (ஒருசா) ரதனோடயனீட்சி - சில ஈறுகெடுதலுடனே ஈற்றயனீளுதலும் விளியுருபுகளாம், எ-று. (பொ-ரை) பொதுவிதியன்றி னகரவீற்றஃறிணைப் பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் இறுதிகெடுதலும் அதனோடு ஈற்றயனீடலும் விளியுருபாம். எ-று. ✲ இறந்ததுதழீஇய வெச்சவும்மைகளும் விளியுருபாமென்பதூஉந் தொக்குநின்றன. [வ-று.] அலவ- இகல- கலுழ- எ-ம்) அலவா- இகலா- கலுழா - (எ-ம்) சாத்த- கொற்ற (எ-ம்) சாத்தா- கொற்றா- (எ-ம்) வரும். (௩௪)

(௩௱௰௨) லளவீற்றஃறிணைப் பெயர்பொதுப்பெயர்க்கண் -
ணீற்றயனீட்சியு முருபாகும்மே. *

(எ-ன்) லகாரளகாரவீற்றஃறிணைப்பெயர்க்கும் விரவுப்பெயர்க்குமெய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று. (ப-ரை) லளவீற்றஃறிணைப்பெயர் பொதுப்பெயர்க்கண் - லகரளகரமெய்யீற்று அஃறிணைப்பெயர்க்கும் பொதுப்பெயர்க்கும், ஈற்றயனீட்சியும் -பொதுவிதியன்றி ஈற்றயலெழுத்துநீளுதலும், உருபாகும் - விளியுருபாகும், எ-று. (பொ-ரை) பொதுவிதியன்றி லகாரளகாரவீற்றஃறிணைப்பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் ஈற்றயனீடலும்விளியுருபாம் எ-று ✲ [வ-று.] "காட்டுச்சாரோடுங்குறுமுயாலே" கிளிகாள்- (எ-ம்) தூங்கால்- மக்காள்- (எ-ம்) வரும். (௩௫)

(௩௱௰௩) அண்மையினியல்புமீ றழிவுஞ்சேய்மையி - னளபும்
புலம்பி னோவுமாகும். *

(எ-ன்) மேல் விதந்தவிளியுருபுகட் காவதோர்புறனடை யுணர் - ற்று. (ப-ரை) முன்சொல்லப்பட்ட விளியுருபுகளுள், அண்மையின்- சமீபவிளிகளுக்கு, இயல்புமீறழிவும்- இயல்பாதலும் ஈறுகெடுதலும், சேய்மையின் - தூரவிளிகளுக்கு, அளபும் - அளபெடுத்தலும், புலம்பின்- புலம்பல்விளிகளுக்கு, ஓவும்- ஓகார மிகுதலும், ஆகும்- வரும், எ-று. (பொ-ரை) மேற்போந்த விளியுருபுகளுள் இயல்புகளும் ஈறழிவுகளும் அண்மைவிளிக்கண்ணும் அளபெடைகள் சேய்மை விளிக்கண்ணும் ஓகாரங்கள் புலம்பல்விளிக்கண்ணும் வரும். எ-று. ✲ எனவே ஏனைவிளியுருபுகள் அண்மை சேய்மை புலம்பென்னு மூன்றிடத்தும் விராய்வருமென்பது பெற்றாம். (௩௬)

(௲௱௰௪) நுவ்வொடுவினாச்சுட் டுற்றனளர - வைதுத்தாந்தா னின்னனவிளியா. *

(எ-ன்) இஉ ஊவோடென்னுஞ் சூத்திரத்திற் காவதோர்புற னடையுணர் - ற்று. (ப-ரை) நுவ்வொடு- நுவ்வுடனே, வினா - மூன்றுமுதல்வினாவையும், சுட்டு- மூன்றுசுட்டையும், உற்ற-முறையே பொருந்திய, னளர- னளர மெய்யீற்று உயர்திணைப்பெயர்களும், வை து- வை - து என்கிற இரண்டு ஈற்றுஅஃறிணைப்பெயர்களும், தான் - தானென்கிற பொதுப்பெயரும், இன்னன - இவை போல்கின்றபிறவும், விளியா-விளிக்கப்படுவனவல்ல. எ-று. (பொ-ரை) மேல் விளிக்கப்படுமென்றவற்றுள் நுவ்வுடனே மூன்றுமுதல்வினாவையும் மூன்றுசுட்டையும் வரன்முறையே பொருந்திய னளரவென்னு மூன்றீற்றுயர்திணைப்பெயர்களும், வை - து - என்னுமிரண்டீற்றஃறிணைப்பெயர்களும், தானென்னும் பொதுப்பெயரும் விளிக்கப்படா. எ-று. ※ இங்ஙனம்விதந்த கிளைப்பெயர் வினாப்பெயர் சுட்டுப்பெயர்களின் இடைநிற்குமெழுத்தையொழித்துமுதலெழுத்தோடுற்றதாக இறுதி னளரக்களைக்கூறாமையின் வரன்முறையென்றும் நுவ்வொடு வைது என்னுமிரண்டும்பொருந்தாவென்பார் அதனை ஒடுக்கொடுத்துப் பிரித்தார். மகரவீற்றுப்பொதுப்பெயர் முன்னமே விலக்கப்பட்டமையின் ஈண்டுத் தாமென்றது அசைநிலை. [வ-று] நுமன்- நுமள்- நுமர்- (எ-ம்) எவன்- எவள்- எவர்- எவை- எது- யாவன்-யாவள்- யாவர்- யாவை- யாது- ஏவன்- ஏவள்- ஏவர்- ஏவை- ஏது- (எ-ம்) அவன்- அவள்- அவர் அவை- அது- இவன் இவள்- இவர்- இவை- இது - உவன்- உவள்- உவர்- உவை- உது (எ-ம்) தான் (எ-ம்) வரும். இன்னென்றமையானே, பிறன்- மற்றையான்- என்றற் றொடக்கத்தனவுங் கொள்க. (௫௭)

(௲௱௰௫) முதலை யையுறிற் சினையைக்கண்ணுறு - மதுமுதற் காயிற் சினைக்கையாகும். *

(எ-ன்) முதல் சினைத்தொடர்பின்கண் இரண்டாமுருபுவரின் முதல்சினை யிரண்டன்பாலும்வாராது தடுமாறிவருதலை மரபெனப் புறனடையுணர்- ற்று. (ப-ரை) முதலை-முதலினை, ஐயுறின்- ஐயுருபுபொருந்தினால், சினையை- சினையினை, கண் - கண்ணுருபு, உறும்- பொருந்தும், அது- அதுவுருபு, முதற்கு- முதலுக்கு, ஆயின்- வரின், சினைக்கு- சினையினுக்கு, ஐ- ஐயுருபு, ஆகும்-வரும். எ-று. (பொ-ரை) முதலினை ஐயுருபுபொருந்திற் சினையினைக் கண்ணுருபுபொருந்தும் அதுவுருபு முதலுக்குவரிற் சினைக்கு ஐயுருபு வரும். எ-று. ※ "ஒருமொழிமொழிதன் னினங்கொளற்

குரித்தே.,,—என்பதனான் ஆறாவதன்பன்மை யுருபுங்கொள்க.— இனி இரட்டுறமொழித லென்னுமுத்தியான் அதுவென்பதனைச் சுட்டாக்கிக்கண்ணுருபு முதற்காயிற் சினைக் கையாகு மெனவும் பொருளுரைத்துக்கொள்க. [வ-று.] யானையைக்காலின்கண்வெட்டினான் - யானையதுகாலை வெட்டினான் - யானையினகால்களைவெட்டினான் - யானையின்கட் காலைவெட்டினான் (எ-ம்) கையினைவிரலின்கட்பிடித்தான்- கையதுவிரலைப்பிடித்தான் - கையின விரல்களைப்பிடித்தான் - கையின்கண் விரலைப்பிடித்தான் (எ-ம்) வரும்.— இங்ஙனங்கூறவே யானையைக்காலைவெட்டினான் - என இரண்டன்பாலும் ஐயுருபுவாராதென்றாராயிற்று: விரிற்செயப்படுபொருளிரண்டாய் முதல்சினைகள் ஒருபொருட்பகுதியவல்லவா மாதலின் இங்ஙனஞ் செயப்பட்டதொருபொருளே முதல்சினைகள் ஒருபொருட்பகுதியவே யென்பதுதோன்றக் கண்ணுருபும் அதுவுருபும் வருமென்பதாயிற்று. இவ்வாறன்றி ஒரோவழி முதல்சினையிரண்டன்பாலும் ஐயுருபுவரின் "யாதனுருபிற் கூறிற்றாயினும்,, என்னுஞ்சூத்திரத்தான் முதலின்பால் ஐயுருபை அதுவுருபாயேனுஞ் சினையின்பால் ஐயுருபைக் கண்ணுருபாயேனுந் திரிக்கப்படுமென்க. (௫௮)

(௩௱௰௯) முதலிவைசினையிவை யெனவேறுளவில-வுரைப்போர்குறிப்பின வற்றேபிண்டமும். *

(எ-ன்) மேல் முதல்சினையிரண்டன்பாலும் ஐயுருபுவாராதென அருத்தாபத்தியாற் கூறினார் அங்ஙனம்வாராமைக்கேதுவும் மேலைச் சூத்திரப்பொருளோடு இப்பொருளைப் பிண்டப்பொருளுக்கு மேற்பித்தலுமுணர்- ற்று. (ப-ரை) முதலிவைசினையிவையென- கடங்களிவை படங்களிவை என்கிறதுபோல முதற்பொருள்களிவை சினைப்பொருள்களிவை என்கிறதற்கு, வேறுளவில - இரண்டாகவேறுள்ளனவிலவாம், உரைப்போர்-ஒருபொருளையே யிரண்டாகப் பகுத்துச்சொல்லுவோரது, குறிப்பின- குறிப்பின்மாத்திரையனவேயாம், பிண்டமும்- பிண்டப்பொருளும், அற்று- அத்தன்மைத்தாம். எ-று. (பொ-ரை) கடங்களிவை படங்களிவையென்றாற்போல முதற்பொருள்களிவை சினைப்பொருள்களிவையென இரண்டாகவேறுள்ளனவிலவாம் ஒருபொருளையே யிரண்டாகப் பகுத்துக்கூறுவார் குறிப்பின் மாத்திரையவேயாம் பிண்டப்பொருளும் அத்தன்மைத்தாம். எ-று. ※ யானையைக்குறித்தவழி யானையுண்டாய்க் கால் கை கோடு முதலியனவேறில்லையாய்க் கால் கை கோடு முதலியவற்றைக்குறித்தவழி அவையுண்டாய் யானை வேறில்லையாய்நிற்கும் ஒருபொருட் பகுதியவாதலின் இவ்வாறுகூறப்பட்டன. வேறுளவிலவென்றமையான், யானையைக் காலைவெட்

டினுன் - என ஐயுருபு முதல்சினையிரண்டன்பாலும்வாராமைக்கு
எதுக்கூறிற்றாயிற்று. இனி ஒருபொருட்கண்முதலைக்கருதிச், சி
னையெனவும், சினையைக்கருதி முதலெனவும், கூறுதல்போலப்பி
ண்டித்தபொருள்களைக்கருதியல்லது; பிண்டமெனல் கூடாமை
யிற் பிண்டமு மற்றேயென்றதுணையானே, பிண்டித்தபொருள்
களு மனையவேயென்பதுதாமே போதருமென்க. அவை வருமா
று, நெல்லைப்பொலியின்கண்வாரினுன் - நெல்லினதுபொலியை
வாரினுன்- என வரும்.—நெல்லைப்பொலியைவாரினுன்- என இர
ண்டன்பாலும் ஐயுருபுவாரா இப்பிண்டப்பொருளாகிய பொலிக்
குப்பையும் பிண்டித்தபொருளாகிய நெல்லும் முதல்சினையின
யவாய் வேறுளவிலவா மாதலினென்க. இச்சூத்திரத்திற்கு, இவ்வா
றன்றி, யானையதுகோடு - கோட்டதுநுனி- என ஒன்றற்குச் சினை
மற்றொன்றற்கு முதலாயும் ஒன்றற்குமுதன் மற்றொன்றற்குச்சி
னையாயும் நியதியின்றி வருதலின் இவையேமுதல் இவையேசினை
யெனவேறறியக்கிடப்பனவில்லையவைசொல்லுவோர்குறிப்பினுன்
ஆங்காங்குமுதல் சினையென வுணரப்படுவனவாம், நெல்லினது
குப்பை- குப்பையினதுநெல்- எனப் பிண்டப்பொருளும் அத்
தன்மைத்தாய்க் கிழமையாய் நின்றது கிழமைத்தாயுங் கிழமைத்
தாய்நின்றது கிழமையாயும் நியதியின்றிச் சொல்லுவோர்குறிப்
பினுனறியவருமெனப் பொருள்கூறுவாருமுளர். இப்பொருண்
முதல் சினையிரண்டன்பாலும் ஐயுருபுவாராமைக்கேதுவாகாமை
யானும் இவ்வாறுமுதலுஞ்சினையும்வருதல் வெளிப்படையாதலி
ன் இவற்றை யுரைப்போர்குறிப்பினவெனக் கூறவேண்டாமையா
னும் ஆசிரியர் தொல்காப்பியரும் முதல்சினைகளொருபொருட்
பகுதிய வென்பதுதோன்ற—"முதலுஞ்சினையும் பொருள்வேறு
படா."—என்றமையானும் இப்பொருளு மிதனோடு மாட்டெறி
த்தபொருளும் பொருந்தாதென்க. (௩௬)

(௩௱௫௰) யாதனுருபிற் கூறிற்றாயினும்- பொருள்சென் மரு
ங்கின் வேற்றுமைசாரும். *

(எ-ன்) வேற்றுமையுருபுகண்மயங்கி ஒன்றுதிற்குநிலைக்களத்து
மற்றொன்றுவரினு மமையுமெனப் புறனடையுணர் - ற்று. (பட-
ை) யாதனுருபின் - மற்றொருவேற்றுமையுருபால், கூறிற்றாயி
னும்- ஒருவேற்றுமைப்பொருள் சொல்லப்பட்டதாயினும், பொ
ருள்சென்மருங்கின் - அப்பொருள்சென்றவழியே, வேற்றுமை -
அவ்வுருபு, சாரும்- சேரும், எ-று. (பொ-ரை) ஒருவேற்றுமைப்
பொருண் மற்றொருவேற்றுமையுருபாற் கூறப்பட்ட தாயினும்
அவ்வுருபு மயங்கிவந்தவழியின் அவ்வுருபுசென்றவழியே பொரு
ள்சாராது பொருள்சென்றவழியே அவ்வுருபு சாரும், எ-று.

எனவே அங்ஙன மயங்கிவந்த வுருபைப் பொருளுக்கியைந்த உருபாகத் திரித்துப் பொருள்கொள்க வென்பதாயிற்று. [வ-று.] "நாகுவேயொடு நக்குவீங்குதோள்." என்புழி நாகுவே யுடனிகழ்ச்சிப்பொருளாகா துமெய்ப்படுபொருளாய் நிற்றலி னொடு உருபை ஐயுருபாகத் திரித்துக் கொள்க.— "கிளையரி நாணற் கிழங்கு மணற்கீன்ற- முளையோரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்." என்புழி மணலேற்றுக்கோடற்பொருளாகா திடப்பொருளாய் நிற்றலிற் குவ்வுருபைக்கண்ணுருபாகத் திரித்துக்கொள்க. பிறவுமன்ன. வேற்றுமையுருபு மயங்கிவரிற் பொருளுக்கேற்கத் திரித்துக்கொள்ளவேண்டு மென்பதாயிற்று. *

இனி இவ்வாறு மாறுபட நிற்றலன்றி, உரையிற்கோடலென்பதனால்— "தம்மாறுருபுக டாஞ்சிலவுள." எனவும் ஒருபொருட்கேதத்தமுருபுகள்போல வேறுருபுகள் வருவனவுளவெனவுங்கொள்க. "தம்மாறுருபுகடாஞ்சிலவுள" ஆதற்குதாரணம்.— "அவ்வித்தழுக்கா றுடையானைச் செய்யவ— டவ்வையைக் காட்டி விடும்." எனவரும். இதனுள் ஐயுங்குவ்வுந்தடுமாறி வருமாறுகாண்க. ஒருபொருட்கேதத்தமுருபுகள்போல வேறுருபுகள்வருவன வினைமுதன்முதலாக முறையே யுரைக்கின்றாம்.— "ஒன்றுமூன்றுநான் காறெனுமுருபொடு - வருமேவினைமுத லெனவகுத்தனரே."— [உ-ம்.] அவர்செய்தார்- அவராற்செய்யத்தகுமக்காரியம்- அவர்க்குச்செய்யத்தகுமக்காரியம்- அவரதுவரவு- எனமுறையே காண்க. "எல்லாவுருபொடுஞ் செயப்படுபொருளெழும்." [உ-ம்.] சோறடப்பட்டது- சோற்றையட்டான்- அரிசியாற்சோறாக்கினான் - அவட்குக்கொள்ளுமிவ்வணிகலம்- பழியினஞ்சும்- நூலதுகுற்றங் கூறினான்- தூணின்கட்சார்ந்தான்- எனமுறையேகாண்க.— "ஒன்றுமூன்றுநான் கைந்தாறுருபொடு-கருவிவருமெனக் கருதினர்பெரியோர்." [உ-ம்.] கண்காணும்-கண்ணாற்காண்பன்- கண்ணிற்குக் காணலாம்- கண்ணிற்காணலாம்- கண்ணினதுகாட்சி- எனமுறையே காண்க. "எல்லாவுருபொடுங் கொள்வோனெழுமே." [உ-ம்.] "இரப்பவ னென்பெறினுங் கொள்வர்."— "செய்யவ டவ்வையைக் காட்டிவிடும்." நாகராற்பலி- நாகர்க்குப்பலி - நாகரினன்புசெய்தான் - நாகரதுபலி- நாகர்கணன்புசெய்தான்-எனமுறையேகாண்க. "இரண்டொநான்கைந்தொடு மெழுமேநீக்கம்." [உ-ம்.] மதுரையை நீங்கினான்- மதுரைக்கு வடக்குச்சிதம்பரம்- மதுரையின்வடக்குச்சிதம்பரம்-எனமுறையேகாண்க.— "நான்கைந்தாறொடுகுறை நடக்கும்." [உ-ம்.] சாத்தனுக்குமகன்- மரத்தினீங்கிளைகொம்பு- சாத்தனதுகை- உயிரின்கணுணர்வு- எனமுறையேகாண்க.— "ஒன்றிரண்டு நான் கேழொ டிடமெழும்." [உ-ம்.] தூண்போதிகை

தொட்டது- தூணைச்சார்ந்தான்- இன்றைக்கு- நாளைக்கு- பகலைக்கு- அந்திக்கு- சந்திக்கு- மாலைக்கு- காலைக்கு- ஊர்க்கு- வீட்டிற்கு வருவான்- தூணின்கட்சார்ந்தான்-என முறையே காண்க. (௬௰)

(௩௱௰௮). ஐயான்குச்செய்யுட் கவ்வுமாகு - மாகாவஃறிணைக் கானல்லாதன. *

(எ-ன்) சில வேற்றுமையுருபு செய்யுட்கட் டிரிந்துவரினும் அமையுமெனப் புறனடையுணர்- ற்று. (ப-ரை) ஐயான்கு- ஐயும் ஆனும் குவ்வும் ஆகியமூன்றுருபுகளும், செய்யுட்கு - செய்யுளிடத்து, அவ்வுமாகும்- ஒரோவழி அகரமாகத்திரிந்துவரவும்பெறும், அஃறிணைக்கு- அஃறிணையிடத்து, ஆனல்லாதன- ஆனல்லாத ஐயுங் குவ்வும், ஆகா- அகரமாகத் திரியாவாம், எ-று. (பொ-ரை) ஐ ஆன் கு என்னுமூன்றுருபுஞ் செய்யுளகத்து ஒரோவழி அகரமாகத் திரிந்துவரவும்பெறும் அஃறிணைக்கண்ணெனின் ஆனொன்றுமே திரியும் ஐயுங் குவ்வுந் திரியா. எ-று. ஆகாவஃறிணைக்கு ஆனல்லாதனவெனவே உயர்திணைக்கண் மூன்றுருபுந் திரியுமென்பது பெற்றாம். [வ-று.] "காவலோனைக் களிறஞ்சும்மே" என்பது "காவலோனக் களிறஞ்சும்மே" என்றும், "புலவரான்" என்பது "புலவரான" என்றும், "கடிநிலையின்றே யாசிரியற்கு" என்பது "கடிநிலையின்றே யாசிரியற்க" என்றும், உயர்திணைக்கண் மூன்றுருபுந் திரிந்தன. "புள்ளினான்" என்பது "புள்ளினான" என ஆனுருபொன்றும் அஃறிணைக்கட் டிரிந்தது. அவ்வுமாமென்னும் இழிவுசிறப்பும்மையான் இங்ஙனந்திரிதலொருதலையன்றென்க. அகரமாகத்திரியுமென்றமையின் ஆனுங் குவ்வுந்திரிந்துழி அவற்றின்முன்னின்ற ஆனுங் குவ்வுஞ் சாரியையென்பது பெற்றாம். அல்லது அவ்வுமாகுமென்பதனை இரட்டுறமொழிதலாக்கி ஐயுருபு அகரமாய்த்திரியவும்பெறும் ஆனுருபுங் குவ்வுருபும் அகரத்தின்கண்ணுறவும் பெறுமெனப் பொருள்கோடலுமொன்று ()

(௩௱௰௯) எல்லையின்னு மதுவும்பெயர்கொளு - மல்லவினைகொளு நான்கேழிருமையும் - புல்லும்பெருப்பாலு மென்மனார்புலவர். *

(எ-ன்) எழுவாய்முதலிய எட்டுவேற்றுமைக்கு முடிக்குஞ்சொல்லுணர்- ற்று. (ப-ரை) எல்லையின்னும்- எல்லைப்பொருட்டாகிய ஐந்தாம்வேற்றுமையும், அதுவும்- ஆறாம்வேற்றுமையும், பெயர்- பெயரை, கொளும்- கொண்டுமுடியும், அல்ல- ஒழிந்த எழுவாய்முதலிய வேற்றுமைகளெல்லாம், வினை- வினையை, கொளும்- கொண்டுமுடியும், நான்கேழ்- நான்காம்வேற்றுமையும் ஏழாம்வேற்றுமையும், இருமையும்- வினையையேயன்றிப் பெயரையும், புல்

லும்- கொண்டுமுடியும், பெரும்பாலும்- மிகவும், என்மனார் - என்றுசொல்லுவர், புலவர்- புலவர். எ-று. (பொ-ரை) "நீங்கலொப்பெல்லை யேதுப்பொருளே." என்னும் நான்குபொருள்களுள் எல்லைப்பொருட்டாகிய ஐந்தாம் வேற்றுமையும் ஆறாம்வேற்றுமையும் பெயரைக்கொண்டு முடியும் ஒழிந்த எழுவாய்முதலிய வேற்றுமைகளெல்லாம் வினையைக் கொண்டுமுடியும் அவற்றுள் நான்காம்வேற்றுமையும் ஏழாம்வேற்றுமையும் வினையினையேயன்றி வினையொடுபொருந்தும் பெயரையுங்கொண்டுமுடியும் பெரும்பாலுமென்று சொல்லுவர் புலவர். எ-று. ❋ நான்கேழ்பெயரும் புல்லுமென்றது இருமையும்புல்லுமென்றமையான் வினையொடு பொருந்தும் பெயரென்றாம். பெரும்பாலுமென்றமையானே, வினைகொளற்குரியன சிறுபான்மை தொழிற்பெயர் கோடலும் வினையாலணையும்பெயர் கோடலும் அவற்றுள் எழுவாய்வேற்றுமை வினைகொண்டுமுடிதலேயன்றிச் சிறுபான்மை பெயரையும் வினாவையுங்கொண்டு முடிதலுங் கொள்க. [வ-று.] கருவூரின்கிழக்கு- சாத்தனதுகை- என எல்லையின்னுமதுவும்பெயர்கொண்டன.—சாத்தன்வந்தான் - சாத்தனல்லன் - குடத்தைவனைந்தான்- குடத்தையுடையான்- வாளால்வெட்டினான்- வாளால்வலியன்- சாத்தனுக்குக்கொடுத்தான் - சாத்தனுக்குநல்லன்- நோயினீங்கினான்- நோயிற்கொடியன்- அவையின்கண்ணிருந்தான் - அவையின்கட்பெரியன்- கொற்றாகொள்- கொற்றாவலியை - என அல்லன வினைகொண்டன.—பிணிக்குமருந்து - மணியின்கணொளி - என நான்காம்வேற்றுமையும் ஏழாம்வேற்றுமையும் வினையேயன்றிப்பெயருங்கொண்டன. இப்பெயர்கள் எல்லையின்னுமதுவுங்கொள்ளும் பெயர்கள்போலாது, பிணிக்குக்கொடுக்குமருந்து- மணியின்கண்ணிருக்குமொளி- என வினைவேண்டிநிற்றலின் வினையொடுபொருந்தும் பெயர்களாயின. இங்ஙனமாதலின் இவற்றிற்கும் வினைப்பயனிலையொன்றுமே சிறந்ததென்பதூஉம் இதுகருதி யல்ல வினைகொளுமென முடித்தோதினாரென்பதூஉம் பெறும். வினைகொளுமெனப் பொதுப்படக்கூறினமையிற் காட்டாதொழிந்த வினைவிகற்பங்களெல்லாம் வருவித்து முடித்துக் காண்க —சாத்தன்வருதல்- சாத்தன்வந்தவன் - குடத்தைவனைதல்- குடத்தைவனைந்தவன் - எனச்சிறுபான்மை தொழிற்பெயரும் வினையாலணையும்பெயருங் கொண்டன. பிறவுமன்ன. இங்ஙனம் காட்டாதொழிந்த உருபுகளோடு மிவ்வாறேயொட்டுக.—சாத்தனவன்- சாத்தன்யாவன் - சாத்தன்யார் - எனப் பெயரேயாகிய எழுவாய்வேற்றுமை சிறுபான்மை சுட்டுப்பெயரும் வினாப்பெயரும் வினாவினைக்குறிப்புங் கொண்டது. இங்ஙனம் சாத்தனென்பான்

பிறனொருவனாற் சுட்டவும் வினவவும்பட்டு நிற்றன்மாத்திரையே யன்றி இவனித்தொழி லியற்றினனெனவீராமையின் இவ்வெழுவாய்வேற்றுமை வினைகொண்டு முடிதலே சிறந்ததென்பார் ஏனையுருபுகளோடு சேர்த்துப் பொதுப்பட வல்லவினைகொளுமென வழாயுரைத்துஞ் சுட்டவும் வினவவும்பட்டுநிற்றலிற் பெயரும் வினாவுங்கொண்டுமுடிதலைப் பெரும்பாலுமென்பதனாற் றழுவவுங் கூறினாரென்க. (௬௨)

பெயரியல்

முற்றிற்று.

---

௨

இரண்டாவது

# வினையியல்.

(௩௱உ௩.) செய்பவன்கருவி நிலஞ்செயல்காலஞ் - செய்பொருளாறுந் தருவதுவினையே. *

(ள்-ன்) பெயர்வினையென இரண்டாகுமென நிறுத்தமுறையானே வினைச்சொல்லிலக்கண முணர்த்துவான்றொடங்கி அவற்றுள் தெரிநிலைவினைச்சொல்லின் பொதுவிலக்கண முணர்- று. வருஞ்சூத்திரத்தான் வினைக்குறிப்பென்றமையின் இது தெரிநிலையென்பது பெற்றாம். (ப-ரை.) செய்பவன்- கருத்தாவும், கருவி- காரணமும், நிலம்- இடமும், செயல்- செயலும், காலம்- காலமும், செய்பொருள்- செயப்படுபொருளும் ஆகிய, ஆறும்-அறுவகைப்பொருளையும், தருவது- கொடுப்பது, வினை- தெரிநிலை வினைச்சொல்லாம், எ-று. (பொ-ரை) கருத்தாவுங் கருவியும் இடமும் செயலும் காலமும் செயப்படுபொருளுமாகிய அறுவகைப் பொருளையுந் தருவது தெரிநிலை வினைச்சொல்லாம். எ-று. ❁ வினையென்றது ஆகுபெயர். நடவாமுதலியவெல்லாந் தழுவுதற்குச் செய்யென்றார். செய்பவனென ஒருபான்மேல்வைத்தோதினு

ரேனும்,—"ஒருமொழியொழிதன் னினங்கொளற் குரித்தே.,,— என்பதனான் ஐம்பாலுங்கொள்க செய்பவனென்றுங் கருவியென்றும் பொதுப்படக்கூறினமையின் இயற்றுதற்கருத்தா ஏவற்கருத்தா என்னு மிரண்டனையும் முதற்காரணந் துணைக்காரணமென்னு மிரண்டனையுங் கொள்க. செய்பவனென்பது - செய்பவனாகியபொருளொன்றும் பயத்ததாய்நிற்றலின் ஆறுமென்னும் அஃறிணைத்தொகைச்சொல்லோடு முடிந்தது. அன்றித் திணைவிரவி அஃறிணைமுடிபின்வாயின வெனினு மமையும். [உம்.] வனைந்தான்- என்புழிக் குலாலனாகிய இயற்றுதற்கருத்தாவும், மண்ணாகிய முதற்காரணமும் தண்டசக்கரமுதலிய துணைக்காரணங்களும் வனையுமிடமும் வனைதற்செயலும் இறந்தகாலமும் குடமுதலியசெயப்படுபொருளுந் தோன்றுதல்காண்க.—அரசனாலயஞ்செய்தான்-என்பது ஏவற்கருத்தா.—இஃதியற்றினான்றொழிற் கேவினனைக் கருத்தாவாக்கிக் கூறுதலின் ஏவற்கருத்தா வெனப்படும்: அரசனாலயஞ் செய்வித்தான்- என்பது ஏவற்கருத்தாவென்பாருமுளர். செய்தற்றொழிலைத் தச்சனியற்றினாற்போலச் செய்வித்தற்றொழிலை அரசனியற்றுதலின் இத்தொழிற்கு அரசனும் இயற்றுதற்கருத்தாவேயாமென்க. "முற்றும்மையொரோவழி யெச்சமுமாகும்,,—என்பதனான் ஆறுந்தருவது வினையென்பதற்கு இத்தொகையிற் சிலகுறைந்துவரவும் பெறுமெனப் பொருளுரைத்துக்கொள்க.—அவை வருமாறு, கொடியாடிற்று - கொடிதுஞ்சம்- என்புழி முன்னையது செயப்படுபொருளும், பின்னையதுஞ்செயப்படுபொருளோடு கருவியுங்குறைந்துவந்தன.— கொடிதுஞ்சமென்பதற்குக் காற்றினது பாவத்தைக் கருவியாகக்கூறினு மமையும்.—இன்னும் ஆறுமென்னு முற்றும்மையை உயர்வுசிறப்பும்மையாக்கி இழிந்தன சிலவுள அவையும்வேண்டுமேற் கொள்கவெனப்பொருளுரைத்துக்கொள்க.—அவையாவையெனின் இன்னதற்கெனவும் இதுபயனெனவும் வருவனவாம்.—குடத்தைத்தனக்கு வனைந்தான்- பிறர்க்குவனைந்தான் - என்னும் இன்னதற்கென்பதூஉம் அறன்முதலியபயன்கருதி வனைந்தானென்னும் இதுபயனென்பதூஉம் ஏதுவின்பாற்படுத்துக் கருவியுளடங்கவும் பெறாஉமாதலின் இழிந்தனவாயின. இப்பொருளை—"முற்றும்மையொரோவழி யெச்சமுமாகும்,,—என்பதன்பாற்படுத்து ஆறுந்தருவதுவினையே யெட்டுந்தருவதுவினையேயென வமையாதோவெனின் இவ்விரண்டுடன் எட்டாய்வருவதன்றி ஆறேவருவதோர்வினையின்மையினமையாதென்க.—முற்றுவினைகளுட் பகுதியாற் செயலும் விகுதியாற்கருத்தாவும் இடைநிலைமுதலியவற்றாற் காலமும் பெயரெச்ச வினையெச்சங்களின் இம்முறையே செயலுங்கால

முந் தோன்றின.—அங்ஙனமாதலின் முற்றுச்சொல்லான் மூன்றும் எச்சச்சொல்லான் இரண்டுமென்பது ஆறுந்தருவது வினைச்சொல்லென்றதென்னையெனின், இவ்வாறுங்காரணமாகக் கூடுங்கூட்டத்து இவற்றுட்செயலென்னு முதற்காரணத்தினின்றும் ஓர்வினையாகியகாரியநிகழுமாதலின் இவ்வாறுகாரணத்தையுந் தருங்காரியமாகிய வினையின்மேலே ஒற்றுமைநயங்கருதி அதன் சொன்மே லேற்றப்பட்டது.—காரணத்தைக் காரியந்தரு மென்பது—“புகை தன்னுதியான வனல்காட்டு மென்றாற்போலும். இங்ஙனமாகவே செய்பவன்முதலிய ஆறனுண் முதற்கண் மூன்றும் எச்சத்தின்கணிரண்டும் வெளிப்படையாயும் ஏனைய குறிப்பாயுந் தோன்றுமென்பதாயிற்று. இவ்வாறுங் காரணமாகவே இவற்றுட் செயலென்றது காரியமாகிய வினையடியை யன்றெனவுணர்க.—“காலமறிதொழில் கருத்தனோடியையப் - பால்வகைதோறும் படுமொழிவேறே.” என ஆசிரியர் அவிநயனூர் கூறியவாறும்.—“வினையெனப்படுவது வேற்றுமைகொள்ளாது - நினையுங்காலைக் காலமொடு தோன்றும்.” என ஆசிரியர் தொல்காப்பியனூர் கூறியவாறுங் காண்க. (க)

(௩௱௨௧) பொருண்முதலாறினுந் தோற்றிமுன்னாறனுள் - வினைமுதன்மாத்திரை விளக்கல்வினைக்குறிப்பே. *

(எ-ன்) குறிப்புவினைச்சொல்லினது பொதுவிலக்கணமுணர்த்-ற்று. (ப-ரை) பொருண்முதலாறினும்- பொருளாதி யாறுங்காரணமாக, தோற்றி- அவற்றினிடத்தே பிறந்து, முன்னாறனுள்- முன்சொல்லப்பட்ட செய்பவன்முதலாகிய ஆறனுள், வினைமுதன்மாத்திரை- கருத்தாவொன்றையே, விளக்கல்- விளக்குதல், வினைக்குறிப்பு- வினைக்குறிப்புச்சொல்லி னிலக்கணமாம், எ-று. (பொ-ரை) பொருளாதியாறும் அடியாக அவற்றின்கட்டோன்றி மேற் கருத்தாமுதலாகச்சொன்ன ஆறனுட் கருத்தாவொன்றையுமே விளக்குதல் வினைக்குறிப்புச்சொல்லினது இலக்கணமாம், எ-று. ※ மேலே அதிகாரத்துப்பகுபதவுறுப்புக் கூறியவழித் தெரிநிலைவினைக்கு வினையடிகள்விளங்கிக் கிடந்தமைபோலக் குறிப்புவினையடி அங்ஙனம்வகைப்பட விளங்காமையின் ஈண்டுவிளங்கப் பொருண்முதலாறினுந்தோற்றியென்றும் தெரிநிலைவினைபோல இக்குறிப்புவினைக்கண்ணுஞ் செய்பவன்முதலியவாறுமுளவென்பார் முன்னாறனுளென்றும் அவற்றுட் செய்பவனை இச்சொல்லினது விகுதிவிளக்கு மற்றுள்ளனவற்று ளொன்றேனும்விளக்குதற்குரிய வுறுப்பு இதனகத்தின்றென்பார் வினைமுதன்மாத்திரையென்றும் இது குறிப்புவினையாதலின் இதற்குக்கருத்தாவாக விகுதிப்பொரு

ளைக்கோடலுங்குறிப்பாமென்பார் தருதலென்றொழிது விளக்கலென்றுங்கூறினார். [வ-று.] குழையினன்- குழையினள்- குழையினர்- குழையிற்று- குழையின- குழையினென்- குழையினெம்- குழையினை- குழையினீர்- (எ-ம்) அகத்தினன்- புறத்தினன்- (எ-ம்) ஆதிரையான்- ஓணத்தான் - (எ-ம்) குறுந்தாளன் - செங்கண்ணன் - (எ-ம்) கரியன்-நெடியன்-நல்லன்- உண்மையன்- உடையன்- (எ-ம்) கடுநடையன்- இன்சொல்லன்- (எ-ம்) "மதிபாய்சடை முடித்து மாசுணப்பைம்பூட்டுச் சதிபாய் குறுந்தாட்டுத் தான- நதிபா-யிருகவுட்டுமுக்கட்டு நால்வாய்த்தென்னுளா- முருகவிட்டு நின்ற வொளி" (எ-ம்) வரும். பிறவுமன்ன. இவை பொருணியாயன் ஒருபொருளை வழங்குதற்கு வரும் பெயராய்நில்லாது இவன்குழையையுடையனாயினன்- என ஆறாம்வேற்றுமையினது உடைமைப்பொருட்கண்ணும், அகத்தின்கண்ணிருந்தனன் - புறத்தின்கண்ணிருந்தனன்-என ஏழாம்வேற்றுமையது நிலப்பொருட்கண்ணும், ஆதிரைநாளிற்பிறந்தான்- ஓணநாளிலுதித்தான்- என அவ்வேழாம்வேற்றுமையது காலப்பொருட்கண்ணும், குறுந்தாளையுடையான்- செங்கண்ணையுடையான்- என ஆறாம்வேற்றுமையது உடைமைப்பொருட் கண்ணும், கருவண்ணமாயிருப்பன்- நெடுவடிவமாயிருப்பன் - நற்குணமாயிருப்பன் - உண்மைத்தன்மையன்- உடைப்பொருள்சிறந்தான் -எனப்பண்பின்கண்ணும், கடுநடைநடப்பான்- இன்சொல்லாகச்சொல்லுவான்- எனத் தொழிற்பண்பின்கண்ணும் வருதலின் வினைக்குறிப்புச்சொல்லாயின. இவை முன்புவினைக்குறிப்பாய்ப் பின்பு பொருள்களை வழங்குதற்குவரும்பெயராய்வரின் அவை குறிப்புவினையாலணையும் பெயராம். இவை தம்முள் வேற்றுமையென்க. இவற்றுட்குணமடியாகத்தோன்றிய வினைக்குறிப்புச்சொற்கள் குணவிகற்பம் பலவாதலிற் பலவிகற்பப்பட்டுவரும். அவைபாவன, பொன்னன்னன் - புலிபோல்வன் - என ஒப்புணர்த்தியும், —"ஒப்பொருவு மல்லனிறைவன்."—"பொய்யர்நெஞ்சிற் புனிதனிலன்."—"எவ்வுயிர்க்கண்ணு மிறைவனுளன்." மெய்வலியன்- எனப்பண்புணர்த்தியும், ஆவுண்டு- என உண்மையுணர்த்தியும், அவைதாமிவையல்ல- "மாற்றருந்துப்பின் மாற்றோர்பாசறையிலன்."—"மாற்றருந்துப் பின்மாற்றோர்பாசறையுளன்." சொலல்வல்லன்-எனக்குறிப்புணர்த்தியும், குழையிலன்- கச்சிலன்- என உடைமைக்கு மறையாயும்வருவனவாம். ஒப்பாவது - வினைபயன்மெய்யுரு வென்பனவற்றுளொன்றனையொன்றொத்தல். பண்பாவதொருபொருடோன்றுங்காலத்துடன்றோன்றி யதுகெடுந்துணையு நிற்பது. உண்மையாவதொருபொருட்குக் கேடுபிறந்தாலும் தனக்குக்கேடின்றித்தான்

ஒன்றேயாய்ப் பலவகைப்பட்ட பொருள்தோறு நிற்பது. குறிப்பாவது பொருட்குறிப்பின்றேன்றிச் சிறிதுபொழுது நிகழ்வது.—இவையெல்லாம் தொல்காப்பியக்கடலிற் றோன்றவிளங்கும் இந்நூல்களு நுங்கிய நூலாதலின் இன்றியமையாதனவற்றைச் சிலவிடங்களில் விரித்தெழுதுகின்றனவுமுள அவையாராய்ந்தறிந்துகொள்க. குழையினன் - என்புழிக் குழையையுடையானே வினைமுதல்; இரு விகுதியான் விளங்கிற்று —குடத்தின்கண் மண்போல இவ்வினையாகிய காரியத்தின்கண் முதற்காரணமாகிய செயலுண்டெனவும், காலமின்மேற் இருவினையுமன்றுமாதலானும் முக்காலங்களுமென்றன்பாற் சார்தற்குரிய இடைநிலையிதற்கு வேண்டாமையானும் முக்காலமுமுண்டெனவும், வினைமுதற்கோர் ஆதாரம்வேண்டுதலின் இடனுண்டெனவும், ஒன்றைவனைந்தான் - ஒன்றால்வனைந்தான் - என்றாற்போல இரண்டாவதற்கும் மூன்றாவதற்கும் இது பயனிலையாக, ஒன்றைக்குழையினன் - ஒன்றாற்குழையினன் - என இயையாமையின் இதன்கட் செயப்படுபொருளுங் கருவியுமிலவெனவு முய்த்துணர்க — ஒன்றாற்குழையினன் - என ஓராவழி இயையின் அங்ஙனங் கருவியுளதென்றுகொள்க. உடையனென்னுங்குறிப்புவினை, ஒன்றையுடையன் - ஒன்றினுடையன் - என வருதலின் இதன்கண்ணுறுமுண்டென்க. இவ்வாறே தெரிநிலைவினைபோலக், குறிப்புவினை பிறவற்றுள்ளுஞ் செய்பவன்முதலிய ஆறும்வருதலுஞ் சிலகுன்றிவருதலு முய்த்துணர்க. வினை தெரிநிலைகுறிப்பென இருகூற்றதாமென இவ்விருசூத்திரத்தானுங் கூறினார். இவற்றுள் தெரிநிலையின்பாற்படுஞ் செய்யானென்றற்றொடக்கத்து எதிர்மறைக்கண்ணுங் குறிப்பின்பாற்படுமில்லென்றற்றொடக்கத்து எதிர்மறைக்கண்ணும் வினையில்லையாம்: அங்ஙனமாகவுமிவற்றை வினையென்பதூஉம் இவை செய்பவன்முதலிய ஆறுந்தருமென்பதூஉ மென்னையெனின், இவற்றை வினையென்பது, முயற்கோடு - ஆகாயப்பூ - என்றாற்போல இன்மையை யுண்மைபோலவைத்துக் கூறுவதோரிலக்கணை. இவை செய்பவன்முதலிய வாறுந்தருமென்பது, சீதமின்மை பனியின்மைய காட்டல்போல் வினையின்மை செய்பவன்முதலியவற்றின் இன்மைகளைக்காட்டி நிற்றலையாம். (௨)

(௩௱௨௨) அவைதாம்,—முற்றும்பெயர்வினை யெச்சமுமா கி-யொன்றற்குரியவும் பொதுவுமாகும். *

(எ-ன்) மேற் றெரிநிலைகுறிப்பெனத் தொகுத் துணர்த்திய வினைச்சொற்களை வகுத்துணர்-ற்று. (ப-ரை) அவைதாம் - மேன்னிரண்டு சூத்திரங்களாலுந் தெரிநிலையாயுங் குறிப்பாயும் வருமென்றவினைச்சொற்கள், முற்றும்- முற்றுவினைச்சொற்களும், பெய

(ரெச்சமும்) - பெயரெச்சவினைச்சொற்களும், வினையெச்சமும் - வினையெச்சவினைச்சொற்களும், ஆகி - ஆக, ஒன்றற்குரியவும் - திணைபாலிடங்களுள் ஒன்றற்குச்சிறப்பாய் வருவனவும், பொதுவும் - பலவற்றிற்குப்பொதுமையினிற்பனவும், ஆகும் - ஆகும், எ-று.

(பொ-ரை) மேல் இரண்டு சூத்திரத்தானுங்கூறிய தெரிநிலையாயுங் குறிப்பாயும்வரும் வினைச்சொற்கடாமுற்றுவினைச்சொற்களும்பெயரெச்சவினைச்சொற்களும் வினையெச்சவினைச்சொற்களுமாகித் திணைபாலிடங்களின் ஒன்றற்குரியனவும் பொதுவாய் நிற்பனவுமாகும். எ-று. ※ திணைபாலிடங்களினென்பது இசையெச்சம். முக்காலங்களின் ஒன்றற்குரியவும் பொதுவுமாமாறு பதவியலுட் போந்தமையின் அஃதொழித்துத் திணைபாலிடங்களினென்றும். உதாரணந் தத்தஞ் சிறப்புச்சூத்திரங்களானுணர்க. இனி — "ஒருமொழியொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனான் இங்ஙனந் திணைபாலிடப்பொருது இவை நீண்டியொன்றற் குரியவும்பொதுவுமாய்நிற்பனவன்றிப் பிறவாற்றான் ஒன்றற் குரியவும் பொதுவுமாய் வருவனவுஞ்சிலவுளவெனக்கொள்க. அவையாவன, பிரிவர் - ஆடுவர் - இவை தன்வினையொன்றற்கேயுரியன.— பிரிப்பர் - ஆட்டுவர் - இவை பிறவினையொன்றற்கேயுரியன.— "தேற்றுவொழுக்கமொருவன் கணுண்டாயின்" — "நட்பாட றேற்றாதவர்" (எ-ம்) அவனைத்தேற்றிக்கொடுத்தான் - அவனைத்தேற்றிப்பிரித்தான் - (எ-ம்) இவைசொல்லொன்றே தன்வினையும் பிறவினையுமாயின. "தொல்காப்பியனெனத் தன்பெயர்தோற்றி" இவன்வெருத்தான் - இவைபோல்வனவுமது. உண்பான் - உண்ணான் இவைவிதிவினை மறைவினை.— செய்யாய் - செய்யீர் - மகனெனல் - மக்கட்பதடியெனல் - அல்லும்பகலுமருச்சிக்க யாமந்தோறும் வல்லார் - வல்லார் மாட்டாதார் - வல்லார்திறைகொள்வர் - வல்லார்திறை கொடுப்பர் - அகல்விசும்பிலார் - அருளான் - வெருளான் - இவைசொல்லொன்றே விதிவினையுமறைவினையுமாயின.— உண்டசாத்தன் - உண்டசோறு - இவை செய்வினை செயப்பாட்டுவினை.— புல்கொன்றயானை - மீன் விழுங்கினவன் - ஒன்றூர்வணங்கினேன் - அவள்விரும்பினவனிவன் - அறிந்துவந்தான் - "துவரடிபுனைந்த தலைமையோன்" இவைசொல்லொன்றே செய்வினையுஞ் செயப்பாட்டுவினையுமாயின.— சாத்தனடந்தான் - கானடந்தது - இவைமுதல்வினை சினைவினை — வனம் பொலிந்தது - படைபொருதிற்று - அவன்பருத்தான் - அருக்கனுருக்கினான் - இவைபோல்வனவெல்லாம் முதல்வினையுஞ் சினைவினையுமாயின.— தேடியபொருள் - தேடியவந்தான் - ஓடியபுரவி - ஓடியவிழுந்தான் (எ-ம்) பாங்கரொடுங்கூடியதலைவன் - தலைவியொடுகூடியவந்தான் (எ-ம்) இவை சொல்லொன்றேயெச்சமாயினவென வறிக.— இவைபோல்வன பிறவுமன்ன. (௩)

(௧௱௨௩) பொதுவியல்பாறையுந் தோற்றிப்பொருட்பெயர்-
- முதலறுபெயரல தேற்பில்முற்றே. ✻

(எ-ன்) மேற்கூறிய முற்றுமாறுணர் - ற்று. (ப-ரை) பொது வியல்பாறையும்- பலவகைவினைகளுக்கும் பொதுவிலக்கணமாகிய செய்பவன்முதலாறையும், தோற்றி - தோன்றச்செய்து, பொருட்பெயர்முதல்- பொருட்பெயர்முதலாகிய, அறுபெயரலது- அறுவகைப்பெயரல்லாத மற்றொன்றையும், ஏற்பில - ஏலாதன, முற்று-முற்றுவினை வினைக்குறிப்புகளாம், எ-று.(பொ-ரை) தெரிநிலைமுற்றுங் குறிப்புமுற்றும் பெயரெச்சமும் பெயரெச்சக்குறிப்பும் வினையெச்சமும்வினையெச்சக்குறிப்புமாகிய அறுவகைவினை வினைக்குறிப்புக்கும் பொதுவிலக்கணமாகிய செய்பவன்முதலிய ஆறனையுந்தோற்றுவித்துப்பொருட்பெயர்முதலிய அறுவகைப் பெயரையும்பயனிலையாக ஏற்பனவாகியல்லதுஒன்றனையும் ஏலாதன முற்றுவினை வினைக்குறிப்புக்களாம். எ-று. ❋ ஐம்பாலவாகிய வினைமுதலைத்தரும்விகுதியுறுப்புக்குறைந்தகுறைச்சொல்லாகியஎச்சங்களைப்போலாது அவ்வுறுப்போடுகூடி நிறைந்துநிற்றலின்முற்றெனப்படுமென்பார் ஆறையுமென்றும் பெயரன்றி வினைச்சொன்முதலியவற்றுள் ஒன்றனையும் ஏலாதன முற்றெனவும் பெயரன்றிப் பெயர்ப்பின்வேறொன்றனையும் ஏலாதன முற்றெனவும் இருபொருடோன்றப் பெயரலதென்றுங் கூறினார். [வ-று.] செய்தானவன்- நல்லனவன்- குளிர்ந்தது நிலம்-வந்தது கார்-குவிந்தது கை- பரந்தது பசப்பு- ஒழிந்தது பிறப்பு- எனவரும்.—வினைத் திணைபாலிடங் காலங்களோறு மொட்டுக. இவற்றுள் ஐம்பாலவாகிய வினைமுதலைத்தரும் விகுதி யுறுப்புக்குறையாது முற்றிநிற்றலும் பொருளாதியாறுபெயரையன்றி வினைமுதலியவற்றைப் பயனிலையாக ஏலாமையும் பெயர்ப்பின்வேறொன்றையும் ஏலாமையுங் காண்க.—“மற்றுச்சொன்னோக்கா மரபினவனைத்து - முற்றிநிற்பது முற்றியன்மொழியே.” என்றார் ஆசிரியர் அகத்தியனாருமென்க.(

(௧௱௨௪) ஒருவன்முதலைந்தையும் படர்க்கையிடத்து- மொருமைப்பன்மையைத் தன்மைமுன்னிலையினு - முக்காலத்தினு முணைமுறையே - மூவைந்திருமூன் றுறுப்புமுற்று - வினைப்பகுதியொன்றே மூவொன்பானும். ✻

(எ-ன்) மேற்கூறிய தெரிநிலை குறிப்பென்னும் இருவகைமுற்றுட் டெரிநிலைமுற்றொன்றுமே இறப்பு எதிர்வு நிகழ்வு என்னுங்கால விகற்பங்களைப் பெறுமென்பதூஉம் அவற்றுள் இத்துணையாமென்பதூஉமுணர் - ற்று. (ப-ரை) ஒருவன்முதலைந்தையும்-ஆண்பான்முதலாகிய ஐம்பால்வினைமுற்றுக்களையும், படர்க்கை

யிடத்தும்-படர்க்கையிடத்திலும், ஒருமை- ஒருமைவினைமுற்றையும், பன்மையை- பன்மைவினைமுற்றையும், தன்மை - தன்மையிடத்திலும், முன்னிலையினும்- முன்னிலையிடத்திலும்வைத்து; முக்காலத்தினும்- முக்காலங்களாலும், முரணை - மாற, முறையே- சொல்லப்பட்டமுறையே,மூவைந்து- படர்க்கைவினைமுற்றுக்கள் பதினைந்தும்,இருமூன்று- தன்மைவினைமுற்றுக்களாறும், ஆறு-முன்னிலைவினைமுற்றுக்கள்ஆறும், ஆய்- ஆகி,முற்றுவினைப்பதமொன்றே- தெரிநிலைவினைமுற்றுப்பதமொன்றுமே, மூவொன்பானும்- இருபத்தேழாகும்,எ-று(பொ-ரை)ஒருவன்ஒருத்திபலர்ஒன்றுபல என்னும்ஐம்பாலவாகியவினைமுற்றுக்களைப் படர்க்கைக்கண்ணும் ஒருமைபன்மை என்னும்இருபாலவாகியவினைமுற்றுக்களைத்தன்மைக்கண்ணு முன்னிலைக்கண்ணும்வைத்து முக்காலங்களானுமாற முறையே படர்க்கை வினைமுற்றுப்பதினைந்தும்தன்மைவினைமுற்றாறும் முன்னிலை வினைமுற்றாறுமாகிய முற்றுவினைச்சொல் லொன்றுமே யிருபத்தேழாம் எ-று. ❀ ஈண்டொருவனென்றது பெயரையன்று உயர்திணையாண்பால்வினையை யுணர்த்திநின்ற தோர்குறிப்புச்சொல் ஒருமைப்பன்மையென்புழியிடையே தோன்றியபகரஞ் சந்தவின்பப்பொருட்டு விரித்தல்விகாரமாய் வந்தது. ஒன்றேயென்னும் ஏகார முற்றுவினைப்பத முற்றுவினைக்குறிப்புப்பதமென்னும் இரண்டனுள் முற்றுவினைப்பதமொன்றுமே மூவொன்பானும் என்னும்பொருட்குநிற்றலிற் பிரிநிலை. இங்ஙனங்கூறவே, இவற்குச்செல்வ முண்டு - இப்பொழுதுண்டு-பின்னுண்டு - என வினைக்குறிப்புப்பதம், முக்காலமும் ஏற்குமெனுங் காலங்காட்டும் இடைநிலைமுதலிய வேண்டாதுபொதுமையினிற்றலின் அதனை இவ்வாறு விரிக்கப்படாதென்பது பெற்றாம்.

(௫)

(௩௱உ௫) அன் ஆ னிறுமொழி யாண்பாற்படர்க்கை.

❋

(எ-ன்) மேற்கூறிப்போந்த இருவகைமுற்றுட் டிணைபாலிடங்களி னொன்றற்குரியனவுணர் - ற்று. (ப-ரை) அன் ஆனிறுமொழி - அன் ஆன் என்கிற இருவிகுதியையும் இறுதியிலுடையமொழிகள், ஆண்பாற்படர்க்கை - உயர்திணை யாண்பாற்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். எ-று. (பொ-ரை) அன் ஆன் என்னும் இருவிகுதியும் இறுதியாகியமொழிகள் உயர்திணையாண்பாற்படர்க்கை வினைமுற்றும் வினைக்குறிப்பு முற்றுமாம். எ-று. ❀ ஆண்பெண்ணென்னும்விகற்பமஃறிணைப்பெயர்க்கணுமன்றி அவ்வினைக்கண்ணின்மையின் ஆணென்றமையான் உயர்திணையென்பதூஉம், பாலென்றமையான் முற்றென்பதூஉம்;

மேலைச்சூத்திரத்து முற்றுவினைப்பதமொன்றேயென விதந்தாற் போல இதனுள் விதவாமையின் இருவகைமுற்றிற்கும் பொது வாகக்கூறினாரென்பதூஉம் பெற்றாம். மேல்வருஞ் சூத்திரங்களு மன்ன. [வ-று.] நடந்தனன் - நடந்தான் - நடவாநின்றனன் - நட வாநின்றான் - நடப்பன் - நடப்பான் - நம்பி - என உயர்திணையாண் பாற்படர்க்கை இறந்தகாலவினைமுற்றும், நிகழ்காலவினைமுற்றும், எதிர்கால வினைமுற்றும், முறையே வந்தன — குழையினன் - கு ழையான் - நம்பி - என உயர்திணை யாண்பாற்படர்க்கை வினைக் குறிப்புமுற்று வந்தன. (௬)

(௩௱௨௬) அள் ஆ ளிறுமொழி பெண்பாற்படர்க்கை. *

(இ-ள்) இதுவுமது (ப-ரை) அள் ஆளிறுமொழி - அள் ஆள் என்கிற இரண்டுவிகுதியையும் இறுதியிலுடையமொழிகள், பெ ண்பாற்படர்க்கை - உயர்திணைப்பெண்பாற்படர்க்கை வினைமுற் றுங் குறிப்புமுற்றுமாம், எ-று. (பொ-ரை) அள் ஆள் என்னும் இருவிகுதியும் இறுதியாகியமொழிகள் உயர்திணைப் பெண்பாற் படர்க்கைவினைமுற்றுங்குறிப்புமுற்றுமாம். எ-று. ❀ [வ-று.] ந டந்தனள் - நடந்தாள் நடவாநின்றனள் - நடவாநின்றாள் - நடப்பள் - நடப்பாள் - குழையினள் - குழையாள் - நங்கை - எனவரும். (௭)

(௩௱௨௭) அர் ஆர் பவ்வூ ரகரமாரீற்ற - பல்லோர்படர்க்கை மார் வினையொடுமுடிமே. *

(இ-ள்) இதுவுமது. (ப-ரை) அர் ஆர்பவ் வூரகரமாரீற்ற - அர் ஆர் ப மார் என்கிற நான்குவிகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், பல்லோர்படர்க்கை - உயர்திணைப் பலர்பாற்படர்க் கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், மார் - இவற்றுள்ளே மாரீ ற்றுவினைமுற்று, வினையொடுமுடிம் - பொதுவிதியாற்பெயருட ன்முடிவதன்றி வினையுடனு முடியும், எ-று. (பொ-ரை) அர் ஆர் ப மார் என்னும் நான்குவிகுதியினையும் இறுதியாகவுடை யமொழிகள் உயர்திணைப்பன்மைப்படர்க்கைவினைமுற்றுங் கு றிப்புமுற்றுமாம், இவற்றுள் மாரீற்று வினைமுற்றுப் பொதுவி தியாற் பெயருடன்முடிவதன்றி வினையுடனு முடியும். எ-று ❀ "மாரொதிர்வும் பாந்தக்குசெலவொடுவரவும்.," எனப் பதவியலுட் கூறினமையின் இவ்விருவிகுதியுங் குறிப்புமுற்றின்கண்வாராவெ னவும், மார் வினையுடனுமுடியுமென்றமையின் இதற்கெய்திய தன்மேற் சிறப்புவிதிவகுத்தாரெனவும், வினையொடுமுடிமேயெ ன்புழி இறந்ததுதழீஇய வெச்சவும்மையின்றெனக் கொள்ளினு மம்மையக்கூறினமையின் வினையொடுமுடிதல்போற் பெயரொடு முடிதல் பயின்றுவருவ தன்றெனவுங்கொள்க. [வ-று.] நடந்த னர் - நடந்தார் - நடக்கின்றனர் - நடக்கின்றார் - நடப்பர் - நடப்பார் -

குழையினர் - குழையர்- அவர்- (எ-ம்) நடப்ப- எய்துப - செல்லுப- புல்லுப- அவர்- (எ-ம்) "பெரியவோதினுஞ் சிறியவுணராப்- பீடின்றுபெருகிய திருவிற் - பாடின்மன்னரைப் பாடன்மா ரெமரே.,, (எ-ம்) வரும்.—பாடன்மாரென்பது மாரீற்றெதிர்மறை வினைமுற்றாதலின் எதிர்கால வினையொன்றனையு மறுத்துப் பாடுவாரல்லரென்னும் பொருட்டாய்நின்று எமரென்னும் பெயர் கொண்டது. இனி வினையொடுமுடியுமாறு "ஆர்த்தார் கொண்மார்வந்தார்.,, "விழுக்கோட்பலவின் பழுஉப்பயன்கொண்மார்- குறவருன்றிய குரம்பையுதைஇ.,, எனவரும். இதனை வினைமுற்று வினையெச்சமாயிற் றென்று லென்னையெனின், வினைமுற்றினவழி அதற்கிையைந்த பெயர்ப்பயனிலைவாராது இயையாத வினைவந்தசேல் அதற் கியைய வினைமுற்று வினையெச்சமாயிற்றெனப்படும். இம்மாரீற்று வினைமுற்றிற்குப் பெயர்போல வினையும் இயைந்துவருதலின் முற்றெச்சமாயினதன்று முற்றேயாமென்க.—பின்வரும் "செய்கெனொருமையும் செய்குமென் பன்மையும்,, என்னுமுற்றுக்களுமன்ன.—"காலமொடுகருதவரினுமாரா - மேலைக் கிளவியொடு வேறுபா டின்றே.,,— என்றார் ஆசிரியர் அகத்தியனாருமென்க. (அ)

(௩௱௨௰௨) துறுடுக்குற்றிய லுகரவீற்ற-வொன்றன்படர்க்கை டுக் குறிப்பினுகும். *

(எ-ன்) இதுவுமது. (பரை) துறுடுக்குற்றியலுகரவீற்ற - து று டு என்கிற இம்மூன்றுகுற்றியலுகரவிகுதிகளை இறுதியிலுடையமொழிகள், ஒன்றன்படர்க்கை- அஃறிணையொன்றன்பாற்படர்க்கைவினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், டு- இவற்றுள் டுவ்விகுதி குறிப்பினுகும்-குறிப்பு வினைமுற்றிற் கல்லது தெரிநிலைவினைமுற்றிற்கு வருவதில்லை. எ-று (பொ-ரை) இம்மூன்றுகுற்றியலுகரவீற்று விகுதிகளையும் இறுதியாகவுடையமொழிகள் அஃறிணையொருபடர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம் இவற்றுள் டுவ்விகுதி குறிப்பின்கண்ணன்றித் தெரிநிலைக்கண்வாராது. எ-று. றுவ்விகுதி முக்காலவினைக்கண்ணும் பயின்றுவாராமையானும் துவ்விகுதி தன்முன்னின்ற வெழுத்துநோக்கி றுவ்விகுதியாய்த் திரிந்ததெனினு மமையுமாதலானும் டுவ்விகுதி குறிப்பொன்றற்கேவருதலானும் இதுவும் துவ்விகுதி திரிந்ததெனினு மமையுமாதலானும் துவ்விகுதியின் பிற்கூறப்பட்டன. [வ-று.] நடந்தது- நடக்கின்றது- நடப்பது- வந்தன்று- கூயிற்று- (எ-ம்) அணித்து- சேய்த்து- அற்று- இற்று- எற்று- (எ-ம்) பொருட்டு ஆதிரைநாட்டு- குண்டுகட்டு - அது- (எ-ம்) வரும். வந்தன்று - என்புழி அன்னென்பது சாரியை.—கட்டினும் விறுவினும் வந்த

வினைக்குறிப்புக்கள், "பொருண்முத லாறினுந் தோற்றி." என்றவற்றுளெப்பொருளவெனின், பொருளாதியாறனுள் யாதானு மொன்றனைச்சுட்டியும்வினவியும்வருதலின் அவ்வப்பொருளவா மென்க.—குற்றியலுகரவீற்ற வென்றமையான், எற்று - என்றாற் போல, ஏது- யாது- என்பனவுங் காரணப்பெயராமன்றி வினைக் குறிப்புமாமென்பதூஉம் அங்ஙனமாகவே,—"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே." என்பதனான், அது- இது -என்றற்றொடக்கத்து முற்றுகரவீற்றவும், வினைக்குறிப்பாமென்பதூஉம் பெற்றாம். (௯)

(௩௱௨௯) அ ஆ வீற்ற பலவின்படர்க்கை - யாவேயெதிர் மறைக் கண்ணதாகும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) அ ஆ வீற்ற - அ ஆ என்கிற விகுதிகளை யிறுதியிலுடையமொழிகள், பலவின்படர்க்கை- பலவின் பாற்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், ஆ - அவற்றுள் ஆகாரம், எதிர்மறைக்கண்ணதாகும் - எதிர்மறையினிடத்துவருமன்றி உடன்பாட்டினிடத்துவாராது, எ-று. (பொ-ரை.) இவ்விருவிகுதியினையும் இறுதியாகவுடையமொழிகள் அஃறிணைப்பன்மைப்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். இவற்றுள் ஆகாரம் எதிர்மறைவினைக்கண்ணதாமன்றி உடன்பாட்டுவினைக்கண்வாராது. எ-று. ❁ ஆவெயெதிர்மறைக் கண்ணதாகும் என்றமையான் ஏனைவிகுதிகள் உடன்பாட்டினும் எதிர்மறையினும்வருமென்பது பெற்றாம். [வ-று.] நடந்தன- நடந்த- நடவாநின்றன - நடவாநின்ற - நடப்பன- நடப்ப- கரியன - கரிய - அவை - (எ-ம்) நடந்தில- நடவாநின்றில- நடவா- அவை- (எ-ம்) வரும். இல்லன - இல்ல - என்னும், எதிர்மறை வினைக்குறிப்பு முற்றின்கட் பகுதியே மறைப்பொருடந்துநிற்றலின் இதற்கெதிர் மறையாகாரம்வேண்டாமையின் ஏற்புழிக்கோடலான் இம்மறை விகுதி தெரிநிலைக்கே கொள்க. இங்ஙனங்காட்டிய அன்பெறு அகரவீற்றுப் பலவறிசொற்களுள் நடப்பவென்பதன் இறுதி நோக்கி உயர்திணைப்பன்மைப்படர்க்கைக்கும் அஃறிணைப்பன்மைப்படர்க்கைக்கும் பொதுவினையென்று கொள்ளற்க.— இதன்கட் பகரம் எதிர்கால வினையிடைநிலையாதலின் இத்தொடக்கத்தனவெல்லாம் பலபொருள் ஒருசொல்லாமென்க. (௰)

(௩௱௩௰) தன்மைமுன்னிலை வியங்கோள்வேறிலை - யுண்டீரெச்ச மிருதிணைப்பொதுவினை. *

(எ-ன்) . திணைபாலிடங்கட்குப் பொதுவினை புணர்த்துவான் றொடங்கி அவற்றுள் இருதிணைக்கும் பொதுவினையிவையென

வுணர்-ற்று. (ப-ரை) தன்மை- தன்மைவினை வினைக்குறிப்புமுற் றுக்களும், முன்னிலை-முன்னிலைவினை வினைக்குறிப்புமுற்றுக்களு ம், வியங்கோள் - வியங்கோள் வினைமுற்றுக்களும், வேறில்லையு ண்டு-வேறு இல்லை உண்டு என்கிறமூன்று வினைக்குறிப்புமுற் றுக்களும், ஈரெச்சம் - பெயரெச்சவினை வினைக்குறிப்புக்களும் வினையெச்சவினை வினைக்குறிப்புக்களும், இருதிணை - உயர்தி ணை அஃறிணை என்கிற இருதிணைக்கும், பொதுவினை- பொது வினைகளாம், எ-று. (பொ-ரை) தன்மைவினை வினைக்குறிப்பு மு ற்றும் முன்னிலைவினை வினைக்குறிப்புமுற்றும் வியங்கோள்வினை முற்றும் வேறு இல்லை உண்டு என்னும் மூன்றுவினைக்குறிப்பு முற்றும் பெயரெச்சவினை வினைக்குறிப்பும் வினையெச்சவினை வினைக்குறிப்பும் இருதிணைக்கும் பொதுவினையாம். எ-று ❋ தன்மைமுன்னிலையென்றமையான், அவை முற்றென்பதுபெ றும். எச்சமெனப் பொதுப்படக்கூறினாரேனும், முற்றெச்ச ங்கள் முற்றோடொக்குமாதலின் அவையொழியக் கொள்க.— செய்புமென்னுமுற்றும் இருதிணைப்பொதுவினையன்றோ அத னைக்கூறொழிந்த தென்னையெனின், முற்றெச்சமாயினாற்போ லச், செய்யுமென்னும்பெயரெச்சம் செய்புமென்னுமுற்றான மையின் ஈரெச்ச மிருதிணைப் பொதுவினையென்றதனையானே அம்முற்றும் இருதிணைப்பொதுவினையென்பதூஉ மே போதரு மென்க. செய்புமெனெச்ச முற்றுமாறும் அம்முற்றிற்கு ஈண் டுப்போந்த இருதிணைப்பொதுவொழிய அஃதைம்பான்மூவி டங்களிற் பொதுமையினிற்குமாறு மேற்கூறுப. (௰௧)

(௩௱௩௰௧) குடுதுறுவென்னுங் குன்றியலுகரமோ- டல்லெனென் னேனாகுமீற்ற- விருதிணைமுக்கூற் றொருமைத்தன்மை. ❋

(எ-ன்) நிறுத்தமுறையானே தன்மை ஒருமை வினைமுற்றுங் குறிப்புமுற்று முணர்- ற்று. (ப-ரை) குடுதுறுவென்னுங் குன் றியலுகரமோடு - கு டு து று என்கிற குற்றியலுகரவிகுதிகளு ம், அல்லெனென்னேன் - அல் அன் என் ஏன் என்கிற நான்குமெ ய்யீற்றுவிகுதிகளும், ஆகும்- ஆகிய, ஈற்ற - இவ்வெட்டுவிகுதிகளை யும் இறுதியிலேயுடையமொழிகள், இருதிணை- இருதிணையிடத்த னவாகிய, முக்கூற்று - ஒருவன் ஒருத்தி ஒன்றென்கிற மூன்று பால்களுக்கும் பொதுவாகிய, ஒருமைத்தன்மை - ஒருமைத்தன் மைவினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம், எ-று. (பொ-ரை) இவ் வெட்டுவிகுதிகளையும் இறுதியாகவுடையமொழிகள் இருதிணைக் கண்ணவாகிய ஒருவன் ஒருத்தி ஒன்றென்னு முக்கூற்றொரு மைத்தன்மை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். எ-று. ❋ குவ் விகுதியையுடன்கூறினமையின் அதன்பின்னின்ற மூன்றுங்காலங்

காட்டும் விகுதிகளென்பதூஉம், ஒருமையென்றமையின் இவை திணைப்பொதுவன்றிப் பாற்பொதுவாகாவென்பதூஉம்பெற்றாம். ஒருமை பன்மை என மேல்விதப்பனவுமன்ன. [வ-று.] உண்கு - கொண்டு - வந்து - வருது - சென்று - சேறு - உண்பல் - உண்டனன் - உண்ணாநின்றனன் - உண்பன் - உண்டனென் - உண்ணாநின்றனென் - உண்குவென் - உண்டேன் - உண்ணாநின்றேன் - உண்பேன் - (எ-ம்) தாரினென் - தாரினேன் - யான் - (எ-ம்) வரும். காட்டாதொழிந்தன வந்துழிக்காண்க. தன்மைக்கண்ணும் அன்விகுதி கொள்ளாதொழியின், "எழுத்தசைசீர் - பந்தமடிதொடை பாவினங்கூறுவன்." என்றற்றொடக்கத்தன அமையாவென்க. (௰௨).

(௩௱௩௨) அம்மாமென்பன முன்னிலையாரையு - மெம்மே மோமிவை படர்க்கையாரையு - மும்மூர்கடதற விருபாலாரையுந் - தன்னொடுபடுக்குந் தன்மைப்பன்மை. *

(எ-ன்.) தன்மைப்பன்மைவினைமுற்றுங் குறிப்புமுற்று முணர்-ற்று. (ப-ரை) அம்மாமென்பன - அம் ஆம் என்கிற இரண்டுவிகுதிகளையும் இறுதியிலுடையமொழிகள், முன்னிலையாரையும் - தன்னிலையினிற்கையன்றி முன்னிலையிடத்தாரையும், எம்மேமோமிவை - எம் ஏம் ஓம் இம்மூன்றுவிகுதிகளையும் இறுதியிலுடையமொழிகள், படர்க்கையாரையும் - தன்னிலையினிற்கையன்றிப் படர்க்கையிடத்தாரையும், உம்மூர்கடதற - கும் டும் தும் றும் என்கிற நான்குவிகுதிகளையும் இறுதியிலுடையமொழிகள், இருபாலாரையும் - தன்னிலையினிற்கையன்றி அவ்விரிடத்தார்களையும், தன்னொடுபடுக்குந்தன்மைப்பன்மை - தன்னுடன்கூட்டுகிற தன்மைப்பன்மை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், எ-று. (பொ-ரை) தன்னிலையினிற்பதன்றி அம் ஆம் என்னும் இவ்விருவிகுதியினையும் இறுதியாகவுடையமொழிகள் முன்னிலையாரையும், ஏம் எம் ஓம் என்னும் இம்மூன்றுவிகுதியினையும் இறுதியாகவுடையமொழிகள் படர்க்கையாரையும், கும்-டும்-தும்-றும் என்னும் இந்நான்குவிகுதியினையும் இறுதியாகவுடையமொழிகள் முன்னிலை படர்க்கை என்னுமீரிடத்தாரையுந் தன்னுடன்கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். எ-று. * தன்னிலையினிற்பதன்றியென்னும் இறந்ததுதழீஇய வெச்சவும்மைகள் எண்ணும்மைகளாயும் இருபாலாரையும் என்புழி இவற்றொடுமுற்றும்மையாயுநின்றன, [வ-று.] உண்டனம் - உண்ணாநின்றனம் - உண்பம் - உண்டாம் - உண்ணாநின்றாம் - உண்பாம் - தாரினம் - தாரினாம் - யாம் - (எ-ம்). யானுநீயும் - (எ-ம்) உண்டனெம் - உண்ணாநின்றனெம் - உண்பெம் - உண்டேம் - உண்ணாநின்றேம் - உண்பேம் - உண்டோம் - உண்ணாநின்றோம் - உண்போம் -

நாரினெம் - நாரோம் - நாரினேம் - யாம்- (எ-ம்) யானுமவனும் = (எ-ம்) உண்டும்- உண்டும்- உந்தும்- வருதும்-சென்றும்-சேறும்-யாம் - (எ-ம்) யானுநீயுமவனும்- (எ-ம்) தனித்தன்மைப்பன்மையும் உளப்பாட்டுத் தன்மைப்பன்மையுமுன்றிய வந்தன — இன்னும் அவ்வும்மைகளை ஐயவும்மைகளாக்கி அம்மாமென்பனமுன்னிலையாரையேனும் படர்க்கையாரையேனுந் தன்னொடுபடுக்குமெனவும் ஆக்கவும்மையாக்கி அம்மாமென்பனமுன்னிலையாரையும் படர்க்கையாரையுமொருங்கு தன்னொடுபடுக்குமெனவும்பொருளுரைத்து, உண்டனம்- யானுமவனும் (எ-ம்) யானுநீயுமவனும் (எ-ம்) வருகிவருதல்கண்டுகொள்க.— ஏனையெட்டும்விகுதியுமன்ன. இவற்றை "ஓரிடம்பிறவிடத் தழுவலுமுளவே,, என்றும் இடவழுவமைதியாகக் கோடலுமொன்று. — தன்மையொருமைக்கண் அன்விகுதியும் பன்மைக்கண் ஓம்விகுதியும் புதியனபுகுதல் (௰௫)

(௩௱௩௩) செய்கெனொருமையுஞ் செய்குமென் பன்மையும்-வினையொடுமுடியினும் விளம்பியமுற்றே.

(எ-ன்) எட்டியதன்மேற் சிறப்புவிதியும் எய்தியதிகந்துபடாமற்காத்தலு முணர்- ற்று. வினையொடுமுடியினு-மென்றமையான் பெயரொடுமுடியுமென்னும் விதிதானேபோதருமாதலினெட்டியதன்மேற் சிறப்புவிதியென்றும். (ப-ரை) செய்கென்-செய்கு என்கிற, ஒருமையும் - தன்மையொருமைமுற்றும், செய்குமென்- செய்கும் என்கிற, பன்மையும்- தன்மைப்பன்மைமுற்றும் வினையொடுமுடியினும்- பெயருடனேயன்றி வினையுடனேமுடியினும், விளம்பிய - முன்சொல்லப்பட்ட, முற்றே- முற்றுக்களேயாம் எ-று. (பொ-ரை) செய்கென்னுந் தன்மையொருமைமுற்றுஞ் செய்குமென்னுந் தன்மைப்பன்மைமுற்றும் பெயருடனேயன்றி வினையுடனேயுமுடியும் அங்ஙனமுடியினுமேற்கூறியமுற்றேயாம். எ-று. ❀ எச்சங்களைப்போலாது வினைமுதலைத்தரும் விகுதியுறப்போடுகூடி முற்றிநிற்றலின் முற்றெனப்பட்டதன்றிப் பயனிலைகொண்டு முற்றலின் முற்றெனப்பட்டதன்றென்பார் பெயரோயன்றி வினையொடுமுடியினும் விளம்பியமுற்றேயென்றார். [வ-று] உண்குவந்தேன்- உண்கும்வந்தேம்- எனவரும். இங்ஙனமாயின், உண்பேன்வந்தேன் உண்பேம்வந்தேம் -என இவ்வொருமைபன்மையும் வினையோடுமுடியுமென்றலென்னையெனின்,—"எப்பொருளெச்சொலி னெவ்வாறுயர்ந்தோர் -செப்பினரப்படிச் செப்புதன்மரபே,, என்பவாகலிற் செய்கெனொருமையுஞ் செய்குமென்பன்மையும் பெயரொடும்வினையொடுமுடிதன் மரபாயினாற்போல அவைபெயருடனன்றிவினையொடுமுடிதன் மரபன்மையின் அஃதியையாதென்க. (௰௪)

(௩௱௩௪) முன்னிலைகூடிய படர்க்கையுமுன்னிலை. *

(என்) உளப்பாட்டுப்பன்மை, முன்னிலைக்கண்ணும் முளதென்பதுணர் - ற்று. (ப-ரை) முன்னிலை-முன்னிலையோடு, கூடிய- சேர்ந்த, படர்க்கையும் - படர்க்கையும், முன்னிலை - முன்னிலையாம், எ-று. (பொ-ரை) தன்மையோடுகூடிய முன்னிலை படர்க்கைகடன்மையாதற்போல முன்னிலையோடுகூடிய படர்க்கையுமுன்னிலையாம், எ-று. ※ விகுதிகளைவிதவாது கூறினமையின் முன்னிலைப்பன்மை விகுதிகளெல்லாம் படர்க்கையை உளப்படுத்துமென்பதூஉம் படர்க்கையென்றமையாற் றன்மையை உளப்படுத்தாவென்பதூஉம் பெற்றாம். [வ-று.] உண்டனிர்- உண்டீர்- உண்மின்- குழையினிர்- குழையீர்- நீயுமவனும்- (எ-ம்) "ஒண்டேவி நாரரப்பின் சேவனுநீயுமாய்- வண்டேதுப்பூங்கானல் வைகலுஞ்சென்றீரால்.,, (எ-ம்) வரும். இச்சூத்திரம் முன்னிலைப்பன்மைமுற்றுக் கூறியவழிக்கூறாது ஒன்றினமுடித்த றன்னினமுடித்தலென்னுமுத்தியான் ஈண்டுக்கூறப்பட்டது. (௰௫)

(௩௱௩௫) ஐயாயிகர வீற்றமூன்று - மேவலின்வரூஉ மெல்லாவீற்றவு - முப்பாலொருமை முன்னிலைமொழியே. *

(எ - ன்) முன்னிலையொருமைவினைமுற்றுங் குறிப்புமுற்றுமுணர் - ற்று. (ப-ரை) ஐயாயிகரவீற்றமூன்றும் - ஐ ஆய் இ என்கின்ற மூன்றுவிகுதிகளை இறுதியிலுடையமொழிகளும், ஏவலின்வரூஉமெல்லாவீற்றவும்- விகுதிகுன்றுதும் குன்றியுநிற்பனவாகிய ஏவலிலேவருகிற இருபத்துமூன்றீற்றுமொழிகளும், முப்பால் - ஒருவன் ஒருத்தி ஒன்று என்கிறமூன்றுபாலர்க்கும் பொதுவாகிய, ஒருமைமுன்னிலைமொழி - முன்னிலையொருமை முற்றுங் குறிப்புமுற்றுமாம், எ-று. (பொ-ரை) ஐ ஆய் இ என்னும் மூன்றீற்றுமொழிகளும் விகுதிகுன்றுதுங் குன்றியுநிற்பனவாகிய ஏவற்கண்வரும் இருபத்துமூன்றீற்று மொழிகளும் ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் மூன்றுகூற்றவாகிய முன்னிலை ஒருமைவினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். எ-று. ※ இகரவீற்றுமொழிகட்கு இகரம் எதிர்காலங்காட்டுவதின்றி இடைநிலை நின்றுங் காலங்காட்டுமென்பதுதோன்ற ஐயாவென்னும்விகுதிகளோடு இகரவிகுதியை யுடன்கூறினர். ஏவன்முற்றுத் தெரிநிலையொன்றற்சேயுரிமையின் உம்மைகொடுத்து விதந்தோதினர். [வ-று] உண்டனை - உண்ணாநின்றனை - உண்டை - உண்டாய்- உண்ணாநின்றாய்- உண்பாய்- உண்டி- உண்ணாநின்றி- சேறி - நடவாய் - வாராய்- கேளாய்- அஃகாய்- நட - வா- கேள்- அஃகு- (எ-ம்) வில்லினை-வில்லாய்- வில்லி- நீ - (எ-ம்) வரும் — இகரவீற்றுமொழிகள் எதிர்

காலவிடைநிலை யேற்குமேற்காண்க.—ஏவலெனப் பொதுப்படக் கூறினமையிற், செய்வி- செய்விப்பி - என்னும் ஏவன்மேல் ஏவல்களும், செய்யல்-செய்யேல்-என்றற்றொடக்கத்து எதிர்மறையேவல்களும் இருபத்துமூன்றீற்றுளடங்கிக் கிடந்தமைகாண்க. பால் காட்டிநிற்றலின் ஏவலுமுற்றேயா மென்க. (௰௬)

(௩௱௩௬) முன்னிலைமுன்ன ரீயுமேயு - மந்நிலைமரபின் மெய்யூர்ந்து வருமே. *

(எ-ன்) ஏவன்முற்றிற் கெய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று. (ப-ரை) முன்னிலைமுன்னர் - முன்னிலையேவன்முற்றென முன்சொல்லப்பட்டவற்றிற்குமுன், ஈயும்- ஈகாரமும், ஏயும்-ஏகாரமும், அந்நிலைமரபின்- அவ்விடத்துநிற்றற் குரியமரபினையுடைய, மெய்- யாதானுமொருமெய்யை, ஊர்ந்து-ஏறி, வரும்- வரும், எ-று. (பொ-ரை) முன்னிலையேவன்முற்றென மேற்கூறியவற்றிற்குமுன்னே ஈகாரமும்ஏகாரமும் ஆண்டுவந்துநிற்றற்குரியமரபினையுடையமெய் - யாதானுமொன்றை யூர்ந்துவரும். எ-று ❀ ஈகார ஏகாரங்களை, "அன் ஆன் அள் ஆள்.," எனவிகுதிகூறியவழி யெடுத்தோதாமையானும் மேலைச் சூத்திரத்து ஐம்பாயிகரங்களொடு ஒருங்கோதாமையானும் இவைவிகுதியுருபல்லவென்பதூஉம் ஏவற்கண்வரும் எழுத்துப்பேறென்பதூஉம் அந்நிலைமரபின் மெய் யெனவிதந்தமையின்அஃதம்மொழியிறுதிமெய்யன்றென்பதூஉம் பெற்றாம். [வ-று.] "சென்றீ பெருமநிற் றகைக்குநர்யாரே.," (எ-ம்) "அட்டிலோலை தொட்டனை நின்மே.," (எ-ம்) வரும் இவ்வெழுத்துப்பேறு, "நட வா மடி.," என்னுஞ்சூத்திரத்தின் பிற்கூறாது ஈண்டுக்கூறினார் இவ்வாறுவரும்ஏவல்கள் பகுதிமாத்திரையாயன்றிநிற்றலின் இவை முன்னிலையொருமைவிகுதி யுருபேற்றுவினைமுற்றோஏவன்வினைமுற்றோவென்றையுறுவார்க்குஐயமறுத்தற்கு. இவற்றிற்கு விகுதியுருபின்பொருளின்மையின் முன்னிலையசையாமென்க (௰௭)

(௩௱௩௭) இர்ஈர்ஈற்ற விரண்டுமிருதிணைப் - பன்மைமுன்னிலை மின்னவற்றேவல். *

(எ-ன்) முன்னிலைப்பன்மை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமுணர்-ற்று. (பரை) இர்ஈர்ஈற்றவிரண்டும்- இர் ஈர் என்கிற இரண்டுவிகுதிகளையும் இறுதியிலுடையமொழிகள், இருதிணை - இருதிணைக்கும்பொதுவாகிய, பன்மைமுன்னிலை- பன்மைமுன்னிலை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், மின்-மின்விகுதியை யிறுதியிலுடையமொழிகள், அவற்றேவல்- முன்னிலைப்பன்மை யேவன்முற்றும், எ-று (பொ-ரை) இர் ஈர் என்னும் இருவிகுதியினையும் இறுதியாகவுடையமொழிகள் இருதிணைப்பன்மைமுன்னிலை வினை

முற்றுங் குறிப்புமுற்றுமாம், மின் என்னும் விகுதியை யிறுதியா
கவுடையமொழிகள் இருதிணைப் பன்மைமுன்னிலை யேவன்முற்
றாம். எ-று. ❁ [வ-று.] உண்டனிர் - உண்ணாநின்றனிர் - உண்கு
விர் - உண்டீர் - உண்ணாநின்றீர் - உண்பீர் - உண்மின் - குழை
யினிர்- குழையீர்- நீர் (எ-ம்) வரும். மின்னவற்றேவலென்றமை
யான், உண்ணும் - தின்னும் - நீர்- என உம்மீற்றவாய்வரும்பன்
மையேவல் புதியனவென்பதூஉம் அவை "புதியன புகுதலும்வ
ழுவல" என்பதனானமையு மென்பதூஉம் பெற்றாம். (௰௬)

(௩௱௩௮) கயவொடுரவ்வொற் றீற்றவியங்கோ - ளியலுமிடம்
பா லெங்குமென்ப. *

(எ-ன்) வியங்கோண் முற்றுணர்- ற்று. (ப-ரை) கயவொடு- க
ய என்கின்றவிரண் டுயிர்மெய்யினையும், ரவ்வொற்று - ரகரமெய்
யினையும், ஈற்ற- இறுதியிலுடையமொழிகள், வியங்கோள்- வியங்
கோண்முற்றுக்களாம், (இடமெங்கும்) - மூன்றிடங்களிலும், பா
லெங்கும்- ஐம்பால்களிலும், இயலும்- செல்லும், என்ப - என்று
சொல்லுவர் புலவர். எ-று (பொ-ரை) கயவென்னும் இரண்டு
யிர்மெய்யினையும் ரகரவொற்றினையும் இறுதியாகவுடையன விய
ங்கோண்முற்றாம் அவைமூவிடத்தினும் ஐம்பாலினுஞ் செல்
லுமென்று சொல்லுவர் புலவர். எ-று. ❁ ரவ்வொற்றென்றமை
யான் முன்னையவிரண்டும் உயிர்மெய்யென்பதூஉம், ஒற்றென்
றமையான் ரகரவொற்றுக் ககரயகரவுயிர்மெய்கள்போற் றனித்
தியலாது யகரத்தோடுவரப்பெறு மென்பதூஉம், என்பவென்
றமையான் இம்மூன்றீற்றவுந் தொன்றுதொட்டுநெறியவென்பதூ
உம் பெற்றாம் [வ-று] வாழ்க- வாழிய- வாழியர்- நிலீயர் யா
ன்- யாம்- நீ- நீர்- அவன்- அவள்- அவர்- அது- அவை- (எ-ம்) —
"பெறுகதில்லம்மயானே"—"வெல்கவாழிநின் வென்றிவார் கழ
ல்"—"செல்கதியன சிறக்கநின் புகழே"—"மன்னியபெருமநீ
நிலமிசையானே" (எ-ம்) வாழ்த்துதற்பொருண்மைக்கண்வந்த
ன.—நடக்க- வருக- உண்க- செல்க - என உயர்ந்தோனிழிந்தோ
னை இன்னதுசெய்கவென விதித்தற்பொருண்மைக்கண்வந்தன.
"போற்றி யருளுகநின் னாதியாம் பாதமலர்"—"ஏங்கொங்கைநி
ன்னன்பரல்லார்தோள்சேரற்க." (எ-ம்) "கடாவுகபாகநின் கால்
வனெடுந்தேர்." (எ-ம்) வேண்டிக்கோடற் பொருண்மைக்கணவ
ந்தன. இங்ஙனங்கூறினூர் "வகுத்தானாயாதவும் வகுத்தனர்கொ
ளலே" என அவ்வீற்றுவியங்கோளும் உடன்பட்டுப்புணர்த்த
மையான் எடுத்தோதாப் பிறவீற்றவா யிருதிணை ஐம்பான்மூவி
டங்களினும் வாழ்த்துமுதலிய ஏவற்பொருளவாய்ச் சென்றன
வுளவேல் அவை "புதியனபுகுதலும்வழுவல" என்னும் வழுவ

மைதியாய்வந்த வியங்கோளென்பதூஉம் பெற்றாம்.—"பயனில் சொற் பாராட்டுவானை மகனெனல் - மக்கட்பதடியெனல்." என் புழிப் பதடியெனலென்பது வியங்கோள் - மகனெனலென்பது எதிர்மறையொருமையேவல். இவ்வாறு பிறவீற்றவாய்வருவனவாயின் அவை வியங்கோளாதல் ஆராய்ந்து கொள்க.—ஏவல்வியங்கோள் என்பன ஒருபொருட்கிளவியாயினும் இருதிணை ஐம்பான் மூவிடங்களினுஞ் செல்லு மேவலை வியங்கோளென்பது தொன்னெறிமரபா மென்க. (௰௬)

(௩௱௩௬) வேறில்லையுண்டைம் பான்மூவிடத்தன. *

(எ-ன்) இவ்வினைக் குறிப்புமுற்று மூன்றும்பாலிடங்கட்குப் பொதுவரமாறுணர் - ற்று, (ப-ரை) வேறில்லையுண்டு - வேறு இல்லை உண்டு என்கிறமூன்றுவினைக்குறிப்புமுற்றுக்களும், ஐம்பால் - ஐம்பாலுக்கும், மூவிடத்தன - மூவிடத்திற்கு முரியனவாம், எ-று- (பொ-ரை) வேறு இல்லை உண்டு என்னும் மூன்றுவினைக்குறிப்புமுற்றும் ஐம்பாற்கு மூவிடத்திற்கு முரியனவாம். எ-று, ※ உண்டென்பது அஃறிணையொருமைக்கேயன்றிப் பொதுவினையாதல் புதியனபுகுதலாமென்பார்பிந்கூறினார். [வ-று.] வேறவன்- இல்லையவன்- உண்டவன்- அவள்-அவர்- அது- அவை- யான்- யாம்- நீ- நீர்- (எ-ம்) "விளிந்தாரின் வேறல்லர்மன்ற."— "யாருமில்லைத் தானேகள்வன் - றானதுபொய்ப்பின் யானெவன் செய்கோ."—"தினைத்தாளன்ன சிறுபசுங்கால- வொழுகுநீராரல் பார்க்குங்- குருகுமுண்டுதா மணந்த ஞான்றே."—"பெண்டிரு முண்டுகொல் பெண்டிருமுண்டுகொல் - கொண்டகொழுந ருறுகுறைதாங்குறாஉம் - பெண்டிருமுண்டுகொல் பெண்டிருமுண்டுகொல்."—"நாவுண்டுநீயுண்டு நாமந்தரித்தோதப் - பாவுண்டுநெஞ்சே பயமுண்டோ- பூவுண்டு-வண்டிறங்குஞ்சோலை மதிலரங்கத்தேயுலகை- யுண்டிறங்கு வாளொருவ னுண்டு." (எ-ம்) வரும்.—"பழியஞ்சிப்பாத்தூஉ ணுடைத்தாயின்வாழ்க்கை - வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்." என்பது செய்யுளாதலின் இல்லையென்ப திலெனக்கடைகுறைந்து நின்றது. *

இனி மொழிந்தபொருளோ டொன்றவவ்வயின் மொழியாததனையுமுட்டின்றுமுடித்தலென்பதனால் வேண்டும்-தகும்- படும்- என்னுஞ்சொற்களும் ஐம்பான்மூவிடத்தனவாமெனவுங்கொள்க. [வ-று] "ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை - யாஅது மென்னு மவர்." யான்போகல்வேண்டும் - நீயுரைத்தல் வேண்டும்—"இனைத்தெனவறிந்த சினைமுதற்கிளவிக்கு - வினைப் படுதொகுதியி னும்மைவேண்டும்."— "இனைத்தென் றறிபொருளுலகினிலாப்பொருள்-வினைப்படுத்துரைப்பினும்மைவேண்டும்."

—"இன்னெனவருஉம் வேற்றுமையுருபிற்- கின்னென்சாரியை யின்மை வேண்டும்"—"வேறுவினைப் பல்பொரு டழுவியபொதுச்சொலும்- வேறவற்றெண்ணுமோர் பொதுவினைவேண்டும்."—"நலம்வேண்டி னாணுடைமை வேண்டும்" (எ-ம்) இவராலிக் காரியஞ்செய்யத்தகும் - இவ்வூழருந்தத்தகும் - இச்சோறுண்ணத்தகும் - இந்நீர்குடிக்கத்தகும்- (எ-ம்) "மூகத்தி னினிய நகாஅவகத்தின்னா - வஞ்சரை யஞ்சப்படும்." "இளைய ரினமுறைய ரென்றிகழா நின்ற - வொளியோ டொழுகப்படும்." "கற்றறிந்தோரைத்- தலைநிலத்துவைக்கப்படும்." "கீழ்களைச் - செய்தொழிலாற்காணப்படும்" (எ-ம்) வரும். இப்மூன்று மொருபொருட்கிளவியாயித் தொழிற்பெயராய்த் தேற்றப்பொருள்படடே நிற்குமென்க. இங்ஙனம்வருஞ் செய்யுட்கெல்லாம், நச்சினார்க்கினியர் சேனாவரையர் பரிமேலழகர் உரையாசிரியர் முதலாயினார் முற்றாயும் எச்சமாயும்பொருளுரைக்கின் வழுவாமென்றுகருதி வியங்கோட் பொருட்டென்றும் விதிப்பொருட்டென்றும் தகுதிப்பொருட்டென்றும் வேண்டுபவென்றும் தமக்குவேண்டியவாறேபொருளெழுதிச் சொற்குணம்வாளாபோயினர். அதுநிற்க. (உ௰)

(௩௱௪௰) செய்தசெய்கின்ற செய்யுமென்பாட்டிற்- காலமுஞ் செயலுந் தோன்றிப்பாலொடு - செய்வதாதி யறும்பொருட்பெயரு- மெஞ்சநிற்பது பெயரெச்சம்மே. ※

(எ-ன்) ஈரெச்சமென்றவற்றுட்பெயரெச்சமாமாறுணர்-ற்று. (ப-ரை) செய்தசெய்கின்றசெய்யுமென் - செய்தவென்றும் செய்கின்றவென்றும் செய்யுமென்றுஞ்சொல்லப்படுகிற, பாட்டில் - மூவகைச்சொற்களிலே, காலமும்- முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்கிறமூன்றுகாலங்களும், செயலும்- தொழிலும், தோன்றி - தோன்றி, பாலொடு- பாலுடனே, செய்வதாதி- செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செயப்படுபொருளென்கிற, அறுபொருட்பெயரும்- அறுவகைப்பொருட்பெயர்களும், எஞ்சநிற்பது- ஒழியநிற்பன, பெயரெச்சம்- பெயரெச்சவினை வினைக்குறிப்புக்களாம், எ-று. (பொ-ரை.) செய்த செய்கின்ற செய்யுமென்னும் மூவகைப்பட்டசொல்லின்கண்முறையேஇறப்புநிகழ்வு எதிர்வுஎன்னுமூன்றுகாலமுஞ்செயலுந்தோன்றிவினைமுற்றுதற்கு வேண்டும் பாலொன்றுந்தோன்றுது அப்பாலுடனேசெய்பவன்கருவி நிலஞ்செயல்காலஞ்செய்பொருளென்னும் அறுவகைப்பொருட்பெயருமொழியநிற்பனபெயரெச்சவினைவினைக்குறிப்புக்களாம். எ-று ※ பாட்டென்னும்பலபொருளொருசொல் ஈண்டுச்சொல்லை யுணர்த்தி நின்றது. இவற்றுட் செய்யுமென்னு மொன்றும்

இறுதிநிலை காலங்காட்டியது. இவைவெளிப்படையினுணர்த்துவனகாலமுஞ் செயலுமென்பார்பாட்டென்றும் பெயரெச்சமென்றதுவினைமுற்றாத குறைச்சொல்லாய்த் திணைபாலிடங்கட்குப் பொதுவாகியபெயரெஞ்சநின்றனவற்றையென்பார்பாலொடென்றுங்கூறினார். நிற்பதென்பது தொகுதியொருமை. எட்டழிக்கோடலாற்றோன்றியென்பதன்காறுந்தெரிநிலையுடன்பாட்டிற்கும் ஏனையதெரிநிலையுங் குறிப்புமாகிய உடன்பாடெதிர்மறையிரண்டற்குங்கொள்க. பதப்பொருளொழிந்தவுரைவினையெச்சத்திற்குங்கொள்க [வ-று.] உண்ட-உண்ணாநின்ற உண்ணும்-சாத்தன் - கலம்-இடம்-ஊண்-நாள் சோறு (எ-ம்) வேலாண்முகத்தகளிறு-மூவிலையவேல்-உள்ளபொருள் (எ-ம்) உண்ணாதசோறு (எ-ம்) இல்லாதபொருள் (எ-ம்) வரும். செய்வதாதியறுபொருளுங்காரணமாதலின் இவ்வெச்சங்கள்காரியப்பொருட்டாய்நின்றன. வனைந்தகுடம்-என்புழிக்குடங்காரியமாயும்நிமித்தமாயுநிற்றலின் இவ்வெச்சங்காரணப்பொருட்டாயுங்காரியப்பொருட்டாயுநின்றது. பிறவுமன்ன. அறுபொருட்பெயருமென்னுமும்மையை ஆறுந்தருவதுவினையேயென்னும் உம்மைபோலவைத்து அறுபொருட்பெயரிற்சிலகுறைந்தும்இன்னதற்கிதுபயனென்னுமிருபொருட்பெயரும்பிறபெயருங்கூடியுமெஞ்சநிற்பதெனவும் பொருளுரைத்துக்கொள்க அவைவருமாறு, ஆடினகொடி - துஞ்சினகொடி இவைகுறைந்தெஞ்சநின்றன. களைகட்டபயிர் - களைகட்டகூலி - இவை இன்னதற்கெனவும் இதுபயனெனவும்இருபெயருமெஞ்சவந்தன உண்டவிளைப்பு (எ-ம்) "குண்டுசுனைபூத்தவண்டுபடுகண்ணி" (எ-ம்) குடிபோனவூர் (எ-ம்) பொன்பெரியநம்பி - (எ-ம்) பிறபெயர்களெஞ்சநின்றன. பிறவுமன்ன. உண்டவிளைப்பென்பது உண்டகாரணத்தான்வருங்காரியமாகிய விளைப்பாதலிற் செயப்படுபொருள்கொண்டதெனினமையாதோவெனின், சாத்தனுண்டசோறு - என்புழிச்சோற்றையுண்டசாத்தனெனச்சோறென்பதிரண்டாமுருபேற்றாற்போல விளைப்பென்பது அவ்வுருபேலாமையினதுசெயப்படுபொருளாகாதென்க. இவ்வெச்சங்காரணப்பொருட்டாயே நின்றது. எனவே இப்பெயரெச்சங்கள் காரணப்பொருட்டாயுங்காரியப்பொருட்டாயும்இவ்விருதிறத்தவாயும்வருதல்காண்க. இப்பெயரெச்சம் அரசன்செய்ததேர்எனத்தலைமைபற்றியும் தச்சன்செய்ததேர் என அஃதின்மைபற்றியும்வரும். இனி "காலங்கரந்தபெயரெச்சம்வினைத்தொகை" எனக்கூறுதலின் வினைத்தொகையினைப்பெயரெச்சவினையுளடக்கியிதுவேவிதியாகக்கொள்க. [வ-று] அடுகளிறு- கோடு-களம்- போர்-நாள்-கந்து - எனவரும். "காலமும் வினையுந் தோன்றிப்பாறோன்றாது பெயர்கொள்ளுமது பெ

யொச்சம்மே,, என்றார் ஆசிரியர் அகத்தியனாருமென்க. (உ.௧)

(௬௱௪௧.) செய்யுமெனெச்சவீற் றுயிர்மெய்சேறலுஞ் - செய்யுளுளும்முந் தாகலுமுற்றே-லுயிருமுயிர்மெய்யு மேகலு முளவே. ※

(என்.) செய்யுமென்னெச்சத்திற் கெய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று. (ப-ரை) செய்யுமெனெச்ச- செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தினுடைய, ஈற்று- இறுதியிலுள்ள, உயிர்மெய்-உயிர்மெய்யானது, சேறலும் கெடுதலும், செய்புளுள்- செய்யுளிடத்து, உம் உம்விகுதியானது, உந்தாகலும்- உந்து எனத்திரிதலும், முற்றேல்- அது முற்றாயின், உயிரும்- அதனிறுதியுயிராயினும், உயிர்மெய்யும் உயிர்மெய்யாயினும், ஏகலும்-கெடுதலும், உள-உளவாம், எ-று (பொ-ரை) செய்யுமென்னும் வாய்பாட்டுப்பெயரெச்சத்தினிறுதியுயிர்மெய்கெடுதலுஞ் செய்யுளகத் ததனிறுதியும்மையுந்தெனத்திரிதலும் அதுமுற்றாயின் அதனிறுதியுயிரேனுமுயிர்மெய்யேனுங்கெடுதலுமுளவாம் எ-று ※ செய்யுளுளும்முந் தாமெனவேயேனையவழக்கு செய்யு ளிரிடத்துமாமென்பதூஉம் முற்றேலெனவேசெய்யுமெனெச்சமுற்றுமாமென்பதூஉம் இறந்தது தழீஇயெண்ணிநின்றவிழிவுசிறப்பும்மைகளாணிவைபொருதலையல்ல வென்பதூஉம்பெற்றாம். முற்றுவிகுதியின்றியெச்சவிகுதியேமுற்றுவிகுதிப்பொருளாகியபால்காட்டி யொன்றாவழிநிற்றலின் எச்சமுற்றெனப்பட்டது, [வ-று] ஆம்பொருள் போம்பொருள் எ-ம்- "ஆம்பொருள்களாகுமவை யார்க்குமழிப்பன்னவாம்,, போம்புழை-வாம்புரவிவழுதி எனச்செய்யுமெனெச்சவீற்றுயிர்மெய்கெட்டன. இவை மகரவொற்றுநிற்றலின் வினைத்தொகையாகாவென்க. "நெல்லரியுமிருந்தொழுவர்-செஞ்ஞாயிற்றுவெயின்முனையிற்றெண்கடற்றிரைமிசைப்பாயுந்து,, "நீாக்கோழிகூப்பெயர்க்குந்து,, இவைஉம்உந்தாயின. அலந்தாம்-இவைபோம், (எ-ம்) "சாரனாடவென்றோழியுங்கலுழ்மே,, "அம்பலூருமவனொடுமொழிமே,, (எ-ம்) இவைமுற்றாய்உயிருமுயிர்மெய்யுங்கெட்டன. செய்யுமென்னு முற்றென்றேனுஞ் செய்யுமென்னுமேவன்முற்றென்றேனும் விதவாதுபொதுமையின் முற்றேலென்றமையின் "மாமறைமாக்கள் வருகுவங்கண்டோ,, "மூதுமலையந்தணீர்முன்னியதுரைமோ,, எனக்கேளும்ஊரையுட்என்னுமேவன்முற்றும் இவ்வாறுயிருமுயிர்மெய்யுங்கெட்டுவருதல்கொள்க. இவை இங்ஙனமாதலின், "சொற்றொறுமிற்றிதன்பெற்றி,, என்னுஞ் சூத்திரத்தானே ஆடுவாமோ என்னுந்தன்மைப்பன்மை முற்று "போவன்னூசலாடாமோ,, எனவெதிர்காலவிடைநிலை கெட்டுவருதலும் பிறவுங்கொள்க. (உஉ)

(௩௱௪௨) தொழிலுங்காலமுந் தோன்றிப்பால்வினை-யொழிய நிற்பது வினையெச்சம்மே. *

(எ-ன்) வினையெச்சமாமாறுணர்-ற்று. (ப-ரை) தொழிலும் - செயலும், காலமும் - பொழுதும், தோன்றி விளங்கி, பால் - பாலுடனே, வினை - வினையானது, ஒழிய - எஞ்ச, நிற்பது - நிற்பன, வினையெச்சம் வினையெச்சவினை வினைக்குறிப்புக்களாகும், எ-று. (பொ-ரை) பின்னர்ச்செய்து செய்புமுதலியவாய்விதந்துகூறும் வாய்பாடுகளின்கட் டொழிலும் இறப்பு நிகழ்வு எதிர்வு என்னுமுக்காலங்களுமுறையேதோன்றிவினைமுற்றுதற்குவேண்டும்பாலொன்றுந் தோன்றாது அப்பாலுடனேவினையொழியநிற்பன வினையெச்சவினைவினைக்குறிப்புக்களாம். எ-று. ※ வினையெனப்பொதுப்படக்கூறினமையின் வினைவினைக்குறிப்பின் விகற்பங்களும் அவ்வினையாலணையும்பெயருந்தொழிற்பெயருங்கொள்க. [வ-று] அறமன்றி - அறமலலாமல் - அருளின்றிச்செய்தான் - செய்யான் - செய்த - செய்து செய்தவன் செய்தல் - இலன் - இல்லாத - இல்லாது இன்மை இல்லாமை - எனவரும் - செய்தானென்னுந்தெரிநிலைவினைக்கட்செய்தலென்னுந்தெரிநிலைத்தொழிற்பெயர்போல இல்லெனனுங்குறிப்புவினைக்கண் இன்மை இல்லாமை என்பனகுறிப்புத் தொழிற்பெயராய்நிற்றலின் அறமன்றியின்மை - "அறமன்றியில்லாமை" நீயலாற் பிறிதுமற்றின்மையெனமுடிந்துநின்றன. பிறவுமன்ன தெரிநிலைவினையெச்சங்கட்குதாரணம் வருஞ்சூத்திரங்களானுணர்க "காலமும்வினையுந் தோன்றிப்பாறோன்றாது - வினைகொள் ளுமது வினையெச்சம்மே" என்பது அகத்தியம். (௨௩)

(௩௱௪௩) செய்துசெய்பு செய்யாச்செய்யூச் - செய்தெனச் செயச்செயின் செய்யியசெய்யியர் - வான்பான்பாக்கின வினையெச்சம்பிற-வைந்தொன்றாறுமுக் காலமுமுறைதரும். *

(எ-ன்) மேற்றொழிலுங்காலமுந்தோன்றியென்றவினையெச்சவாய்பாடுகளிவையெனவகுத்துணர்-ற்று. (ப ரை) செய்து—செய்யியர், செய்து என்பது முதல்செய்யியர் என்பதீறாகிய ஒன்பதுவாய்பாட்டால் வருவனவும், வான்பான்பாக்கு - இம்மூன்றுவிகுதிகளைக் கொண்டுவருவனவும், இன - இவைபோல்வனபிறவும், வினையெச்சம் - வினையெச்சவினைகளாம், ஐந்து - முன்னையவைந்தும், ஒன்று - நடுநின்ற ஒன்றும், ஆறு - பின்னையவாறும், முக்காலமும் - இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலமும், முறை - முறையாக, தரும் - காட்டுவனவாம். எ-று. (பொ-ரை) செய்தென்பதுமுதலியவொன்பதுவாய்பாட்டான்வருவனவும்வான்பான்பாக்கென்னுமூன்றுவிகுதியவாய்வருவனவுமிவைபோல்வனபிறவும் வினையெச்சவினைகளாம்இவற்றுண்முன்னையவைந்துமிறந்தகாலமுஞ்செயவெ

ன்ப தொன்றுநிகழ்காலமுமொழிந்தவாறு மெதிர்காலமுங் காட்டு வனவாம், எ-று இவற்றுட்செய்தென்பது இடைநிலையானும் ஏனைய இறுதிநிலையானுங்காலங்காட்டின. வான்பான்பாக்கென்ப ன அவ்வெச்சவிகுதிபவாகிய மொழிகளையுணர்த்திநின்றகுறிப்பு ச்சொல். இன்னவென்றமையால் "அற்றுலவறிந்துண்க," "ஒலி த்தக்கா லென்னுமுவரி,"—"காண்டலு மிதுவே சொல்லும்," என ச் செயினெனனும்வாய்பாடுபோல் எதிர்காலங்காட்டுவனவும்— "கூறுமற்குறித் ததன்மேற்சொல்லுங் கடுங்கூளி," — "கூறுமை நோக்கிக் குறிப்பறிவான்,"—"ஈத லியையாக் கடை," என எதிர்ம றைவிகற்பங்களாய்வருவனவும் இத்தொடக்கத்துக் குறைச்சொல் லாய் வினையெஞ்சநிற்பனவெல்லாங் கொள்க. "ஒலித்தக்கால்," எ ன்புழிக் ககரவொற்றிடைமிகுத்தமையிற் காலமென்பது பெய ரெச்சங்கொண்டபெயரன்று வினையெச்சவிகுதியென்பதுபொ ருந்தும். ஈதலியையாக்கடை என்புழிக்கடையென்பது எதிர்ம றைப்பெயரெச்சங்கொண்ட இடப்பெயரென்று லென் னெனின், அதனைக் திட்பப்பொருளின்றி ஈதலியையாதாயினெனனும் பொருட்டாய்நிற்றலின்வினையெச்சவிகுதியேயாமென்க. பிறவுமெ ன் ... ... வென்றமையானே, செய்து என்னும்வாய்பாட்டெச்ச ... ... - ஓடநிலையின்றி, ஆடிக்கொண்டான்- தழீஇக்கொண்டா ... - என இறுதிநிலைதன்னியல்பினின்றும் விகாரமாயும் புக்குநின் ... என ... விகாரமாயுங்காலங்காட்டுவன ... செ ய்வ ... வாய்பாட்டெச்சம் எதிர்காலத்திற்கு முரித்தெனவும் இவ்வெச்சங்கட்குவி... நிற்குகூறுதனவெல்லா மமைத்துக்கொள்க.()

(௩௱௪௪) அவற்றுள், முதலின்னான்கு மீற்றின்மூன்றும்- வினை முதல்கொள்ளும் பிறவும்மற்கும் பிற. ✱

(எ-ன்) இவ்வெச்சங்கட்காவதோர் புறனடையுணர்- ற்று. (ப- ரை) அவற்றுள்- முன்சூத்திரத்துட்சொல்லிய வினையெச்சங்களு ள், முதலில்- முதலிலுள்ள,நான்கும்- செய்து செய்பு செய்யா செய்யூ என்கிறநான்கும், ஈற்றில்- இறுதியிலுள்ள, மூன்றும்-வா ன் பான் பாக்கு என்கிற விகுதிகளையுடையமூன்றும், வினைமுத ல் -செய்பவனை,கொள்ளும்- கொண்டுமுடியும், பிற- நடுவிலுள்ள -செய்தென செய செயின் செட்பிய செய்யியர் என்கிற ஐந் தும் இவைபோலவனபிறவுமென்றதனால்வருஞ் செய்தால்முதலி யவையும் வினையெச்சக்குறிப்புக்களும் ஆகிய இவைகள், பிறவும் -செய்பவனையன்றிமற்றவைகளையும், எற்கும்- கொண்டுமுடியும், எ-று. (பொ- ரை.) மேலைச்சூத்திரத்து முதற்கட்கூறிய செய்து -செய்பு- செய்யா- செய்யூ- என்னுநான்கும்இறுதிக்கட்கூறியவா

ன்- பான்- பாக்கு- என்னு மூன்றும் வினைமுதலைக் கொண்டு முடியும் இடைநின்ற, செய்தென - செய- செயின்- செய்யிய- செய்யியர்- என்னும் ஐந்தும் இன்னவென்றதனால் வருவனவும் வினையெச்சக்குறிப்புக்களும் வினைமுதலையும் அஃதல்லாத பிறவற்றையுங் கொண்டு முடியும். எ-று. ❁ இடையின் ஐந்துமென்னாது பிறவென்றார் இன்னவென்றதனான் வருவனவும் வினையெச்சக்குறிப்புக்களுந் தழீஇக்கோடற்கென்க. [வ-று.] நடந்து வந்தான்- "வாளொடு கனைபொருள் வந்து தோன்றினான்."—"எண்ணணிந் தணிக ருமம்"—"பரீஇயுயிர் செகுக்கும்"—"ஐவரொடு சினைஇ நிலந்தலைக்கொண்ட" (எ-ம்) "புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த."—"தெரிபு தெரிபு குத்தின வேறு" (எ-ம்) "கல்லாக் களிப்பர் தலையாயார்."—"நிலங்கிளையா நாணி நின்றேனிலை." (எ-ம்) "படுமகன் கிடக்கை காணூஉ- ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே" "நிலம்புடைபெயர எழுதரு வலம்படு குஞ்சரம்." (எ-ம்) "கொல்வான் கொடித்தானை கொண்டெழுந்தான்" (எ-ம்) "அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்" (எ-ம்) "புணர்தரு செல்வந் தருபாக்குச் சென்றான்." (எ-ம்) முதலி னான்கு மீற்றின் மூன்றும் வினைமுதல் கொண்டன.—"காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி பசித்தெனக் - கடுங்கண் யானைக் கோடு நொடுத் துண்ணும்" (எ-ம்) "கோவாவாரம் வீழ்ந்தெனக் குளிர்கொண்டு - பேளநாறுந் தாழ்நீர்ப் பனிச்சுனை." (எ-ம்) உண்ண வந்தான்- "கொள்ளக் குறைபடாக் கூழுடை வியனகர்." (எ-ம்) மழைபெய்ய நெல்விளைந்தது "மோப்பக் குழையு மனிச்சம் முகந்திரிந்து- நோக்கக் குழையும் விருந்து" (எ-ம்) "தாம் வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங் கௌவை யெடுக்குமிவ்வூர்." (எ-ம்) "காணியவாவாழி தோழி." (எ-ம்) "மாணிழை யரிவை காணிய வொருநாட் - பூண்க மாக நின் புனைவினை நெடுந்தேர்." (எ-ம்) "பசலையுண்ணியர் வேண்டும்." (எ-ம்) "கொற்கைச் சோழர் கொங்கர்ப் பணியியர்- பழையன் வேல்வாய்த்தன" (எ-ம்) இடைப்பினைந்தும் வினைமுதலும் பிறவுங் கொண்டன.— உண்டாலுவக்கும்- உண்டாற் பசிதீரும்—"விண்ணின்று பொய்ப்பின்"—"விருந்தின்றி யுண்ட பகல்" என இன்னவென்றதனான் வருவனவும் வினையெச்சக்குறிப்பும் வினைமுதலும் பிறவு மேற்றல் காண்க. நடந்து வந்தவன்-வருதல்- இடையிடுபு தொடுத்தவன்-தொடுத்தல்- (எ-ம்) "காந்தளஞ்சிலம்பிற் சிறுகுடி பசித்தெனக்- கடுங்கண் யானைக்கோடு நொடுத் துண்டவன்." உண்டல்- "கோவாவாரம் வீழ்ந்தெனக் குளிர்கொண்டு பேளநாறுவது" நாறல்- உண்ண வந்தவன்-வருதல்- மழைபெய்ய நெல்விளைவது- விளைதல்- என வினையாலணையும் பெயருந் தொழிற்பெயரும் வருவித்து, வினைமு

துலும் வினைமுதலோடு பிறவுமேற்றல்காண்க. பிறவுமன்ன. இச்
சூத்திரத்துள் வினைமுதல்கொள்ளும் பிறவுமேற்குமென்பதற்கு
வினைமுதல் வினைகொள்ளும் பிறவினைகொள்ளுமெனப் பொரு
ளுரைத்தாலென்னையெனின், அதுபொருளாயின் "வினைமுதல
வினைகொளும் பிறவினைகொளும்" எனக்கூறினும் யாப்பமை
யுமாதலின் இங்ஙனங்கூறவேண்டும் அவ்வாறு கூறாமையானும்
வினைகொண்டுமுடியுமென இதற்குக்கூறிற்றாயின் முன்னர்க்கூ
றியபெயரெச்சத்திற்கும் பெயர்கொண்டுமுடியுமெனக் கூறவே
ண்டும் அவ்வாறுகூறாமையானும் பொதுவியலுள் "பெயர்வினை
யும்மை" என்னுஞ்சூத்திரத்தானேமூற்றுமுறைந்துநின்ற இப்
பெயரெச்ச வினையெச்சங்கண் முதலியவாக இவ் வதிகாரத்துள்
விதந்தும் விதவாதும் பரந்துகிடந்தவெச்சங்களை யெல்லாமெடு
த்து ஒன்பதும் ஒன்றும் எனத்தொகைதந்து தத்தமெச்சங்கொ
ள்ளுமெனக்கூறுதலானும் இங்ஙனம்வினைமுதற்பொருண்மையி
னையும் அஃதொழிந்த பிறபொருண்மையினையுங் கொள்ளுமெ
னக்கூறலே நூலாசிரியர்கருத்தென்க. அங்ஙனமாயின் இவ்விரு
வகையெச்சங்களும் பெயரினையும்வினையினையுங் கொண்டுமுடிந்
து நிற்க உதாரணங்காட்டிய தென்னையெனின், பெயரெச்சம்
பெயரெஞ்சநிற்றலும் வினையெச்சம் வினையெஞ்சநிற்றலும் வி
னைமுதல்கோடலும் பிறகோடலுந் தோன்றுதற்பொருட்டன்றிப்
பெயரினையும்வினையினையுங்கொண்டுமுடிதறோன்றுதற்பொருட்
டன்றென்க. இவ்வினையெச்சங்கள், நடந்துவந்தான் - மழைபெ
ய்யநெல்விளைந்தது-எனக்காரணப்பொருட்டாயும், நெல்விளைய
மழைபெய்தது - எனக் காரியப்பொருட்டாயும், உண்ண வந்
தான்- எனக்காரணகாரியமென்னும் இருபொருட்டாயும்—"கடு
க்கமல முகங்காட்டக் கருநெய்தல் கண்காட்டும்." எனக் காரணகா
ரியமிரண்டுமின்றியும், உழுதுபயன்கொண்டான்வேந்தன்-என த்
தலைமைபற்றியும், உழுதுபயன்கொண்டான்வறியன்- என அஃதி
ன்மைபற்றியும் வருதல்காண்க. (உ௫)

(௩௱௪௫) சினைவினைசினையொடு முதலொடுஞ்செறியும் *

(எ-ன்) மேல் வினைமுதல்கொள்ளுமென்றவற்றிற்கோர் புற
னடையுணர்-ற்று. (ப-ரை) சினைவினை - முதலினான்கு மீற்றின்
மூன்றுமென்ற வினையெச்சங்கள் சினைவினையாயின் அவை, சினை
யொடும் - முன்வினைமுதல்கொள்ளுமென்றவிதியினாலே சினையு
டனேயன்றி, முதலொடும் - முதலுடனும், செறியும்- முடியும்,
எ-று (பொ-ரை) முதலினான்கு மீற்றின் மூன்றுமென்றவினையெ
ச்சங்கள் சினைவினையாயின் அவை வினைமுதல்கொள்ளுமென்றவி
தியானே சினையொடுமுடிதலேயன்றி முதலுடனுமுடியும் அஃ

டைமுடியுமாயினுஞ்சினைவொடுமுடிதற்கு ஒற்றுமையுண்மையி
ன் வினைமுதல்கொண்டதேயாம் எ-று. ❁ [வ-று.] காலிற்றுவீழ்ந்
தான்; காலிறுபுவீழ்ந்தான்-காலிறவீழ்ந்தான்-காலிறாஉவீழ்ந்தா
ன் - (எ-ம்) கண்வருவான்கதிரவற்றொழுதார்- கண்டவழுப்பான்க
திரவற்றொழுதார்-கண்வருபாக்குக்கதிரவற்றொழுதார் (எ-ம்) மா
டு காலிற்றுவீழ்ந்தது (எ-ம் வரும். பிறவுமன்ன. காலிற்றுவீழ்ந்
தான் - என்புழிவீழ்தற்கு வினைமுதலிமுதற்பொருளாம். அஃதி
ன்றிச்சினைப்பொருளாயின், கண்விழித்துப்பார்த்தான் - செல்வ
மிக்குயர்ந்தான்- கண்பெரியன்- நாடுபெரியன் - செல்வம்பெரி
யன்- என்றாற்போல "உயர்திணைதொடர்ந்த பொருண்முதலா
றும்" என்னுஞ்சூத்திரத்தான் அமைவதாமெனக. பிறவுமன்ன.()

(௩௱௪௯) சொற்றிரியினும்பொருடிரியா வினைக்குறை. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) சொல் - முதலிருன்கு மீற்றின்
மூன்றுமென்ற வினையெச்சவாய்பாடுகளாக, வினைக்குறை - பிற
வினையெச்சவாய்பாடுகள், திரியினும்- வேறுபடினும், பொருள்
- அவற்றின்பொருள்கள்- திரியா- வேறுபடாவாம். எ-று- (பொ-
ரை) முதலிநான்கு மீற்றின்மூன்றும் வினைமுதல்கொள்ளுமெ
ன்ற வினையெச்சவாய்பாடுகளாகப் பிறவினையெச்சவாய்பாடுகடி
ரியினும் அவற்றின்பொருடிரியா. எ-று. ❁ [வ-று] ஞாயிறுப
ட்டுவந்தான் - கோழிகூவிப் பொழுதுபுலர்ந்தது-"உரற்காலியா
னை யொடித்துண்டெஞ்சிய யாவணீழற்றுஞ்சுஞ் செந்நாவேற்
ற" எ-ம்) யான்கொள்வான் பொன்கொடுத்தார் - (எ-ம்) வ
ரும். *பிறவுமன்ன. இவை செயவெனெச்சஞ்செய்து செய்வான்
எனத்திரிந்துநின்றும் அச் செயவெனெச்சமுடிபேற்றுநின்றன.
எனவே ஞாயிறுபட்டுவந்தான் என்பதற்கு ஞாயிறுபடவந்தா
ன் எனப்பொருளுரைக்கவேண்டுமென்பதாயிற்று. பிறவுமன்ன.
வினைக்குறையெனப் பொதுப்படக்கூறினமையான் வினையெச்
சங்களொன்றொன்றாய்த் திரிந்துவருவனபிறவு முளவேலவை
யுங்கொள்க. (௨௭)

(௩௱௫௰) ஆக்கவினைக்குறிப் பாக்கமின்றியலா. *

(எ-ன) வினைக்குறிப்பிற்காவதோர் விதியுணர்-ற்று. (ப-ரை)
ஆக்கம்- ஆக்கத்தால்வருகின்ற; வினைக்குறிப்பு - வினைக்குறிப்புச்
சொல்லுகள், ஆக்கம்- ஆக்கசசொல்லுகள், இன்று - இல்லாமல்,
இயலா- வாராவாம். எ-று. (பொ-ரை) ஆக்கத்தால்வரும் வினைக்
குறிப்புச்சொற்கள் ஆக்கச்சொல்லின்றி வாரா. எ-று. ❁ வேற்று
மைப்புணர்ச்சிக்கு வேற்றுமையுருபுகள் விரிந்துந்தொக்கும் அ
தனுடைமையாய் நின்றாற்போல ஆக்கவினைக்குறிப்பிற்கு ஆக்கச்
சொல் விரிந்துந்தொக்கும் அதனுடைமையாய்நிற்றலின் ஆக்க

மின்றியலாவென்றார். [வ-று] சாத்தனல்லனாயினான்- சாத்தனல்லன்- கல்வியாற்பெரியனாயினான்- கல்வியாற்பெரியன்- கற்றுவல்லராயினார்- கற்றுவல்லர்- "குருதிபடிந் துண்டகாகமுருவிழந்து குக்கிற்புறத்தசிரல்வாயசெங்கண்ண." என ஆக்கச்சொல்விரிந்தும் தொக்கும் வந்தன.— எனவே நல்லனென்பது இயற்கைவினைக்குறிப்பாயின் விரிதறொகல் என்னுமிரண்டனுள் ஒருவாற்றானும் ஆக்கம்வேண்டாது சாத்தனல்லனென்றே வருமென்பதாயிற்று. இங்ஙனமாகவே வினைக்குறிப்பு ஆக்கவினைக்குறிப்பென்றும் இயற்கைவினைக்குறிப்பென்றும் இருவகைப்படுமெனவும் அவையிவ்வாறு நடக்குமெனவுங் கூறினாராயிற்று. வினையாயினும் ஆக்கத்தைநோக்கி இயற்கையெனப்பட்டது. இச்சூத்திரத்திற்கு வினையெச்சங்கொண்டுமுடியும் ஆக்கவினைக்குறிப்பிற்கு ஆக்கச்சொல் விரிந்தேவருமென்றுந் தொக்குவருவன செய்யுள் விகாரமென்றும் பொருள்கூறுவாருமுளர். வினையெச்சங்கொண்டுமுடியும் ஆக்கவினைக்குறிப்பென விதவாமையானும் ஆக்கவினைக்குறிப்பென்றதனையானே வினையெச்சங்கொண்டுமுடியும் வினைக்குறிப்பென்பதுதாமே போதருமெனிற் கல்வியாற் பெரியன் எனப்பிறவழியும் ஆக்கவினைக்குறிப்பு வருதலானும் அஃதியாண்டுவரினும் ஆக்கச்சொல்விரிந்தேதும் தொக்கேனும் ப்வேண்டியேதிற்றலானும், இவர்கற்றுவல்லர்- எனவழக்கின்கண்ணும் ஆக்கச்சொற்றொக்குவருதலானும், "காரணமுதலா வாக்கம்பெற்றும்" என்னுஞ்சூத்திரம் மாறுகொளக்கூறலாய் முடியுமாதலானும், அது பொருந்தாதென்க. (உ௬)

(௩௱௪௨) பல்லோர்படர்க்கை முன்னிலைதன்மையிற் - செல்லாதாகுஞ் செய்யுமென்முற்றே. *

(எ-ன்) செய்யுமென்னெச்சந் திணைபாலிடங்கட்குப் பொதுவாமெனவிதித்தலின் அவ்வெச்சத்தானாகிய செய்யுமென்னு முற்றும் அவ்வாறு பொதுவாமெனப் போந்தவற்றுட் சிலபாலிடங்களிற்செல்லாது இம்முற்றெனவிலக்குதலினெய்தியதொருமருங்குமறுத்தனுணர்-ற்று.(ப-ரை)செய்யுமென்முற்று-செய்யுமென்னுமுற்றானது,பல்லோர்படர்க்கை (யில்.)- உயர்திணைப்பன்மைப்படர்க்கையினும்,முன்னிலை (யில்.)- முன்னிலையினும், தன்மையில்- தன்மையினும், செல்லாதாகும்- செல்லாது, எ-று. (பொ-ரை) உயர்திணைப்பன்மைப்படர்க்கையினும் முன்னிலையினும் தன்மையினும் செல்லாது செய்யுமென்னுமெச்சத்தானாகுஞ் செய்யுமென்னுமுற்று. எ-று. ※ "பல்லோ ரொழிந்த

படர்க்கைக் குரித்துச் செய்யு மென்னத் தெரித்திடு முற்றே." எனச் சூத்திரஞ்செய்யாது எய்தியதொருமருங்கு மறுத்தற்கு ன்றப் பல்லோர்படர்க்கை முன்னிலைதன்மையிற் செல்லாதென்றும், வினைமுற்றுக்கள்போற் றன்னியல்பினில்லாது எச்சத்தாலுயது இம்முற்றென்பதுதோன்ற ஆகுஞ்செய்யுமென்முற்றென் றுங்கூறினார். இப்பாலிடங்களை விலக்கவே பொழிந்தபடர்க்கைநாற்பாலினுஞ் செல்லுமென்பதுபெற்றாம். [வ-று] அவனுண்ணும் - அவளுண்ணும் - அதுவுண்ணும் - அவையுண்ணும் எனவரும். (௬௯)

(௩௱௪௯) யாரென்வினாவினைக் குறிப்புயர்முப்பால். *

(எ-ன்) திணைப்பொதுவன்றிப் பாற்பொதுவினையாமாறுணர்-ற்று. (ப-ரை) வினா- வினாப்பொருளைத்தருகிற, யாரென்-யாரென்கிற, வினைக்குறிப்பு- வினைக்குறிப்புமுற்று, உயர்முப்பால்--உயர்திணைமுப்பால்களுக்கும் பொதுவினையாம். எ-று (பொ--ரை) வினாப்பொருண்மையைத்தரும் யாரென்னும்வினைக்குறிப்புமுற்று உயர்திணைமுப்பாற்கும் பொதுவினையாம். எ-று. ✻ திணைப்பொதுமைக்கட்கூறிய பொதுவினை யென்பதனையீண்டும் வருஞ்சூத்திரத்தும் தந்துரைத்துக்கொள்க. [வ-று] அவன்யார்- அவள்யார்- அவர்யார்- எனவரும் — "உளைதைகூட் டுண்ணுமூகுபனி யாமத்தெங்- கோதைகூட் டுண்ணியர்தாம் யார்மன் - போதெல்லாந் - தாதொடு தாழுந்தார்க் கச்சி வளநாடன் - றாதொடு வாராத வண்டு." என அஃறிணைக்கண்வருதலும், "நாணுமோன் றுள்ள மார்." என யாரென்ப தாரெனமரீஇ வருதலும், புதியனபுகுதலாமென்க. (௩௰)

(௩௱௫௰) எவனென்வினாவினைக் குறிப்பிழியிருபால். *

(எ-ன்) இதுவுமஃது. (ப-ரை) வினா- வினாப்பொருளைத்தருகிற, எவனென்- எவனென்கிற, வினைக்குறிப்பு- வினைக்குறிப்புமுற்று, இழியிருபால் - அஃறிணையிருபாலுக்கும் பொதுவினையாம், எ-று. (பொ-ரை) வினாப்பொருண்மையைத்தரும் எவனென்னும் வினைக்குறிப்புமுற்று அஃறிணையிருபாற்கும் பொதுவினையாம். எ-று. [வ-று] அஃதெவன்- அவையெவன்-எனவரும். இஃதென்னெனவும் என்னையெனவுமரீஇ வருதல் புதியனபுகுதலாம். உயர்முப்பாலென்றும் இழியிருபாலென்றும் விதந்தமையின் யாரென்றும் எவனென்றும் ஈண்டுப்போந்த சொற்கள் பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் பொதுவாகிய- யாவரென்னுஞ்சொல் யார் ஆர் என மரீஇயஉயர்திணைப் பன்மைச்சொ

லினும் இவ்வாறுபெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் பொதுவாகிய எவனென்னும் உயர்திணையாண்பாற்சொல்லுமல்ல வென்பதுபெற்றாம். (௫௰)

(௩௱௫௧) வினைமுற்றேவினை யெச்சமாகலுங்- குறிப்புமுற்றீரெச்ச மாகலுமுளவே. ※

(எ-ன்) இருவகைமுற்றிற்கு மாவதோர்புறனடையுணர்-ற்று. (ப-ரை) வினைமுற்றே- தெரிநிலைவினைமுற்றே, வினையெச்சமாகலும்- வினையெச்சமாகிவருதலும், குறிப்புமுற் (றே) - வினைக்குறிப்புமுற்றே, ஈரெச்சமாகலும் - வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும்வருதலும், உள - உளவாம் எ-று. (பொ-ரை) வினைமுற்றே வினையெச்சமாகிவருதலும் வினைக்குறிப்புமுற்றேவினையெச்சமாகியும் பெயரெச்சமாகிவருதலு முளவாம். எ-று. ※ ஏகாரத்தைப் பின்னுங்கூட்டுக. குறைச்சொல்லாகாது பால்காட்டிநிற்றலின் முற்றென்றும் வினையெச்சப் பயனிலையினையும் பெயரெச்சப்பயனிலையினையும் அவாவிநிற்றலி னெச்சமென்றும் இவைசிறுபான்மையவாகலின் ஆகலுமென்றுங் கூறினார். [வ-று] "காணான்கழிந்த வைகலும்முண்டென் றொருநாள்," "மோயினளுயிர்த்தகாலை." "முகந்தனர்கொடுப்ப," "விளிப்பது பயிலுங் குறும்பார்துந் துபியொடு," "எருவை நுண்டாது குடைவனவாடி," (எ-ம்) "பெயர்த்தனென்முயங்கயான்," "மக்களுளிரட்டையாய் மாறினம்பிறந்தியாம்," (எ-ம்) "சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப." "கருங்கோட்டின்னிய மியக்கினிர்கழிமின்," (எ-ம்) மூவிடத்தைம்பாலினும்வினைமுற்று வினையெச்சமாயின.—"வரிபுனைவில்ல னொருகணை தெரிந்துகொண்டு."—"அளிநிலை பெறாஅ மரியமுகத்தாள்- விளிநிலைகொள்ளாள்,"—"உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து."—"விழுமியது கழிவதாயினும்," — "நிலமிசைப்புரளுங் கையவெப்துயிர்த்து," (எ-ம்) "துணையினெஞ்சினேனன் றுயருழந்திணையேன்."—"நீர்வார்கண்ணேந்தொழுது நிற்பழிச்சி." (எ-ம்) "நீர்வார்கண்ணை நீயிவணொழிய."—"வெவ்வேல்வலத்தினிர் பொருடரல்வேட்கையினுள்ளினிர்," (எ-ம்) மூவிடத்தைம்பாலினும் வினைக்குறிப்புமுற்று வினையெச்சக் குறிப்பாயின—"வெந்திறலினன்விறல்வழுதி பொடு,"—"அருஞ்சாயலளாயிழைமுன்."—"கடற்றுணையர் கழல்வேந்தரை."—"பெருவரைமிசையது நெடுவெள்ளருவி." — "புன்றலோமை யகசுரனிறந்தோரோ," (எ-ம்) "பெருவேட்கையேனெற் பிரிந்து."—) "கண்புரைகாதலை மெம்முள்ளான்." (எ-ம்) "உலங்கொடேடாளினை யொருநின்றனல்." "வினைவேட்கையிர்வீரர்வம்மின்." (எ-ம்)

மூவிடத்தைம்பாலினும் வினைக்குறிப்புமுற்றுப் பெயரெச்ச
க்குறிப்பாயின.— இவற்றுள் வரும்பெயர்கள் முற்றுப்பயனி
லையாகாது பெயரெச்சப் பயனிலையாமாறுகாண்க.— இனிவ்வினை
முற்றுக்கள் சொற்றிரியினும்பொருடிரியா வினையெச்சமாய்
வருமாறு, "விண்ணிற்றாவியிட்டான் வந்துவீழ்ந்தன."— "பா
யுமாரிபோற் பகழிசிந்தின- ராயர்மத்தெறி தயிரினுயிரினர்"—
"கானவ ரிரியவில்வாய்க் கடுங்கணைதொடுத்தலோடு- மானிரைபெ
யர்ந்ததாய ராரத்தன ரணிந்த திண்டோ - டானெருங் குறுகடங்கி
நின்று திமிர்ந்தது சரம்பெய்மாரி- போனின்ற தென்பமற்
றைப்பொருவருஞ்சிலையினற்கே."— "செய்யோன்செழும்பொற்சு
ரத்தென்றது சென்றதாவி." எனவரும் பிறவுமன்ன. இனி எண்
ணின்கணின்ற எதிரதுதழீஇய எச்சவும்மையானே உண்டான்சா
த்தனார்க்குப்போனான்- என்புழி உண்டசாத்தனார்க்குப்போனா
ன்- எனப் பொருள்படுதலின் வினைமுற்றுப் பெயரெச்சமாத
லுமுளவெனவும், வெறுத்தஞானி விட்டையடைந்தான் - சாத்த
னுழுதுவந்தான்- என்புழி வெறுத்தான்ஞானி சாத்தனுழுதான்
எனப்பொருள்பட்டு எச்சமுற்றாதலுமுளவெனவும், "பெறுவ
துகொள்வாருங் கள்வருநேர்" என்புழி நேர் நேர்வானென முத
னிலைத்தனிவினையும் வினைமுற்றாதலுமுளவெனவும், "வரிப்புனைப
ந்து."— "ஆறுவேறுவகையின்"— "செய்தக்கவல்ல செயக்கெ
டும்."— "மண்மாண் புனைபாவையற்று" என்புழி வரிந்து
அற்று செய்ய மாட்சிமைப்பட என்றுபொருள்பட்டு முதனி
லைத்தனிவினைகள் வினையெச்சமாதலுமுளவெனவுங்கொள்க. (௬உ)

---

வினையியல்

முற்றுப்பெற்றது.

---



மூன்றாவது

# பொதுவியல்



௩௱௫௨. இருதிணை யாண்பெண்ணு ளொன்றனை யொழிக்கும் *
பெயரும் வினையுங் குறிப்பினானே.

(எ-ன்.) மூன்வந்த பெயர்க்கும் வினைக்கும் பின்வரு மிடைக்கு முரிக்கும் பொதுவிலக்கணங்களைச் சிங்கநோக்காக இவ்விய லானுணர்த்துவானிடை நிறீஇக்கூறலின் இதுபெயர்க்கும் வினைக்கு முரியதோ ரிலக்கண முணர் - ற்று. (ப - ரை.) இருதிணை - இருதிணையினும் — பெயரும் - ஆண்பால் பெண்பால்களுக்குப் பொதுவாகிய பெயர்ச்சொற்களும் — வினையும் - அப்படிப்பட்ட வினைச்சொற்களும் — ஆண்பெணுள் - அவ்வாண்பால்பெண்பால்களுள் — ஒன்றனை - ஒருபாலை — ஒழிக்கும் - நீக்கும் — குறிப்பினான் - குறிப்பினால். எ-று. (பொ-ரை.) உயர்திணை யாண்பால் பெண்பாலென்னு மிருபாற்கும்பொதுவானபெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் அஃறிணையாண்பால் பெண்பாலென்னு மிருபாற்கும்பொதுவானபெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் அவ்விருபாலு ளொருபாலை யொழிக்குங் குறிப்பினான். எ-று. ※ [வ-று.] ஆயிரமக்கள்தாவடிபோயினார் என்புழிமக்களென்னுமுயர்திணையிருபாற்கும் பொதுப்பெயரும் போயினாரென்னு முயர்திணையிருபாற்கும் பொதுவினையுந்தாவடியென்னுங்குறிப்பினாற் பெண்பாலையொழித்தன. பெருந்தேவிபொறையுயிர்த்தகட்டிற்கீழ்நால்வர்மக்களுளர் என்புழிமக்களென்னும் பொதுப்பெயரும் உளரென்னும்பொதுவினைக்குறிப்பும்பொறையுயிர்த்தலென்னுங்குறிப்பினானுயர்திணையாண்பாலை யொழித்தன. இப்பெற்றங்களுழவொழிந்தன என்புழிப் பெற்றங்களென்னு மஃறிணை யாண்பெணிருபாற்கும் பொதுப்பெயரும் ஒழிந்தனவென்னு மஃறிணையாண்பெணிருபாற்கும் பொதுவினையும் உழவென்னுங்குறிப்பினாற்பெண்பாலையொழித்தன. இப்பெற்றங்கள் பால்சொரிந்தன என்புழிப் பெற்றங்களென்னும் பொதுப்பெயருஞ்சொரிந்தனவென்னும் பொதுவினையும் பாலென்னுங் குறிப்பினான் ஆண்பாலையொழித்தன. பிறவுமன்ன. (க)

௩௱௫௩. பெயர்வினையிடத்து னளரய வீற்றய - லாவோவாகலுஞ் செய்யுளுளுரித்தே. *

(எ-ன்.) பெயர்க்கும்வினைக்குஞ்செய்யுட்கணுவதோ ரிலக்கண முணர்-ற்று. (ப-ரை.) பெயர்வினையிடத்து - பெயரிடத்தும்வினையிடத்தும் — னளரய வீற்று - னகர ளகர ரகர யகர வீற்றிற்கு — அயல் - அயலிலுள்ள — ஆ - இறுதிமுதல்ஆகாரம் — ஓவாகலுஞ்

ம்-ஓகாரமாதலும்---செய்யுளுள்-செய்யுளிடத்து—உரித்து-உரித்தாம். எ-று. (பொ-ரை.) பெயர்க்கண்ணும்வினைக்கண்ணும் னகாரனகார ரகார யகாரவீற்றயனின்றவிகுதிமுதலாகாரம் ஓகாரமாதலுஞ்செய்யுளிடத்துரித்தாம். எ-று. ❁ [வ-று.] "வில்லோன்காலனகழலே.,,- "தொடியோண் மெல்லடி மேல்வருஞ்சிலம்பே,,- நல்லோர் யார்கொ லளியர்தாமே.,, - "பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்.,,- எ-ம்- "படைத்தோன்மன்றவப் பண்பி லாளன்.,,- "நல்லோண்மன்ற கூப்பெயர்ந் தோளே.,,— "சென்றோ ரன்பிலர்தோழி.,, "வந்தோய் மன்றதெண்கடற் சேர்ப்ப.,,-எ-ம்-பெயர்க்கண்ணும்வினைக்கண்ணும்வந்தது. வினையாலணையும் பெயர்க்கணன்றி வினைக்கண்ணுமோரோவழிஆ ஓவாதலின் அதனையுமுடன் கூறினார். உம்மை யெதிர்மறையும்மையாக்கி வில்லோன் வில்லானென வொன்றேயாதலும்ஆகாமையும் இன்னும்அவ்வும்மையானே செக்கான் வண்ணானென மற்றொன்றாகாமையும்அதனையாக்கவும்மையாக்கி "பழமுதிர்சோலை மலைகிழவோனே,,.என ஆகாரமேயன்றி அகரமுமோகாரமாதலுங்கொள்க.

௩௱௫௰௬. உருபும்வினையு மெதிர்மறுத் துரைப்பினுந் - திரியாதத்தமீற் றுருபினென்ப. ❋

(எ-ன்.) வேற்றுமையுருபுகட்கும் வினைச்சொற்கட்குமாவதோரிலக்கண முணர்-ற்று. (ப-ரை.) உருபும் -எட்டுவேற்றுமையுருபுகளும்—வினையும் - மூவகைவினைச்சொற்களும் — எதிர்மறுத்து-எதிர்மறுத்தல்செய்து — உரைப்பினும் - சொல்லுமிடத்தும்—தத்தமீற் (றின்) தத்தமீற்றினின்றும்— உருபின் - அவ்வுருபினின்றும்—திரியா - வேறுபடா—என்ப-என்றுசொல்லுவர்புல்வர். எ-று. (பொ-ரை.) எட்டுவேற்றுமையுருபுகளுமூவகைவினைச்சொற்களுமெதிர்மறுத்துச் சொல்லுமிடத்துந் தத்தமீற்றினின்றும் அவ்வவ்வுருபினின்றும் வேறுபடாவென்றுசொல்லுவர்புலவர்.— எ-று. ❁ இன்னுருபையீற்றென்ப தன்கண்ணுங்கூட்டியெதிர்நிரனிறையாகப்பொருள்கொள்க. உருபின்க ணெதிர் மறுத்தலவற்றின் பயனிலைகளையென்க. [வ-று.] சாத்தன்வாரான்-குடத்தை வனையான்- வாளாலெறியான்-புல்லர்க்குநல்கான்- நிலையினிழியான்- பொருளினதின்மை- தீயர்கட்சாரான்- சாத்தாசாயல்-எ-ம்-நடவான்- நடவாத- நடவாது-எ-ம்-வரும்- சொற்றொறுமிற்றிதன் பெற்றியென்னுஞ்சூத்திரத்தானே புண்மைக்குமறையாகிய இன்மையென்னும்பெயர்க்கண்ணுமீறுதிரியாமைகொள்க. நடத்தல்-நடவாமை என்றற்றொடக்கத்தன வீறுதிரிந்தன வன்றோவெனின்னவைதொழிற் பெயராதலிற்றிரிந்தனவென்க. ஓடாக்குதிரை-ஆறுவறிவு என்றற்றொடக்கத்தன ஓடாத ஆறுத என்பனவற்றைக்

குறைத்துவழங்கினவன்றி யீறுவேறுபட்டன வல்லவென்க. ஓர்வினை நிகழ்வழி அவ்வினைக்குக் கருத்தாவுஞ் செயப்படுபொருளுமுதலியவாகப்பெயர்ப் பொருளை வேற்றுமைசெய்து நின்றவுருபுகளவ்வினை நிகழாவழியும் அவ்வாறு நிற்றலானும்வினைவிகுதிகளும் அவ்வினை நிகழ்வழி முற்றின்கட்கருத்தாவையும் எச்சங்களிற்பெயரொழிபையும் வினையொழிபையுந் தந்துநின்றாற்போல வினை நிகழாவழியுநிற்றலானும்இங்ஙனங் கூறப்பட்டதென்க. (௩)

௩௱௫௫. உருபுபலவடுக்கினும் வினைவேறடுக்கினு - மொருதம்மெச்ச மீறுறமுடியும். *

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை.) உருபு- வேற்றுமையுருபுகள்— பலவடுக்கினும்- விரிந்துந் தொக்குந் தம்முள் விரவிப்பலவடுக்கிவரினும்வெவ்வேறு பலவடுக்கிவரினும்— வினை - மூவகைவினைச்சொற்களும்—வேறு(பல)வடுக்கினும்- வெவ்வேறுபலவடுக்கிவரினும்—ஒருதம்மெச்சம் - தத்தமெச்சமொன்று — ஈறு - இறுதியில்—உற - வர —முடியும் - அதனொடேனைத்துமுடியும். எ-று. (பொ-ரை.) வேற்றுமையுருபுகள்விரிந்துந்தொக்குந்தம்முள்விரவிப்பலவடுக்கிவரினும்வெவ்வேறுபலவடுக்கிவரினு மூவகைவினைச்சொற்களுந் தம்முள்விரவியடுக்குந்தன்மையவன்றி வெவ்வேறுபலவடுக்கிவரினுந் தத்தமெச்சமிறுதியிலொன்றுவரவதனொடேனைத்துமுடிவனவாம். எ-று. ※ பலவென்பதனைவேறென்பதனொடுங்கூட்டுக. இவ்விருவகையடுக்கும்படைபடையென்றாற்போலஅடுக்கியவல்லவென்பார் பலவடுக்கினுமென்றார். வினைவேறுபலவடுக்கினுமெனவிதந்தாற்போலவுருபிற்குவிதவாமையின் அவைவிரவியும் வெவ்வேறுபலவடுக்குமென்பதுபெற்றாம். [வ-று.] சாத்தன்யானையது கோட்டை நுனிக்கட்பொருட்கு வாளாற்குறைத்தான்என்பனவுருபுகள்விரவிப்பலவடுக்கிக்குறைத்தானென்னுமொருவினைகொண்டன. இவற்றுளாறனுருபடுக்கன்று வினையதற்கெச்சமன்றாதலானுங்கோடென்னும்பெயர்கொண்டமையானுமென்க. சாத்தனென்னும்பெயர்வேற்றுமைகுறைத்தற்குவினைமுதலைக்காட்டவந்தது. அன்றியடுக்கென்று கோடலுமொன்று. சாத்தனையுங் கொற்றனையுந் தேவனையும் பூதனையும்வாழ்த்தினான்-எ-ம்- சாத்தனுக்குங் கொற்றனுக்குந் தேவனுக்கும் பூதனுக்குந் தந்தை -எ-ம்-இரண்டாமுருபு நான்காமுருபும்வேறுபல வடுக்கிவாழ்த்தினானென்னு மொருவினையுந் தந்தையென்னு மொருபெயருமுறையேகொண்டன. வாள்கைக்கொண்டான்-அருளறமுடையான் -எ-ம்-உருபுதொக்கவ்வாறுவந்தன. உண்டான் தின்றானோடினான் பாடினான் சாத்தன்- "வருதி பெயர்திவருந்துதி துஞ்சாய்-பொருதிபுலம்புதிநீயுங்-கருதுங்கால்-பண்டினையல்லையாற் பாழித்தோட்

கோதையைக்- கண்டனையோ வாழி கடல்.,,-எ-ம். "இளையண்மெ ல்லியண் மடந்தை.,,-"அரிய சேய பெருங்கான் யாறே.,, -எ-ம். வினைமுற்றுங் குறிப்புமுற்றும் பெயரெச்சங்களோடு விரவாது வேறுபலவடுக்கிச்சாத்தன் நீ மடந்தை ஆறென்னுமொருபெய ர்முறையேகொண்டன.கற்ற கேட்ட பெரியோர்-எ-ம்-சிறியபெ ரியநிகர்மலர்க்கோதை- எ-ம்- பெயரெச்சவினையுங் குறிப்பும் வி னை வினைக்குறிப்பு முற்றோடு விரவாது வேறுபலவடுக்கிப் பெரி யோர்மலர்க்கோதையென்னு மொருபெயர்முறையே கொண்ட ன. கற்றுக்கேட்டறிந்தார்- எ-ம்- விருப்பின்றி வெறுப்பின்றி யி ருந்தார்-எ-ம்-வினையெச்சவினையுங் குறிப்பும் வினையோடுமுடியு மெனவிதந்தவினைமுற்றுக்களோடுவிரவாதுவேறுபலவடுக்கி யறி ந்தாரிருந்தாரென்னு மொருவினைமுறையே கொண்டன. பிறவு மன்ன. "சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல்- மெ ல்லவே கருவிருந் தீன்று மேலலார்- செல்வமே போற்றலை நிறு வித் தேர்ந்தநூற்- கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே.,, என்னும் வினையெச்சங்கள் கருவிருந் தீன்றென்ப தன்றிக் கருவி ருந்துதலைநிறுவியென முடியாதாகலா னவற்றுள் ஒன்றற்கொன் றுமுடிபாய்த் தொடர்தலானும் "நாளன்றுபோகிப் புள்ளிடைத ட்பப்- பதனன்று புக்குத் திறனன்றுமொழியினும்- வறிது பெ யர்குநரல்லர்நெறிகொள.,, என்னும்வினையெச்சக்குறிப்புக்களா ங்காங்கு முடிதலானுமிவை யடுக்காகாவென்க. (ச)

ஙாருகூ. உருபுமுற்றீ ரெச்சங்கொள்ளும் - பெயர்வினை யி டைப்பிற வரலுமாமேற்பன. *

(எ-ன்.)இதுவுமது.(ப-ரை.) உருபு-வேற்றுமையுருபுகளும், மு ற்று- முற்றுகளும், ஈரெச்சம் - பெயரெச்சவினையெச்சங்களும், கொள்ளும்- கொண்டுமுடியும், பெயர்வினையிடை- பெயர்க்கும் வினைக்குமிடையே, பிற- பிறசொற்கள், வரலுமாம்- வருதலுமா ம், ஏற்பன- அவ்விடத்திற்குப் பொருந்துவன. எ-று. (பொ-ரை) வேற்றுமை யுருபுகளு முற்றுக்களும் பெயரெச்சங்களும் வினை யெச்சங்களுங்கொண்டு முடியும்பெயர்க்கும்வினைக்குமிடையே பிறசொற்கள் வருதலுமா மாண்டைக்குப் பொருந்துவன. எ-று. ※பிறவெனப்பன்மை கூறினாரேனும். "ஒருமொழி யொழிதன் னினங்கொளற்குரித்தே.,,என்பதனானொருசொல்வருதலுங்கொள் க.உம்மை உருபுமுற்றீரெச்சங்களுமவைகொள்ளும்பெயர்வினை யுமாத்திரையாய் நிற்றலேயன்றி யெனவிறந்ததுதழீஇ நின்றது. [வ-று.]சாத்தன்வயிறாரவுண்டான்-அறத்தையழகுபெறுகச்செய் தான்-வாளான் மருவாரைமாயவெட்டினான் [இதனுண்மாயவென் பதொன்றும்இடைவந்தது.மருவாரையென்பதற்றன்று இவ்விரு

ண்டனுருபும் வாளாலென்னு மூன்றனுருப்புமடுக்காய்நிற்றலின்.]
-தேவர்க்குச்செல்வம் வேண்டிச் சிறப்பெடுத்தான் - மலையினின்
றுருண்டுவீழ்ந்தான் - சாத்தனதித்தடக்கையானை -ஊர்க்கணுயர்
ந்த வொளிமாடம்:-சாத்தாவிரைந்தோடிவா-எ-ம்-வந்தானவ்வூரு
க்குப்போனசாத்தன்-வந்தவவ்வூர்ச்சாத்தன்- வந்துசாத்தனிற்றை
நாளவனூர்க்குப்போயினன்-எ-ம்-வரும். குறிப்புவினைமுதலிய
பிறவுமன்ன. "கருதலர்ச்சீறியகடுங்கொல் யானை.,,என்புழிச் சீறி
யவென்னும் பெயரெச்சத்திற்கும் அதுகொண்டயானையென்னு
ம் பெயர்க்கும் இடையேகொல்லென்னும் வினைத்தொகைச்சொ
ல் இடைப்பிறவரலாய் வந்ததன்று வினைத்தொகை காலங்கரந்த
பெயரெச்சமாதலாற் பெயரெச்சவினையிரண்டடுக்கி யானையெ
ன்னு மொருபெயர் கொண்டனவாமென்க. இவ்வாறேயடுக்காய்
வந்தனவும் இடைப்பிறவந்தனவும்உய்த்துணர்ந்துகொள்க. இனி
வற்பனவென்றமையான்"வல்லமெறிந்தநல்லிளங்கோசர்தந்தை-
மல்லல் யானைப்பெருவழுதி.,,என்புழி வல்லமெறிதல் பெருவழு
திமேற்றே யெனின் நல்லிளங்கோசர் தந்தையென்பதனையிடை
நிறுவினேலாதாம்வல்லமெறிதனல்லிளங்கோசர்மேற்றாகப்பொ
ருள்படுமாதலினென்க. (௫)

௩௭௫. எச்சப்பெயர்வினை யெய்துமீற்றினும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை.) எச்சம்- உருபுகளுமுற்றுகளும்
பெயரெச்சங்களும் வினையெச்சங்களுங் கொண்டு முடியுமெச்ச
மாகிய, பெயர்வினை- பெயரும்வினையும், ஈற்றினும் - அவற்றிற்
கீற்றினும், எய்தும்- வரும்- எ-று. (பொ-ரை.) உருபுகளுமுற்று
க்களும் பெயரெச்சங்களும்வினையெச்சங்களுங் கொண்டு முடியு
மெச்சமாகியபெயரும்வினையும் அவற்றிற்கீற்றினும்வரும். எ-று.
* ஈற்றினுமென்னு மும்மையான் முதலினும் வருதல்கொள்க.
[வ-று] சாத்தன்வந்தான்-மரத்தைக்குறைத்தான் - சாத்தனால்வந்
தான்-சாத்தற்குக்கொடுத்தான் - சாத்தனினீங்கினன்- சாத்தனது
டை-சாத்தன்கட்சென்றான் - சாத்தாவா- எ-ம்- வந்தான்சாத்தன்-
வந்தசாத்தன்- வந்துபோயினன்- எ-ம்- இறுதிக்கண்வந்தன-வந்
தான்சாத்தன்- குறைத்தான்மரத்தை-வந்தான்சாத்தனால்- கொடுத்
தான்சாத்தற்கு - நீங்கினன்சாத்தனின் - சென்றான்சாத்தன்கண்-
வாசாத்தா- எ-ம்- சாத்தன்வந்தான்- போயினன்வந்து- எ-ம்- மு
தற்கண்வந்தன- எய்துமீற்றினென்றாற்போல முதற்கண்வருதலை
யெடுத்தோதாது உம்மையாற்றழீஇக்கொண்டார் ஆறனுருபினெ
ச்சமும் எழனுருபினெச்சப் பெயரும் பெயரெச்சத்தி னெச்ச
மு முதற்கண்வாராவென்பதூஉம் ஏனையவரினு மிறுதிக்கண் வரு

நல்லோர் சிறப்பினவல்ல வென்பதூஉந் தோன்றுதற்கென்க. எழுவாயுருபு வினைமுற்றுப்பயனிலையை இறுதிக்கட்கொண்டதூஉம் வினைமுற்றுப் பெயர்ப்பயனிலையை முதற்கட்கொண்டதூஉம் சாத்தன்வந்தான் எனவரும். தம்முள்வேற்றுமையாதோ வெனின், கேட்போர்க்குச் சாத்தனிது செய்தானென வினையையுணர்த்துவதூஉம் இது செய்தான் சாத்தனென வினைமுதலை யுணர்த்துவதூஉமாமென்க. வந்தான் சாத்தனெனவருவனவுமன்ன. (௬)

ஙாறுஅ. ஒருமொழியொழிதன் னினங்கொளற்குரித்தே. *

(எ-ன்) நால்வகைச்சொற்குமாவதோ ரிலக்கண முணர்-ற்று. மொழியெனப்பொதுப்படக்கூறினமையின் நால்வகைச்சொற்குமென்பதுபெற்றாம். (ப-ரை.) ஒருமொழி- பெயர்வினையிடையுரிகளுள் ஒருசொல், ஒழி- ஒழிந்துநின்ற, தன்- தன்னுடைய, இனம்- இனங்களை, கொளற்கு- கொண்டுமுடிதற்கு, உரித்து- உரித்தாகும். எ-று. (பொ-ரை.) பெயர்வினையிடையுரி யென்னு நால்வகைச்சொற்களு ளொவ்வொன்றெஞ்சிநின்ற தன்றனினங்களைக் கொள்ளுதற்குரித்தாம். எ-று. ❁ [வ-று] சோற்றைநனியுண்டானென்றவழிக் கறியைநனிதின்றானென்றற்றொடக்கத்தனவும் பாக்கைநனிதின்றானென்றவழி வெற்றிலையை நனிதின்றான் சுண்ணாம்பைநனிதின்றானென்பனவும் நஞ்சுண்டான்சாவானென்றவழி நஞ்சுண்டாள்சாவாள் நஞ்சுண்டது சாமென்பனவும்பார்ப்பான் கள்ளுண்ணானென்றவழிப் பார்ப்பனி கள்ளுண்ணா ளென்பனவுங் கூறாதேயமைந்துகிடத்தலின் இனங்களாயெஞ்சிநின்றன. இவற்றுட் சோற்றையென்னும்பெயர்ச்சொல்லும்உருபிடைச்சொல்லுங் கறியையென்னும் பெயர்ச்சொல்லையும்உருபிடைச்சொல்லையும் நனியுண்டானென்னுமுரிச்சொல்லும்வினைச்சொல்லும்நனிதின்றானென்னு முரிச்சொல்லையும் வினைச்சொல்லையுங் கொள்ளுதற்குரியவாய்நிற்றல்காண்க. பிறவுமன்ன (எ)

ஙாறுகூ. பொதுப்பெயர்வினைகளின் பொதுமைநீக்கு -மேல்வருஞ்சிறப்புப் பெயர்வினைதாமே. *

(எ-ன்.) பெயர்வினைகட்காவதோரிலக்கணமுணர்-ற்று.(ப-ரை) பொது- திணைபாலிடங்காலங்களுக்குப்பொதுவாகிய, பெயர்வினைகளின்- பெயர்வினைகளுடைய,பொதுமை- பொதுத்தன்மையை, நீக்கும்- நீக்கியொன்றற்குரிமைசெய்யும், மேல்- மேலே-வரும், வருகிற- சிறப்புப்பெயர்வினை - சிறப்பாகியபெயர்வினைகள், தாமே- தாமே. எ-று. (பொ-ரை.) திணைபாலிடங் காலங்கட்குப் பொதுவாகியபெயர்வினைகளினுடையபொதுத்தன்மையினை நீக்கியொன்றற்குரிமைசெய்யுமேல்வருஞ் சிறப்புப்பெயர்வினைகடாமே. எ-று. ❁ ஒன்றற்கிருமருங்கிணையுமேலென்பவாகலிற்சி

றப்புப் பெயர்வினையாண்டுவரினுங்கொள்க.தாமேயென்னும்பி ரிநிலையேகாரங்குறிப்பினானற்றுணர்ந் திடர்ப்பட வேண்டாவெ ன்னும்பொருட்டாந்து நின்றது.[வ-று.]சாத்தனிவன்-சாத்தனிது- எ-ம்-சாத்தன்வந்தான்-சாத்தன்வந்தது-எ-ம்-பெயர்த்திணைப்பொ துமையினைச்சிறப்புப்பெயரும்வினையும்வந்து நீக்கின. ஒருவனொ ன்னையர்- ஒருவரொன்றுயர்-எ-ம்-மரம்வளர்ந்தது -மரம்வளர்ந்த ன-எ-ம்- பெயர்ப்பாற் பொதுமையினைச் சிறப்புப்பெயரும்வி னையும்வந்துநீக்கின. அவரெல்லாமிருந்தார்- யாமெல்லாம்வருவ ம்- நீவிரெல்லாம்போமின் எனப்பெயரிடப் பொதுமையினைச் சிறப்புப்பெயரும் வினையும்வந்துநீக்கின. வாழ்க-அவன்-அவள்- அவர்- அது- அவை- யான்- யாம்- நீ- நீர்- எ-ம்- உண்டுவந்தான்- வந்தாள்- வந்தார்- வந்தது- வந்தன- வந்தேன்- வந்தேம் - வந்தா ய்-வந்தீர்- வருகின்றான்- வருவான்-எ-ம்-வினைத்திணை பாலிடங்கா லப் பொதுமையினைச் சிறப்புப்பெயரும் வினையும் வந்துநீக்கி ன. பிறவுமன்ன. உண்டென்பதிறந்த காலவினை யெச்சமாயினு மூக்காலவினைகளையுங்கொண்டுமுடிதற்குரிய பொதுமையினையு டைத்தாதலினதனைமேல்வருஞ்சிறப்புவினை நீக்கின. (அ)

௩௬௯. பெயர்வினை யும்மைசொற் பிரிப்பெனவொழியிசை யெதிர்மறை யிசையெனுஞ் சொல்லொழி யொன்பதுங் - குறி ப்புந் தத்த மெச்சங் கொள்ளும். ※

(எ-ன்.) நால்வகைச்சொற்கு மாவதோரிலக்கண முணர்த்தும் வழிச்சிலவற்றிற்கெய்தியதன்மேற் சிறப்புவிதியுஞ்சிலவற்றிற்கெ ய்தாததெய்துவித்தலுமுணர் - ற்று. (ப - ரை) பெயர்ச் (சொல் லொழிபு) - பெயரெச்சமும், வினைச் (சொல்லொழிபு) - வினை யெச்சமும்,உம்மைச்(சொல்லொழிபு)-உம்மையெச்சமும்,சொ ற்(சொல்லொழிபு)சொல்லெச்சமும்,பிரிப்புச்(சொல்லொழிபு) பிரிநிலையெச்சமும், எனச் (சொல்லொழிபு) - எனவெச்சமும், ஒழியிசைச் (சொல்லொழிபு) - ஒழியிசையெச்சமும், எதிர்ம றைச் (சொல்லொழிபு)- எதிர்மறையெச்சமும், இசைச் (சொல் லொழிபு)-இசையெச்சமும்,என்னும்- என்கிற,சொல்லொழிபு- சொல்லெச்சங்கள், ஒன்பதும்-ஒன்பதும், குறிப் (பொழி) பும்- குறிப்பெச்சமும், தத்தம்-தம்முடையதம்முடைய,எச்சம்-எச்ச ங்களை,கொள்ளும்-கொண்டுமுடியும். எ-று. (பொ-ரை)பெயரெ ச்சமும் வினையெச்சமும் உம்மையெச்சமுஞ் சொல்லெச்சமும் பிரிநிலையெச்சமு மெனவெச்சமுமொழியிசையெச்சமு மெதிர் மறையெச்சமு மிசையெச்சமுமாகிய சொல்லெச்ச மொன்ப துங் குறிப்பெச்சமொன்றுந் தத்தமெச்சங்களைக் கொள்ளும்— எ-று. ※ சொல்லொழிபென்பதனை முற்கூறிய வொன்பதனோ

டும் அதனுளொழிபென்பதனைப் பிற்கூறிய குறிப்பினோடுங்கூட்டுக. குறிப்புச்சொல்லொழிபெனக்கூட்டியுரைத்தாலென்னையெனின் அதுபின்னர்க்கூறுதும். எனவேயெச்சங்கள் சொல்லெச்சங் குறிப்பெச்சமென விருவகையவென்பதூஉம் சொல்லெச்சமொன்பதெனத்தொகைகூறினார் வகையுளொன்றனையுஞ் சொல்லெச்சமென்றமையான் அவ்வகையுளொன்றாகிய சொல்லெச்சமென்பதுசொல்விகற்பங்களின்றிச்சொல்லென்னுஞ் சொல்லெஞ்சிநிற்பதென்பதூஉம்பெற்றாம். "சொல்லெனெச்ச முன்னும்பின்னுஞ்-சொல்லளவல்லதெஞ்சுதலின்றே.", என்றாசிரியர் தொல்காப்பியனாரொன்க. இவ்வாசிரியவசனத்திற்கு இப்பொருளன்றிவேறுபொருள்கூறுவாருமுளர். அதுநிற்க. [வ-று.] செய்தசாத்தன்-செய்கின்றசாத்தன்-செய்யுஞ்சாத்தன்-எ-ம்-நல்லசாத்தன்-எ-ம்-பெயரெச்சங்கடம்மெச்சமாகிய செய்பவனது பெயர்கொண்டன. எனைக்கருவிமுதலைந்தோடுமொட்டுக. வினைத்தொகைகளும் பெயரெச்சமாயடங்குதலின் அவையுமுற்றெச்சங்களுமன்ன. செய்துவந்தான்-செய்துநல்லனாயினான்- செய்துநல்லன்- செய்துவருதல்-எ-ம்- விருந்தின்றியுண்டபகல்-எ-ம்- வினையெச்சங்கடம்மெச்சமாகிய வினைவினைக்குறிப்புந்தொழிற்பெயருங்கொண்டன. காட்டாதொழிந்தவினையெச்சங்களு முற்றெச்சங்களுமன்ன. இவ்வெச்சத்திற்குமுடிபாகிய வினைக்குறிப்பாக்கமோடு வருதலும் அதுதொகவருதலும் ஆக்கவினைக்குறிப்பென்னுஞ்சூத்திரத்துளமைந்துகிடந்தன. சாத்தனும்வந்தான் -என்னுமும்மையெச்சமுன்னர்க்கொற்றன்வந்தானெனத்தன்னெச்சங்கொண்டது. "பிடியென்னுங் காரணத்தின் மேன்முறைக்கண்ணே - கடியென்றார்கற்றறிந்தார்.", "இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்-வசையன்று", என்பனசொல்லெச்சம். கடியென்று சொன்னார்-இல்லென்றுசொல்லுதல் எனச்சொல்லென்னுந் தம்மெச்சங் கொண்டன. இவைபெயரெச்சம் வினையெச்ச மென்றாற்போலச்சொல்லென்னு மெச்சத்தையுடைய விடைச்சொல்லைச் சொல்லெச்சமென்றலின் ஆகுபெயர். மேல்வருமெனவெனெச்சமொழிந்தனவுமன்ன. சாத்தனே கொண்டான்-சாத்தனோகொண்டான் என்பனபிரிநிலையெச்சம். இவைபிறர் கொண்டிலரெனத் தம்மெச்சங்கொண்டன. கோடற்றொழிலாற் சாத்தனினின்றும்பிரிக்கப்பட்டார் பிறராதலிற் பிரிநிலையென்க. கடலொல்லென வொலித்தது- நரம்புவிண்ணெனவிசைத்தது- தலையிடியென விடித்தது என்பனஎனவெச்சம். இவைதம்மெச்சமாகிய ;வினைகொண்டன. மிகவுமொலித்தது மிகவுமிசைத்தது மிகவுமிடித்தது என்பனவிவற்றிற்குப்பொருளாமாதலின் இவ்வெனவெச்ச மிகுதிப்பொரு

டுருவதோ ரிடைச்சொல்லாமென்க. "தெய்வந்தொழா அள் கொழுநற் றொழுதெழுவாள் - பெய்யெனப்பெய்யுமழை" என்பதுளுளெனவென்பது பெய்யெனச் சொல்லவென வினைப்பொருடருதலின் இடைச்சொல் லடியாகப்பிறந்த செயவெனெச்சமாய் முன்னர்ப்போந்தவினையெச்சத்துளடங்குமென்க. கூரியதோர் வாண்மன்-வருகதில்லம்ம-கொளலோகொண்டான் என்பனவொழியிசையெச்சம். இவைமுறையே கோடற்று - வந்தாலின்னது செய்வல்-கொண்டுய்யப்போயினனல்லன் எனத்தம்மெச்சங்கொண்டன. வரலுமுரியன்-யானேசெய்தேன் என்பனவெதிர்மறையெச்சம். இவைமுறையானே வாராமைக்குமுரியன்-யான்செய்திலன் எனத்தம்மெச்சங்கொண்டன. இதுகாறும் வினையியலினுழிபாகிய பெயரெச்சவினையெச்சமுடிபும் இடையியலி னொழிபாகியவேனையறுவகை யெச்சமுடிபுமெடுத்துவிதந்தார். இவ்வாறெடுத்துவிதத்தற்கு வரையறைப்படாதுவருஞ் சொல்லெச்சங்களையெல்லாந் தொகுத்திசையெச்சமென விறுதிக்கட்கூறினார். இசையென்பது சொல். இசையெச்சமெனப் பொதுப்படக்கூறினமையி னிவ்வெச்சமு மிதுகொள்வதும் பெயர்வினையிடையுரியென்னு நால்வகைச் சொல்லு ளொன்றும் பலவுந் தனித்துந் தொடர்ந்தும்வருமென்பதுபெற்றாம். அவற்றுட்சிலவிசையெச்சங்கள்வருமாறு. "இணரெரிதோய்வன்ன வின்னாசெயினும் - புணரின்வெகுளாமைநன்று" என்புழிப்பிறவுயிர்க்கின்னாசெயின்வைபிழையாது தமக்குவருதல்கருதித் தம்மாட்டன்பும் பிறவுயிர்கண்மாட்டருளு மின்னாசெய்தலான் மேன்மேல்வளரும் பிறப்பிறப்பினச்சமு நம்மாலின்னா செயப்பட்டாரை நாமடைந்திரத்தல் கூடினுங்கூடுமதனால் யார்மாட்டுமின்னாசெய்யக்கடவமல்லமென்னும்வருங்காலவுணர்ச்சியு மிலராயொருவர் தன்னலாற்றல் கூடாதவின்னாதனவற்றைத்தன்கட்செய்தாராயினு மவர்தமக்கு வேண்டுவதோர்குறை முடித்தல்கருதி நானாதுதன்னை யடைந்தாராயி னவர்செய்தவின்னாமை கருதி யவரை வெகுளாதவற்றை மறந்தவர்வேண்டுங் குறைமுடித்து முன்செய்த வின்னாமையாலவர்கூசியொழுகுதறவிர்தற்குக்காரணமாகிய மெய்ப்பாடுமுதலியனதன்கட்குறிப்பின்றிநிகழ வவர்க்கினியனாகியிருத்த றன்சால்புக்குநன்று என நால்வகைச்சொற்களுள் வேண்டுவன வெல்லாந் தந்தகலங்கூறவேண்டி நிற்பனவிசையெச்சமாமென்க. பிறவுமன்ன. இனிக்குறிப்பெச்சங்களாவன வொன்றொழிபொதுச்சொன்முதலியகுறிப்புச்சொற்களாம் குறிப்பானுணரப்படுவனமுறையேயெஞ்சநிற்றலின். அவை யவ்வெச்சங்கொள்ளுமாறு பெரு

ந்தேவிபொறையுயிர்த்தகட்டிற்கீழ் நால்வர்மக்களுளர் என்புழி மக்களென்னும் பொதுப்பெயர் பெண்மக்களெனப் பெண்ணென்னுஞ் சிறப்புப்பெயர்கொண்டது. "குறுத்தாட்பூதம்,, என்புழித்தகரவல்லொற்றதற்கினமாகியமெல்லொற்றையும். "மணையிதழ்ப்புணையும்,, என்புழி மணையென்பது தாவென்னு முதலெழுத்தையுங்கொண்டன. வாய்பூசிவருதும் என்பதெச்சில்கழித்துவருதுமென்பதுகொண்டது. புளித்தின்றான் என்பது பழமாகிய புளியெனப் பழமென்பதுகொண்டது. பொற்றொடியென்பது பொற்றொடியையுடையாளென விரண்டாமுருபு மதன்பயனிலையுங்கொண்டது. நல்லனிவன் என்பது பெயர்ப்பொருள்கொள்ளாது வினைக்குறிப்புப்பொருளோடு நல்லனாயினனிவனெனஆக்கங்கொண்டது. "அறத்தாறிதுவென வெள்ளைக்கிழி டு,, என்பது "அறத்தாறிதுவென வேண்டாசிவிகை - பொறுத்தானோ டூர்ந்தானிடை,, என்பதுகொண்டது. "அலங்குளைப்புரவியைவொடுசினை இ என்பது தருமன் வீமனருச்சுனன்நகுலன்சகாதேவனென்பனகொண்டது. "பீலிபெய்சாகாடுமச்சிறுமப்பண்டஞ் - சாலமிகுத்துப்பெயின்,, என்பதூஉம் உண்ணுநின்றான் கற்கறித்துழியட்டோன் முகநோக்கிநன் கட்டாயென்பதூஉம் மெலியராயினும் பலர்தொகின் வலியரையும்வெல்வரென்பதனையும் நன்கட்டாயல்லையென்பதனையுமுறையேகொண்டன. பிறவுமன்ன. இவையொன்றொழி பொதுச்சொன் முதலிய குறிப்பெச்சங்க டம்மெச்சங் கொண்டன. இதனைக் குறிப்புச்சொல்லெச்சமென்னது குறிப்பெச்சமென்றார். சொல்லேயன்றிப்பொருண்மாத்திரையு மெழுத்து மெஞ்சவருவனவுமுளவாதலினென்க. இப்பத்தெச்சங்கட்கும் வேறுபொருள் கூறுவாருமுளர். அவையெல்லா மிசையெச்சமாயுங் குறிப்பெச்சமாயு மடங்குமாதலானும் பெயரெச்ச வினையெச்ச முதலியவற்றிற் காங்காங்கு முடிபுகூறுவாராயினு மீண்டெச்சங்களை யெல்லாந் தொகுத்துக்கூறும்வழிமுடிபுகூறாராயிற் குன்றக்கூறலென்னுங் குற்றமாமாதலானு மதுபொருந்தாதென்க. (கூ)

ஙகக. பெயரொடுபெயரும் வினையும்வேற்றுமை - முதலிய
பொருளி னவற்றினுருபிடை-யொழியவிரண்டு முதலாத்தொட
ர்ந்தொரு-மொழிபோனடப்பன தொகைநிலைத்தொடர்சொல்.

(எ-ன்.) பெயர்க்கும் வினைக்குமாவதோர் விதியுணர் - ற்று.

(ப-ரை.) பெயரொடு- பெயர்ச்சொல்லோடு, பெயரும்-பெயர்ச்சொல்லும், ( பெயரொடு ) - பெயர்ச்சொல்லோடு, வினையும்-வினைச்சொல்லும், வேற்றுமைமுதலிய- பின்சொல்லப்படும் வேற்றுமைமுதலாகிய, பொருளின்- அறுவகைப் பொருட்புணர்ச்

இக்கண், அவற்றின்-அவற்றினுடைய, உருபு-உருபுகள், இடை-நடுவிலே, ஒழிய-தொக்குநிற்ப, இரண்டுமுதலா - இரண்டுசொற்கள்முதலாக, தொடர்ந்து-பலசொற்கள் தொடர்ந்து, ஒருமொழிபோல்-ஒருசொற்போல, நடப்பன-நடப்பவை, தொகைநிலைத்தொடர்சொல் - தொகைநிலைத் தொடர்சொற்களாம். எ-று.— (பொ-ரை.) பெயர்ச்சொல்லோடு பெயர்ச்சொல்லும் பெயர்ச்சொல்லோடு வினைச்சொல்லும் வேற்றுமை வினைபண்பெனப்பின்னர்வகுத்துக் கூறு மறுவகைப்பொருட் புணர்ச்சிக்கணவற்றினுருபுகளிடையேதொக்கு நிற்பவிரண்டுமுதலிய பலசொற்கடொடர்ந்தொருமொழிபோ னடப்பன யாவை யவைதொகைநிலைத்தொடர் சொற்களாம் எ-று. ❋ தொகை யென்னும் பலபொரு ளொருசொலீண்டுருபு மறைதலை யுணர்த்திநின்றது "ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின் - மெய்யுருபு தொகாவிறுதி யான.," என்பவாகலின். வினையொடு வினைதொகைநிலைத்தொடராகாமையின் அதனையொழித்தும் நிலத்தைக்கடந்தான் நிலங்கடந்தான் எனவுருபிடை விரியிற்பிளவுபட்டுந் தொக்கதேற் பிளவுபடாதுந் தொடருமாதலின் ஒருமொழி போலென்றுங் கூறினார். ஒருமொழிப்பானடத்தலாவது கொல்யானைவந்தது- நிலங்கடந்தான்சாத்தன்என இரண்டுமுதலியபலசொற்றொடர்ந்தொரு பெயராயும் வினையாயுநின்று தம்முடிபேற்றலெனப் பொருள்கூறின், அவ்வாறு தொகாநிலைத் தொடருங் கொன்றயானைவந்தது - நிலத்தைக்கடந்தான்சாத்தன் என நடக்குமாதலின் அது பொருந்தாதென்க. (௰)

௩௬௨. வேற்றுமை வினைபண் புவமையும்மை - யன்மொழி யெனவத் தொகையா றாகும். ❋

(எ-ன்.) மேல்வேற்றுமை முதலியவென்றார்அவை யிவையென்பதுணர்-ற்று. (ப-ரை.) வேற்றுமைத்(தொகை)-வேற்றுமைத்தொகையும், வினைத்(தொகை)-வினைத்தொகையும், பண்புத்(தொகை)-பண்புத்தொகையும், உவமைத் (தொகை) - உவமைத்தொகையும், உம்மைத் (தொகை) - உம்மைத்தொகையும், அன்மொழித் (தொகை) - அன்மொழித்தொகையும், என-என்று, அத்தொகை-முன்னேசொல்லப்பட்ட தொகைநிலைத்தொடர்மொழிகள் ஆறாகும்-ஆறுவகைப்படும். எ-று. (பொ-ரை.) வேற்றுமைத்தொகையும்வினைத்தொகையும்பண்புத்தொகையும் உவமைத்தொகையும்உம்மைத்தொகையும் அன்மொழித்தொகையுமென மேற்கூறியதொகைநிலைத்தொடர்சொல்அறுவகைப்படும். எ-று. (௰௧)

௩௬௩. இரண்டுமுதலா விடையா றுருபும்- வெளிப்படல் இல்லது வேற்றுமைத்தொகையே. ❋

(எ-ன்.) நிறுத்தமுறையானே வேற்றுமைத் தொகையாமாறுணர்-ற்று. (ப-ரை.) இடை-எழுவாய்க்கும் விளிக்குமிடையேநிற்கிற, இரண்டு-இரண்டாவது,முதலாம்-முதலாயிருக்கின்ற, ஆறுருபும்-ஆறுவேற்றுமையுருபுகளும், வெளிப்படலில்லது - தொக்கதொடர்மொழிகள், வேற்றுமைத்தொகை-வேற்றுமைத்தொகைகளாம். எ-று. (பொ-ரை.) எழுவாய்க்கும் விளிக்குமிடையே நின்ற இரண்டாவது முதலியஆறு வேற்றுமையுருபுந் தொக்க தொடர்சொற்கள் வேற்றுமைத் தொகைகளாம். எ-று. ✻ வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கட்பெயரொடு பெயரும்வினையுங்கூடியகூட்டத்தை வேற்றுமைத்தொகையென்றதன்றென்பார் ஆறுருபும் வெளிப்படலில்லதென்றார். ஏனைத்தொகைகளுமன்ன. [வ-று.] நிலங்கடந்தான்- தலைவணங்கினான் - சாத்தன்மகன்- ஊர்நீங்கினான்- சாத்தன்கை- குன்றக்கூகை -யானைக்கோட்டு நுனிகுறைத்தான்- என ஆறுருபுமிடையே தொக்கவாறுகாண்க. இடையே தொக்கதனைத் தொகைநிலைத் தொடரொன்றமையானே கடத்தானிலம்- இருந்தான்குன்றத்து- என இறுதிக்கட்டொக்குப்பிளவுபட்டுநின்றன தொகைநிலைத் தொடராகாவோ வெனின், நிலங்கடந்தான் - குன்றத்திருந்தான் - என்பனவற்றை ஒரோவழிமாறிக் கூறுதலிற் பிளவுபட்டுநின்றனவன்றி அவையும்இடைக்கட்டொக்க தொகைநிலைத் தொடரேயாமென்க.இனியாறுருபுமென்னு முற்றும்மையை யெச்சவும்மையாக்கிப் பொற்குடம் என ஒரோவழியுருபும் பொருளுமுடன்றொக்கதூஉம் வேற்றுமைத்தொகையெனக்கொள்க. அதுவிரிவுழிப்பொன்னாற்செய்த குடமெனவிரியும். பிறவுமன்ன. (௰௨)

௩௬௪. காலங்கரந்த பெயரெச்சம் வினைத்தொகை. ✻

(எ - ன்.) வினைத்தொகையாமாறுணர்-ற்று. (ப-ரை.) காலம்-காலம்பற்றிப் புடைபெயர்கிற வினையுருபுகள், கரந்த - தொக்க, பெயரெச்சம்- பெயரெச்சவினைகள், வினைத்தொகை-வினைத்தொகைகளாம். எ-று. (பொ - ரை.) காலம்பற்றிப் புடைபெயர் வினையுருபாகிய தம்மிறுதிக டொக்குநிற்பச் செய்வதாதி யறுபொருட்பெயராகிய தம்மெச்சங்கொண்ட பெயரெச்சங்கள்வினைத்தொகைகளாம். எ-று.✻காலமென்றதாகுபெயர். முதனிலை வினையுருபு தொகாதுநிற்பப் புடைபெயர்ச்சி வினையுருபுதொக்கனவற்றை வினைத்தொகை யெனப்படுமென்பார் காலங்கரந்தவெனஆகுபெயராற் கூறினார். புடைபெயர்ச்சிவினைகளை முதனிலைமொழிந்தவிறுதிகள் காலங்காட்டிநிற்றலின் அவ்வினைகட்கவையுருபாயின. [வ-று.] நெருநலடுகளிறு-இன்றடுகளிறு-நாளையடுகளிறு-வெல்களம்- தொழில்- பொழுது-கந்து-எனவரும். இ

வைவிரிவுழி-நெருநலட்டகளிறு - இன்றடாநின்றகளிறு- நாளைய
டுங்களிறு-எனவிரியும். இவைமுறையே யிறந்தகால வினைத்தொ
கைநிகழ்காலவினைத்தொகை யெதிர்காலவினைத்தொகை யெனப்
படும். இஃதொவ்வொருகாலத்தையேபற்றாது முக்காலமும்பற்றி
நெருநலுமட்டகளிறு- இன்றுமடாநின்றகளிறு - நாளையுமடுங்க
ளிறு-எனவிரியவரின் முக்காலவினைத்தொகையெனப்படும். இங்
ஙனங்காலவிகற்பம்பற்றிப்புடைபெயர்வினைகருதாது-அரிவாள்
ஆவுரிஞ்சுதறி-என்றாற்போல அடுகளிறென்பது இத்தொழிற்கு
ரியதிஃதென்னும் பொருள்பட வருமாயின் வினைத்தொகைக் கு
றிப்பெனப்படுமென்க. இவ்வாறே யேனை வினைத்தொகைகளை
யெல்லாமுய்த்துணர்ந்துகொள்க. இதற்குவருமொழி பெயரா
தலினித்தொகை நிலையாயேதொடரு மிரண்டிறந்தமொழிகளில
வென்க-அட்டதுகளிறு-அடாநின்றதுகளிறு- அடுவதுகளிறு- எ
னமுற்றுக்களிறுதிதொகுதலின்அடுகளிறெனவினைத்தொகையா
யிற்றெனின், அடுகளிறிது-அடுகளிறுவந்தது - எனப்பின்னுமோ
ர்பெயர்வினைகளையேற்றலின் அவையன்றெனவும் அடுவென்னு
முதனிலைவினையாகிய காரணத்தின்கண் முக்காலவினையாகிய கா
ரியங்க டொக்குநிற்றலின் அடுகளிறென வினைத்தொகை யாயிற்
றெனிற்காரணத்தின்கட் காரியந்தொக்குநிற்றற்குக்கவிறென்னு
முடிக்குஞ்சொல்வேண்டாமையின் அஃதொருமொழியிலக்கண
மன்றி இங்ஙனமதிகரித்த தொடர்மொழி யிலக்கணமன்மையின்
அஃதன்றெனவும்விலக்கிப்பெயரெச்சத் திறுதிதொக்கது வினை
த்தொகையென்றார். (யரு)

ஙகூரு. பண்பைவிளக்கு மொழிதொக்கனவு - மொருபொரு
ட்கிருபெயர் வந்தவுங் குணத்தொகை. *

(எ-ன்.) பண்புத்தொகையாமாறுணர்-ற்று. (ப-ரை.)பண்பை
-குணத்தோடு குணிக்குண்டாகிய ஒற்றுமை நயத்தை, விளக்கு
ம்-விளக்குகிற, மொழி - ஆகியவென்னும் பண்புருபு, தொக்க
னவும்- தொக்குநின்றவையும், ஒருபொருட்கு- ஒருபொருளுக்
கு, இருபெயர்- பொதுப்பெயருஞ் சிறப்புப்பெயருமாகிய இ
ருபெயர்கள், வந்தவும்- வந்தவையும், குணத்தொகை - பண்புத்
தொகைகளாம். எ-று.(பொ-ரை.) குணப்பெயரோடு குணிப்பெ
யர்புணருங்கால்அக்குணியோடு குணத்துக்குண்டாகியவொற்று
மைநயத்தை விளக்குதற்காண்டுவரும் ஆகியவென்னுமொழியா
கிய பண்புருபுதொக்குநிற்பனவும்அப்பண்புருபுதொக்குநிற்ப
ப்பொதுப்பெயருஞ் சிறப்புப்பெயருமா யொருபொருட்கிரு
பெயர்வந்தனவுமாகிய இவ்விரண்டும் பண்புத்தொகைகளாம்—

எ-று. ※ குணத்தொகையென்றமையான் ஒருபொருட்கிருபெயர்வந்தனவற்றின்கண்ணும் பண்புருபு தொகுமென்பதுபெற்றாம். [வ-று.] செந்தாமரை-கருங்குவளை-வட்டக்கடல்-சதுரப்பலகை- ஒருபொருள்- இருபொருள்- தீங்கனி- துவர்க்காய்-எ-ம்- ஆயன்சாத்தன் - வேழக்கரும்பு- அகரமுதல-சகரக்கிளவி-எ-ம்- செந்நிறக்குவளை-கரும்புருவச்சிலை-எ-ம்-வரும். இவைவிரியுழிச் செம்மையாகிய தாமரை-ஆயனாகியசாத்தன்-செம்மையாகிய நிறமாகியகுவளை எனவிரியும். இவ்வாகியவென்னுமுருபின்கண் ஆக்கவினையின்மையினிலக்கணையாற்செய்தவென்னும்வாய்பாட்டின்பாற்படுவதோர் வினையிடைச்சொல். ஆயனென்னும்பொதுப்பெயர் சாத்தனென்னுஞ்சிறப்புப்பெயரைவிசேடிக்கும் வேழமென்னுஞ் சிறப்புப்பெயர் கரும்பென்னும் பொதுப்பெயரை விசேடிக்கும்வந்தன. பிறவுமன்ன. முற்றெச்சமாகிய காலத்து முற்றுப்பொருளையொழித் தெச்சப்பொருளை புணர்த்தினின்றாற்போல ஆயன்வேழமென்றற்றொடக்கத்து நிலைமொழிகள் பண்பிச்சொல்லாயினும் அப்பண்பிகளையொழித்துப் பொதுப்பண்பினையுஞ் சிறப்புப்பண்பினையுமுணர்த்தி வருமொழிக்கடையாய்நிற்றலின் அவையும்பண்புத்தொகையாயின. ஆகியவென்பதன்று பண்பைவிளக்குமொழியென்பது மைவிகுதியென்றுவென்னையெனின், ஓர்மொழிக்குஉறுப்பாகியவிகுதியைமொழியென்றல் கூடாமையானும் வட்டஞ் சதுரமுதலிய பண்பிற்கவ்விகுதியின்மையானும் வட்டக்கடலென்புழிமகரவீறுகெட்டுப்புணர்ந்தாற்போல மையீறுகெட்டுப் புணர்ந்ததென்பது ஈறுபோதலென்னுஞ் சூத்திரத்தாற் பெறுதலானு மஃதன்றென்க. செய்யதாமரையென்னுமெச்சவிறுதிதொக்கதித்தொகையென்பாருஞ் செய்யதுதாமரையென்னு முற்றிறுதிதொக்க தித்தொகையென்பாருமுளர். இவையுமொழியன்மையானும் வட்டக்கடன்முதலிய பண்புத்தொகைக்கவ்வெச்சவிறுதிவிரித்தல்கூடாமையானு மவ்வெச்சவிறுதிதொக்கதேல்அதனைவினைத்தொகைக்குறிப்பென்றல்கூடுமன்றிப் பண்புத்தொகையென்றல் கூடாமையானு முற்றிறுதிதொக்கதேற் பண்புத்தொகையென்றல் கூடாமையேயன்றிச் செந்தாமரையிது செந்தாமரைவிரிந்ததென மேற்பெயர்வினையேற்றல் கூடாமையானும் அது பொருந்தாதென்க. இனிக் குணியோடு குணத்துக்குண்டாகியவொற்றுமைநயங்கருதாது ஒருபொருளைக்குணகுணியாகப்பிரித் தவ்வேற்றுமைநயங்கருதிச் செம்மையையுடையதாமரையெனவிரிக்கின் இரண்டாம் வேற்றுமையுருபும் பொருளு முடன்றொக்கதொகையாமென்க. பிறவுமன்ன. (௰௪)

௩௬௬. உவம வுருபில துவமத் தொகையே. *

(எ-ன்.) உவமத்தொகையாமாறுணர்-ற்று. (ப-ரை.) உவம வுருபு - வினை பயன் மெய் யுரு என்பவற்றைப் பற்றிவருகிற உவமவுருபுகள், இலது- தொக்கதொடர்மொழிகள், உவமத்தொகை-உவமத்தொகைகளாம். எ-று. (பொ-ரை.) வினைபயன் மெய் யுருவென்பனபற்றிவரும் உவமவுருபுகடொக்க தொடர்சொற்களுவமத்தொகைகளாம். எ-று. ※ [வ-று.] புலிக்கொற்றன்-மழைக்கை-துடியிடை-பொற்சுணங்கு-எ-ம்-குருவிகூப்பிட்டான் சக்கரஞ்சுற்றிவந்தான்- மரகதக்கிளிமொழி - இருண்மழைக்கை-எ-ம்-வரும். இவை விரியுழி புலியைப்போலுங் கொற்றன்-குருவியைப்போலுங் கூப்பிட்டான்-மரகதத்தைப்போலுங் கிளியைப்போலுமொழி எனவிரியும். இறுதிக்கட்காட்டிய இரண்டிறந்த தொடர் உவமைக்குவமையன்று முன்னதுருவுவமையும் பின்னது பயனுவமையுமாதலினென்க. இவையிரண்டாம்வேற்றுமையுருபும்பொருளுமுடன்றொக்கதொகையன்றே வுவமைத்தொகையென்றதென்னையெனின், செயப்படுபொருள் கருதிக்கூறியவழியிரண்டாம் வேற்றுமையுருபும் பொருளுமுடன்றொக்க தொகையாகவும் உவமப்பொருள்கருதிக்கூறியவழியதனையேயுவமத்தொகையாகவுங் கொள்ளப்படுமென்க. (௰௫)

௩௬௭. போலப்புரைய வொப்பவுறழ - மானக்கடுப்ப வியையவேய்ப்ப- நேரநிகர வன்னவின்ன - வென்பவும்பிறவு முவமத்துருபே. *

(எ-ன்.) உவமவுருபுஇயற்சொன்மாத்திரையாய்நில்லாது திரிசொல்லாற்பலவாதலின் அவை யிவையெனவுணர்-ற்று.(ப-ரை) போல- நிகர,இப்போலமுதலாகிய செயவெனெச்சம் பத்தும், அன்னவின்ன வென்பவும் - அன்ன இன்ன என்கிற பெயரெச்சக்குறிப்பிரண்டும், பிறவும்- இவைபோல்வன பிறவும் , உவமத்துருபு- உவமவுருபுகளாம். எ-று. (பொ-ரை.) போலவென்பது முதலிய செயவெனெச்சம் பத்தும் அன்ன இன்ன வென்னும் பெயரெச்சக்குறிப்பிரண்டும் இவைபோல்வன பிறவுமுவமவுருபுகளாம். எ-று. ※ இன்னவென்பதருகியன்றிவாராமையிற்பிற்கூறினார். பிறவென்றமையானே போலப்புரையவென்றற்றொடக்கத்து வினையடியாகப் பிறத்தற்குரிய ஏனைவினையெச்சவிகற்பங்களும் பெயரெச்சவிகற்பங்களும் பொருவ ஏற்ப அனையவென்றற்றொடக்கத்தனவுங் கொள்க. [வ-று.] குருவிபோலக் கூப்பிட்டான்- குருவிபுரையக்கூப்பிட்டான் - புலியன்னகொற்றன் எனப்பெயரொடுவினைபுணருங்கால் வினையெச்ச வுருபுகளைத்தினையும் பெயரொடுபெயர்புணருங்காற் பெயரெச்சவுருபுகளை,

த்திணையும் விரித்துக்கொள்க. பெயரொடு பெயர்புணரினும் புலியைப்போலப்பாயுஞ் சாத்தன். மழையைப்போலக்கொடுக்குங்கை துடியைப் போலச்சுருங்கிய இடை பொன்னைப்போல விளங்கியசுணங்கு எனவினையெச்ச வுருபுவிரிந்தல்லது நால்வகையுவமையும் விளங்காமையின் அவ்வுருபை முன்னரெடுத்துவிதந்தாரென்க. (௰௬)

௩௱௬௮. எண்ணலெடுத்தன் முகத்தனீட்ட - லென்னுநான்களவையு ளும்மிலதத்தொகை. *

(எ-ன்.) உம்மைத்தொகையாமா றுணர்-ற்று. (ப-ரை.) எண்ணல்- எண்ணலளவையும், எடுத்தல்-எடுத்தலளவையும், முகத்தல்-முகத்தலளவையும், நீட்டல்-நீட்டலளவையும், எனும்-என்கிற, நான்களவையுள்- நான்களவைப்பெயர்களுள், உம்மிலது - உம்மையாகிய உருபுதொக்குநிற்பவை, அத்தொகை- அவ்வும்மைத்தொகைகளாம். எ-று. (பொ-ரை.) எண்ணலளவை எடுத்தலளவை முகத்தலளவை நீட்டலளவையென்னு நால்வகையளவைகளாற்பொருள்களை யளக்குங்காற்றொடரும் அவ்வளவைப்பெயர்களுள் உம்மையாகிய வுருபுதொக்கு நிற்பன வும்மைத் தொகைகளாம்.— எ-று. * எண்ணலளவையான் அளத்தலேயன்றி அவ்வளவையையெடுத்தன் முதலிய கருவியின்பாற் படுத்து அளத்தலின் அளவைநான்கென்றதன்றி யெண்ணலளவையே யளவையாதலின் அதனை முற்கூறப்பட்டது. [வ-று ] கபிலபரணர்- இராப்பகல்-புலிவிற்கெண்டை- அறுபத்துமூவர்- ஆயிரத்தைஞ்ஞூற்றைம்பத்தொன்றேகாலேயரைக்கா லரைமாகாணி முந்திரிகை-எ-ம்-கழஞ்சேகால்- கழஞ்சரையே யரைமாவரைக்காணிமுந்திரிகை-எ-ம் நாழியாழாக்கு- கலனே முக்குறுணி நாழியாழாக்கே முச்செவிடு-எ-ம் - சாணரை-சாணரையே யரைக்கால்-எ-ம்-வரும்- இவைவிரியுழிக் கபிலனும் பரணனும் -இராவும் பகலும்-புலியும்வில்லுங்கெண்டையும்- அறுபதின்மரும் மூவரும்- எனவிரியும். பிறவுமன்ன. இவற்றுள் அறுபதென்பது எண்ணலளவையாய்த்தொடராது எண்ணுறுஞ்சியாய்த்தொடர்ந்தமையின் உம்மைத்தொகையன்று பண்புத்தொகையாமென்க. கபிலபரணரென்பது எண்ணும் பெயராகிய தென்னையெனிற் கபிலபரண ரிருவருமவந்தாரெனத் தொகைபெறுதலி னென்க. இவைபோல்வனபிறவுமன்ன. கபிலபரணர்ப் பாவிருவெனவரும்வழிக் கபிலனையும்பரணனையும் பாவிருவெனவேற்றுமையுருபும்உடன்விரியுமாலோவெனின் பாவிருவென்னும் வருமொழிநோக்கி வேற்றுமைத்தொகையாகவும் கபிலபரணரென்னும் நிலைமொழியிரண்டனையும்நோக்கி உம்மைத்தொகையாகவும் கொள்ளப்படுமென்க. இ

வ்வும்மையிடையினுமிறுதியினுமொருங்குதொகுமென்பார் அதிகரித்தமுறையானேயிடைக்கட்டொகும்வேற்றுமைத்தொகை முதலிய நான்கிற்கும்இடையேதொகுமென்ற பொதுவிதி மாற்றியிறுதிக்கட்டொகுமெனக்கூறும்அன்மொழித்தொகைக்கும் இடையே யித்தொகையை வைத்தாரென்க. எண்ணிடைச்சொற்கள்உம்மையேயன்றிப் பிறவுமுள்வேனு மஃதியற்சொல்லாதலின் உம்மைத்தொகையெனப்பட்டது. (மஅ)

ருகக. ஐந்தொகைமொழிமேற் பிறதொகலன்மொழி. *

(எ-ன்.) அன்மொழித் தொகையாமாறுணர்-ற்று. (ட-ை.) ஐந்தொகைமொழிமேல் - வேற்றுமைத்தொகைமுதலிய ஐவகைத்தொகைநிலைத் தொடர்மொழிகளுக்கும் புறத்து, பிற-அவையல்லாத பிறமொழிகளாகிய வுருபுகள், தொகல்- தொக்குவருவன அன்மொழி-அன்மொழித்தொகைகளாம். எ-று. (பொ-ை)வேற்றுமைத்தொகைமுதலியவைவகைத்தொகைநிலைத்தொடர்மொழிகட்கும்புறத்துஅவையல்லாதபிறமொழிகளாகியவுருபுக்தொகுதல்அன்மொழித்தொகையாம். எ-று. ※மேலெனீறமையான் அவற்றினுருபிடை யொழிபவென்ற பொதுவிதியை விலக்கினுரொன்பதுபெற்றும்.[வ-று.]பூங்குழல்-பொற்றொடி-கவியிலக்கணம்- பொற்றாலி-கிள்ளிகுடி- கீழ்வயிற்றுக்கழலை- எ-ம்- தாழ்குழல்- கருங்குழல்- துடியிடை- தகரஞாழல்-எ-ம்- தகரஞாழன்முலை-எ-ம்-வரும். இவைவிரியுழிப் பூவையுடைய குழலினையுடையாள்-பொன்னலாகிய தொடியினையுடையாள் கவிக்கிலக்கணஞ்சொன்னநூல் பொன்னிற்றாகிய தாலியினையுடையாள் கிள்ளியதுகுடியிருக்குமூர் கீழ்வயிற்றின்கணெழுந்த கழலைபோல்வான்-எ-ம்-தாழ்ந்தகுழலினையுடையாள்-கருமையாகியகுழலினையுடையாள்- துடியன்ன இடையினையுடையாள்-தகரமுஞாழலும் விராய்ச்சமைத்தசாந்து-எம்- தகரமுஞாழலும் விராய்ச் சமைந்தசாந்தையணிந்த முலையினையுடையாள்-எ-ம்-விரியும். இனியிரண்டிறந்தமொழிகளினறுவகைத்தொகையும்விரவித்தொகுமாறு "திகழ்செவ்வான்மதித்திருமுகப்பூங்குழல்,,எனவரும். இவைவிரியுழித்திகழ்ந்த செம்மையாகிய வானத்தின்கண் மதிபோலுந்திருமுகத்தினையும் பூவையுடையகுழலினையுமுடையாளெனவிரியும்.

ருாஎம. முன்மொழிபின்மொழி பன்மொழிபுறமொழி- யெனு நான்கிடத்துஞ் சிறக்குந்தொகைப்பொருள். *

(எ-ன்.) தொகைநிலைத் தொடர்சொற்க ளொன்றுபடத் தொடர்ந்தனவேனும்அப்பொருளு மொன்றுபடத்தொடராதுபிளவுபட்டோரிடத்துச் சிறந்தும் ஓரிடத்துச் சிறவாது நிற்குமெ

ன்பதுணர்-ற்று. (ப-ரை.) முன்மொழி - முன்சொல்லும், பின்மொழி-பின்சொல்லும், பன்மொழி-பலசொற்களும், புறமொழி-புறத்துவருகிறசொல்லும், எனுநான்கிடத்தும்- என்கிறநான்கிடத்திலொன்றிலே; தொகைப்பொருள்- தொகைநிலைத்தொடர்பொருள், சிறக்கும் - சிறந்துநிற்கும். எ-று. (பொ-ரை.) தொகைநிலைத்தொடர்மொழிகளின் முன்மொழிக்கண்ணேனும் பின்மொழிக்கண்ணேனு மனைத்து மொழிக்கண்ணுமேனுமனைத்துமொழிக்கும் புறமொழிக்கண்ணேனுஞ்சிறந்துநிற்குந்தொகைநிலைத்தொடர்பொருள். எ-று. ❈ இவ்விடங்களிற் சிறக்குமெனவே யேனையிடங்களிற்சிறவாது நிற்குமென்பதுபெற்றாம். தன்னியல்பிறவாமற் பன்மொழியென்றார். [வ-று.] குடம்வனைந்தான் - குழிசிவனைந்தான் - வேங்கைப்பூ - சண்பகப்பூ - முன்மரம்-முள்ளின்மரம் - விரிபூ - குவிபூ- செந்தாமரை - வெண்டாமரை-வேற்கண்- கயற்கண்- என்பனவற்றுட் குடமுதலிய முன்மொழிகள்இனம் விலக்கிநிற்றலின் அம்முன்மொழிக்கட் பொருள்சிறந்தும்வனைந்தான்முதலிய பின்மொழிக்கட்சிறப்பின்றியுநின்றன. நிலமுழுதான்-கண்ணிமை-நீர்க்குவளை-முட்டாட்டாமரை சுடுதீ- செஞ்ஞாயிறு- தாய்தலையன்பன் என்பனவற்றுள் நிலமுதலிய முன்மொழிகளினமு மினத்தை விலக்குதலுமின்றி வாராநின்றமையின் அம்முன்மொழிக்கட்பொருள்சிறப்பின்றியும் உழுதான்முதலிய பின்மொழிக்கட் பொருள்சிறந்துநின்றன. உழுதானென்றதுணையானே நிலத்தையென்பது தாமேபோதருமாதலிற் பின்மொழிக்கட் பொருள்சிறந்தனவாயின. ஏனையவுமன்ன. கபிலபரணர்-புலிவிற்கெண்டை-என்றற்றொடக்கத்தும்மைத்தொகைகளனைத்து மொழிக்கண்ணும் பொருள்சிறந்தன. பூங்குழல்-தாழ்குழல் என்றற் றொடக்கத் தன்மொழித் தொகைகள் அனைத்துமொழிக்கண்ணும்பொருள் சிறப்பின்றியனைத்துமொழிக்கும்புறமொழிக்கட் பொருள்சிறந்துநின்றன. தொகைநிலைத்தொடர்களுருபுதொகுதலிற்சொல்லாற் பிளவுபடாதும் பொருளாற் பிளவுபட்டு மிவ்வாறு வருமெனவேதொகாநிலைத்தொடர்களுருபுதொகாமையின் இவ்விருதிறத்தானும் பிளவுபட்டுப் புறமொழியொழிந்த மூன்றிடத்தும் இவ்வாறு பொருள்சிறந்து நிற்குமென்பதுதாமேபோதருமென்க. அவையுமிவ்வாறேகாண்க. அங்ஙனமாயிற்றொகைநிலை தொகாநிலையிரண்டற்குமிறுதிக்கணிவ்விலக்கணங்கூறாது ஈண்டுக்கூறியதென்னையெனிற்புறமொழிக்கட்பொருள்சிறத்தறொகாநிலைத்தொடர்க்கின்மையினென்க. இனி முன்மொழி பின்மொழிகளுட் பொருள் சிறந்தனவற்றிற் கொருவர்க்கொருவர் மலைந்து பொருள்கூறுவாருமுளர். அம்ம

லைவு அவர்காட்டு முதாரணங்களுட்காண்க. (௰௩)

ஙாஎக. வல்லொற்றுவரினே யிடத்தொகையாகு - மெல்லொற்றுவரினே பெயர்த்தொகையாகும். *

(எ-ன்.) இடத்தின்கட்டொக்கதொகையோ பெயரின்கட்டொக்கதொகையோவென்றையுறற்பாலனவற்றுட் சிலவற்றைத் துணிதற்காவதோர்குறியுணர்-ற்று. (ப-ரை.) வல்லொற்று - வல்லொற்றானது, வரின்-இடையேவந்தால், இடத்தொகையாகும் - இடத்தின்கண்ணே தொக்கதொகையாகும், மெல்லொற்று-மெல்லொற்றானது, வரின்-இடையேவந்தால், பெயர்த்தொகையாகும்-பெயரின்கண்ணே தொக்கதொகையாகும். எ-று. (பொ-ரை.) வல்லொற்றிடையேவந்துழியிடத்தின்கட் டொக்கதொகையாம் மெல்லொற்றிடையேவந்துழிப் பெயரின்கட் டொக்கதொகையாம். எ-று. ※ மெல்லொற்றருகி வருதலிற் பிற்கூறினார். [வ-று.] வடுகக்கண்ணன் - வடுகங்கண்ணன் - கன்னடக்கொற்றன் - கன்னடங்கொற்றன் - துளுவச்சாத்தன் - துளுவஞ்சாத்தன் - எனவரும். பிறவுமன்ன. இவைவிரியுழி வல்லொற்றுவரின் வடுகநாட்டிற் பிறந்தகண்ணனெனவும் மெல்லொற்றுவரின் வடுகனாகிய கண்ணனெனவும்விரியும். வடுகனென்பது தந்தைபெயராய் மெல்லொற்றுவரின் வடுகற்குமகனாகிய கண்ணனெனவிரியும். ஏனையவுமன்ன. வல்லொற்றுவரின்மெல்லொற்றுவரினென்றமையான் இயல்பினும்விதியினுநின்ற வுயிரீற்று மொழிமுன் வல்லினமுதன்மொழி வந்து இடத்தொகையும்பெயர்த்தொகையுமாயையுறநிற்கினிக்குறியாற்றுணியப்படுமென்பதூஉம் வடுகநாகன் வடுகவணிகன்வடுகவரசன் எனவரிற் சொல்லுவான் குறிப்பானன்றி யிவ்வாறு துணியப்படாவென்பதூஉந் தாமே போதருமென்க. (௨௰)

ஙாஎஉ. உயர்திணை யும்மைத் தொகைபல ரீறே. *

(எ-ன்.) உம்மைத்தொகைக்காவதோர்விதியுணர்-ற்று. (ப-ரை) உயர்திணை-உயர்திணையொருமையில்வருகிற, உம்மைத்தொகை-உம்மைத்தொகைகளானவை, பலரீறே-ரவ்வொற்றுங்கள்ளுமாகிய பலர்பால் விகுதியை யுடையனவேயாம் எ-று. (பொ-ரை.) உயர்திணையொருமைப்பாலின்கண்வருமும்மைத்தொகைகள் ரவ்வீறுங்கள்ளீறுமாகிய பலரீற்றனவேயாம். எறு. ※ பலரீறெயென்றமையான் ஒருமைப்பாலென்பதுபெற்றாம். [வ-று.] கபிலபரணர் - கல்லாடமாமூலர்-சேரசோழபாண்டியர் - தேவன்றேவிகள்-பார்ப்பான் பார்ப்பனிகள் - வில்லிவாளிகள் - எனவரும். இவ்வொருமைக ளித்துணையொன்னும் பொருள்பட நிற்றலிற் பலரீற்றவாயின. னகரவீறிடையேகெடுதல் சிலவிகாரமாமுயர்திணையென்பதனானு மீறுதிக்கட்கெடுதல் இதனுட்பலரீறெயெ

ன்பதனானுங்கொள்க. பலரீறேயென்னுந் தேற்றத்தானஃறிணை
யொருமையும்மைத்தொகைகளும் பொதுவொருமை யும்மைத்
தொகைகளுந் தத்தம்பன்மையீற்றனவேயாமென்னு நியதியவ
ல்லவென்றாராயிற்று. அவைவருமாறு உண்மை யின்மைகள்-உ
ண்மையின்மை - நன்மைதீமைகள் - நன்மைதீமை-இராப்பகல்
கள் - இராப்பகல் - நிலநீர்தீகாற்று காயங்கள் - நிலநீர்தீகாற்று
காயம்-எ-ம்-தந்தைதாயர் -தந்தைதாய்கள் - தந்தைதாய்-சாத்த
ன்சாத்தியர் - சாத்தன்சாத்திகள் - சாத்தன்சாத்தி-எ-ம்- பன்மை
யீற்றானு மியல்பாயவொருமையீற்றானும் வந்தன. இயல்பா
கியவொருமையீற்றான் வந்தனவே யும்மைத்தொகையன்றிக் க
பிலன்பரணனிருவரும் வந்தாரென்றாற்போலச்செவ்வெண்ணும்
பிறவெனில், பலமொழிகளையுந்திரட்டி யொருபிண்டமாகக்கூ
றியவழி யும்மைத்தொகையாகவும் பிளவுபடக்கூறியவழிச் செவ்
வெண்ணாகவுங் கொள்ளப்படுமென்க. (உக)

ஙாஎங. தொக்குழி மயங்குந விரண்டு முதலே - யேழெல்லைப்
பொருளின் மயங்குமென்ப. *

(எ-ன்.) தொகைநிலைத் தொடர்சொற்க ளுருபுதொக்கு நின்ற
விடத்திற் சிலபொருளான் மயங்குமாறுணர்-ற்று. (ப-ரை.) தொ
க்குழி-வேற்றுமையுருபுமுதலாகிய வுருபுகள் தொக்குநின்றவழி
மயங்குந-பொருள்களினுமேல மயங்குந் தன்மையனவாகிய தொ
டர்மொழிகள், இரண்டுமுதல்-இரண்டுமுதலும், ஏழெல்லை-ஏழீ
றுமாகிய,பொருளின் - பொருள்களால், மயங்கும்- மயங்கும்,எ
ன்ப-என்றுசொல்லுவர்புலவர். எ-று. (பொ-ரை.) வேற்றுமையு
ருபுமுதலிய வுருபுகடொக்குநின்ற வழிப்பொருள்களான் மயங்
குமியல்பினவாகிய தொடர்சொற்களிரண்டு முதலேழீறாகிய
பொருள்களான் மயங்குமென்று சொல்லுவர்புலவர். எ-று. *
தொக்குழியெனவே தொகாவிடத்து மயங்காவென்பதூஉம்மய
ங்குவன மயங்குமெனவே மயங்குமியல்பில்லனமயங்காவென்ப
தூஉம் பொருளெனப்பொதுப்படக்கூறினமையிற் றொகைநி
லைப்பொருளானுந் தொகாநிலைப்பொருளானுந் தொகைநிலைத்
தொடர்சொன் மயங்குமென்பதூஉம்பெற்றாம். [வ-று.] தெய்
வவணக்கம்-தாழ்குழல்- என்பன தெய்வத்தைவணங்கும் வணக்க
ம்-தெய்வத்துக்கு வணக்கம்- தாழ்ந்தகுழல் - தாழ்ந்தகுழலினையு
டையாள்என இருபொருளான் மயங்கிய வொருதொடர்த் தொ
கைச்சொல். தற்சேர்ந்தார்-கடிப்பகை என்பன தன்னைச்சேர்ந்
தார்-தன்னொடுசேர்ந்தார்-தன்கட்சேர்ந்தார்-கடிக்குப்பகை-கடி
யினதுபகை-கடியாகியபகைஎன மூன்றுபொருளான்மயங்கிய
வொருதொடர்த் தொகைச்சொல். சொல்லிலக்கணம் என்பது

சொல்லினதிலக்கணம்- சொற்கிலக்கணம் - சொல்லின்கணிலக்கணம்-சொல்லிலக்கணஞ்சொன்ன நூல்-என நான்குபொருளான்மயங்கிய வொருதொடர்த் தொகைச்சொல். பொன்மணி என்பதுபொன்னானாகியமணி-பொன்னாகியமணி - பொன்னின்கண்மணி-பொன்னொடுசேர்ந்தமணி - பொன்னுமணியும் எனஐந்துபொருளான்மயங்கிய வொருதொடர்த்தொகைச்சொல். மரவேலியென்பது மரத்தைக்காக்கும்வேலி-மரத்துக்குவேலி-மரத்தினதுவேலி-மரத்தின்புறத்தும்வேலி-மரத்தானாகியவேலி -மரமாகியவேலி-என ஆறுபொருளான்மயங்கிய வொருதொடர்த்தொகைச்சொல். சொற்பொருள் என்பது சொல்லானறியப்படும்பொருள்- சொல்லினதுபொருள்-சொற்குப்பொருள்-சொல்லின்கட்பொருள்-சொல்லும்பொருளும்-சொல்லாகியபொருள் -சொல்லானதுபொருள்-என் ஏழுபொருளான்மயங்கிய வொருதொடர்த்தொகைச்சொல். சொல்லானதுபொருளென்றது தொகாநிலைப்பொருளாகிய வெழுவாய். சொல்லானறியப்படும்பொருள் சொல்லினறியப்படும்பொருளென மூன்றாவதனொடைந்தாவதும் விரிப்பாருமுளர். அவை யிரண்டற்கும் ஏறுப்பொருளொன்றேயாதலின் அது வேற்றுப்பொருளான் மயங்கிய தன்றென்க. "வாளைமீனுள்ள றலைப்படல்" என்பது வாளைமீனையுள்ளறலைப்படல் -வாளைமீனுள்ளலைத்தலைப்படல் எனவிரண்டாவதும் எழுவாயுமாகிய விருபொருளான்மயங்கிய பலதொடர்த் தொகைச்சொல். புலிகொல்யானை-குரங்கெறிவிளங்காய் என்பன புலியைக்கொன்றயானை - புலியானதுகொன்றயானை - புலியாற்கொல்லப்பட்டயானை- குரங்கையெறிந்தவிளங்காய் - குரங்கானெறிந்தவிளங்காய் -குரங்காலெறியப்பட்டவிளங்காய் எனவிரண்டாவதுமெழுவாயு மூன்றாவதுமாகிய மூன்றுபொருளான் மயங்கிய பலதொடர்த்தொகைச்சொல். பிறவுமன்ன. இவ்வாறுசெம்பொருள்கொள்ளாதுவலிந்து பொருள் கொள்ளப்புகின் எல்லையென்னும் வரையறையில் நில்லாது பலவாமாதலினது தொன்னெறியன்றென்பாரென்பவென்றார். இனி அலர்முல்லையென்னும்வினைத்தொகைமுதலியன மயங்காதனவாம். அலரையுடையமுல்லையெனமயங்குமாலோவெனின், அலரென்பது வினைத்தொகைக்கண் வினையாயும் வேற்றுமைத் தொகைக்கட் பெயராயுஞ்சொல்வேறுபட்டமையினது பொருளான்மயங்கியதன்றென்க.

௩௱௭௪. முற்றீரெச்ச மெழுவாய் விளிப்பொரு - ளாறுருபிடையுரி யடுக்கிவை தொகாநிலை. ❊

(எ-ன்.) நால்வகைச்சொற்குமாவதோர் விதியுணர் - ற்று. —

(ப-ரை.) முற்று - வினைமுற்றும், பெயரெச்சம் - பெயரெச்சமும் வினையெச்சமும், எழுவாய்- எழுவாயும், விளி- விளியும்ஆகிய, பொருள்-ஐவகைப் பொருள்களிலே பெயர்வினைகள் புணருகிற புணர்ச்சியும், ஆறுருபு- வேற்றுமைப்பொருள்களில் அவற்றினுருபுகளாகிய இரண்டாவதுமுதலாகிய வாறுருபுகளும் விரிந்துநிற்கப் பெயர்வினைகள் புணருகிற புணர்ச்சியும், இடை- இடைச்சொற்புணர்ச்சியும், உரி- உரிச்சொற்புணர்ச்சியும், அடுக்கு-அடுக்குப்புணர்ச்சியுமாகிய, இவை- இவ்வொன்பதும், தொகாநிலை- தொகாநிலைத்தொடர்மொழிகளாம்- எ-று. (பொ-ரை.) முற்றும்பெயரெச்சமும் வினையெச்சமும் எழுவாயும் விளியுமாகிய ஐவகைப்பொருளின்கட் பெயர்வினைகள்புணரும் புணர்ச்சியும் வேற்றுமைப்பொருளின்கண் அவற்றினுருபாகியவிரண்டாவது முதலியவாறும்இடையே விரிந்துநிற்பப் பெயர்வினைகள் புணரும்புணர்ச்சியும் ஏனையிடைச்சொற்புணர்ச்சியும்உரிச்சொற்புணர்ச்சியுமொருசொல்லடுக்கிவரும் புணர்ச்சியுமாகிய வொன்பதுந் தொகாநிலைத்தொடராம். எ-று. ❁ தொகாநிலையென்றமையாற் காலங்கரவாதபெயரெச்சமீண்டுக்கொள்க. [வ-று.] உண்டான் சாத்தன்- குழையன்கொற்றன்- உண்டசாத்தன் - நல்லசாத்தன்- உண்டுவந்தான்- உழுதன்றியுண்ணான்- சாத்தன்வந்தான்- கொற்றாகொள்-குடத்தைவனைந்தான்- வாளாலெறிந்தான்-இரப்போர்க்கீந்தான்- மலையினிழிந்தான்- சாத்தனதுகை - மணியின்கணொளி- அதுகொறொழிகாமநோயே - நனிபேதையே நயனில்கூற்றம்- பாம்புபாம்புஎனமுறையேகாண்க. வேற்றுமைத்தொகையும் வினைத்தொகையும் விரிந்தவழி வேற்றுமைத் தொகாநிலையும் பெயரெச்சத்தொகாநிலையுமாமென்றார்.ஏனை நான்கு தொகையும்விரிந்தவழித் தொகாநிலையொன்பதனுளவையாம்பிறவெனின், பண்புத்தொகையும்உவமைத்தொகையும் உம்மைத்தொகையும்விரிந்தவழி யிடைச்சொற்புணர்ச்சியும் அன்மொழித்தொகைவிரிந்தவழிவேற்றுமைத்தொகாநிலை முதலேற்பனவுமாமெனக.

௩௭௫. திணையேபாலிடம் பொழுது விறைவிறை - மரபா மேழு மயங்கினும் வழுவே. ❋

(எ-ன்.) வழுவறிந்தல்ல தவற்றைக்களைதல் கூடாமையினவையிவையெனவுணர்-ற்று. (ப-ரை.) திணை- இருதிணையும், பால்- ஐம்பாலும், இடம்- மூவிடமும், பொழுது- முக்காலமும், விறு- விறுவும், இறை- விடையும், மரபு- பலவகைமரபுகளும், ஆம்- ஆகிய, எழும் - எழும், மயங்கின் - தன்றன்வழிமயங்கின், வழுவாம்- வழுவாம். எ-று. (பொ-ரை.) திணைமுதலாக மரபீறாகவருமேழுந் தத்தநெறிமயங்கின்வழுவாம். எ-று. ❁ திணைமுதலியவ

னைத்து மரபாமாயினும் இங்ஙனம் விதவாதொழிந்தனவற்றை மரபெனக்கொள்க வென்பார் அதனையிறுதிக்கட் கூறினார். [வ-று.] அவன்வந்தது-என்பது திணைவழு. அவன்வந்தாள் என்பது பால்வழு. யான்வந்தான் என்பதிடவழு. நாளைவந்தான் என்பது காலவழு. கறக்கின்றவெருமை பாலோசினையோ - ஒருவிரல்காட்டிச் சிறிதோபெரிதோ என்பன வினாவழு. கடம்பூர்க்குவழி யாதெனின் இடம்பூணியன் ஆவின்கன்றன்று. கருவூர்க்குவழியாதெனிற் பருநூலபன்னிருதொடி என்பன விடைவழு. யானைமேய்ப்பானை யிடையன் ஆடுமேய்ப்பானைப் பாகன் யானைச்சாணி எருமையிலத்தி என்பன மரபுவழு. இவ்வாறேயிவ்வெழுவகைவழுவிகற்பங்களெல்லா முணர்ந்து கொள்க. (௨௪)

௩௭௮. ஐயந் திணைபா லவ்வப் பொதுவினு - மெய்தெரி பொருண்மே லன்மையும்விளம்புப. *

(எ-ன்.) திணையொடு வினாவிடையும் பாலொடுவினாவிடையும் வழுவாது காத்தலுணர் -த்-று. (ப-ரை.) திணை- (ஐயம்) திணையையத்தையும், பா (லையம்) பாலையத்தையும், அவ்வப்பொதுவினும்-அதனதன்பொதுச்சொல்லாலும், மெய்தெரிபொருண்மேல் - துணிந்தபொருண்மேல், அன்மையும்-அல்லாததன்மையவைத்தும், விளம்புப - சொல்லுவர்புலவர். எ-று. (பொ-ரை.) திணையையத்தினை அவற்றின்பொதுச்சொல்லானும் பாலையத்தினை அவற்றின்பொதுச்சொல்லானுந் துணிந்தபொருண்மே லல்லாத தன்மையினை வைத்துங்கூறுவர்புலவர். எ-று. * [வ-று.] குற்றியோமகனோவெனத் திணையையந்தோன்றியவழிக் குற்றியோமகனோவங்ஙனந் தோன்றாநின்றது தோன்றாநின்றானெனச்சிறப்புச் சொல்லாற்கூறிற் றிணைவழுவும் வினாவழுவுமாம் அவையொழித்துக் குற்றியோமகனோ வங்ஙனந்தோன்றாநின்ற வுரு எனப்பொதுச்சொல்லாற்கூறுக. உரு என்பது பொதுச்சொல்லாய் வழாநிலையாயதென்னையெனிற் குற்றிக்குமகனுக்குமுருப்பொதுப்பட நின்றமையினென்க. ஆண்மகனோ- பெண்மகளோவென வுயர் திணைப்பாலையந்தோன்றியவழி யாண்மகனோ பெண்மகளோ வங்ஙனந்தோன்றாநின்றான் தோன்றாநின்றாள் எனச்சிறப்புச்சொல்லாற்கூறிற் பால்வழுவும் வினாவழுவுமாம் அவையொழித்து ஆண்மகனோ பெண்மகளோ வங்ஙனந் தோன்றா நின்றார் எனப் பொதுச்சொல்லாற்கூறுக. தோன்றாநின்றா ரென்பது பொதுச்சொல்லாய்வழாநிலையாய தென்னையெனின் ஆண்பெண்ணிரண்டல்லது பல்பாலென வேறொன்றின்றி யவ்விருபாற்கும் பொதுமையினிற்றலினென்க. ஒன்றோபலவோவென வஃறிணைப்பாலையந்தோன்றியவழியொன்றோபலவோவிச்செய்புக்கதுபுக்கன

வெனச்சிறப்புச்சொல்லாற்கூறிற் பால்வழுவும் விரவழுவுமாம் அவையொழித்து ஒன்றேபலவோ விச்செய்புக்கபெற்றம் எனப்பொதுச்சொல்லாற்கூறுக. இனிமெய்தெரிந்தபொருள்குற்றியெனின் மகனன்று. எ-ம். மகனெனிற் குற்றியல்லன்- எ-ம். ஆண்மகனெனிற் பெண்மகளல்லன்- எ-ம். பெண்மகளெனி னாண்மகனல்லள்- எ-ம். கூறுக. மகனன்று குற்றியெனக் கூறிற் குற்றியோமகனோவெனவினாவினார்க்கு மகனன்றெனினமையும், குற்றியென மேல்வைத்துக் கூறல்வேண்டாகூறலாம். மகனன்றென்பதனை மகனினன்றெனவைந்தாம் வேற்றுமைப் புணர்ச்சியென்பாருமுளர். அதுபோல்வருநீயல்லனென்பதும் அங்ஙனம்விரித்தல்கூடாமையினல்வழிப்புணர்ச்சியுளெடுத்துவிதந்தபதினொன்கின்புறத்ததாயடங்குமென்க. ஏனைமூன்றுகாட்டுமன்ன. மெய்தெரியாப்பொருண்மை யல்லாத தன்மையினைவைத்து மகனல்லன் குற்றியெனிற் குற்றியென்னும் பயனிலைக்கெழுவாய்தந்துமகனல்லனவ்வுருக் குற்றியெனக் கூறல்வேண்டும், அங்ஙனங் கூறவே சொற்பல்குதலென்னும் விடைவழுவாம். அவ்வழுவாராது மெய்தெரிபொருண்மை யன்மையும் விளம்புபவென்றார். (௨௫)

௩௱௭௭. உயர்திணை தொடர்ந்த பொருண்முதலாறு - மதனொடுசார்த்தி னத்திணை முடிபின. *

(எ-ன்.) திணைவழுவமைப்புணர்- ற்று. (ப-ரை.) உயர்திணை= உயர்திணையை, தொடர்ந்த-பற்றிய, பொருண்முதலாறும்-பொருளாதியாறும்; அதனொடு- அவ்வுயர்திணையோடு, சார்த்தின்-சேர்த்துமுடிக்கின்; அத்திணைமுடிபின-அவ்வுயர்திணைமுடிபினவாம். எ-று. (பொ-ரை.) உயர்திணையைத் தொடர்ந்த வஃறிணைப்பொருளாகியவாறுமுயர்திணையோடு சார்த்திமுடிப்பினுயர்திணைமுடிபினவாம். எ-று. ※ தொடர்தலாவதஃறிணைப்பொருளாதியாறுமுயர்திணைக்குக்கிழமைப்பொருள்களாய்நிற்றல். சார்த்தலாவதுயர்திணை யெழுவாயின் பயனிலையோ டஃறிணையெழுவாயினையுமுடன்முடித்தல். உயர்திணை தொடர்ந்த பொருண்முதலாறென்றமையிற் பொருளென்பதுயர்திணைப்பொரு ளன்றென்பதாம். [வ-று.] நம்பிபொன்பெரியன் - நாடுபெரியன் - வாணாள்பெரியன்- மூக்குக்கூரியன்- குடிமைநல்லன் - நடைகடியன் எனவரும். சொற்றொறு மிற்றிதன் பெற்றியென்பதனானே கிணறுநீரூறிற்று- மாடுகோடுகூரிது எனவஃறிணையோடு சார்த்தினஃறிணை முடிபினவாதலுங்கொள்க. சார்த்தினெனவே சார்த்தாவிடின் வழாநிலையாய்ப்பொன்பெரிதுமூக்குக்கூரிதெனத்தம்முடிபுகொள்ளுமென்க. பொன்னென்னுமஃறிணை யெழுவாய் நம்பியென்னுமுயர்திணை யெழுவாயினது பயனிலையாகிய பெ

ரியனென்று முயர்திணைவினைக் குறிப்பைக்கொண்டு முடிதலின் வழுவாய்த் தொடர்புண்மைகருதிச் சார்த்தி முடித்தலினமைதி யாயிற்றென்க. பொன்னினது பெருமையையுடையனெனவாறு முருபுவிரித்து வழாநிலையென்றாலென்னையெனின், வேற்றுமைப்புணர்ச்சிக்குரிய வெழுத்துச் சந்தியின்மையின் அதுபொருந்தாதென்க. பிறவுமன்ன. (௨௬)

௩௭௮. திணைபால்பொருள்பல விரவின சிறப்பினு - மிகவினுமிழிபினு மொருமுடிபினவே. *

(எ-ன்.) திணைபான்மரபு வழுவமைப்புணர்-ற்று. (ப-ரை.) திணை-திணைகளும், பால்-பால்களும், விரவின - கலந்துநின்றனவாகிய, பொருள்பல-வேறுவினைப் பலபொருள்களும், சிறப்பினும்-சிறப்பினாலும், மிகவினும்-மிகுதியினாலும், இழிபினும்-இழிபினாலும், ஒருமுடிபின-ஒருமுடிபினவாகும். எ-று. (பொ-ரை) திணையும்பாலும் வேறுவினைப் பல்பொருள்களும் விரவிநின்றவழியவை பலவுமொருமுடிபினவாஞ் சிறப்பினானும் மிகுதியினானும் இழிபினானும். எ-று. ❁[வ-று] "அங்கண் விசும்பினகனிலாப் பாரிக்குந்- திங்களுஞ்சான்றோரு மொப்பர்மற்- றிங்கண்- மறுவாற்றுஞ்சான்றோரஃதாற்றார்- தெருமந்து-தேய்வரொருமாசுறின்." -எ-ம்- "பழியஞ்சான்வாழும் பசுவுமழிவின்றிக்- கொண்டவருந்தவம்விட்டானுங்- கொண்டிருந்- தில்லஞ்சிவாழு மெருதுமிவர்மூவர்-நெல்லுண்டநெஞ்சிற்கோர்நோய்." -எ-ம்- இவைதிணைவிரவிச்சிறப்பினா னுயர்திணைமுடிபேற்றன. இழிந்தோரையெண்ணியபின் அதனுட்சிறப் பென்னையெனின், பசு விட்டான் எருது என்னுமூன்றனுள் விட்டானென்பது உயர்திணையாண்சிறப்பு. பசு எருது என்பன வுயர்திணைப்பொருளேனும் அஃறிணையாக வுருவகப்படுத்தினமையின் இங்ஙனமமைக்கப்பட்டன. "தன்பான் மனையா ளயலான்றலைக் கண்டுபின்னு- மின்பாலடிற்கிவர்கின்றகைப்பேடிபோலா- நன்பாற்பசுவே துறந்தார்பெண்டிர்பாலர்பார்ப்பா- ரென்பாரையோம்பே னெனின்யானவனாகவென்றான்." - எ-ம்- "பார்ப்பார்தவரே சுமந்தார் பிணிப்பட்டார்- மூத்தார்குழவியெனுமிவர்கட் - காற்றவழிவிலங்கினாரும் றப்பிடைப் - போற்றியெனப்படுவார்." -எ-ம் - இவைதிணைவிரவிமிகுதியினானுயர்திணைமுடிபேற்றன "நகைதரவந்தோர்நகைசுழிறக்கொழிய -வசைபட வாழ்ந்தோர் பலர்கொல் -புரையினற்பனுவனால்வேதத் தருஞ்சீர்த்திப் பெருங்கணுறை நெய்ம்மலியாகுதிபொங்கப்- பன்மாண்வீயாச் சிறப்பின் வேள்விமுற்றியூபநட்ட வியன்களம்பலகொல் யாபலகொல்லோ பெரும."

எனவிழைவுசிறப்பினான் அஃறிணைமுடிபேற்றன. "எச்சிலார்தீண்
டார் பசுப்பார்ப்பார்தீத்தெய்வ-முச்சந்தலையோடிவையென்ப
யாவருந்-திட்பத்தாற்றீண்டாப்பொருள்." என விழைவுமிகுதியி
னால்அஃறிணைமுடிபேற்றன. "வடுகரரிவாளர்வான்கருநாடர்-கு
டுகாடுபெருமை யென்றிவையாறுங்- குறுகாரறிவுடையார்."
-எ-ம் "மூர்க்கனுமுதலையுங்கொண்டதுவிடா."-எ-ம்-இவை யிழி
பினான் அஃறிணைமுடிபேற்றன. பன்மையொருமுடிபினவென்
றது ஒருமுடிபினவெனவாளாகூறினமையின் "தானுந் தேரும்
பாகனும்வந்தென்னலனுண்டான்." எனத்திணைவிரவிச் சிறப்பி
னான் ஆண்பான்முடிபேற்றலும் "தொல்லைநால்வகைத் தோழ
ருந் துணைமணி நெடுந்தேர்-மல்லற் றம்பியு மாமனு மதுவிரிக
மழ்தார்ச்- செல்வன்றாதையுஞ் செழுநகரொடுவளநாடும்-வல்லை
தொக்கது வளங்கெழு கோயிலுமொருங்கே." எனத்திணைவிரவி
ச்சிறப்பினான் ஒருமைமுடிபேற்றலுங்கொள்க. "நானுமென்சி
ந்தையு நாயகனுக் கெவ்விடத்தோந் - தானுந்தன் றையலுந் தா
ழ்சடையோனுண்டிலனேல்." என ஆண்பாலும் பெண்பாலும்
விரவிச் சிறப்பினான் ஒருமுடிபேற்றன. சொற்றொறுமிற்றிதன்
பெற்றியென்பதனானே விரவாதென்னித் தோழனுந்தானும்வ
ந்தான் - தோழியுந்தானும்வந்தாள் எனமுடிதலுங்கொள்க. கறி
யுஞ்சோறுமுண்டான்- மாலையுமுடியுங்கவித்தான்-குஞ்சமுங்கு
டையுங்கவித்தான்- சாந்தமுமாலையுந் தழுவினான்- என வேறுவி
னைப்பல்பொருள்விரவிச்சிறப்பினான் ஒருமுடிபேற்றன. பிறவு
மன்ன. இங்ஙனம் இறுதிக்கட்கூறிய மரபுவழுவமைதி வேறுவி
னைப் பல்பொருடழுவிய பொதுச்சொலுமென்னுஞ் சூத்தி
ரத்தோடு மாறுகொளக்கூறலாம் பிறவெனின், சிறப்புமுதலியக
ருதாதொத்த நிலைமையி னெண்ணியவழி முடியுமரபு அங்ஙனங்
கூறுதலின் அதுமாறுகொளக்கூறலன்றென்க. "பாணன்பறைய
ன்கடம்பன்றுடியனென் - றந்நான்கல்லது குடியுமில்லை." என
உயர்திணையெண்ணி யஃறிணைமுடிபினவாயவழு யாண்டமைக்
கப்படுமெனிற் குடியென்பதனைப் பாணன்முதலானொடுங்கூ
ட்டியுரைக்கப்படுதலின் வழாநிலையாமென்க. இனிப்பால்விரவி
யொருமுடிபேற்பனவற்றிற்கு ஒருவன்கொல்லோ பலர்கொல்
லோ விச்செய்புக்கார் என வுதாரணங்காட்டின், ஐயந்திணைபா
லவ்வப்பொருளினு மென்பதனான் வந்தனவன்றி யீண்டைக் கா
ணாமையானும் இங்ஙனங்காட்டிய விலக்கியங்கட் கிலக்கண மின்
மையானு மதுகாட்டன் றென்க. (௨௭)

௩௭௪. உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ்செறலினு-மி
ழிப்பினும்பாறிணை யிழுக்கினு மியல்பே. ✻

(எ-ன்.) திணைபால் வழுவமைப் புணர்-ற்று. (ப - ரை.) பால்-பாலும், திணை-திணையும், உவப்பினும்- மகிழ்ச்சியினாலும், உயர்வினும்-மேன்மையினாலும், சிறப்பினும்-சிறப்பினாலும், செறலினும்-கோபத்தினாலும், இழிப்பினும்- பழிப்பினாலும், இழுக்கினும்-வழுவினும், இயல்பு - இயல்பாம். எ-று. (பொ-ரை.) உவப்புமுதலிய வைந்தினும் பாலுந்திணையும் வழுவினுமியல்பாம். எ-று. ❋ பாலைமுற்கூறினா ரவ்வழுவமைதி பயின்றுவருதலின். இழுக்கினுமென்னுமும்மை யுவப்புமுதலியவற்றினிழுக்கியேவருமென்னு நியதியவல்லவென்னும்பொருடந்து நின்றது. [வ-று.] தன்புதல்வனை யென்னம்மைவந்தாளென்பதுஉவப்பினாண்பால் பெண்பாலாயிற்று. ஒருவனை அவர்வந்தாரென்பதுஉயர்வினொருமைப்பால்பலர்பாலாயிற்று. "தாதாய்மூவேழுலகுக்குந்தாயே." என்பது சிறப்பினான்ஆண்பால் பெண்பாலாயிற்று. "எனைத்துணையராயினு மென்னாந் தினைத்துணையுந் - தேரான்பிறனில்புகல்." என்பது செறலிற்பலர்பாலொருமைப்பாலாயிற்று. பெண்வழிச் செல்வானைநோக்கியிவன் பெண்ணென்பதுஇழிவினாண்பால் பெண்பாலாயிற்று. ஓராவினை யென்னம்மைவந்தாள் என்பதுஉவப்பினஃறிணையுயர்திணையாயிற்று. "செந்தார்ப்பசுங்கிளியார் சென்றார்க்கோ ரின்னுரை-தந்தாரோற் றந்தாரொன்னின்னுயிர்." என்பது உயர்வினஃறிணையுயர்திணையாயிற்று. "தம்பொருளென்பதம் மக்கள்." என்பது சிறப்பி னுயர்திணையஃறிணையாயிற்று. "எவவுஞ்செய்கலான் றான்றேரானவ்வுயிர்- போஒமளவுமோர் நோய்." என்பது செறலி னுயர்திணையஃறிணையாயிற்று. நாமரனுடைமையென்பது இழிப்பினுயர்திணையஃறிணையாயிற்று. பிறவுமன்ன. சொற்றொறுமிற்றிதன்பெற்றியென்பதனானே புதல்வனை அப்பன்வந்தானென்றும் புதல்வியை அம்மைவந்தாளென்றும்வரு மரபுவழுவமைதிகளுங்கொள்க. இவ்வழுவமைதி யுருவக வுவமைகளின் வழுவியமைவன வொழியக்கொள்க. (உஅ)

ருா அய. ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையு-
மோரிடம் பிறவிடந் தழுவலு முளவே. ❋

(எ-ன்.) முற்கூறிய வுவப்புமுதலிய காரணத்தானன்றி யமைந்தபால் வழுவமைப்பும் அவ்வாறமைந்த இடவழுவமைப்பு முணர்-ற்று. (ப-ரை.) ஒருமையின்-ஒருமைப்பாலில், பன்மையும்-பன்மைப்பாற்சொல்லையும், பன்மையின்- பன்மைப்பாலில், ஒருமையும்- ஒருமைப்பாற்சொல்லையும், ஓரிடம்-ஓரிடத்தில், பிறவிடம்-பிறவிடச்சொல்லையும், தழுவலும்-தழுவிக்கூறுதல்களும், உள-உளவாம். எ-று. (பொ-ரை.) ஒருமைப்பாலின்கட் பன்மை

ச்சொல்லைத் தழுவிக்கூறுதலும் பன்மைப் பாலின்கண் ஒருமைச்சொல்லைத் தழுவிக்கூறுதலு மோரிடத்தின்கட் பிறவிடச்சொல்லைத்தழுவிக்கூறுதலுமுளவாம். எ-று. ❊ [வ-று.] வெயிலெல்லாமறைத்ததுமேகம்- இக்குளத்துநீரெல்லாங்கொண் டுபித்தானிவன்-எ-ம்- இரண்டுகண்ணுஞ் சிவந்தது - "இருநோக்கிவளுண்கணுள்ளது,, -எ-ம்- அஃறிணைக்கணொருமையிற்பன்மையும் பன்மையிலொருமையும்வந்தன. "அஃதை தந்தை யண்ணல்யானையடுபோர்ச்செழியர்,,-எ-ம்- "புலையனெறிந்த பூசற்றண்ணுமையேவலிளையர் தாய்வயிறுகரிப்ப.,,-எ-ம்- உயர்திணை யொருமையிற்பன்மையும்பன்மையிலொருமையும்வந்தன. "சாத்தன்றாயிவைசெய்வலே.,,-"கல்வியனென்னும் வல்லாண்சிறாஅ னொலவேனல்லதுய்வாயாகுதல்,, -என்பது தன்மையின்கட் படர்க்கைவந்தது. "திண்பொருளெய்தலாகுந் தெவ்வரைச் செருக்கலாகு-நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையு நண்ணலாகு - மொண்பொருளாவதையா வுடன்பிறப்பாக்கலாகா -வெம்பியையீங்குப்பெற்றே னென்னெனக் கரியதென்றான்.,, என்பது முன்னிலைக்கட்படர்க்கை வந்தது. நீயோவவனோ யாரிதுசெய்தார் - யானோவவனோ யாரிதுசெய்தார்- நீயோயானோயாரிதுசெய்தார்-நீயோவவனோயானோயாரிதுசெய்தார்- எனவிரவியோரிடத்தின்கட்பிறவிடம்வருதலுங்கொள்க. பிறவுமன்ன. ஒருபாற்பொருளைமற்றொருபாற்சொல்லானும்ஓரிடப்பொருளைமற்றோரிடச்சொல்லானுங்கூறுதலின் வழுவா யினவைசான்றோர்க்கொப்பமுடிந்தமையினமைதியாயின.— "ஒருவீ ரொருவீ ரொப்பினிர் கழிமின்.,, யாமெம்மூர் புகுவன் என்பன வொருமையிற் பன்மைவந்தவழுவமைதியெனின், ஒருவீரொருவீ ரொப்பினைக ழிவையெயலின்வழாநிலையாகவேண்டும் அங்ஙனமாகாமையி னொருவனொன்பதுயரிருபாற்றுமென்னுஞ் சூத்திரத்து னொருமொழியொழிதன்னினங்கொளற்குரித்தே யென்பதனான் அமைந்த வழாநிலையாம். யானெம்மூர்புகுவனென்புழித்தன்கிளையினைத் தன்னொடுபடுத் தெம்மூரென்றாதலின் வழாநிலையாம் இத்தொடக்கத்துவழாநிலைகளை யிவ்வழுவமைதியாக வுதாரணங்கூறுவார் கூற்றையெல்லாமுய்த்துணர்ந்துகளைக. (உக)

௩௱அக. தரல்வரல் கொடைசெலல் சாரும்படர்க்கை- யெழுவாயிரண்டு மெஞ்சிய வேற்கும், ❊

(எ-ன்.) இடம்வழுவற்கவெனக்காத்தலுணர்-ற்று.—(ப - ரை.) தரல் வரல் கொடை செலல்- தரல் என்பதுமுதலிய இந்நான்குசொற்களையும், படர்க்கை- படர்க்கையானது, சாரும் - அடையும், எழுவாயிரண்டும்- இவற்றுள் முதலிற்சொல்லப்பட்ட தரல்வ

ரல் என்கிறவிரண்டுசொற்களையும், எஞ்சிய- ஒழிந்ததன்மை முன்னிலைகள், ஏற்கும்- ஏற்றுவரும். எ-று. (பொ-ரை.) இந்நால்வகைச்சொற்களையும் படர்க்கைசாரும் இவற்றுண்முதற்கணின்ற தரல்வரலென்னு மிருவகைச் சொற்களையுந் தன்மை முன்னிலைகளேற்கும். எ-று. ❊ தரல் வரல் கொடை செலலென்பன ஆப்பகுதிகளை யுணர்த்திநின்றன. [வ-று.] அவனுக்குத்தந்தான்- அவன்பால்வந்தான் - அவனுக்குக்கொடுத்தான் - அவன்பாற்சென்றான்-எ-ம் - எனக்குத்தந்தான் - என்பால்வந்தான் - எ-ம்- நினக்குத்தந்தான் -நின்பால்வந்தான்-எ-ம்-வரும். இப்பகுதியிற்பிறந்த வேனை வினைவிகற்பங்களோடுந் தொழிற்பெயரோடும் இவ்வாறேயொட்டுக. இவைபடர்க்கை யிவைதன்மை முன்னிலை யென்றுஞ் சாருமேற்கு மென்றமையான் இடவிகுதிகள் போலிவையிடப்பகுதிகளாகாது அவ்விடங்கட்கியைந்தமரபினவாமென்பதூஉம் தரல்வரலென்னும்இரண்டனையுந் தன்மைமுன்னிலைக்குங்கூட்டினமையிற் படர்க்கைக்கே சிறந்தன கொடைசெலலென்னு மிரண்டுமென்பதூஉம் ஏனைத்தரலும் வரலுமத்துணைச் சிறப்பினவல்லவென்பதூஉம் இந்நெறிமயங்கி எனக்குக்கொடுத்தான் -என்பாற்சென்றான்-நினக்குக்கொடுத்தான் -நின்பாற்சென்றான்-எனவரின் முன்னர்க்கூறிய இடவழுவமைதியின்பாற் படுமென்பதூஉம்பெற்றாம். படர்க்கைக்குப் பின்னைய விரண்டுஞ்சிறந்து முன்னையவிரண்டு மத்துணைச் சிறப்பின்றியும் வருதல்காட்டிய வுதாரணங்களுட்காண்க- (௯௰)

௩௱௮௨. இறப்பெதிர்வு நிகழ்வெனக் காலமூன்றே. ❋

(எ-ன்.) முன்னர் வழுவுணர்த்துஞ் சூத்திரத்துண் முதற்கணின்ற திணைபாலிடங்களின்பெயருமுறையுந் தொகையும்பெயரியலுட்போந்தமையின்அவற்றை யொழித்துஇறுதிக்கணின்ற காலமுதனான்கினையுமுணர்த்தினல்ல தவற்றின்வழுவும்வழாநிலையும்வழுவமைதியுந் தோன்றாமையின் அவற்றுட் காலத்தின்பெயருமுறையுந் தொகையுமுணர்-ற்று. (ப-ரை.) இறப்பு- இறந்தகாலமும், எதிர்வு-எதிர்காலமும், நிகழ்வு-நிகழ்காலமும், என-என்று,காலம்-காலமானது, மூன்று-மூன்றாம். எ-று. பிறிதோரிலக்கணங்கூறிய முகத்தான் முன்னர் விளங்கிக்கிடந்த காலவிகற்பங்களையீண்டுத் தொகுத்துணர்த்தினமையினிது முடிந்தது முடித்தலென்னு முத்திக்கினம். (பொ-ரை.) முன்னர்க்கூறிய காலமிறந்தகாலமுமெதிர்காலமுநிகழ்காலமுமென மூன்றாம். எ-று. ❊ யாதொருபொருளுந் தோன்றுமளவிற் றோன்றி வளருமளவில் வளர்ந்து முதிருமளவின்முதிர்ந்து அழியுமளவினழியுமன்றியுயிர்கள் வே

ண்டியவாறுகாமையி னவற்றையவ்வளவி னவ்வா றியற்றுவது காலமெனவுமதனாலியலும் பொருள்களின் றொழிலிறந்தது மெதிர்வது நிகழ்வதுமாதலி னவ்வாறியற்றுங் காலமு மூன்றுகூற்றதாமெனவு முய்த்துணர்தலி னிங்ஙனமுணராது காலமின்றெனவு நிகழ்காலமொன்றுமே யெனவு மிறந்தகால மெதிர்கால மிரண்டுமேயெனவுங் கூறுவார் கூற்றைவிலக்கிக் காலமூன்றேயென்றார். இதன்றிறமின்னும்விரித்துரைப்பிற்பெருகும். நிகழ்காலம் போலவெள்ளிடைப்பொருளன்றி யிறந்தகால மெதிர்காலமிரண்டுமறைபொருளாய் நிற்றலி னிறப்பு நிகழ்வென்றாதிறப்பெதிர்வென்றார். (ஙக)

ஙாஅங. முக்காலத்தினு மொத்தியல் பொருளைச்-செப்புவர் நிகழுங் காலத்தானே. *

(எ-ன்.) காலவழுவமைப்புணர்-ற்று. (ப-ரை.) முக்காலத்தினும் மூன்றுகாலங்களிலும், ஒத்து-தமதுதொழிலிடையறாதொத்து, இயல்-நிகழுகின்ற, பொருளை-பொருள்களை, நிகழுங்காலத்தான்-நிகழ்காலத்தினால், செப்புவர்-சொல்லுவர்புலவர். எ-று. (பொ-ரை) தந்தொழிலிடையறாது முக்காலத்தினு மொருதன்மையவாயியலும்பொருள்களை நிகழ்காலத்தாற்கூறுவர்புலவர். எ-று. ❁ [வ-று] அவனியைத்தாங்கியரசரிருக்கின்றார்- நினக்குத்துணை யானிருக்கின்றேன்-எனக்குத்துணை நீயிருக்கின்றாய் -தெய்வமிருக்கிறது - நிலங்கிடக்கிறது-மலைநிற்கிறது-யாறொழுகுகிறது-எனவரும். இதற்குச்செய்யுமென்னு முற்றை யுதாரணங் காட்டுவாருமுளர். அதுபல்லோர் படர்க்கைமுன்னிலை தன்மையாகவருமுக்காலத்தினு மொத்தியல்பொருட்கியையாமையானும் அவ்வழக்கின்மையானு மதுபொருந்தாதென்க. யாறொழுகும்-தீச்சுடும் எனவழங்குமாலோவெனின் அது ஒழுகுந் தன்மையையுடையது சுடுந்தன்மையை யுடையது என்னும்பொருட்டாய் நிற்றலின் "இயற்கைப் பொருளையிற்றெனக்கிளத்தல்" என்னுஞ் சூத்திரத்தின்பாற்படுமென்க. யாறொழுகுவது தீச்சுடுவதென்பதுமது. (கூஉ)

ஙாஅச. விரைவினுமிகவினுந் தெளிவினு மியல்பினும் -பிறவும் பெறூஉமுக்காலமுமேற்புழி. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை.) விரைவினும்-விரைவினாலும், மிகவினும்-மிகுதியினாலும், தெளிவினும்-தெளிவினாலும், இயல்பினும்-இம்மூன்றுகாரணங்களுமின்றி இயல்பினாலும், முக்காலமும்-மூன்றுகாலங்களும், பிறவும்பெறூஉம் - ஒன்றுமற்றொன்றாகச்சொல்லப்படவும்பெறும், ஏற்புழி-ஏற்குமிடத்து. எ-று. (பொ-ரை)விரைவு மிகுதி தெளிவென்னு மூன்றுகாரணத்தினானு மிக்காரணமின்றியுமுக்காலங்களையு மொன்றை யொன்றாகக்கூறு

ப்படுமேற்குமிடத்து. எ-று. ※ காரணமின்றியென்பாரியல்பினு மென்றும்பிறழ்த லொருதலை யன்றென்பார்பிறவுமென்றும்வி னைவுமுதலிய நான்கினுந் தனித்தனி முக்காலங்களுமுறையேபி றழாவென்பாரோற் புழியென்றுங்கூறினார் [வ-று.] சோறுவேவா நிற்பவலைத்துண்டுபோதற் பொருட்டாகஇருந்தேரானொருவனைப் புறத்துநின்றானொருவ னிருவரும் போகவேண்டுங் குறையுடை மையினின்னுமுண்டிலையோ வென்றானுண்டேனுண்டே னென் னும்உண்ணாநின்றானுமுண்டேனுண்டேனென்னும். இவைவினை விளைதிர்காலமுநிகழ்காலமு மிறந்தகாலமாயின. அக்காட்டிற்பு கிற்கூறை கோட்பட்டான்-கள்வானினையிற்கையறுப்புண்டான் இ துமிகுதியினெதிர்கால மிறந்தகாலமாயிற்று. கூறைகோட்படுத லும் கையறுப்புண்ணுதலுந் தவறினுந்தவறுமாதலினிது மிகுதி யாயிற்று. அறஞ்செயிற்சுவர்க்கம்புக்கான்-எறும்பு முட்டைகொ ண்டுதிட்டையேறின்மழைபெய்தது இது தெளிவினெதிர்கால மிறந்தகாலமாயிற்று. உரையளவையானுங் காட்சியளவையானு மிவற்றிற் கிவைகாரணமாகத் தெளிந்தமையினிது தெளிவாயிற் று. யாம்பண்டு விளையாடுவதிக்கா - யாம்பண்டுவிளையாடுகிறதி க்கா-இதுகாரணமின்றி யியல்பினானிறந்த காலமெதிர்காலமு நிக ழ்காலமுமாயிற்று. பிறவுமன்ன. இவ்வுதாரணங்களுட்சிலவற்றை மாறிக்காட்டுவாருமுளர். அவை பொருந்தாமை அப்பொருள்க ளானுணர்க. உழுதுவருக-உண்டுவருக என்புழி உழுது உண்டெ ன்பனவற்றையு மியல்பி னெதிர்கால மிறந்தகாலமாய் மயங்கின வென்பாருமுளர். வருதலைநோக்குங்கா லவையிறந்தகாலமேயாத லின் வழாநிலையாமென்க. (௩௮௪)

௩௮௫. அறிவறியாமை யையுறல்கொளல்கொடை - யேவ றரும்வினா வாறு மிழுக்கார்.

(எ-ன்.) வினாவின்பெயரு முறையுந் தொகையுமுணர் -ற்று. (ப-ரை.) அறிவு- அறிதலும், அறியாமை- அறியாமையும் , ஐயு றல்- சந்தேகித்தலும், கொளல்-கொள்ளுதலும், கொடை-கொடுத் தலும், ஏவல்-ஏவுதலும், தரும்-தருதலால்வருகிற, வினா-வினாக்கள் ஆறும்-ஆறனையும், இழுக்கார்- களையாதுகொள்வர்புலவர். ஏ-று. (பொ-ரை) அறிவுமுதலியன தருதலான்வரும் வினாவாறனையுங்க ளையாதுகொள்வர்புலவர். எ-று. ※ [வ-று] ஆசிரியவிச்சூத்திரத் திற்குப்பொருள்யாதென்பதறிவினா. மாணாக்கனவ்வாறுகூறுவதறி யாவினா. குற்றியோமகனோவென்பதையவினா. பொன்னுளவோ மணியுளவோவென்பனகொளல்வினா. சாத்தற்காடையில்லையோ வென்பது கொடைவினா. சாத்தாவுண்டாயோ வென்பதேவல்வி னா. இவற்றுளறிவுமறியாமையு மிவ்விரண்டும்விரவிய வையமும

ன்றிவினவைத்தருவதொன்றின்மையி னவற்றைமுற்கூறியேனை யவுமவற்றின்க ணடங்குமேனுங்கொளல் கொடையேவலென்னு ம்பொருள் விசேடத்தான்வேறுவிதந்து பிற்கூறிமூன்றுகற்பால னவற்றையாறுகக்கூறுதலீதொன்று தொடுநெறியென்பாராறுமீ றுக்காயொன்றுங் கூறினர். "அறியான்வினவ லறிவொப்புக்காண் ட-லையமறுத்த லவனறிவு தான்கோடன் - மெய்யவற்குக் காட்ட லேலாதவகை வினாவே.," என்னு மொருசாராசிரியர் கூறினுள் ளும் பின்னையவிரண்டு முன்னைய மூன்றனு ளடங்கு மென்பது தோன்றவவற்றை முற்கூறுதல் காண்க. (௩௪)

௩௸௬௪. சுட்டுமறைநே ரேவல்வினாத- லுற்றதுரைத்த லுறுவ துகூற- லினமொழியெனுமெண் ணிறையுளிறுதி - நிலவியவைந் துமப்பொருண்மையினேர்ப. ✻

(எ-ன்.) இறையின் பெயருமுறையுந்தொகையும் வழுவமை தியுமுணர்-ற்று. (ப-ரை.) சுட்டு-சுட்டும், மறை- எதிர்மறுத்தலு ம், நேர்-உடன்படலும், ஏவல்-ஏவுதலும், வினாதல்- எதிர்வினவுத லும், உற்றதுரைத்தல்-உற்றதைச்சொல்லுதலும், உறுவதுகூறல்- உறுவதைச் சொல்லுதலும், இனமொழி- இனத்தைச்சொல்லுத லும், எனும் - என்கிற, எண்ணிறையுள் - இவ்வெட்டு விடைகளு ள், இறுதி - ஈற்றில், நிலவிய-விளங்கிய, ஐந்தும் - ஐந்தும், அப் பொருண்மையின்- அவ்விடைப்பொருளைத்தருதலினாலே, நேர் ப- விடைகளாகவேதழுவிக் கொள்ளுவர்புலவர். எ-று.(பொ-ரை) இவ்விறையெட்டனுண் முன்னையமூன்றுஞ் செவ்வனிறையாட்பி ன்னையவைந்து மிறைப்பொருள் பயத்தலி னிறையாகத்தழீஇக் கொள்வர்புலவர்.எ-று. ✻ எனவேயிறையாவதுசெவ்வனிறையும் இறையயப்பதுமென விருகூற்றதாமென்க [வ-று.]வஞ்சிக்குவ ழியாதென்றவழியிதுவென்றும் மாவீழ் நொச்சியென்பதற்குப் பொருள்யாதென்றவழி வண்டுவீழ்ந்தூதேனுண்ணு நொச்சிப்பூ வென்றுங்கருதிக்கூறுந் தொடக்கத்தன வெல்லாஞ் சுட்டு.சாத்தா விது செய்வாயோ வென்றவழிச் செய்யேனென்பதுமறை. செ ய்வேனென்பது நேர். நீசெய்யென்பதேவல். செய்வேனோவென் பது வினாதல். இவ்வோகாரவிடைச்சொற் கெதிர்மறை முதலிய பொருள் விலக்கி ஆற்றலான் வினாப்பொருளே கொள்க. உடம்பு நொந்தது நோவாநின்றது என்ப துற்றதுரைத்தல். நோவாநி ன்றதென்பது நிகழ்காலமாயினு நோவெழுந்த காலங்கருதி யுற் றதுரைத்தலாயிற்று. உடம்புநோமென்ப துறுவதுகூறல். மற் றையது செய்வேனென்ப தினமொழி. இறையயப்பனவற்றுள் வினாவெதிர் வினாதலொன்று நேர்தற்பொருளையு மேனைய நான் குமறைப்பொருளையும் பயத்தல்காண்க. இறை பயப்பனவற்

றை நிலவியவெண விசேடித்தமையி னில்லாதனவுஞ் சிலவுளவெனப்பொருடூணாத்துச் செய்வேனேவெனவெதிர்மறையோகாரமாயும் யானேசெய்வெனெனச் சிறப்போகாரமாயு நின்றுசெய்யேனென்னு மிறைப்பொருள் பயந்துவருதலும் பிறவும் கந்தையாடிப் போந்தேனொருகூறை யீகவெனவிஞவில் வழியிறை திகழ்தலுங்கொள்க. (௩௫)

௩௱௮௭. வினாவினுஞ் செப்பினும் விரவா சினைமுதல். *

(எ-ன்) வினாவுஞ்செப்பு முதல்சினையொற்றுமை கருதிவழுவுக்கூறின் அமையாதெனக்காத்தலுணர்-ற்று.(ப-ரை) வினாவினும்-வினாவுதற்கண்ணும், செப்பினும்-விடைகொடுத்தற்கண்ணும், சினை-சினையும், முதல்-முதலும். விரவா-ஒற்றுமை கருதிமயங்கச்சொல்லப்படாவாம்.எ-று.(பொ-ரை) வினாவுதற்கண்ணுஞ் செப்புதற்கண்ணுஞ் சினைமுதல்களொற்றுமைகருதிமயங்கக்கூறப்படா. எ-று. ※ [வ-று.] கண்பிறழ்ந்ததோ கயல்பிறழ்ந்ததோ-சாத்தனல்லனோ கொற்றனல்லனோ - எ-ம்- இவ்வாறு வினாவினார்க்குக்கண்பிறழ்ந்தது- கயல்பிறழ்ந்தது-சாத்தனல்லன்-கொற்றனல்லன்-எ-ம்-வரும். பிறவுமன்ன.எனவே கண்பிறழ்ந்ததோவெனச்சினையைவினவுவானதனையொழித்து அதனையுடையாளைக்கருதியிவள்பிறழ்ந்தாளோ கயல்பிறழ்ந்ததோவெனவினவுதலும்இவள்பிறழ்ந்தாளெனச் செப்புதலும் இவ்வாறு முதலைவினவுவானுஞ் செப்புவானு மதனையொழித்துச் சினையைவினவுதலுஞ் செப்புதலும் வழுவாமென்பதாயிற்று. இங்ஙனமாயிற் குயிலோ கிளவியெனவினவுவான் குயிலிசையைக் குயிலோவென்று வினவுதல் வழுவாம் பிறவெனி னவ்வாறுகூறுவான்குயிலைக்கருதாது அதனிசையையே கருதிக்கூறுதலானுங் குயிலிசையோ கிளவியென இசையென்னுஞ்சொல் லெஞ்சிநிற்றலானும் இத்தொடக்கத்தனவழுவாகாவென்க. (௩௬)

௩௱௮௮. எப்பொருளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்-செப்பின ரப்படிச் செப்புதன்மரபே. *

(எ-ன்) மரபாமாறுணர்-ற்று.(ப-ரை) எப்பொருள்-யாதொருபொருளை, எச்சொலின்-யாதொருசொல்லால், எவ்வாறு-யாதொருவழியால், உயர்ந்தோர் -அறிவுடையோர்கள், செப்பினர்-சொன்னார்களோ, அப்படி- அப்பொருளை அச்சொல்லால் அவ்வழியால், செப்புதல்-சொல்லுதல்,மரபு-மரபாம்.எ-று. (பொ-ரை) யாதொருபொருளை யாதொருசொல்லால் யாதொருநெறியால் அறிவுடையோர் சொன்னார்களோ அப்பொருளை யச்சொல்லால் அந்நெறியாற்சொல்லுதன்மரபாம்.எ-று. ※ எவ்வாறென்றதொ

ருபொருளைப் பலசொல்லானும் பலபொருளை யொருசொல்லா னுங்கூறுதன் முதலியவழுநிறையென்க. அவற்றுட் சிலவருமாறு குதிரைக்குட்டி-யானைக்குட்டி-எ-ம்-யானைக்கன்று-பசுவின்கன்று-மான்கன்று-எ-ம்-வரும். பிறவுமன்ன. இவ்வாறன்றிப் பசுவின்குட்டி குதிரைக்கன்று எனக்கூறின் வழுவாயாதலிற் சான்றோர்வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளும்பயின்றுவருமாறறிந்துகொள்க.()

௩௱௮௯. வேறுவினைப் பல்பொருடழுவிய பொதுச்சொலும்-வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும். *

(எ-ன்.) மரபுவழுவற்கவென்பதுணர்-ற்று. (ப-ரை.) வேறுவினை-வெவ்வேறுவினைகளுக்குரிய, பல்பொருள் - பலபொருள்களையும், தழுவிய - ஒருசேரத்தழுவிய, பொதுச்சொலும் - ஒரு பொதுச்சொல்லும், வேறவற்று - அவற்றின் சிறப்புச் சொற்களாக, எண்ணும்-எண்ணிநிற்கிறபலசொற்களும், ஓர்பொதுவினை -எல்லாவற்றிற்குமுரியதோர் பொதுவினையை, வேண்டும்- கொண்டுமுடியும். எ-று. (பொ-ரை) வெவ்வேறுவினைகட்குரியபலபொருள்களையுமொருங்குதழுவி நிற்குமோர் பொதுச்சொல்லும்அவற்றின்சிறப்புச்சொற்களாயெண்ணிநிற்கும் பலசொல்லு மொன்றற்குரிய சிறப்புவினை வேண்டாதெல்லாவற்றிற்குமுரியதோர் பொதுவினைவேண்டுவனவாம். எ-று ❋ [வ-று.] அடிசிலென்பதுஉண்பன தின்பன நக்குவன பருகுவனவற்றிற்கெல்லாம்பொதுச்சொல்லாகலா னதனையயின்றார் மிசைந்தாரென்க. அணியென்பது கவிப்பன கட்டுவன இடுவன தொடுவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலி னதனை யணிந்தார் தாங்கினாரென்க. இயமென்பது கொட்டுவன ஊதுவனவற்றிற்கெல்லாம்பொதுச்சொல்லாதலி னதனையியம்பினார் படுத்தாரென்க. படையென்ப தெய்வன எறிவன வெட்டுவன குத்துவனவற்றிற் கெல்லாம் பொதுச்சொல்லாதலி னதனைவழங்கினார் தொட்டாரென்க. இனியெண்ணியவழியுஞ் சிலநாட்சோறும் சிலநாளிடியும் சிலநாட்பாலுஞ்சிலநாணீரும் சிலநாட்சருகுமயின்றார் மிசைந்தாரென்க. கறியுஞ்சோறு முண்டானெனவெண்ணிக் கறியொடுவிராயசோற்றை யுண்டானென்னும்பொருட்டாய்ச் சிறப்பினொருமுடிபேற்பனவற்றிற்கும் இவற்றிற்கும் வேற்றுமையுணர்க. குழையுநெடுநாணுமணிந்தார்-பறையுங்குழலுமியம்பினார்-வாளும்வேலும் வழங்கினாரென்க. பிறவுமன்ன. (௩௮)

௩௱௯௰. வினைசார்பினமிட மேவிவிளங்காப்-பலபொருளொருசொற்பணிப்பர் சிறப்பெடுத்தே. *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) வினை-வினையும், சார்பு-சார்பும், இனம்-இனமும், இடம்-இடமும், மேவி-பொருந்தி, விளங்கா-வி

ளங்காத,பலபொருளொருசொல்-பலபொருளொருசொல்லை, சி
றப்பெடுத்து-சிறப்புச்சொல்லோடு கூட்டி, பணிப்பர் - சொல்
லுவர்புலவர். எ-று. (பொ-ரை.) குறித்தபொருளை விளக்கும் வி
னையினையுஞ் சார்பினையு மிடத்தையுமுதலியபெயரினையும்பலபொ
ருளொரு சொற்பொருந்தி விளங்கிக்கிடந்ததே லதனைவாளாகூறி
யவ்வினை பெயர்களைப் பொருந்தாமையால் விளங்காது கிடந்த
தனைச் சிறப்போடு கூட்டிக் கூறுவர்புலவர். எ-று. ※ பாக்கு
வெற்றிலை தின்றானென்றாற் சுண்ணாம்புங் கர்ப்பூரமுமுடன்றின்
றானென்பது தழீஇக் கோடல்போற் சார்பின மிடமெனச் சிற
ந்தன வெடுத்தோதியேனைய பெயர்களையுந்தழீஇக்கோடலின்மு
தலியவென்றாம். அன்றியினைத்தென்றறிபொருளெனக் கூறுத
லுமொன்று. மேவியென்னும் வினையெச்சம் விளங்காவென்ப
தன்கண் முதனிலையோடு முடிந்தது. [வ-று] மாவென்பது மா
மரத்திற்கும் வண்டிற்கும் ஒருசார் விலங்கிற்குந் திருவிற்கும்
பொதுவான பலபொருளொருசொல். இப்பொருள்களுள் மா
பூத்தது காய்த்தது என்ற துணையானே மரமென்பது வினையா
ன்விளங்கிற்று.— மாவீழ்நொச்சி மணிக்குரலூழ்த்தது என்ற
துணையானே வண்டென்பது சார்பான் விளங்கிற்று. சேனையா
னைதேர்மாச்சதுரங்கம் என்றதுணையானே குதிரையென்பதின
த்தான் விளங்கிற்று. சொற்றொறு மிற்றிதன்பெற்றியென்பதனு
னே இதனுட்சேனையென்பதுயானை முதலிய மூன்றுறுப்பினையு
மொழித்துக் காலாண்மேற்சேறலும்இவ்விதியின்பாற் படுத்துக.
மாமறுத்தமலர்மார்பு என்றதுணையானே திருவென்பதிடத்தான்
விளங்கிற்று. இவைவாளா கூறப்பட்டன. இனி மாவேறினான் மா
யாது என்ற வழிக்குறித்தபொருள்விளங்காமையின் விளங்குதற்
பொருட்டுப்பாய்மாவேறினான்மாமரத்தின்கணேறினான்பாய்மா
யாதுமாமரம்யாதுஎனச்சிறப்போடுகூட்டிக்கூறுக.பிறவுமன்ன

ஙாக்கக. எழுத்திய றிரியாப்பொருடிரி புணர்மொழி-யிசைத்
திரி பாற்றெளி வெய்துமென்ப. *

(எ-ன்.) இதுவுமது, (ப-ரை)எழுத்து-எழுத்தினது, இயல்-த
ன்மை, திரியா-வேறுபடாமல், பொருடிரி - பொருள்வேறு பட்
டுநிற்கிற,புணர்மொழி-தொடர்மொழிகள்,இசைத்திரிபால்-குறி
க்கப்பட்ட சொற்களினிறுதியும் முதலுந்தோன்ற இசையறுத்து
ச்சொல்லுகிற வேறுபாட்டால், தெளிவெய்தும்-துணிவுண்டாகு
ம், என்ப-என்றுசொல்லுவர் புலவர்.எ-று.(பொ-ரை) எழுத்தின
தியல்பு வேறுபடாது பொருள் வேறுபட்டுச்சொல்லும் பொரு
ளுமையுறநிற்குந் தொடர்மொழிக ளங்ஙனங் குறித்துக் கூறுஞ்
சொற்களினிறுதியுமுதலுந்தோன்ற இசையறுத்துக்கூறும்வேறு

பாட்டாற் றுணியப்படுமென்று சொல்லுவர்புலவர். எ-று. ❋ எனவே அவ்வாறிசையறுத்தீக் கூறுதன்மரபென்பதூாயிற்று. [வ-று] செம்பொன்பதின்றொடி - நாகன்றேவன் போத்து - தாமரைக்கணியார் - குன்றேறுமா - குறும்பரம்பு - ஆற்றுக்கரை - செம்பருத்தி - என்றற் றொடக்கத்தனவற்றை யவ்வா றிசையறுத் துச்சரித்துக்காண்க. (சுய)

ஙாகூஉ. ஒருபொருண் மேற்பலபெயர்வரி னிறுதி-யொருவினைகொடுப்ப தனியுமொரோவழி. ❋

(எ-ன்) மரபுவழூவற்கவெனக்காத்தலுமதன்வழூவமைப்பு முணர்-ற்று. (ப-ரை) ஒருபொருண்மேல் - ஒருபொருளின்மேலே, பலபெயர் - பலபெயர்கள், வரின்-வருமாயின், இறுதி-இறுதியில், ஒருவினை-ஒருமுடிக்குஞ்சொல்லை, கொடுப்ப- பொருளொன்றேயென்பதுதோன்றக்கொடுத்துக்கூறுவர், ஒரோவழி-ஒருபொருளாகுகை தவறாதவிடத்தே, தனியும்- பெயர்தோறும், கொடுப்ப-கொடுத்துக்கூறுவர். எ-று. (பொ-ரை.) ஒருபொருண்மேற் பலபெயர் வருமாயிற் பொருளொன்றேயென்பதுதோன்ற விறுதிக்கணொருவினைகொடுத்துக் கூறுவர் ஒருபொருளாதறவறாத வழிப்பெயர்தோறுங்கொடுத்துங்கூறுவர் புலவர், எ-று-❋ ஒருபொருட்கொருமுடிபென்பாரொருவினைகொடுப்பவென்றாரன்றியொருபெயர்கொடுத்தலை யொழித்தாரல்லரென்க. [வ-று.] ஆசிரியன்பேரூர்கிழான் சாத்தன்வந்தான் -எ-ம்- பாண்டியன் பல்யாகசாலைமுதுகுடுமிப்பெருவழூதியிவன்-எ-ம்- "குயிலைச்சிலம்படிக் கொம்பினைத் தில்லையெங் கூத்தப்பிரான் - கயிலைச்சிலம்பிற் பைம்பூம்புனங் காக்குங் கருங்கட்செவ்வாய்-மயிலைச் சிலம்பகண்டியான்போய்வருவன் வண்பூங்கொடிகள் - பயிலச்சிலம்பெதிர் கூய்ப்பண்ணை நண்ணும் பளிக்கறைக்கே.," எ-ம்-"பொருப்பர்க்கியாமொன்று மாட்டேம் புகலப் புகலெமக்காம் - விருப்பர்க்கியாவர்க்குமேலர்க்குமேல்வருமூவெரித்த-நெருப்பர்க்கு நீடம்பலவருக்கன்பர் குலநிலத்துக்-கருப்பற்று விட்டெனக் கொய்தற்றதின்றிக்கடிப்புனமே.," எ-ம்-இவ்வயிறுதிக்க ணொருவினையும்பெயருங்கொடுக்கப்பட்டன. இனிப்பெயர் தோறுங்கொடுக்குமாறு "மின்றேய்வரைகொன்ற வேலோன்புகுதுக - வின்றேன்கமழ்தாரியக்கன்புகுதுக-வென்றேன்புகுதுக வேலோன்புகுதுக-வென்றே நகரமெதிர் கொண்டதுவே.," எனவரும். பிறவுமன்ன. (சுக)

ஙாகூங. திணைநிலஞ்சாதி குடியேயுடைமை - குணந்தொழில் கல்வி சிறப்பாம் பெயரோ -டியற்பெய ரேற்றிடிற் பின்வரல்சிறப்பே. ❋

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை) திணை-ஐந்திணையும், நிலம்-தேச

மும், சாதி-குலமும், குடி-குடியும், உடைமை-உடைமையும், குணம்-குணமும், தொழில்-தொழிலும், கல்வி-வித்தையும், ஆகிய இவற்றைப் பற்றிவருகிற, சிறப்பாம்பெயரோடு-சிறப்புப்பெயரோடு, இயற்பெயர்-இயற்பெயரை, எதிரிடின்-ஒருபொருள்ஒருசேரவேற்குமாயின், பின்வரல்-அவ்வியற்பெயர்பின்வருதல், சிறப்பு-சிறந்தமரபாம். எ-று (பொ-ரை) திணைமுதலாகக்கல்வியீறாக விதந்தன முதலிய பற்றிவருஞ் சிறப்புப் பெயருடனே யியற்பெயரை யொருபொரு ளொருங் கேற்குமாயின் அவ் வியற்பெயர்பின்வருதல் சிறந்தமரபாம். எ-று ✲ ஏற்றற்குவினைமுதலொருபொருளென்பது மேலைச் சூத்திரத்தாற் பெற்றும். சிறப்பேயென்றமையான் முன்வருமென்பதூஉம் அதுவழுவமைதி யென்பதூஉம்பெற்றும். [வ-று] குன்றவன்கொற்றன்- அரிவாளனழகன்-பார்ப்பான் பாராயணன்-ஊர்கிழான்ஞானன்- பொன்னன்பொறையன்-கரியன்கம்பன்-நாடகிநம்பி-ஆசிரியனமிழ்தன்எனவரும், இவையியற் பெயர் பின்வந்தன. இனிக்கொற்றன் குன்றவன்-அழகனரிவாளன் எனமுறையேயியற்பெயர்முன் னும்வருதல்காண்க. இன்னு மியற்பெயர்முன் னும்வருங்கால்வெண்கொற்றப்படைத்தலைவன்-வெள்ளேறக்காவிதி என விகுதிவிகாரமாய்வருதலுங்காண்க. பிறவுமன்ன. (சஉ)

௩௱௬௰௩ படர்க்கைமுப்பெயரோ டணையிற் சுட்டுப்-பெயர்பின்வரும்வினை யெனிற்பெயர்க்கெங்கு-மருவும்வழக்கிடைச் செய்யுட்கேற்புழி. ✻

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) படர்க்கை-படர்க்கையிடத்தையுடைய, முப்பெயரோடு-உயர்திணைப்பெயர் அஃறிணைப் பெயர் விரவுப்பெயர் என்கிற மூவகைப்பெயர்களோடு, சுட்டுப்பெயர்-சுட்டுப்பெயர், அணையின்-சேரின், பின்வரும்-அச்சுட்டுப்பெயர் பின்வரும், வினையெனின்-அவ்விடத்தே வினையாகிய முடிக்குஞ்சொல்வருமாயின், பெயர்க்கு-அம்முடிக்குஞ் சொல்லில்லையாயின் அப்பெயர்க்கு, எங்கும்-பின்னுமுன் னும், மருவும்-வரும், வழக்கிடை-இம்மரபு வழக்கத்திடத்திலாம், செய்யுட்கு-செய்யுளிடத்தே, ஏற்புழி-நியதியின்றிவேண்டியவாறேவரப்பெறும்-எ-று. (பொ-ரை.) படர்க்கை யிடத்தவாகிய வுயர் திணைப்பெயர்அஃறிணைப்பெயர் விரவுப்பெயரென்னு மூவகைப்பெயரோடுசுட்டுப்பெயர் சாரின்அச்சுட்டுப்பெய ரம்மூவகைப்பெயர்க்கும்பின்வரும் அவ்வழிவினை நிகழ்வழியெனின் வினை நிகழ்ச்சியின்றேலப்பெயர்க்குப் பின் னுமுன் னும்வரும் இம்மரபு வழக்கின் கண்ணவாம் செய்யுட்கண்ணே யெனி னியதியின்றி வேண்டியவாறேவர

ப்பெறும். எ-று. ❊ [வ-று.] நம்பிவந்தானவற்குச் சோறிடுக- எருதுவந்த ததற்குப் புல்லிடுக- சாத்தன்றெய்வமவற்குப்பலியிடுக-சாத்தன்வந்த ததற்குப் புல்லிடுக- என வினைநிகழ்வழிச் சுட்டுப்பெயர் பின்வந்தன. வந்தானம்பியவற்குச் சோறிடுக எனவு முறையேயொட்டுக. இவற்றுட்சாத்தன் றெய்வமென்புழி வினையின்றிப்பெயர்வந்த தாலோவெனின், படர்க்கைமூப்பெயருந்தனித்து நில்லாது பெயர் வினைகளைக்கொண்டு முடிந்தும் பெயர்வினைகட்குப் பயனிலையாயும் புடைபெயரும் புடைபெயர்ச்சியை வினையென் றமப்புடைபெயர்ச்சியுள்வழிச்சுட்டுப் பெயர்வரிற் பின்வருமென் றுங் கூறினானன்றி யிவ்வினையை வினையென்றாரல்லென்க மைந்தன்பிறந்தானதனாற் றந்தையுவக்கும் என்புழியது வென்னுஞ் சுட்டு மைந்தனை யணைந்ததில்லை யாலோவெனின், அவன்றற்கிழமையாகிய பிறத்தலை யணைதலி னவனை யணைந்ததேயாமென்க. அன்றிச்சொற்றொறு மிற்றிதன் பெற்றியென்னுஞ் சூத்திரத்தா னமைத்தலுமொன்று. நம்பியவன்-அவனம்பி எனப்பெயர்க்குப் பின்னு முன்னுஞ் சுட்டுப் பெயர்வந்தன. ஏனைப்பெயர்களோடுமொட்டுக. பெயர்க்குப் பின்னுமுன்னுஞ் சுட்டுப்பெயர்வருதன் மரபாமன்றே யிதனை வழுவற்கவெனக் காத்தலெவ்வழுவாமை கருதியெனின், சுட்டுப்பெயர் பின்வரும் வினையெனினெனக் கூறினமையின் வினையில்வழிச் சுட்டுப்பெயர்படர்க்கை மூப்பெயர்க்கும் பின்வருமோ முன்வருமோ இருமருங்கும்வருமோ வாராதொழியுமோ யாங்ஙன மாங்கொலென்னுமையமறுத்தற்குக் கூறினானன்றி யிதுவழுவற்கவெனக் காத்தாரல்லர். அக்கருத்துச் சுட்டுப்பெயர்பின்வரும்வினையெனி லென்றதற்கே கொள்க. அதனையவ்வாறுகாத்த லெவ்வழுவாராமை கருதியெனின். நம்பிவந்தானவற்குச் சோறிடுகவென்பானவற்குச் சோறிடுக நம்பிவந்தா னென்றேனும்அவன்வந்தானம்பிக்குச்சோறிடுக வென்றேனுஞ் சுட்டுப்பெயரை முன்வைத்துக்கூறினிஃதொருபொருண்மே லிருபெயர்வந்த தாகாது நம்பிவே றவன்வேறாய்முடியு மவ்வழுவாராமை கருதியென்க. இனிச்செய்யுட்கேற்புழி வருமாறு "அவனணங்கு நோய்செய்தா னாயிழாய்வேலன் - விறன்மிகுதாரச் சேந்தன்பேர்வாழ்த்தி-முகனமர்ந்- தன்னையலர்கடப்பந் தாரணியி னென்னைகொல்-பின்னையதன்கண் விளைவு." என வரும். செய்யுட்கண்பின்வருதல் வழுவற்கவெனக்காத்தலும்பாட்டின்கண் முன்வருதல் வழுவமைதியுமாமென்க, பிறவுமன்ன.()

௩௯௫. அசைநிலைபொருணிலை யிசைநிறைக்கொருசொல்-லிரண்டு மூன்று நான்கெல்லைமுறை யடுக்கும். *

(எ-ன்) இதுவுமது. (ப-ரை.) அசைநிலை - அசை நிலைக்கும்,

பொருணிலை-விரைவுவெகுளியுவகை யச்சமவலமுதலாகிய பொருணிலைக்கும், இசைநிறைக்கு-இசைநிறைக்கும், ஒருசொல் - ஒருமொழி, இரண்டு-இரண்டும், மூன்று-மூன்றும், நான்கு- நான்குமாகிய, எல்லை-அளவும், முறை-முறையாக, அடுக்கும்-அடுக்கும். எ-று (பொ-ரை) அசைநிலைக்கும் விரைவு வெகுளியுவகையச்ச மவல முதலிய பொருணிலைக்கு மிசைநிறைக்கு மொருசொல்லிரண்டு மூன்று நான்களவுமுறையே யடுக்கும். எ-று. ☼ எனவேயசைநிலைக்கிரண்டும் பொருணிலைக்கிரண்டுமூன்றும் இசைநிறைக்கிரண்டு மூன்றுநான்கு மடுக்குமென்பதாயிற்று. [வ-று] ஒக்குமொக்கும்-அன்றேயன்றே என்பனவசைநிலை. உண்டேனுண்டேன்-போம்போம்போ என்பனவிரைவு. எய்யெய்-எறியெறியெறி என்பனவெகுளி. வருகவருக- பொலிகபொலிகபொலிக என்பனவுவகை. பாப்புபாம்பு-தீத்தீத்தீ என்பனஅச்சம் - உய்யேனுய்யேன்- வாழேன்வாழேன்வாழேன் என்பனஅவலம். இவைமுதலியபொருணிலை. "ஏஎயம்பன்மொழிந்தனளாயே,,-"நல்குமே நல்குமே நல்குமே நாமகள்.,,-"பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ.,,என்பனஇசைநிறை பிறவுமன்ன. ஒருசொல்லைப் பலகாற் கூறுதல்வழுவாயினு மிவ்விடத்தாமென்றல் வழுவமைதியு மிதற்கிவ்வெல்லை யிறவாதென்றல் வழுவற்கவெனக்காத்தலுமாமென்க.

ஙாகக. இரட்டைக்கிளவி யிரட்டிற்பிரிந்திசையா. ☼

(எ-ன்) மரபுவழுவற்க வெனக்காத்தலுணர்-ற்று. (ப-ரை) இரட்டைக்கிளவி-இரட்டைச்சொற்கள், இரட்டின் - அவ்விரட்டிப்பின், பிரிந்து-நீங்கி, இசையா-தனித்துஒலியாவாம். எ-று (பொ-ரை) இரட்டைச்சொற்களவ்விரட்டிப்பிற் பிரிந்துதனித்தொலியா எ-று ☼ எனவேவலிந்து பிரித்துக்கூறிற் பொருள்படாதென்பதூஉம் இரட்டித்துக் கூறுதலே மரபென்பதூஉமாயிற்று. [வ-று.] "சலசலமும்மதம்பொழிய,,-"கலகலகூந்துணையல்லால்,,-"குறுகுறுநடந்துஞ் சிறுகைநீட்டியும்.,,-வற்றியவோலைகலகலக்கும்,,— "துடிதுடித்துத்துள்ளிவரும்.,, எனவரும். துடிதுடித்தென்புழிப்பின்னையது பிரிந்திசைக்குமேனு முன்னையது பிரிந்திசையாமை யினிரட்டைச்சொல்லேயாமென்க. பிறவுமன்ன. (சு)

ஙாகள. ஒருபொருட்பல்பெயர்பிரிவிலவரையார். ☼

(எ-ன்) இதுவுமது. (ப-ரை) ஒருபொருள்-ஒருபொருளின்மேல், பல்பெயர் - பலபெயர்சொல்லும்போது, பிரிவில-அப்பொருளினின்றும் பிரிதலில்லாதனவற்றை, வரையார்- நீக்காதுகொள்வார் புலவர். எ-று. (பொ-ரை) ஒருபொருண்மேற்பல பெயர்கூறுங்கால்அப்பொருளினின்றும் பிரிதலிலலாதனவற்றை நீக்காது கூறுவர்புலவர். எ-று. ☼ எனவேபிரிவுள்ளனவற்றைக்கூறாரென்ப

தாயிற்று. [வ-று] ஆசிரியன்பேரூர்கிழான்சாத்தன்வந்தான்-பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதிவந்தான் என்பன பிரிவிலவாய்ப் பலபெயரு மொருபொருண்மேற்சென்றுகேட்போர்க்குக்கூறுவோன் கருதியபொருள் விளக்கிநின்றன. "வைவையைக்கிழவன் வயங்குதார்மாறகலந்-தையலாய்நீயின்று நல்கினை நல்காயேற் - கூடலார் கோவொடு நீயும் படுதியே-நாடறியக் கவ்வை யொருங்கு" எ-ம். "கொய்தளிர்த் தண்டலைக் கூத்தப்பெருஞ்சேந்தன்-வைகலுமேறும் வயக்களிறே-கைதொழுவல்- காலேகவண்ணனைக்கண்ணுறக்காணவெஞ்-சாலேகஞ்சாரநட" எ-ம் சுட்டின் பொருளவாய் வரும்பெயரொடு தொக்கவொருபொருட்பலபெயர்களுமன்ன. பிரிவென்றதற் கிவ்வாறு பொருள்கூறு து கொய்தளிர்த்தண்டலை யென்னும் பாட்டினுட் காலேகவண்ணனுஞ் சேந்தனுக்கும் பிறர்க்கு முண்டாதலைப் பிரிவென்று கருதியிதுவழுவென்பாருமுளர். காலேகவண்ணம் பொதுவியல் பன்றிச் சேந்தனிற் பிரிந்ததன்றாதலானுஞ் சேந்தனைக்களிற்றின்மேற்செய்மைக்கண் வரக்கண்டாளவனைக் கண்ணுறக்காணவேண்டும் பெருவேட்கைதந்ததவனது காலேகவண்ணமென்பாளவ்வாறுகூறவேண்டி யாதலானுமிது சான்றோரிலக்கியமாதலானுமது பொருளன்றென்க. இனிப்பிரிவுளதாய்வழுவியதியாதோவெனின், "பகையியல்பாயிலி படைக்கைமறவன்" எனவரிற் பகையியல்பாயிலியைப் படைக்கைமறவனென்றல் கூடாமையிற் பிரிந்துவழுவாமென்க. பிறவுமன்ன. (௬௭)

௩௱௯௰௮. ஒருபொருட்பன்மொழி சிறப்பினின்வழா. *

(எ-ன்) மரபுவழுவமைப்புணர்-ற்று. (ப-ரை) ஒருபொருள்-ஒருபொருளைக்குறித்து வருகிற, பன்மொழி-பலசொற்கள், சிறப்பினின்-சிறந்துநிற்கையால், வழா-அவைவழுவென்றுநீக்கப்படாவாம். எ-று. (பொ-ரை) ஒருபொருளைக் குறித்துவரும் பலசொற்களவ்வாறு வருதற்கோர் காரணமின்றேனுஞ் சிறந்து நிற்றலின வை வழுவென்று நீக்கப்படா. எ-று. ※ சிறந்துநிற்றல் செவிக்குச் சொல்லின் பந்தோன்றநிற்றல். சிறப்பினினென்றமையாற் காரணமின்றிவந்தன வென்பதுபெற்றும். [வ-று] "மீமிசைஞாயிறுகடற்பாய்ந்தாங்கு"-"புனிற்றிளங்கன்று"-"நாகிளங்கமுகு" "அடுபசியுழந்த நின்னிரும்பேரொக்கல்"-"உயர்ந்தோங்கு பெருவரை"-"குழிந்தாழ்ந்த கண்ணவாய்த்தோன்றி" எனவரும். பிறவுமன்ன. இனிச்சிறப்பினினென்றதற்கப்பொருளைச் சிறப்பித்தலினெனப்பொருள்கூறுவாருமுளர். அச்சொற்கப்பொருளின்மையானுமக்காரணத்தான்வந்தனவேயன்றொருபொருட்பன்மொழியாய் வரும்பெயர்களொருபொருட் பலபெயருளவே

நிகுமாதலானு மீமிசையென்றான் மேலென்றே பொருளன்றி விசேடித்தந்தார் சிறப்பின்மையானும் உண்டேலஃதிஃதெனவிதந்து கூறுவாராதலானு மதுபொருளன்றென்க (சஎ)

ரூாகக. இனைத்தென் றறிபொரு ளுலகினிலாப்பொருள்-வினைப்படுத் துரைப்பி னும்மைவேண்டும். ✻

(எ-ன்) மரபுவழுவற்கவெனக் காத்தலுணர்-ற்று. (ப-ரை.) இனைத்தென்று -இவ்வளவினதென்று, அறிபொருள்- அளவறியப்படுகிறபொருளும், உலகினிலாப்பொருள் - எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாதபொருளும், வினைப்படுத்துரைப்பின் - வினைப்படுத்துச்சொல்லும்போது, உம்மை-முற்றும்மையை, வேண்டும்-வேண்டிநிற்கும். எ-று. (பொ-ரை.) இத்துணைத்தென்று வரையறையுணரப்படும்பொருளும் எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாதபொருளும் அவற்றை வினைப்படுத்துக்கூறுங்கான் முற்றும்மைவேண்டிநிற்கும். எ-று. ✻ பொருளெனவேறுவிதந்தமையினுலகென்றதொழிந்தகாலமனைத்தினையும் இடமனைத்தினையுமென்பதூஉம் இனைத்தென்றறி பொருளென்றமையானும் உலகெனக்காலமனைத்தினையு மிடமனைத்தினையுங் கூறுதலானும் உம்மையென்றது முற்றும்மையை யென்பதூஉம்பெற்றாம். [வ - று.] தமிழ்நாட்டுமூவேந்தரும்வந்தார் - உலகமூன்றினையு மொருங்குணர்ந்தான்- நின்கண்வைத்தபொரு ளூற்றினையுமவ்விருவருக்குங்கொடு-இறைவற்குக்கண் மூன்றுமுச்சுடர்- இறைவற்குடைபோர்வை யிரண்டுந்தோல் - என இனைத்தென் றறிபொருள் வினைப்படுத்துரைப்பின் உம்மைவேண்டிநின்றன இவற்றுண் முச்சுடர்தோலென்பனபெய ராலோவெனின் வேண்டுவினையென்றதூஉஞ் சுட்டுப்பெயர்பின்வரும் வினையெனிலென்றதுபோலும். பவளக்கோட்டு நீலயானையென் றுமில்லை- முயற்கோடாகாயப்பூவென்றுமில்லை-மண்ணிற்படமென்றுமில்லை - நூலிற்கடமென்றுமில்லை-ஒளிமுன்னிருளென்றுமில்லை- என வுலகினில்லாதபொருள்வினைப்படுத்துரைப்பி னும்மைவேண்டிநின்றன. எவ்விடத்து மில்லையெனவுமொட்டுக. உம்மை வருமென்னு தும்மைவேண்டுமென்றமையா னஃதிசையெச்சமாய்நிற்க அதனை வேண்டுவனவாய் "வன்பறழ்க்குமரி யிருதோடோழர்பற்ற." - "எருமைநாற்காலீர்க்கிழவ்வே." - எ-ம்- மண்ணிற்படமில்லை- நூலிற்கடமில்லை- ஒளிமுன்னிருளில்லை-எ-ம்- வரும். இவ்வில்பொருளின்கட் காலப்பெயரிடப்பெயர்களு முடனெஞ்சிநின்றன. இவ்வாறுவருதல் கருதாது செய்யுள்விகாரமாக வும்மைதொக்கதென்பாருமுளர். உலகினில்லாப்பொருள் உள்பொருள்போற்காலத்தோடுபட்ட தன்

றென்பதுதோன்ற வென்றுமில்லையென்றது காலத்தோடு பட்டதுபோலவைத்துப் பவளக்கோட்டுநீல்யானை பண்டுமில்லையெனவெச்சவும்மைதந்து உதாரணங்காட்டுவார். அதுயானைகுடத்தினுமில்லை குழிசியினுமில்லையென்றதுபோலுமென்க. இரட்டுறமொழிதலானுலகின்கணில்லையிஃபொருள்வினைப்படுத்துரைப்பினெச்சவும்மைவேண்டுமெனவும் பொருளுரைத்துக் கொள்க.— அவைவருமாறு- செல்வமுநில்லாது- செல்வமும்பொய் -எனவரும். செல்வநில்லாது- செல்வம்பொய்-என வெச்சவும்மைகொடாது வாளாகூறி னிளமை யாக்கை முதலியன நிலைபெறுமெனவுமெய்ப்பொருளெனவும் பொருள்படுமென்க. உம்மை வேண்டுமென்றதனாற் செல்வநில்லாது செல்வம்பொய்யெனவும்மையெஞ்சிநிற்றலுங்கொள்க. (௪௮)

௪௯. செயப்படுபொருளைச் செய்ததுபோலத் -தொழிற்படக்கிளத்தலும் வழக்கினு ளுரித்தே. *

(எ - ன்.) மரபுவழுவமைப்புணர் - ற்று (ப-ரை.) செயப்படுபொருளை-செயப்படுபொருளை, செய்ததுபோல- வினைமுதலைப்போலவைத்து, தொழிற்பட- அதன்மேல் அவ்வினைமுதல் வினையேற்றி, கிளத்தலும்- சொல்லுதலும், வழக்கினுள்- வழக்கினிடத்து, உரித்து- உரித்தாம். எ - று. (பொ-ரை.) செயப்படுபொருளைக் கருத்தாவைப்போலவைத் ததன்மேல் வினைமுதல்வினையேற்றிக்கூறுதலும் வழக்கின்கணுரித்தாம். எ-று. ※ [வ-று] இம்மாடு யான்கொண்டது- இச்சோறியான்கொடுத்தது - இவ்வெழுத்தியானெழுதியது எனவரும். உம்மையாற் கருமத்தைக் கருத்தாவாக இவ்வாறுகூறுதலேயன்றிக் கருவி நிலஞ் செயல் காலங்களைக்கருத்தாவாகக்கூறுதலும் அமையுமென்பது பெற்றாம். அவைவருமாறு இவ்வெழுத்தாணி யானெழுதியது- இவ்வீடியானிருந்தது- இத்தொழிலியான்செய்தது- இந்நாளியான்பிறந்தது எனவரும். இனி இல்லமெழுகிற்று- எழுத்தாணியெழுதிற்று- என வுதாரணங்காட்டுவாருமுளர். இல்லமெழுகிற்றென்பதோர் வழக்கின்மையானும் நடத்த நடந்ததேரினைப்போல வொருவனெழுதவெழுதியவெழுத்தாணியாதலினது தன்றொழிலேயன்றி யொருவன்றொழிலன்றதலானு மவைகாட்டாகாவென்க. (௪௯)

௫௰. பொருண்முதலாறு மடைசேர் மொழியினமுள்ளவு மில்லவு மாமிரு வழக்கினும். *

(எ-ன்.) மரபுவழுவற்கவெனக்காத்தலு மரபுவழுவமைப்புமுணர்-ற்று. (ப-ரை.) பொருண்முதல்-பொருளாதி, ஆறும்-ஆறிய, அடைசேர்- அடைகளடுத்துவருகிற, மொழி-மொழிகள், இனமுள்ளவும்-இனமுள்ளவையேயாமன்றி, இல்லவுமாம்- இனமில்லா

தவையுமாம், இருவழக்கினும் - உலகவழக்கினுள்ளுஞ் செய்யுள் வழக்கினுள்ளும். எ-று. (பொ-ரை) பொருளாதியாறுகிய அடைகளடுத்து வருமொழிக ளினமுள்ளனவேயாமன்றி யினமில்லன வுமா முலகவழக்கினுள்ளுஞ் செய்யுள்வழக்கினுள்ளும்.எ-று ※ உள்ளவுமென்னு முயர்வு சிறப்பும்மையு மில்லவுமென்னு மிழிவு சிறப்பும்மையு மெண்ணினின்றன. [வ-று] நெய்க்குடம் - குளநெல்- கார்த்திகைவிளக்கு-பூமரம் - செந்தாமரை- குறுங்கூலி- எ-ம்- உப்பளம்- ஊர்மன்று- நாளரும்பு- இலைமரம்- செம்போத்து-தோய்தயிர்-எ-ம்- வழக்கின்க ணினமுள்ளனவு மில்லனவும் வந்தன. "பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்." - "காணியாற் றடைகளை" - "முந்நாட்பிறையின் முனியாது வளர்ந்தது" "கலவமாமயிலெருத்திற் கடிமலரவிழ்ந்தனகாயா." - "சிறுமோட்டுப் பெரும்பழந்தூங்கியாங்கிவள்" - "ஆடுபாம்பெனப்புடையகன்றவல்குன்மேல்" -எ-ம்- "பொற்கோட்டிமயமும்பொதியமும்போன்றே" - "வடவேங்கடந்தென்குமரி" - "வேனிற்கோங்கின் பூம்பொகுட்டன்ன" — "சிறகர்வண்டு செவ்வழிபாட" - "செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும்வெண்டிங்களுள் வெயில்வேண்டினும்" - "முழங்குகடலோதமூழ்கிப்போக" -எ-ம்- செய்யுட்கணினமுள்ளனவு மில்லனவும் வந்தன. இனமுள்ளனவற்றை வாளாகூறிற் குறித்தபொருடோன்றாமையின் அடைகொடுத்து விதந்துகூறுகவெனவும் இனமில்லனவற்றிற் கடைகொடுத்துக் கூறுதன் மிகையாமாயினும் அமையுமெனவும் பொருள் போந்தமையின் முன்னையது வழுவற்கெனக் காத்தலும் பின்னையது வழுவமைப்புமாமென்க. ஆசிரியர் தொல்காப்பியனார் "இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை - வழக்காறல்ல செய்யுளாறே." என்றமையிற் பொருண்முதலாறுமடையென்றுமிருவழக்கினுமென்று மிவ்வமைதியும் பயின்று வருமென்பது தோன்ற வுள்ளவு மில்லவுமாமென இனமுள்ளனவற்றோ டொருங்கெண்ணியுங் கூறினாரென்க. (௫௰)

௪௱௨- அடைமொழி யினமல் லதுந்தரு மாண்டுறின். ※

(எ-ன்.) மரபுவழுவற்கவெனக் காத்தலுணர்-ற்று. பொருந்துவன கொள்கவென்பா ராண்டுறி னென்றமையான். (ப-ரை.) அடைமொழி - முன்சொல்லப்பட்ட அடைசேர்மொழி, இனமல்லதும்-இனத்தைத்தருவதன்றி இனமல்லாதனையும், தரும் - கொடுக்கும், ஆண்டு - அவ்விடத்திற்கு, உறின் - பொருந்துமாயின். எ-று. (பொ-ரை.) மேற்கூறிய அடைச்சொமொழி யினத்தைத் தருதலேயன்றி யதனோ டினமல் லதனையுந் தரும் அவ்விடத்திற்குப்பொருந்துமாயின். எ-று. ※ [வ-று.] பாவஞ்செய்தா னரகம்

புகுமென்ற துணையானே புண்ணியஞ்செய்தான் சுவர்க்கம்புகு மென இனத்தைத் தருதலேயன்றி அவனிதுசெய்யின் இதுவரு மென்னு மறிவிலியென்னு மினமல்லதனையுந் தந்தது. மேலைச் சேரிச்சேவ லலைத்ததென்ற துணையானே கீழைச்சேரிச்சேவ லலைப்புண்டதென இனத்தைத்தருதலேயன்றி யச்சேவலுடையார்க்கு வெற்றியாயிற்றென்னு மினமல்லதனையுந்தந்தது. இனி யிரட்டுறமொழிதலா னினமல்லதுந் தருமென்பதற் கினத்தைத்தருதலையொழித்தினமல்லதனையுந்தருமெனவும் பொருளுரைத்துக் கொள்க அவைவருமாறு- சுமந்தான் வீழ்ந்தானென்றுற்சுமவாதான் வீழ்ந்தா னல்லனென்னுங்கருத்துச் சொல்லுவார்க்கின்றாதலின் அவ்வினத்தையொழித்துச் சுமையும் வீழ்ந்ததென்னு மினமல்லதனையுந்தந்தது. காலையெழுந்து கருமத்திற் செல்வான் கோழிகூவிற்றென்றுழிலேனைப் புட்கள்கூவுகிலவென்னுங்கருத்த தற்கின்றாதலின் அவ்வினத்தை யொழித்துப் பொழுதுபுலர்ந்த தென்னு மினமல்லதனைத்தந்தது. பெய்முகிலனையா னென்றுற் கைம்மாறுகருதாத பெருங்கொடையாளனென்னும் இனமல்லதனையினமிலதாகிய அடைமொழிதந்தது. இவ்வடைகொடாது முகிலனையானென வாளாகூறினு மிக்கொடைப்பொருடருமாலோவெனின், அவ்வாறுகூறின் முகில்வண்ண னெனவும் பொருள்படுமாதலின் அதனையொழித்துக் கொடைப்பொருட் குரிமைசெய்த தவ்வடையேயாமென்க. பிறவுமன்ன. ஆண்டுறி னென்றமையான் இவ்வாறுபொருந்துவனகொள்க. (ஞக)

௪௱௫. அடைசினை முதன்முறை யடைதலு மீரடை முதலோ டாதலும் வழக்கிய லீரடை சினையொடு செறிதலு மயங்கலுஞ் செய்யுட்கே. *

(எ-ன்.) மரபுவழுவற்கவெனக்காத்தலு மரபுவழுவமைப்புமுணர்-ற்று. (ப-ரை.) அடை- ஓரடையும், சினை - ஒருசினையும், முதல்- ஒருமுதலும், முறையடைதலும்- ஒன்றையொன்றுவிசேடித்துவருதலும், ஈரடை- இரண்டடை, முதலோடாதலும்- முதலைவிசேடித்துவருதலும், வழக்கியல்- வழக்குநடையாம், ஈரடை- இரண்டடை, சினையொடுசெறிதலும்- சினையை விசேடித்துவருதலும், மயங்கலும்-இவ்வரம்புகடந்துவருதலும், செய்யுட்கு- செய்யுணடையாகும். எ- று. (பொ-ரை.) மேற்கூறிய வடை முதல் சினைகளையடுத்துவருங்கா லோரடையு மொருசினையு மொருமுதலுமொன்றை யொன்றுவிசேடித்துவருதலு மிரண்டடைமுதலை விசேடித்து வருதலும் வழக்கு நடையாம் இரண்டடைசினையை விசேடித்துவருதலு மிவ்வரம்பிறந்துவருதலுஞ் செய்யுணடையாம். எ-று. * ஈரடை முதலோ டாதலு மென்றமையான்,

முறையென்ற தொன்றை யொன்று விசேடித்துவருவ தென்பதூஉம் அங்ஙனம்வரவேயடைபலசினைமேல்வாராதொவ்வொன்று வருமென்பதூஉம் பெற்றாம். [வ-று] வேற்கைமுருகன்- நிலப்பூநெரிஞ்சில்- கார்த்திகைப்பூக்கொடி- பழக்குலைவாழை - செங்காஞ்சா- முழங்குதிரைக்கடல்- எ-ம்- மனைச்சிறுகிணறு - சிறுகருங்காக்கை-எ-ம்- வழக்கின்கண்வந்தன. "சிறுபைந்தூவியிற்செயிரறச் செய்த.,, -"கருநெடுங் கண்டருங் காமநோயே.,,- எ-ம்- "பெருந்தோட்சிறுமருங்குற்பேரமர்க்கட் பேதை.,,-எ-ம்-செய்யுட்கண்வந்தன. பிறவுமன்ன. இவற்றுளடைசினை முதன்முறையடைதலொன்றும் வழுவற்கவெனக் காத்தலுமேனைய மூன்றுமவ்வாறு நில்லாமையின் வழுவமைதியுமாமெனக. "கவிசெந்தாழைக் குவிபுறத்திருந்த - செவிசெஞ்சேவலும் பொருவலும்வெருவா வாய்வுன்காக்கையுங் கூகையுங்கூடி.,, எனவருவன கொம்புகூர்மாடு மடல்விரிதாழை என்றாற்போல வருதலினுயர்திணை தொடர்ந்தபொருண்முதலாறுமென்னுஞ் சூத்திரத்துளஃறிணையொடு சார்த்தி னஃறிணை முடிபினவா மெனவமைத்த தன்பாற் படுமெனக. (௫௨)

௪௱௪. இயற்கைப்பொருளை யிற்றெனக்கிளத்தல். ※

(எ-ன்) மரபுவழுவமைப் புணர்- ற்று. (ப- ரை.) இயற்கைப்பொருளை - இயற்கைப்பொருள் செயற்கைப்பொருள் என்கிற இருவகைப் பொருள்களுள் இயற்கைப்பொருளை, இற்றென- இத்தன்மைத்தென்று, கிளத்தல் - சொல்லுக. எ-று. (பொ-ரை.) இயற்கைப்பொருள் செயற்கைப் பொருளென இருவகைப்படும்பொருள்களு ளியற்கைப் பொருளை யித்தன்மைத்தென்று கூறுக. எ-று. ※ இயற்கையென்பதவிகாரம். செயற்கை யென்பதுவிகாரம். [வ-று.] மெய்யுள்ளது-பொய்யில்லது-நிலம்வலிது- நீர்தண்ணிது-தீவெய்து -மயிர்கரியது- பயிர்பசியது - எனவரும். நிலநீர்முதலிய பூதங்கண்மாயையின் விகாரமென்பதைநோக்கிற் செயற்கைப் பொருளாயினும் பூதத்தின் விகாரங்களை நோக்கினியற்கைப் பொருளாமெனக.இயற்கைப்பொருளை யிற்றென்னும் வினைக்குறிப்பாகிய செயற்படுத்துக் கூறுதலே வினுவமுவமைதியாயிற்று. இதுகருதாதிவ்வாறுகூறுதன் மரபென்பாருமுளர். அதுநிற்க. வளியுளருந் தன்மைத்து - உயிருணருந் தன்மைத்து என்னாது வளியுளரும்- உயிருணரும்- எனவுமுதாரணங் காட்டுவர். வளியின்கண்ணுமுயிரின்கண்ணு முளர்தலு முணர்தலுமாகிய செயனிகழ்ந்ததுணையானே யவற்றிற்கவை செயற்கையாமன்றி யியற்கையாகாமையானு மவ்வாறு கூறுதற்கோர்விதியின்

மையானு மலைபொருந்தாவென்க. (௫௬)

௪௱௫. காரணமுதலா வாக்கம்பெற்றுங் - காரணமின்றி யாக்கம்பெற்று - மாக்கமின்றிக் காரணமடுத்து - மிருமையுமின்றியு மியலுஞ்செயும்பொருள். *

(எ-ன்.) மரபுவழுவற்கவெனக்காத்தது மரபுவழுவமைப்புமுணர்-ற்று. (ப-ரை.) செயும்பொருள்- செயற்கைப்பொருள், காரணம்- காரணச்சொல், முதலா- முதல்வர, ஆக்கம்- ஆக்கச்சொல், பெற்றும்- பின்வரப்பெற்றும்; காரணம்- காரணச்சொல், இன்றி-தொக்குநிற்க; ஆக்கம்-ஆக்கச்சொல், பெற்றும்-வரப்பெற்றும், ஆக்கம்-ஆக்கச்சொல், இன்றி- தொக்குநிற்க, காரணம்-காரணச்சொல்; அடுத்தும்-வரப்பெற்றும், இருமையும்-அவ்விரண்டும், இன்றியும்-தொக்குநிற்கவும்; இயலும்-நடக்கும். எ-று (பொ-ரை) முதறுணை நிமித்தங்களாற் செய்யும் பொருளாகிய செயற்கைப் பொருளைக் கூறுங்காற் காரணச்சொன்முன்வர ஆக்கச்சொற் பின்வரப்பெற்றுங் காரணச்சொற்றொக்குநிற்ப ஆக்கச் சொல்வரப்பெற்றும்ஆக்கச்சொற்றொக்குநிற்பக் காரணச்சொல் வரப்பெற்றுமிவ்விருவகைச்சொல்லுந்தொக்குநிற்கவுநடக்கும். எ-று. ※ காரணச்சொல்லுமாக்கச்சொல்லும்யாண்டுவரினுமந்நிலைக்களத்துத்தந்து பொருளுரைக்கப் படுதலிற்காரணமுதலா வென்றார். [வ-று.] கடுவுங் கைபிழியெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்லவாயின - எருப்பெய்திளங்களைகட்டு நீர்கால்யாத் தமையாற் பயிர்நல்லவாயின- எ-ம்- மயிர்நல்லவாயின - பயிர்நல்லவாயின-எ-ம்-கடுவுங்கைபிழியெண்ணெயும் பெற்றமையான்மயிர்நல்ல-எருப்பெய்திளங்களை கட்டு நீர்கால்யாத்தமையாற்பயிர்நல்ல- எ-ம்- மயிர்நல்ல- பயிர்நல்ல- எ-ம்-வரும். "பல்லார்தோடோய்ந்து வருதலாற்பாய்புன-னல்வயலூரநின்றார்புலால்- புல்லெருக்க- மாசின்மணிப்பூவெணம்மைந்தன் மலைந்தமையாற் - காதற்றாய்நாறுமெமக்கு." எனப்பரத்தையிற் பிரிந்ததலைவனைப்புலந்து மவன்செய்த தீங்கினைத் தன்னினியமுகத்தாற் றணிக்கும் புதல்வனையுவந்து மொன்றென்றாகாதனவற்றை யாயினபோற்கூறுதல் வழுவியாக்கச் சொற்றொக வருதலும் அதன்பாற்படுத்துக. பிறவுமன்ன. காரணமுதலா ஆக்கம் பெறுதலொன்றும் வழுவற்கவெனக்காத்தது மேனையமூன்றும் வழுவமைதியுமாமென்க. (௫௧)

௪௱௬. தம்பாலில்ல தில்லெனினினனாய் - யுள்ளதுகூறி மாற்றியு முள்ளது- சுட்டியுமுரைப்பர் சொற்சுருங்குதற்கே. *

(எ-ன்.) மரபுவழுவற்கவெனக்காத்தனுணர்-ற்று. (ப-ரை) தம்பால்- தம்மிடத்து, இல்லது-இல்லாதபொருளை, இல்லெனின்-இல்லையெனின், இனனாய்- வினவப்பட்டதற்கு இனமாய், உள்ளது

இருக்கின்றபொருளை, கூறி-சொல்லி, மாற்றியும்-அச்சொல்லைக்
கொண்டு அதனை இல்லையென்றும், உள்ளது-இருக்கிறபொருளா
யின், சுட்டியும்-இவ்வளவுண்டென்றும், உரைப்பர்-சொல்லுவர்,
சொற்சுருங்குதற்கு- வினாவும் விடையுமாகிய சொற்கள் சுருங்கு
தற்பொருட்டு. எ-று. (பொ-ரை.) ஒருவன்வினவிய பொருடம்பக்கலி
ல்லையாயின் அதனை யில்லையென்னாது வினவன் வினவியதற் கின
மாய்த் தம்பக்க லுள்ளதனைக்கூறி யக்கூற்றானே யதனை யில்லை
யென்றும் உள்ளதாயி னித்துணை யுண்டென்றுங் கூறுவர்புலவர்
வினவுதலுஞ் செப்புதலுமாகிய சொற்கள் சுருங்குதற் பொருட்
டு. எ-று. ❋ குன்றக்கூறன்முதலிய குற்றங்களைக்கிச் சுருங்கச்
சொல்லன்முதலிய வழகோடுகூறுதல் வழக்கிற்கும் வேண்டுமெ
ன்பார் சொற்சுருங்குதற்கேயென்றார். [வ-று.] பயறுண்டோவ
ணிகீரேயென்றார்க் கஃதின்றென்பார் உழுந்துண்டு உழுந்து
துவரையுமுண்டெனக. இவ்வினமொழிகள் பயறில்லையென்னு
மிறைபயந்து நிற்றலி னினனாயுள்ளதுகூறி மாற்றியுமென்றார்.
அஃதுண்டென்பா ரித்துணையுண்டெனக. நூறுவிற்கும் பட்டா
டையுண்டோவென்றார்க் கஃதின்றென்பா ரைம்பதுவிற்குங்கோ
சிகமுண்டெனக. அஃதுண்டென்பா ரொன்பது விற்பதுண்டெ
னக. பிறவுமன்ன. இவ்வாறன்றி யுழுந்தல்லதில்லை யித்துணைப்ப
யறுளவென வுதாரணங்காட்டுவாருமுளர். அவைசொற்சுருங்குத
ற்கேயென்பதனோடு மாறுபட்டு மிகைபடக் கூறலென்னுங் குற்
றமாமெனக. (௫௫)

௪௱௭. ஈதாகொடுவெனு மூன்றுமுறையே - யிழிந்தோனொப்
போன் மிக்கோனிரப்புரை. ❋

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை.) ஈதாகொடுவெனும்- ஈதாகொடு
என்கிற, மூன்றும்- மூன்றுசொற்களும், முறையே-முறையாக,
இழிந்தோன்- இழிந்தவனும், ஒப்போன்- ஒப்பவனும், மிக்கோ
ன்-உயர்ந்தவனும், இரப்புரை-இரத்தற்குவருகிறசொற்களாகும்.
எ-று. (பொ-ரை.) ஈயென்பதிழிந்தோன் உயர்ந்தோன் மாட்டி
ரக்குஞ்சொல்லாம் தாவென்ப தொப்போ னொப்போன்மாட்டி
ரக்குஞ்சொல்லாம் கொடுவென்பது உயர்ந்தோன் இழிந்தோன்
மாட்டிரக்குஞ்சொல்லாம். எ-று. ❋ [வ-று] தந்தையீ - தோழ
தா-மைந்தகொடு- எனவரும். பிறவழிவரு மொப்புயர்வு தாழ்வி
னும் இவ்வாறேயொட்டுக. வழங்கு வீசு நல்கு என்றற் றொடக்க
த்திரப்புரைகள்போலா தீவோர்க்கு மேற்போர்க்கு மொப்புயர்
வுதாழ்வுகளை யீதாகொடுவென்ற துணையானே புணர்த்தி நிற்றலி
னிவற்றை யினைத்தென் றறிபொருளாகக் கூறினார். அருள் அளி
யென்னுமிரப்புரைகளீவோர்க் குயர்வுமேற்போர்க் கிழிவுமுண

ரீத்தின வாலோவெனின், அவை கருணைக்குரிய சொற்குறிப்பினு னிரத்தற்பொருளையுணர்த்தி நின்றனவன்றி யிரப்புரை யல்லவெ ன்க. இம்மரபு மயங்கிவருவனவுளவேற் புதியனபுகுதலும்வழுவ லவென் றதன்பாற்படுத்துக. (௫௬)

௪௱௮. முன்னத்தி னுணருங் கிளவியு முளவே. *

(எ-ன்.) மரபுவழுவமைப்புணர்-ற்று. (ப-ரை.) முன்னத்தின்-குறிப்பினால், உணரும்- பொருளறியப்படுகிற, கிளவியும்-சொற் களும், உள-சிலஉளவாம். எ-று. (பொ-ரை.) வெளிப்படையான் றிக் குறிப்பாற் பொருளுணரப்படுஞ் சொற்களுஞ் சிலவுள வாம். எ-று. ※ அவையாவன வொன்றொழி பொதுச் சொன்மு தற்சொல்லுவான் குறிப்பொடுகவிதந்தனமுதலியவாம். செவிபெ ல்லாஞ்சாலச் செம்பொனணியுஞ் செல்வத்தினரென்பார் செஞ் செவியென்றும் குற்றமற்றமரபினரென்பார் வெள்ளொக் கல மென்றும் பெருவாழ்க்கையினரென்பார் குழைகொண்டுகோழி யெறியு மவர்வாழ்க்கை யென்றுங் கூறுஞ்சொல்லுவான் குறிப் பொன்றுமேயுதாரணங் காட்டுவாருமுளர். அங்ஙனமாயினேனை யகுறிப்பிற் பொருடரு மொழியல்லவாமென்க. கேட்போரிடர் ப்படாதுவெளிப்படையிற்கூறுதன் மரபாதலினிதுவழுவமை தியாயிற்று. (௫௭)

௪௱௯. கேட்குந போலவுங் கிளக்குந போலவு - மியங்குந போலவு மியற்றுந போலவு - மஃறிணைமருங்கினு மறையப்ப டுமே. *

(எ-ன்.) இதுவுமது (ப-ரை.) கேட்குநபோலவும் - கேளாத வைகளைக்கேட்பவைகள்போலவும், கிளக்குநபோலவும் - சொல் லாதவைகளைச்சொல்பவைகள்போலவும், இயங்குநபோலவும்- ந டவாதவைகளை நடப்பவைகள்போலவும் , இயற்றுநபோலவும்- செய்யாதவைகளைச் செய்பவைகள் போலவும், அஃறிணைமருங்கி னும்-அஃறிணையிடத்தும்,அறையப்படும்-சொல்லப்படும்.எ-று (பொ-ரை.) கேளாதனவற்றைக் கேட்குவனபோலவுஞ் சொல்லா தனவற்றைச் சொல்லுவனபோலவு நடவாதனவற்றை நடப்பன போலவுமித்தொழில்களல்லனபிறசெய்யாதனவற்றைச்செய்வன போலவு மஃறிணையிடத்துஞ் சொல்லப்படும். எ-று. ※ முன்னே யபோலவிதவாதிறுதிக்கணியற்றுந வெனப்பொதுப்படக் கூறி னமையினித்தொழில்களல்லன பிறவென்னுஞ் சொல்லெஞ்சிநி ன்றன. [வ-று] "நன்னீரைவாழி யனிச்சமே„ -"இரவெலா நின் றுயாலீர்ங்கதிர்த்திங்காள்„-எ-ம்-"பசையமையுப்கேண்மையுங்கண் ணுறாக்கும்.„-மாய்தலும்பிறத்தலும்வளர்தலுங்-தேய்த லுமுடைமையைத்திங்கள்செப்புமால்„-எ-ம்-இவ்வழியிவ்வூர்க்கு

ப்போம்- இவ்வரசனுணையெங்குஞ்செல்லும்-எ-ம்-"தன்னெஞ்ச றிவதுபொய்யற்கபொய்த்தபின்- றன்னெஞ்சே தன்னைச்சுடும்." -"வண்சிறைப்பவளச்செவ்வாய்ப் பெடையன மடமைகூர்ந்து- தண்கயநீருட்கண்டதன்னிழல் பிறிதென் றெண்ணிக்-கண்டனன் கள்வமற்றுன் காதலிதன்னை நீர்க்கீழ்ப்- பண்டையமல்லம்வேண் டாபடுக்கவென் றூடிற்றன்றே." -"கருவிரற்செம்முக வெண்ப ற்குன்மந்தி- பருவிரலாற்பைஞ்சுனைநீர் தூவிப்- பெருவரைமே ற்- றேன்றேவர்க்கீபுமலைநாடவாரலோ- வான்றேவர்கொட்குமவ ழி."-எ-ம்- முறையேகாண்க. அஃறிணைமருங்கிலுமென்றவும்மை யானுயர்திணை மருங்கினு மிவ்வாறு சொல்லப்படுதல் புலம்பன் முதலியவற்றுட்காண்க. (௫௮)

௫௯. உருவகவுவமையிற் றிணைசினைமுதல்கள் - பிறழ்தலு ம்பிறவும் பேணினர்கொளலே. ❋

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை) உருவகவுவமையில்- உருவகத்தி லுமுவமையிலும், திணை-இருதிணைகளும், சினை-சினைகளும், முதல்கள்- முதல்களும், பிறழ்தலும்- தம்முள்ளேமயங்குதலும், பிறவும்-இவ்வியலுட்சொல்லாதொழிந்தவையும், பேணினர்கொளல்-பாதுகாத்துக்கொள்க.எ-று. (பொ-ரை) உருவகத்தின்கண்ணு முவமைக்கண்ணு மிருதிணை தம்முண் மயங்குதலுஞ் சினைமுத றம்முண் மயங்குதலும் இவ்வியலுட் சொல்லா தொழிந்தனவும் போற்றிக்கொள்க. எ-று. ❋ [வ-று] "மன்னர்மடங்கன் மறையவர்சொன்மாலை- யன்னநடையினர்க் காரமுதந்- துன்னும் - பரிசிலர்க்குவானம் பனிமலர்ப்பூம்பைந்தா- ரரிசினவேற்றானையெங்கோ." என்பன வுயர்திணை யஃறிணையோடு மயங்கின. "தாழிருந்தடக்கையு மருப்புந் தம்பியாத்- தோழர்தன் றுள்களாச் சொரியுமும்மத- மாழ்கடற்சுற்றமா வழன்றுசீவக - வேழமுயர்போதக மினத்தொடேற்றதே." என்பன வுயர்திணையஃறிணையோடு முதல்சினையோடுமயங்கின. முகமதியென்பது சினைமுதலோடு மயங்கிற்று. "அகழ்கிடங்கந்துகிலார்ந்தபாம்புரி-புகழ்தருமேகலைஞாயில்பூண்முலை- திகழ்மணிக்கோபுரந் திங்கள்வாண்முகஞ்- சிகழிகைநெடுங்கொடி செல்விக்கென்பவே." இஃதஃறிணையுயர்திணையோடுமயங்கிற்று. இவையுருவகம். "கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாண்- மங்கலங்கூறமலிவெய்திக்- கங்கையாள்-பூம்புனலாகந்தழீஇயினான்போரடுதோள்-வேம்பார்தெரியலெப்வேந்து." "இலமென்றசைஇ யிருப்பாரைக்காணி- னிலமென்னு நல்லாளகும்."-"வருந்தியீன்றாண் மறந்தொழிந்தாள் வளர்த்தாள் சொற் கேட்டில் கடிந்தாண்-முருந்தின்காதுங்குழையை முனிவார்நின்

னையெனமுனிவார்-பொருந்திற்றென்று விதுவென்றும் பொன்று மணித்தியுயிரென்றும் திருந்துசோலைக் கருங்குயிலே சிலம்பவிருந்துகூவுதியால" என்றற்றொடக்கத்தனவுமன்ன. "மல்லென்மலையனைய மாதவரைவணங்குதும்" என்ப துயர்திணையோடஃறிணைமயங்கிற்று. "கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே" என்பதஃறிணையோ டுயர்திணைமயங்கிற்று. கயற்கண் என்பது சினை முதலோடுமயங்கிற்று. தளிர்மேனி யென்பது முதல்சினையோடுமயங்கிற்று. பிறவுமன்ன. "தருமன்றண்ணளி யாற்றலா னீகையால் - வருணன்கூற்றுயிர் மாற்றலின்வாழ்நனே - யருமையாலழகிற்கணையைந்துடைத் - திருமகன்றிரு மாநிலமன்னனே" 'இந்திரகுமரன்போல விறைமகனிருந்துகாண்க.' என்றற்றொடக்கத்தனவாய் மயங்காதுவருதல் மரபாமாதலி னிதுவழுவமைதியாயிற்று. இனிப்பிறவுமென்றதனா லுருவக வுவமைக்கண் இவன்பாரதி இவன்பாரதிபனையானெனப்பான் மயங்கக்கூறுதலும் கயலினது பிறழ்ச்சிபோலுங் கண்ணினது பிறழ்ச்சி யென்பார் கயற்கண்ணென்று சொல்லின்முடிவின் அப்பொருண் முடியாதெஞ்சக்கூறுதலும் பிறவற்றுள்ளும் இவ்வாறெஞ்சக்கூறுதலுஞ் செங்கோல் கொடுங்கோல் வீரக்கழல் சினவேல் எனவொருபொருட்டன்மையை மற்றொருபொருண்மேல்வைத்துக் கூறுதலும் ஈந்தானெனப் பாரருளினானென வொருவினையை மற்றொருவினையாற்கூறுதலும் "அடிவண்ணமல்லாலவங்குதார்க்கோதை - முடிவண்ணங்கண்டறியாவேந்து." - "துஞ்சாக்கண்வடபுலத்தரசே" என வுயர்திணை யஃறிணையாகக்கூறுதலு மிவைபோல்வன பிறவும்வழுவமைதியாகக்கொள்க. (௪௱௰)

௪௱௰௧. யாற்றுநீர்மொழிமாற்று நிரனிறைவிற்பூண் - டாப்பிசையளைமறி பாப்புக்கொண்டுகூட் - டடிமறிமாற்றெனப் பொருள்கோளெட்டே. *

(எ-ன்.) நால்வகைச்சொற்களானுஞ் செய்யுஞ் செய்யுட்கொளுநம்பொருள்கோளின் பெயருந்தொகையுமுணர்-ற்று. (ப-ரை) யாற்றுநீர் - யாற்றுநீர்ப்பொருள்கோளும், மொழிமாற்று - மொழிமாற்றுப்பொருள்கோளும், நிரனிறை - நிரனிறைப்பொருள்கோளும், விற்பூண் - விற்பூட்டுப்பொருள்கோளும், தாப்பிசை - தாப்பிசைப்பொருள்கோளும், அளைமறிபாப்பு - அளைமறிபாப்புப்பொருள்கோளும், கொண்டுகூட்டு - கொண்டுகூட்டுப் பொருள்கோளும், அடிமறிமாற்று - அடிமறிமாற்றுப் பொருள்கோளும், என - என்று, பொருள்கோள் - பொருள்கோள், எட்டு - எட்டாம். எ-று. (பொ-ரை.) யாற்றுநீர்ப்பொருள்கோளும்மொழிமாற்றுப்பொருள்கோளும் நிரனிறைப்பொருள்கோளும்விற்பூட்டு

ப்பொருள்கோளுந்தாப்பிசைப்பொருள்கோளும்அளைமறிபாப்
புப்பொருள்கோளுங் கொண்டுகூட்டுப்பொருள்கோளும்அடிம
றிமாற்றுப்பொருள்கோளுமெனப்பொருள்கோளெட்டாம்.எ-று
❀ இவற்றுட் டாப்பிசை யென்பதற் கூசல்போ லிடைநின் றிரு
மருங்குஞ் செல்லுஞ் சொல்லென்பது பொருள். தாம்பென்ப
தூசல். அஃதளைமறி பாம்பென்பதுபாம்பெனநின்றாற்போல
வலித்துநின்றது. ஏனையவுங்காரணக்குறியாதல்காண்க. (௪௱௰௧)

௪௱௰௨. மற்றையநோக்கா தடிதொறும் வான்பொரு-ளற்றற்
றொழுகுமஃ தியாற்றுப்புனலே. ❀

(எ-ன்.) நிறுத்தமுறையானே யாற்றுநீர்ப்பொருள்கோளாமா
றுணர்-த்-று. (ப-ரை.) மற்றையநோக்காது - மொழிமாற்றுமு
தலியவைபோலப் பிறழ்ந்துசெல்லவேண்டாமல், அடிதொறும்
அடிதோறும், அற்றற்றொழுகுமஃது-யாற்றுநீரொழுக்குப்போ
லநெறிப்பட்டு அற்றற் றொழுகுவதாகிய, வான்பொருள்-சிறந்த
பொருள்கோள், யாற்றுப்புனல்- யாற்றுநீர்ப்பொருள்கோளாம்
எ-று. (பொ-ரை.) மொழிமாற்றுமுதலியபோற் பிறழ்ந்து செ
லவேண்டாது யாற்றுப்புன லொழுக்குப்போ னெறிபட் டடி
தோறும் வான்பொரு ளற்றற் றொழுகும்பொருள்கோள்யாற்
றுநீர்ப்பொருள்கோளாம். எ-று ❀ இடையறு தொழுகும்யாற்
றுநீரொழுக்குவமையாதலின் அடிதொறும் வான்பொரு ளற்ற
ற்றொழுகுதலாவது மொழிமாற்றுமுதலியபோற் பிறழ்ந்துசெ
ல்லுஞ் செலவற்றுங்காங் கமைந்தொழுகுதலாமன்றி யடிதோறு
ம்பொருண்முடிதலன்றுமென்க. அங்ஙனமாயி னுங்காங்கெனப்
பொதுப்படக்கூறு தடிதொறுமென்ற தென்னையெனி னவ்வா
றேகூறுவாரோ ரிலக்கிணைமேல்வைத்துக் கூறினா ரென்க- [வ-று]
“சொல்லருஞ்சூற்பசும்பாம்பின்றோற்றம்போன் - மெல்லவேகரு
விருந்தீன் றுமேலலார்-செல்வமேபோற்றலை நிறுவித்தேர்ந்தநூற்
கல்விசேர்மாந்தரி னிறைஞ்சிக்காய்த்தவே.” எனவரும், இப்பா
ட்டினுட் சொல்லென்னு மெழுவாயினை முதலெடுத் ததன் றொ
ழிலாகிய வினையெச்சங்க ளொன்றனை யொன்று கொள்ள இடை
யறுதைநிறீஇக் காய்த்தவென்னும் பயனிலையை யிறுதிக்கட்ட
ந்து முடித்தமையினிப் பொரு ளொழுகுதல்யாற்றுநீரொழுக்கு
ப்போறல்காண்க. இதற்கிவ்வாறன்றி யேனையடிகளை நோக்கா த
டிதோறும் பொருண்முடிந்துவருவதுயாற்றுநீர்ப்பொருள்கோ
ளெனப் பொருளுரைத்து “அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங்
குற்றம்- விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங்குற்றஞ்-சொலற்
பாலவல்லாதசொல்லுதலுங்குற்றங்- கொலைப்பாலுங்குற்றமேயா
ம்” எனவுதாரணங்காட்டுவாருமுளர். யாற்றுநீரொழுக்குக்கிடைய

றுதலின்மையானும் அற்றதேலதனையொழுக்கென்றல் கூடாமை யானு மஃதுவமையன்றாம். ஒவ்வோரடிவொழுகுதற்குவமையா யிற்றெனிற் பாட்டுமுழுவது மிடையறு தொழுகிப்பயின்றுவரு ம்பொருள்கோண் மொழிமாற்றுமுதலியவற்றுள் அடங்காமையி ற்குன்றக்கூறலாம் இங்ஙனமாதலினது பொருளன்றாம். அவர்காட் டியவுதாரணம் அடிமறிமாற்றின்பாற்படுமென்க. அப்பொருள் கோளின் விகற்பம் அச்சூத்திரத்துட் டோன்றக்கூறுதும். இதனை வான்பொருளென்று ரிது நெறிப்பட்டு வருதலானும் பயின்று வருதலானு மொழிமாற்றுமுதலியவந்த செய்யுட்கண்ணும் விரா ய்வருதலானுமென்க. (௪௱௧)

௪௱௰௩. ஏற்றபொருளுக் கியையுமொழிகளை- மாற்றியோரடி யுள் வழங்கன்மொழிமாற்றே. *

(எ-ன்.) மொழிமாற்றுப் பொருள்கோ ளாமா றுணர் - ற்று. (ப-ரை.) ஏற்றபொருளுக்கு - ஏற்றவிரண்டுபயனிலைகளுக்கு, இயையுமொழிகளை- பொருந்துமொழிகளை, மாற்றி-ஏலாதபயனி லைகளுக்குத்தனித்தனிக்கூட்டி, ஓரடியுள்-ஓரடியுள்ளே, வழங்கல் சொல்லுவது, மொழிமாற்று- மொழிமாற்றுப்பொருள்கோளா ம். எ-று. (பொ-ரை.) இரண்டுமொழியு மவைகொள்ளு மிரண்டு பயனிலையுமாய் வரக்கூறுவா ரந்நான்கனு ளேற்றபயனிலைகட் கி யையு மொழிகளைத் தனித்தனிக்கூட்டிக்கூறு தேலாதபயனிலைக ட்கியையாதமொழிகளைத்தனித்தனிக்கூட்டி யோ ரடியுள்ளேகூ றும்பொருள்கோண் மொழிமாற்றுப் பொருள்கோளாம். எ-று. ※ ஒன்றற்கொன்று பொருந்தியதென்பா ரேற்றபொருளுக் கி யையு மொழியென்றார். மொழிமாற்றென்பது தனக்குள்ளதைக் கொடுத்துப் பிறர்க்குள்ளதை வாங்கும் பண்டமாற்றுப்போறலி னிரண்டுமொழியு மவைகொள்ளு மிரண்டுபயனிலையும் வந்தல்ல துமொழிமாற்றுதல் கூடாமையி னத்தொகை தந்துகூறினும்.— [வ-று.] "சுரையாழவம்மி மிதப்பவரையனைய-யானைக்குநீத்து முயற்குநிலையென்ப - கானகநாடன்சுனை." எனவரும். இதனுளா ழவென்னும் பயனிலைக்கியைந்த வம்மியென்னுமொழியினை மி தப்பவென்னும் பயனிலைக்கும் மிதப்பவென்னும் பயனிலைக் கி யைந்த சுரையென்னுமொழியினை யாழவென்னும் பயனிலைக்கு மாக மாற்றிக் கூறியவாறும் நீத்தென்னும் பயனிலைக் கியைந்த முயலென்னுமொழியினை நிலையென்னும்பயனிலைக்கும் நிலையெ ன்னும்பயனிலைக்கியைந்த யானையென்னுமொழியினை நீத்தென் னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறுங்காண்க- "ஆலத்து மேல குவளைகுளத்துள- வாலினெடியகுரங்கு." என ஈரடிமுத லியவற்றுட்கூறிற் செய்யுட்கண்ணவாய் மொழிமாற்றென்பது

தோன்றாமையின் அஃதிலக்கணமன்றெனவிலக்கி யண்மைக்கட் கூறுவதே மொழிமாற் றென்பாரோ ரடியுளென்றார். ஆலத்து மேல வென்பதோரடியுள் வாராமையிற் கொண்டுகூட்டென்பா ருமுளர். அதுமொழிமாற்றிற்குங் கொண்டுகூட்டிற்கும் வேற்று மையுணரார் கூற்றுமென்க. அவரிச் சூத்திரத்திற்கு மொழிமாற் றெடுபொருந்தாது கொண்டுகூட்டொடு பொருந்தப்பொருள் கூறிச் சுனையாழ வென்னு முதாரணங்காட்டுவர். (௩௨)

௪௱௰௩. பெயரும் வினையு மாஞ் சொல்லையும் பொருளையும்-வேறுநிரனிறீஇ முறையினு மெதிரினு-நேரும்பொருள்கோ ணிரனிறை நெறியே. *

(எ-ன்.) நிரனிறைப் பொருள்கோளாமாறுணர்-ற்று.(ப-ரை) பெயரும்வினையுமாஞ்சொல்லையும்-பெயரும்வினையுமாகியசொற்களையும், பொருளையும்- அவைகொள்ளும்பெயரும்வினையுமாகிய பயனிலைகளையும், வேறு-வேறாக, நிரனிறீஇ-வரிசையாகநிறுத்தி, முறையினும்-முறையாகவேனும், எதிரினும்-எதிராகவேனும், நேரும்-இதற்கிது பயனிலையென்பது படக்கூறும், பொருள்கோள்-பொருள்கோள், நெறி-நெறிப்பட்ட, நிரனிறை - நிரனிறைப்பொருள்கோளாம், எ-று. (பொ-ரை.) பெயரும்வினையுமாகிய சொற்களையு மவைகொள்ளும் பெயரும் வினையுமாகிய பயனிலைகளையும் வேறுவேறுநிரையாக நிறுத்தி முறையாயேனுமெதிராயேனு மிதற்கிது பயனிலையென்பதுபடக்கூறும்பொருள்கோ ணெறிப்பட்ட நிரனிறைப் பொருள்கோளாம்.—எ-று. ❋

[வ-று.] "கொடிகுவளைகொட்டை நுசுப்புண்கண்மேனி-மதிபவளமுத்தமுகம் வாய்முறுவல் - பிடிபிணை மஞ்ஞைநடைநோக்குச்சாயல்- வடிவினளேவஞ்சிமகள்." இது பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய்நின்றமுறைநிரனிறை. "காதுசேர்தாழ்குழையாய் கன்னித்துறைச்சேர்ப்ப - போதுசேர் தார்மார்பபோர்ச்செழிய- நீதியான்- மண்ணமிர்தமங்கையர்தோண் மாற்றலாரேற்றார்க்கு - நுண்ணியவாயபொருள்." இதுவினைப்பயனிலைகளும் பெயர்ச்சொற்களுமாய்நின்றமுறைநிரனிறை. "களிறுங்கந்தும்போல- நளிகடற்கூம்புங் கலனுந்தோன்றுந்-தோன்றன்மறந்தோர் துறைகெழுநாட்டே." இதுபெயர்ச்சொற்களும்பெயர்ப்பயனிலைகளுமாய்நின்ற வெதிர்நிரனிறை. "ஆடவர்களெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்- பாடகமுஞ்சூழ்கழலும்பஞ்சரமா-நீடியமா- னின்றானிருந்தான் கிடந்தானிதுவன்றோ-மன்றார்மதிற்கச்சிமாண்பு." இதுபெயர்ச்சொற்களும்வினைப்பயனிலைகளுமாய்நின்றவெதிர்நிரனிறை. பிறவுமன்ன. மேலைச்சூத்திர

த்துன் மொழியென்றும் இச்சூத்திரத்துட் சொல்லென்றுங் கூறிய நிறுத்தசொல்லு மதுவுங்கொள்ளும் பயனிலையெனினும் பொருளெனினு மொக்குங்குறித்துவரு கிளவியுமன்றி யவ்வழிவேற்றுமையுருபுகளும் பிறசொற்களுமுடன்வருமாலோவெனின், சாத்தனே வந்தானென்றால் அவனுடையனி முதலியனவுமுடன்வருதல்கூறாதேயமைதலம்பாலுமென்க. சொற்றொறுமிற்றிதன்பெற்றியென்பதனானே "காமவிதிகண்முகமென்மருங்குற்செய்யவாய் - தோமிறுகடினிசொல்லமிர்தந்-தேமலர்க்-காந்தள்குரும்பைகனகமடவாள்கை- மெயந்திளங்கொங்கை யெழில்." எனவரும் எழுத்துநிரனிறையும் "வெண்பாமுதலாக வேதியராதியா -மண்பால் வகுத்தவருணமா-மொண்பா- விளங்கட்குமிவ்வாறேயென்றுரைப்பர்தொன்னூன்-மனநத்திட்பக்கற்றோர்மகிழ்ந்து." எனத்தொகுத்துக்கூறு நிரனிறை முதலியவுங்கொள்க. "அம்ம் பவள்வரிநெடுங்கண்ணுய்வஞ்சிக்- கொம்ம் பவள்கொ டிமருங்குல்கோங்கினரும்ம் பவள்முலை யொக்குமேயொக்கும்- கரும்ம்பவள்வாயிற்சொல்." என்னும்யாற்றுநீர்ப் பொருள்கோளமயக்கநிரனிறையென்பாருமுளர். இதுசொல்லையும் பொருளையுந் தனித்தனி நிறீஇக்கூறியதன்றி நிரனிறையாகநிறீஇக்கூறுமையி னிரனிறையன்றென்பார் நெறியேயென்றூர். (௬௩)

௪௱௰௫. எழுவாயிறுதி நிலைமொழிதம்முட்- பொருளோக்குடையது பூட்டுவில்லாகும். *

(எ-ன்.) பூட்டுவிற் பொருள்கோளாமா றுணர்-ற்று (ப-ரை.) எழுவாய்- செய்யுள்முதலினும், இறுதி-இறுதியினும், நிலை-இருக்கின்ற, மொழி-மொழிகள், தம்முள் - தமக்குள், பொருளோக்குடையது-பொருளைநோக்குதலுடைய பொருள்கோள், பூட்டுவில்லாகும்-பூட்டுவிற்பொருள்கோளாம். எ-று. (பொ-ரை.) செய்யுட்கண்முதலினு மீற்றினுநிற்கு மொழிகடம்முட் பொருளோக்கமுடையபொருள்கோள் பூட்டுவிற் பொருள்கோளாம். எ-று. ※ செய்யுட்கெல்லா முதலினு மீற்றினு மென்னுமையி னதனகத் தெங்ஙன மிவ்வாறுவரினுமாமென்க. [வ-று.] "திறந்திடுமின் றீயவை பிற்காண்டுமாத - சிறந்துபடிற்பெரிதாமேத - முறந்தையர்கோன்-றண்ணாரமார்பிற் றமிழர்பெருமானைக்-கண்ணாரக் காணக்கதவு." எனவரும். பிறவுமன்ன. (௬௪)

௪௱௰௬. இடைநிலைமொழியே யேனையீரிடத்து-நடந்துபொருளை நண்ணுதல்தாப்பிசை. *

(எ-ன்.) தாப்பிசைப்பொருள்கோளாமா றுணர்-ற்று. (ப-ரை) இடைநிலைமொழி- நடுவினுள்ளமொழி, ஏனையீரிடத்தும்-ஒழிந்தமுதலினுமீற்றினும், நடந்து-சென்று, பொருளை- பொருளை,

நண்ணுதல்-கூடும்பொருள்கோள், தாப்பிசை-தாப்பிசைப்பொருள்கோளாம். எ-று (பொ-ரை.) இடைநிற்குமொழிமொழிந்ததலினும் ஈற்றினுஞ் சென்று பொருளைக்கூடும் பொருள்கோடாப்பிசைப்பொருள்கோளாம். எ-று.* [வ-று.] "உண்ணாமையுள்ள துயிர்நிலை யூனுண்ண - வண்ணாத்தலசெய்யாதளறு ,, என வரும். (கூரு)

கூளஎ. செய்யு ளிறுதி மொழியிடை முதலினு - மெய்திய பொருள்கோ ளளைமறிபாப்பே. *

(எ-ன்.) அளைமறி பாப்புப் பொருள்கோ ளாமாறுணர்-ற்று. (ப-ரை.) செய்யுள்- செய்யுளில், இறுதிமொழி - இறுதியிலுள்ள சொல், இடைமுதலினும்-இடையிலும்முதலிலும், எய்தியபொருள்கோள்-சென்றபொருள்கோள், அளைமறிபாப்பு - அளைமறி பாப்புப்பொருள்கோளாம். எ-று.(பொ-ரை.) செய்யுட்கணீற்றினின்றசொல்லிடையினு முதலினுஞ் சென்றபொருள்கோள் அளைமறிபாப்புப்பொருள்கோளாம் எ-று. * [வ-று.] "தாழ்ந்தவுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார்தாமுஞ்-சூழ்ந்தவினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார்தாமு-மூழ்ந்தபிணிநலிய முன்செய்தவினையென்றே முனிவார்தாமும்-வாழ்ந்தபொழுதினேவானெய்துநெறிமுன்னிமுயலாதாரே.,, என வரும். இருமருங்கினையு மிறுதியென வமையுமாதலின் வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதாரே யென்னுஞ்சொற்களை யம்மருங்குவைத்துச் செய்யுளாக்கினு மிப்பொருள்கோளாமென்க. (கூகூ)

கூளஅ. யாப்படிபலவினுங் கோப்புடைமொழிகளை - யேற்புழியிசைப்பது கொண்டுகூட்டே. *

(எ-ன்.) கொண்டுகூட்டுப்பொருள்கோ ளாமாறுணர்-ற்று:— (ப-ரை) யாப்படி - செய்யுளடிகள், பலவினும் - பலவற்றினும், கோப்புடை-கோக்கப்படுதலையுடைய, மொழிகளை-சொற்களை, ஏற்புழி-எடுத்தபொருளுக்கேற்றவிடத்து, இசைப்பது-கூட்டும் பொருள்கோள்,கொண்டுகூட்டு - கொண்டுகூட்டுப்பொருள்கோளாம். எ-று. (பொ-ரை.) செய்யுளடிபலவினு மியல்பாகிய யாற்றுநீர்ப்பொருளுக்கேலாது கோத்துக்கிடந்த மொழிகளை யெடுத்தப்பொருளுக் கேற்றவிடத்துக் கூட்டும் பொருள்கோள்கொண்டு கூட்டுப்பொருள்கோளாம். எ-று. * இயல்பாகிய யாற்றுநீர்ப்பொருள்கோளிற் பிறழ்ந்துவருவனவற்றை மொழிமாற்று முதலியவாகப் பகுத்தமையி னப்பொருளுக் கேற்றவிடத் தென்றும். [வ-று.] "தெங்கங்காய்போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்-வெண்கோழிமுட்டை யுடைத்தன்னமாமேனி-யஞ்சனத்த

ன்னபசலை தணிவாமே-வங்கத்துச்சென்றார்வரின்.,, எனவரும். இதனுள் வங்கத்துச்சென்றார்வரி னஞ்சனத்தன்ன பைங்கூந்தலையுடையாண் மாமேனிமேற் றெங்கங்காய்போலத் திரண்டிருண்ட கோழிவெண்முட்டையுடைத்தன்னபசலைதணிவாமெனக்கொண்டுகூட்டுக. உருவகவுவமையிற் றிணை சினைமுதல்களென்பதனைமுதல் சினையெனமுறைநிறீஇப் பொருள்கொள்வதுமது. (௩௭)

௪௱௰௩. ஏற்புழியெடுத்துடன் கூட்டுறுமடியவும்- யாப்பீறிடைமுத லாக்கினும் பொருளிசை - மாட்சியுமாறா வடியவுமடிமறி. *

(எ-ன்.) அடிமறிமாற்றுப்பொருள்கோ ளாமாறுணர்-ற்று.— (ப-ரை.) ஏற்புழி- பொருளுக்கேற்குமிடத்து, எடுத்து-எடுத்து, உடன்கூட்டுறும்- நீங்காதுகூட்டுகிற, அடியவும்- அடியையுடையவையும், யாப்பீறிடைமுதல்- (யாதானுமோரடியை அச்செய்யுளின் இறுதிநடுமுதல்களில் யாதானுமோரிடத்து, ஆக்கினும்- எடுத்துக்கூட்டினும், பொருளிசைமாட்சியும் - பொருளோடிசைமாட்சியும் பொருண்மாட்சியும், மாறா-வேறுபடாத, அடியவும்-அடியையுடையவையும், அடிமறி- அடிமறிமாற்றுப்பொருள்கோளாம். எ-று. (பொ-ரை.) பொருளுக்கேற்குமிடத்தெடுத்து நீங்காதுகூட்டு மடியினையுடையவும் யாதானுமோரடியையெடுத் தச்செய்யுட்கண் முதலிடையீறுகளின் யாதானுமோரிடத்துக்கூட்டினும் பொருளோ டோசைமாட்சி யோசையொழியப் பொருண்மாட்சியும்வேறுபடாதவடியினையுடையவுமாகியபொருள்கோ ளடிமறிமாற்றுப்பொருள்கோளாம். எ-று. ※ மாட்சி நெறிப்பட்டொழுகல். ஏற்புழியெடுத்துக்கூட்டுத லிருவகையடிமறிமாற்றிற்கும் பொருந்துமாயினு மவ்வடிகண் மாற்றுதற் கமைந்து நீங்கு மிவ்வடிக ணீங்கா வென்பாருடனென்றும் ஓசையொழியப் பொருண்மாட்சிமாத்திரையு மாறாவடியவுமென்பார் பொருளிசைமாட்சியுமெனவும்மைதந்துங்கூறினார். [வ-று] "நடுக்குற்றுத்தற்சேர்ந்தார் துன்பந்துடையார் -கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்காலீண்டு - மிடுக்குற்றுப்பற்றினு நில்லாது செல்வம்- விடுக்கும்வினையுலந்தக்கால்.,, என்பதனுட் கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்காலீண்டும் விடுக்கும் வினையுலந்தக்கா லிடுக்குற்றுப்பற்றினு நில்லாதுசெல்வ மிஃதறியார் நடுக்குற்றுத்தற்சேர்ந்தார் துன்பந்துடையாரென வடிகளை யேற்புழியெடுத்துக்கூட்டுக. "மாறாக்காதலர் மலைமறந்தனரே -யாறாக்கட்பனிவரலானாவே- வேறாமென்றோள்வளை நெகிழும்மே - கூறாய் தோழியான்வாழுமாறே.,, என்பதனுள்யாதானுமோரடியையெடுத்தியாதானு மோரிடத்துக்கூட்டியுச்சரித்துப்பொருளுமோ

சையும் வேறுபடாமைகாண்க. "அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங்குற்றம் - விலைப்பாலிற்கொண்டூன் மிசைதலுங்குற்றஞ் - சொலற்பாலவல்லாத சொல்லுதலுங்குற்றங் - கொலைப்பாலுங் குற்றமேயாம்.,, என்பதனு ளீற்றடியொழிந்த மூன்றடியுள் யாதானுமொன்றையெடுத் தியாதானுமோரிடத்துக்கூட்டி யுச்சரித்துப் பொருளுமோசையும்வேறுபடாமையு மீற்றடியையெடுத்தியாதானு மோரிடத்துக்கூட்டி யுச்சரித் தோசைவேறுபட்டுப்பொருள்வேறுபடாமையுங்காண்க. செய்யுளடி பலவினையுந் தொகுத்துக்கூறாது மூன்றுமொன்றுமாகப் பிரித்த தென்னையெனின் எண்வகைப்பட்ட பொருள்கோளு மவற்றின் விகற்பங்களுமாய பொருள்கோள்களு ளொன்றொருசெய்யுண் முழுவதூஉ மமைந்துகிடக்கவேண்டுமென்னும் யாப்புறவின்றி யொன்றும் பலவுமமைந்துகிடத்தலினென்க. அவ்வாறமைந்துகிடத்தலவ்வப்பொருள்கோட்குக்காட்டிய செய்யுட்கண்ணும் பிறசெய்யுட்கண்ணுங் கண்டுகொள்க. அடிமறித்தலன்றி மாற்றுதலேற்புழியெடுத் துடன்கூட்டுறுமடியவு மென்றதற்கின்றாம் அங்ஙனமாகவதனையுமடிமறிமாற்றென்ற தென்னையெனின், மறித்தற்குரியகொண்டுகூட்டோடும், மறித்தற்குமாற்றுதற்குமுரியவடிமறிமாற்றோடும், சார அதனை முதற்கட்கூறி யடியாகமறித்தலுடைமையினடிமறிமாற்றின்பாற்படுத்துச் சிலவுறுப்புக்குறைந்தாரையு மக்களென்றாற்போல வதற்குமடிமறிமாற்றெனப் பெயர்தந்து கூறினாரென்க. செய்யுட்குரியபொருள்கோளை யீண்டுக்கூறிய தென்னையெனின் செய்யுட்குத் தொடரொன்னுங் காரணக்குறி போந்தது மொழி தொடர்ந்ததாலன்றே யங்ஙனமாதலி னதுவுந்தொடர்மொழியிலக்கணமேயாமென்க. (௩௮)

மூன்றாவது - பொதுவியல்

முற்றிற்று.



## நான்காவது.

# இடையியல்.

௪௱௨௰. வேற்றுமைவினைசா ரியையொப்புருபுக - டத்தம்
பொருள விசைநிறையசைநிலை-குறிப்பெனெண் பகுதியிற்றனி
த்தியலின்றிப் - பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்-
தொன்றும்பலவும்வந் தொன்றுவதிடைச்சொல். *

(எ-ன்.) இடையுரியடுத்து நான்குமாமென நிறுத்த முறையா
னே யிடைச்சொல்லிலக்கண மிவ்வியலானுணர்த்துவான் றொட
ங்கியவையித்துணைய விவ்வியல்பினவென வவற்றின் பொதுவில
க்கணமுணர்-ற்று. (ப-ரை.) வேற்றுமை (யுருபுகள்)- ஐம்முதலி
யவேற்றுமையுருபுகளும், வினை (யுருபுகள்)- விகுதிமுதலியவி
னையுருபுகளும், சாரியை (யுருபுகள்)-அன் ஆன் முதலியசாரி
யையுருபுகளும், ஒப் புருபுகள் - போலப் புரைய முதலிய உவ
மையுருபுகளும், தத்தம்பொருள-தத்தமக்குரியபொருளையுணர்
த்திவருபவையும், இசைநிறை-செய்யுளிசை நிறைத்துவருபவை
யும், அசைநிலை- அசைத்தலேபொருளாகநிற்பவையும், குறிப்பு
-இவைபோலாது குறிப்பினுல்வருபவையும், என்- என்கிற, எண்
பகுதியின்- எட்டுவகையினையுடையனவாய், தனித்தியலின்றி- த
னித்துநடத்தலில்லாமல், பெயரினும் - பெயரினுள்ளும், வினை
யினும்-வினையினுள்ளும், பின்முன் - அவற்றின் பின்னுமுன்னு
மாகிய, ஓரிடத்து- ஆறனுளோரிடத்து, ஒன்றும்-ஒன்றாயினும்,
பலவும்-பலவாயினும்-வந்து-வந்து,ஒன்றுவது-ஒன்றுபட்டுநட
க்குந்தன்மையது, இடைச்சொல் - இடைச்சொல்லாகும். எ-று.
(பொ-ரை.) எழுவாயுருபுமுதலிய வெட்டுவேற்றுமையுருபுகளு
ட் பெயரும் பெயராது விகாரமுமாகியவெழுவாயும்விளியுமொ
ழித்தொழிந்த ஐம்முதலிய வாறுருபுகளும் பகுதி விகுதியிடை
நிலையென்னுந் தெரிநிலையுங் குறிப்புமாகிய வினை யுருபுகளுண்
முதனிலைத் தனிவினைப்பெயரும் பொருளாதி யறுவகைப்பெய
ருமாகிய பகுதியொழித்தொழிந்த விகுதிமுதலிய வினையுருபுக
ளும் அன்ஆன்முதலிய சாரியையுருபுகளும்போலப் புரையமுத
லிய வுவமவுருபுகளும் பிறவாறு தத்தமக்குரிய பொருளையுணர்
த்திவருவனவும் வேறுபொருளின்றிச் செய்யுளிசை நிறைத்தலே
பொருளாகவருவனவும் அசைத்தலேபொருளாகநிற்பனவும்வெ
ளிப்படையின்வரு மிவைபோலாது குறிப்பின் வருவனவுமென்
னுமெட்டுவகையினையுடையவாய்த் தனித்துநடத்தலின்றிப் பெ
யரினகத்தும் வினையினகத்து மவற்றின்புறமாகிய பின்னு முன்
னு மிவ்விடங்களாறனு ளோரிடத் தொன்றேனும் பலவேனும்வ
ந்தப்பெயர்வினைகட்கு அகத்[illegible]ப்பாயும்புறத்[illegible]ப்பாயுமொ

ன்றுபட்டு நடக்குந்தன்மைய திடைச்சொல்லாம். எ-று. ❁ தெரிநிலைவினையிடைநிலைபோல வேனையிடைநிலை சாரியைகட்கு வேறுபொருளின்றேனும் பெயர்வினைகட்கின்றி யமையாது வருதலே பெரும்பாலவாதலி னவற்றின்பொருளே பொருளென்பதுகருதி யிசைநிறை யசைநிலைகளைச்சாரவையாது முதற்கண்வைத்தாரென்க. பெயரினும் வினையினு மென்றவும்மையைப் பின்மூன்றெனன்பனவற்றோடுங்கூட்டுக. இச்சொற்கண் முதற்கூறியபெயர்ச்சொல்வினைச்சொற்களுமாகாது அவற்றின்வேறுமாகாதிடைநிகரனவாய்நிற்றலி னிடைச்சொல்லெனக் காரணக்குறி பெற்றன இதுபாலைத்திணை நடுவுநிலைத்திணையெனப் பெயர்பெற்றதுபோலுமென்க. அற்றேற்பாலைத்திணை நடுவுநிலைத்திணை யென்றுயவாறென்னையெனில், ஆசிரியர் தொல்காப்பியர். "நடுவுநிலைத்திணையே நண்பகல்வேனிலொடு- முடிவுநிலைமருங்கின் முன்னிய நெறித்தே" எனக்கூறியவழி யங்ஙன நடுவுநிலைத்திணையென்னுஞ்சொல்லே யதன்காரண மினிதுவிளக்கி நிற்றலானது நடுவுநிற்றல்காரணத்தாற்பெற்ற பெயரென்பது பெற்றும். இன்னு மவ்வாசிரியரே யேனை நாற்றிணையுமுறையானே கூறி யிறுதிக்கணோதுதலானிதவற்றின்வேறென்பது விளங்குதலானும் எஞ்சநின்றதுபாலையே யாகலானும் "நடுவணைந்திணை நடுவணதொழியப்- படுதிரைவையம் பாத்தியபண்பே" என நிலம்பகுத்தோதுங்கா னடுவணதெனக் குறியிட்டமையானு மங்ஙனம்பகுக்கப்படுநிலங்களுமாகா தவற்றின்வேறுமாகாது தனக்குரியநிலம்நடுநிகர்த்ததாய் நிற்றல்பற்றி நடுவுநிலைத்திணையெனக்குறியீடுபெற்றதெனக்கொள்க. இன்னமிதன்றிறம்விரிக்கிற்பெருகும். அதுநிற்க. இனியிடைநிகரனவாய்நிற்றலி னிடைச்சொல்லெனக் காரணக்குறி போந்ததூஉ மன்றித் தனித்து நடத்தலின்றிப் பெயர்வினைகளிடமாக நடத்தலி னிடைச்சொல்லெனக் காரணக்குறி போந்ததெனினு மமையும். அது முதனூலின்வழியாக நடக்குநூலை யங்ஙனங்கூறாது வழிநூலென்றாற்போலப் பெயர்வினைகளிடமாக நடக்குஞ்சொல்லை யங்ஙனங்கூறா திடைச்சொல்லெனப்பட்டது. அங்ஙனமாயி னிடமெனவியற்சொல்லாற்கூறா திடையெனத் திரிசொல்லாற்கூறிய தென்னையெனின் இயற்சொல்லாற்கூறினிடப்பொருளைபுணர்த்துஞ்சொல்லெனப் பொருள்படுமாதலி னதனோடிதற்கு வேற்றுமைதோன்றற்கென்க.— எண்வகையுட் டோன்றுதொழிந்தனவருஞ் சூத்திரங்களானுணர்க.— [வ - று.] நம்பியை - நம்பியால் - நம்பிக்கு என்புழிப்பெயரின் புறத்துறுப்பாய் ஐயுருபுமுதலியவிடைசசொல் லொன்றுவந்தன. தச்சன்-தச்சிச்சி- முடியினன் என்புழிப்பெயரினகத்துறுப்பாய் விகுதி யிடைநிலை சாரியையி

டைச்சொற்கள் பலவந்தன. வினைக்குறிப்பி னகத்துறுப்பாய்ப் பலவருவனவுமன்ன. நடந்தான்-நடந்தனன் - என்புழித்தெரிநிலை வினையி னகத்துறுப்பாய் விகுதியிடைநிலை சாரியை யிடைச்சொற்கள் பலவந்தன. அவன்-எவன்-ஏனோன்-ஏனையோன்-எ-ம்-போல-புரைய-எ-ம்-சாத்தனென்பான்-சாத்தனாயினான்-எ-ம்- இடைச்சொல்லடியாகப் பிறந்தபெயராயும் வினையாயும் வினையிலக்கணையாயும் நிற்றலினிவற்றின் பகுதி விகுதி முதலியவு மன்ன. அதுமன்-அதுமற்றம்ம-எ-ம்- கொன்னார்-“ஓஒவுவமனுறழ் வின்றி.” -எ-ம்-பெயரின் புறத்துறுப்பாய்ப் பின்னுமுன்னுமொன்றும்பலவும் வந்தன. வருகதில்-வருகதில்லம்ம-எ-ம்- ஓஒதந்தார்-“ஏஎயம்பன்மொழிந்தனளாயே” - எ-ம்-தெரிநிலைவினையின் புறத்துறுப்பாய்ப் பின்னுமுன்னுமொன்றும் பலவும்வந்தன. பிறவுமன்ன. இவற்றுட்சிலவொரோவழிவிகாரப்பட்டுமன் கொன் எனற்பாலன மன்னை கொன்னை யெனவருவனவுமுள, அவையெல்லாம் புதியனபுகுதலும் வழுவலவென்பதன்பாற் படுத்துக.(௧)

௪௱௨௰௧. தெரிநிலைதேற்ற மையமுற்றெண்சிறப்-பெதிர்மறை
யெச்சம் வினாவிழைவொழியிசை- பிரிப்புக்கழிவாக்க மின்னன
விடைப்பொருள். *

(எ-ன்.)மேற்றத்தம்பொருளவென்றாரப்பொருளாவனவிவையென்பதுணர்-ற்று. (ப-ரை.) தெரிநிலை - தெரிநிலையும், தேற்றம்-தெளிவும், ஐயம்-சந்தேகமும், முற்று -முற்றும், எண் - எண்ணும், சிறப்பு-சிறப்பும், எதிர்மறை-எதிர்மறையும், எச்சம்-எச்சமும்,வினா-வினாவும், விழைவு-விருப்பமும், ஒழியிசை-ஒழிந்தசொல்லும், பிரிப்பு-பிரிநிலையும், கழிவு-கழிவும், ஆக்கம்- ஆக்கமும், இன்னன-இவைபோல்வனபிறவும், இடை- தத்தம்பொருளவென்ற விடைச்சொற்களுடைய, பொருள் - பொருள்களாம் எ-று. (பொ-ரை.) தெரிநிலைமுதலாக விதந்த பதினான்கு மிவைபோல்வனபிறவும்மேற்றத்தம்பொருளவென்றவிடைச்சொற்பொருள்களாம். எ-று. ※ இன்னனவென்றதனாற் சிலவருமாறு -அக்கொற்றன்- எக்கொற்றன்- என்பன சுட்டுப் பொருளும் வினாப்பொருளுந்தந்தன. நக்கீரர்-நப்பாலத்தனார் என்புழிநகரவிடைச்சொற் சிறப்புப்பொருடந்தது. “அஆ விழந்தானென் றெண்ணப்படும்.” “ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினோடு.” - “அந்தோவிசையைபட்டனள்.” - “அரக்காம்ப னாறும்வா யம்மருங்குற்கன்றோ-பரற்கானமாற்றின கொல்லோ.” என்புழி அஆ ஆ அந்தோ அன்றோவென்னு மிடைச்சொற்க ளிரங்குதற்பொருடந்தன. இவற்றிற்கதிசயப்பொருளுமுள. “அறிதோ றறியாமை கண்டற்றால்.” - “செறிதொறுஞ் செல்வத்தியற்கையே.” என்புழித்

தோறு தொறுவென்னு மிடைச்சொற்க ளிடப்பன்மைப் பொருடந்தன. இனிச்செய்வான்- இனிஎம்மெல்லை என்புழியினியெ ன்னு மிடைச்சொற் காலப்பொருளுமிடப்பொருளுமுறையே தந்தது. பிறவுமிவ்வாறு தனித்துநடக்கும் பெயர்வினை யாகாது வருவனவெல்லாங்கொள்க. (உ)

௬௱௨௨. பிரிநிலைவினாவெண் ணீற்றசைதேற்ற - மிசைநிறை யெனவா றேகாரம்மே. *

(எ-ன்.) வேற்றுமை யுருபுமுதலிய நான்கு மேலே சொல்லப்பட்டமையி னவற்றை யொழித்தேனையவற்றை யுணர்த்துவா ன்றொடங்கி யவற்றுள் ஏகார இடைச்சொல் லிலக்கண முணர்-ற்று. (ப-ரை.) பிரிநிலை-பிரிநிலையும், வினா வினாவும், எண் - எண்ணும், ஈற்றசை-ஈற்றிலசைத்தலும், தேற்றம்-தெளிவும், இசைநிறை- இசைநிறைத்தலும், என-என்று, ஆறு- ஆறுபொருளைத்தரும், ஏகாரம்-ஏகாரவிடைச்சொல். எ-று. (பொ-ரை.) தெரிநிலை முதலியபதினொன்று மவைபோல்வன பிறவுமாகிய பொருள்களுள்ளுமி சைநிறைத்த லசைத்தல் குறிப்பென்னு மூன்று பொருள்களுள்ளும் பிரிநிலை முதலிய ஆறுபொருளையுந்தரும் ஏகார இடைச் சொல். எ-று. * [வ-று.] அவனேகொண்டானென்பதீ ரார் கூழ வினின்று மொருவனைப்பிரித்துநிற்றலிற் பிரிநிலை. இவ்வேகாரம் அவனோகொண்டானென்னும்பொருள்படவினாவிநிற்றலின்வினா. நிலனே நீரே தீயே வளியே என்பது நிலனு நீருந் தீயும் வளியு மென்னும்பொருள்பட வெண்ணிநிற்றலினெண். "கடல்போற் றோன்றல் காடிறந்தோரே ,, என்பது சொல்லிறுதிக்க ணசைத் தற்பொருடருதலி னீற்றசை. இவ்வேகார வசைநிலை முதற்கண் வாராதென்பாரீற்றசையென்றார். அவனேகொண்டான் என்பது துணிதற்பொருடரிற்றேற்றம். இத்தேற்றப்பொருள் பிரிநிலைக்க ண்ணேயுளதாதலின் இப்பொருளை வேறெடுத்துக்கூறுதலே னை யபோற் சிறப்புடைத் தன்றென்பா ரிதனைப் பொருட் சிறப்பில் லாவீற்றசைக்கு மிசைநிறைக்கு மிடையேகூறினார். "எயிவ ளொருத்திபேடியோவென்றார்.,, என்பதிசைநிறைத்தற்பொரு டருதலினிசைநிறை. அவனே கொண்டான் என்ப தொரோவழி யவன்கொள்கிலனென வெதிர்மறைப்பொருடரினுஞ்செய்பொ ருளன்றி வலிந்துகொளப்படுதலிற் புதியனபுகுதலும் வழுவல வென்பதன்பாற்படுத்துக. (௩)

௬௱௨௩. ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை - கழி வசைநிலைபிரிப் பெனவெட் டோவே. *

(எ-ன்.) ஓகாரவிடைச்சொல் லிலக்கண முணர்-ற்று. (ப-ரை.)

ஒழியிசை-ஒழியிசையும், வினா-வினாவும், சிறப்பு-சிறப்பும், எதிர்மறை- எதிர்மறையும், தெரிநிலை-தெரிநிலையும், கழிவு-கழிவும், அசைநிலை-அசைநிலையும், பிரிப்பு-பிரிநிலையும், என-என்று, எட்டு-எட்டுப்பொருளைத்தரும், ஓ - ஓகார இடைச்சொல். எ-று.—(பொ-ரை.) ஒழியிசைமுதலிய வெட்டுப்பொருளையுந்தருமோகாரவிடைச்சொல். எ-று. ❋ [வ-று] கொளலோகொண்டான் என்பது கொண்டுய்யப் போயினானல்லனென்றற் றொடக்கத்தொழிந்தசொற்களைத் தருதலினொழியிசை. குற்றியோ மகனோ என்பதுவினா. சிறப்புயர்வுசிறப்பிழிவுசிறப்பென விருவகைத்து ஓஒபெரியன் என்பதுயர்வுசிறப்பு. ஓஒகொடியன் என்பதிழிவுசிறப்பு. அவனோகொண்டான் என்பது கொண்டிலனென்னும் பொருடந்தவழி யெதிர்மறை. அவியைநோக்கி யானோவதுவுமன்று பெண்ணோவதுவுமன்றென்பது அத்தன்மை யின்மைதெரிந்தவழித்தெரிநிலை. உறுதியுணராது கெட்டாரை ஓஒதமக்கோருறுதி யுணராரோவென்பது கழிவிரக்கப்பொருடருதலிற்கழிவு. "காணியவம்மினோ கங்குலதுநிலையே" என்பதசைநிலை. அவனோகொண்டான் என்பது பலருணின்றுமொருவனைப்பிரித்தமைகருதியவழிப் பிரிநிலை. இப்பொருளெதிர்மறைக்கண்ணே யுளதாதலின் அசைநிலையின்பின்வைத்தார். (௪)

௪௱௨௪. வினைபெயர் குறிப்பிசை யெண்பண் பாறினு- மெனவெனு மொழிவரு மென்று மற்றே. ❋

(எ-ன்.) எனவெனவு மென்றெனவும்வருமிடைச்சொல்லிலக்கணமுணர்-ற்று. (ப-ரை.) வினை-வினையும், பெயர்-பெயரும், குறிப்பு-குறிப்பும், இசை- இசையும், எண்-எண்ணும், பண்பு- பண்புமாகிய, ஆறினும்-ஆறுபொருளினும், எனவெனுமொழி எனவென்னுமிடைச்சொல், வரும்- சேர்ந்துவரும், என்றும் -என்றென்னுமிடைச்சொல்லும், அற்று-அப்படியே ஆறுபொருளினும்வரும். எ-று. (பொ-ரை.) வினைப்பொருண்முதலிய வாறுபொருளினுமெனவென்னு மிடைச்சொல்வரும் என்றென்னுமிடைச்சொல்லு மவ்வாறுவரும். எ-று. ❋ [வ-று.] கொள்ளெனக்கொண்டான் - மைந்தன்பிறந்தானெனத் தந்தையுவந்தான்- என்பதுவினை. ஊரெனப்படுவதுறையூர்-"அழுக்காறெனவொருபாவி" என்பதுபெயர். விண்ணெனவிசைத்தது - "பொள்ளெனவாங்கே புறம்வேரார்." என்பது குறிப்பு. ஒல்லெனவொலித்தது.-"நிலையருங்குட்டத்துத் துடுமெனப் பாய்ந்தது." என்பதிசை. நிலனென நீரெனத் தீயென வளியெனவரும் பூதநான்குமுருவம் என்பதெண். வெள்ளெனவிளர்த்தது - மெல்லெனநடந்தது என்பது பண்பு. இங்ஙன மெண்ணுப்பொருட்குக் காட்

டிய பெயர்க டனித்துநில்லாதெண்ணி யளவைப் பண்புப்பொ
ருளுணர்த்தலி னப்பொருண் முதற்க ணிறீஇய பெயர்ப்பொரு
ளன்றென்க. என்றென் பதனையுங் கொளீஇ னொன்று கொண்டானெ
ன முறையே யிசையுமாறொட்டுக. சுட்டுப்பெயர் வினாப்பெய
ர்கட்குத் தமக்கெனவோர் பொருளின்றிச் சுட்டவும் வினவவும்
படும் பொருளாதி யாறுபெயர்ப்பொருளே பொருளாக வருத
ல்போல இவ்விரண்டிடைச் சொற்குந் தமக்கெனவோர் பொரு
ளின்றி வினைமுதலியவா யிங்ஙனம் விதந்தவற்றின் பொருளே
பொருளாகவருமென்பார் ஆறுபொருளையுந்தருமென்னாது ஆறி
னும்வருமென்றார். (௫)

சாஉரு. எதிர்மறை சிறப்பையைய மெச்சமுற்றளவை - தெரிநி
லையாக்கமோ டும்மை யெட்டே. ✻

(எ-ன்.) உம்மையிடைச்சொல்லிலக்கணமுணர்-ற்று. (ப-ரை.)
எதிர்மறை-எதிர்மறையும், சிறப்பு-சிறப்பும், ஐயம்-ஐயமும், எச்
சம்-எச்சமும், முற்று-முற்றும், அளவை-அளவையும், தெரிநிலை-
தெரிநிலையும், ஆக்கம்-ஆக்கமுமாகிய, எட்டு-எட்டுப்பொருளைத்
தரும், உம்மை-உம்மையிடைச்சொல். எ-று. (பொ-ரை.) எதிர்ம
றைமுதலிய வெட்டுப்பொருளையுந்தரு மும்மையிடைச்சொல்.
எ-று. ❋ [வ-று.] கொற்றன் வருதற்குமுரியன் என்ப தெதிர்ம
றை. குறவருமருளுங்குன்று - இவ்வூர்ப்பூசையும் புலாறின்றது
என்ப துயர்வுசிறப்பு. பார்ப்பானுங் கள்ளுண்டான்-புலையனும்
விரும்பாப்புன்புலால்யாக்கை என்பதிழிவுசிறப்பு. பூசையும்பு
லாறின்றதென்பதனை யிழிவுசிறப் பென்பாருமுளர். அங்ஙன
மாயி னொருபொருளின துயர்வைச்சிறப்பித்த விழிவைச்சிறப்
பித்தலெனப் பொருள்படா துயர்ந்த பொருளான் மற்றொன்
றைச் சிறப்பித்த விழிந்தபொருளான் மற்றொன்றைச் சிறப்பித்
தலெனப்பொருள்படும். அவ்வாறு பொருள்படினோகாரப்பொ
ருளாய்வரு முயர்வுசிறப்பிற்கு மிழிவுசிறப்பிற்கு மாகாமையின்
அது பொருந்தாதென்க. இனி யிவ்வும்மைப் பொருளைக். குன்று
முதலியவற்றிற் கொள்ளாது குறவர் முதலியவற்றிற்கொண்டு பூ
சையு மென்பதனை யிழிவு சிறப் பும்மையெனக் கோடலு மொ
ன்று. இங்ஙன மிழிவுசிறப்பென்பதற் கிழிவினுட் சிறந்த விழி
வெனப்பொருள்கூறுக. உயர்வுசிறப்புமஃது. பூசைக்குப் புலாறி
ன்னுதலிழிபுந் தின்னாமை சிறப்புமாகப் பொருள் கொளிற் கு
றவர்க்கு மருளுதல் சிறப்பாகவேண்டுமாதலி னது பொருந்தா
தென்க. பத்தாயினுமெட்டாயினுங்கொடுஎன்பதையம். சாத்தனு
ம்வந்தான் என்பது கொற்றன்வந்ததன்றியெனப் பொருள்படி
னிறந்த ததழீஇய வெச்சவும்மை. கொற்றனும் வருவானெனப்

பொருள்படி னெதிரதுதழீஇய வெச்சவும்மை. தமிழ்நாட்டு மூவேந்தரும்வந்தார்- எல்லாரும்வந்தார் என்பது முற்றும்மை. சாத்தனுங் கொற்றனுந் தேவனும்பூதனும்வந்தார் என்பதெண்ணும்மை. ஆனுமன்று வெண்ணுமன்று என்பது தெரிநிலையும்மை தெரிநிலையோகாரம்போற் பொருளுணாத்துகவெகாள்க. நெடியனுமாயினன்-பானுமாயிற்று என்புழி அவனே வலியனுமாயினன் அதுவேமருந்துமாயிற்று எனப்பொருள்படி னாக்கவும்மை.

௪௱௨௬. முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும். *

(எ-ன்.) முற்றும்மைக் கெய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று. (ப-ரை.) முற்றும்மை - முற்றும்மையானது, ஒரோவழி-ஒரோவிடத்தே, எச்சமுமாகும்- எச்சவும்மையுமாகும். எ - று.— (பொ-ரை.) முற்றும்மையொரோவிடங்களி னெச்சவும்மையுமாம். எ-று. ※ [வ-று.] ஆறுந்தருவதுவினையே என்புழி யைந்துந்தருவதுவினையே யென்றும் எல்லாரு மிதுசெய்யார் என்புழிச் சிலரிது செய்வாரென்றும் முற்றும்மைப் பொருளு மெச்சவும்மைப்பொருளு மொருங்குதருதல்காண்க. இங்ஙனந் தருதலின் எச்சமுமென விறந்ததுதழீஇய வெச்சவும்மையாற்கூறினார்.(எ)

௪௱௨௭. செவ்வெ ணீற்றதா மெச்சவும்மை. *

(எ-ன்.) எச்சவும்மைக்காவதோர்விதியுணர்-ற்று. (ப-ரை) எச்சவும்மை- எச்சவும்மையானது, செவ்வெண் - செவ்வெண்ணிலே வருமாயின், ஈற்றதாம்-ஈற்றிலேவரும். எ -று. (பொ-ரை.) எச்சவும்மை செவ்வெண்ணின்கண் வருமாயினீற்றின்கண்வரும்.எ-று ※ [வ-று.] செய்பவன் கருவி நிலஞ் செயல் காலஞ் செய்பொருளுந் தருந்திறத்ததுவினையே என்புழி யிவற்றுட் சிலவுந்தருந்திறத்ததுவினையேயெனவும் கல்வி செல்வ மொழுக்கங் குடிப்பிறப்பும் பெறுவாருமுளர். என்புழி யிவற்றுட்சிலபெறுவாருமுளரெனவும் பொருள்படுதல்காண்க. (அ)

௪௱௨௮. பெயர்ச்செவ் வெண்ணே யென்றா வெனாவெண்-ணான்குந் தொகைபெறு மும்மையென் றெனவோ - டிந்நான் கெண்ணுமஃ தின்றியு மியலும். *

(எ-ன்.)மூன்னொடுத்துவிதந்தும்விதவாதும்வருஞ்சிலவெண்ணிடைச்சொற்கட்காவதோ ரிலக்கணமுணர்-ற்று.(ப-ரை.)பெயர்ச்செவ்வெண்-பெயர்களிடத்தே யெண்ணிடைச்சொல்தொக்கு வருகிற செவ்வெண்ணும், ஏ(யெண்) - ஏகாரவெண்ணும், என்று (வெண்)-என்றுவெண்ணும், எனாவெண்-எனாவெண்ணுமாகிய, நான்கும்- நான்கெண்களும், தொகை-தொகையை, பெறும்-பெற்றுநடக்கும், உம்மை(யெண்) - உம்மையெண்ணும், என்(றெண்) என்றெண்ணும், என(வெண்)-எனவெண்ணும், ஓ (டெண்) - ஓ

டென்னும்ஆகிய, இந்நான்கென்னும்-இந்தநான்கென்களும், அஃதின்றியும்- தொகைபெறுமலும், இயலும்- நடக்கும். எ-று. (பொ-ரை.) பெயர்களினிடையே யெண்ணிடைச்சொற்றொக்கு நிற்பவருஞ் செவ்வெண்ணும் பெயரோடு தொகாதுவரும் ஏகாரவெண்ணும் என்றுவெண்ணும் எனவெண்ணுமாகிய நான்குந் தொகைபெற்றுநடக்கும் உம்மையெண்ணும் என்றெண்ணும்எனவெண்ணும் ஒடெண்ணுமாகிய விந்நான்கெண்ணுந் தொகை பெற்றும் பெறாதுநடக்கும். எ-று. ※ பெயரெண்ணென்றது செவ்வெண்ணென்றதனு லஃதெண்ணிடைச்சொற்றொக்க தொகைநிலையென்பதூஉம் அங்ஙனமாதலி னதனையும் ஏகார முதலியவெண்ணிடைச்சொற்களோ டுடன்கூறப்பட்ட தென்பதூஉம் பெற்றாம். [வ-று.] சாத்தன் கொற்றன் றேவன் பூத னால்வரும் வந்தார்- சாத்தனே கொற்றனே தேவனே பூதனே நால்வரும் வந்தார் - சாத்தனென்று கொற்றனென்று தேவனென்று பூதனென்று நால்வரும்வந்தார்-சாத்தனெனக் கொற்றனெனத்தேவனெனப் பூதனென நால்வரும்வந்தார்- இவைதொகைபெற்றேவந்தன. பெயர்ச்செவ்வெண்தொகை பெறுதற் கிச்சூத்திரத்தைக்காட்டினுமமையும். இவைவழக்கிடத்தொரோவழித்தொகைபெறுதுவரினிசையெச்சமாகவும் செய்யுட்கட் டொகைபெறுதுவரிற்றொகுக்கும் வழித்தொகுத்தலாயமையி னவ்விகாரமாகவுமன்றேலிசையெச்சமாகவுங்கொள்க. சாத்தனுங் கொற்றனுந் தேவனும் பூதனு நால்வரும்வந்தார்- சாத்தனென்று கொற்றனென்று தேவனென்று பூதனென்று நால்வருளர். சாத்தனெனக்கொற்றனெனத் தேவனெனப் பூதனென நால்வருளர்- சாத்தனொடு கொற்றனொடு தேவனொடு பூதனொடு நால்வரிவன்மைந்தர் - எ-ம்- சாத்தனுங் கொற்றனுந் தேவனும் பூதனும்வந்தார்- நிலனென்று நீரென்று தீயென்று காற்றென் றளவறுகாயமென்றாகியவுலகம் - நிலனென நீரெனத் தீயெனக் காற்றென வளவறுகாயமெனவாகியவுலகம்-நிலனொடு நீரொடு தீயொடு காற்றொடளவறுகாயமோடாகியபூதம்-எ-ம்-இவைதொகைபெற்றும் பெறாதும்வந்தன. (கூ)

சாஉக. என்று மெனவு மொடுவு மொரோவழி - நின்றும்பிரிந்தெண் பொருடொறு நேரும். ※

(எ-ன்.) எண்ணிடைச்சொல்லுட் சிலவற்றிற் கெய்தியதன்மேற்சிறப்புவிதியுணர்-ற்று. (ப-ரை.)என்றும்-என்றென்பதும், எனவும்-எனவென்பதும், ஒடுவும்-ஒடுவென்பதும், ஒரோவழிநின்றும்-பொருளோடுநிற்றலேயன்றி ஒரிடத்திலே நின்றும், பிரிந்து-பிரிந்து, எண்- எண்ணப்படுகின்ற, பொருடொறும் - பொருள்

தோறும், நேரும்-பொருந்தும். எ-று. (பொ-ரை) இம்மூன்றெண்ணு மெண்ணும்பொருளோடு நிற்றலையன்றி யோரிடத்துநின்றும் பிரிந்தெண்ணும்பொருடோறும்பொருந்தும்.எ-று. ※ [வ-று.] "வினைபகையென்றிரண்டி னெச்சநினையுங்காற் - றீயெச்சம்போலத் தெறும்."-"பகைபாவ மச்சம் பழியெனநான்கு-மிகவாவா மில்லிறப்பான்கண்."-"பொருள் கருவி காலம் வினையிடனோடைந்து- மிருடீரவெண்ணிச்செயல்." எனவரும். எண்ணும் பொருடோறுந் தனித்தனி நிற்றலினு மொரோவழிநின்று பிரிதலிம்மூன்றெண்ணிற்கு மமைந்து கிடந்தனவாதலி னீண்டுக்கூறப்பட்டன. எனவே யேனை யெண்கட் கெண்ணும் பொருடோறுநிற்குநிலையேசிறந்தனவென்பதூஉ மொரோவழி நின்று பிரிதல் வலிந்து கொளற்பாலன வென்பதூஉ மவை யீண்டமையாதுதீபகமென்னு மணியிலக்கணத்தின்பாற் படுமென்பதூஉம் பெற்றாம். (௰)

௩௱௬௰. வினையொடு வரினுமெண் ணினைய வேற்பன. ※

(எ-ன்.) மேற்பெயரோடுவந்த வெண்ணிடைச்சொற்கள் வினையோடும் வருமாறுணர்-ற்று. (ப-ரை.) எண்- எண்ணிடைச்சொற்கள்,வினையொடுவரினும்- வினையோடுவந்தாலும், இனைய-பெயரோடுவரும்போது சொல்லப்பட்ட இவ்விலக்கணங்களையெல்லாம்,ஏற்பன-ஏற்கும். எ-று. (பொ-ரை.) எண்ணிடைச்சொற்கள் வினையோடுவரினும்பெயரோடுவந்தாற்போலுமேற்பன. எ-று ※ ஏற்பனவெனவே வினையோடெலா வெண்வருதலுந்தொகை பெறுதலுமில்லையென்க. [வ-று.] "மண்டிலம்முழங்க மலைநிறங்கிளர- வண்டினமலர்பரந் தூதமிசையே-கண்டற்கானங் குருகினமொலிப்ப." என்பதுசெவ்வெண். கற்றுங்கேட்டுங்கற்பனைகடந்தான் என்பதும்மையெண். உண்ணவென் றுடுக்கவென்று பூசவென்று முடிக்கவென்று வந்தான் என்பதென்றெண். உண்ணவெனவுடுக்கவெனப் பூசவென முடிக்கவெனவந்தான் என்பதெனவெண். உண்ண வுடுக்கப் பூசமுடிக்கவென்று வந்தான்-உண்ண வுடுக்கப்பூசமுடிக்கவெனவந்தான். -"நன்னிதிபெருகநாடொறும்வாழ்கவென் - றுன்னுமிவ்வேட்கை யொழிந்தனரிலரோ," என்பனவென்றுமெனவுமொரோவழிநின்றும்பிரிந்தன. பிறவற்றுள்ளுமேற்பனவந்தவழிக்காண்க. சாத்தன்வந்தான் கொற்றன்வந்தானிருவரும்வந்தமையாற் கலியாணம்பொலிந்தது என வினைச்செவ்வெண்தொகைபெற்றதென்பாருமுளர். தொகைச்சொற்பெயராதலின் அது உவகைப்பெயர்களோடு பொருந்தி யிருபெயரொட்டாமன்றி வினையொடுபொருந்தாமையானு மிங்ஙன மிருவரென்னுந்தொகை சாத்தன்கொற்றனாகிய விருவரெனப்பெயர்த்தொ

கையாதலானு மதுபொருந்தாதென்க. (௰௧)

௩௱௩௪. விழைவே கால மொழியிசை தில்லே. *

(எ-ன்.) தில்லென்னுமிடைச்சொல் லிலக்கணமுணர் - ற்று.- (ப-ரை.) விழைவு-ஆசையும், காலம்-காலமும், ஒழியிசை-ஒழிந்தசொல்லும் ஆகிய மூன்றுபொருளையுந்தரும், தில் - தில்லென்னுமிடைச்சொல். எ-று. (பொ-ரை.) இம்மூன்று பொருளையுந்தருந் தில்லென்னுமிடைச்சொல் எ-று. ❁ [வ-று.] "வார்ந்திலங்குவை யெயிற்றுச் சின்மொழி- யரிவையைப்பெறுகதில்லம்மயானே.,, என்பதுபெறுதல்வேட்கையையுணர்த்தலின் விழைவு. "பெற்றாங்கறிகதில் லம்மவிவ்வூரே.,, என்பது பெற்றகாலத்தறிகவெனக் காலத்தையுணர்த்தலிற்காலம். "வருகதில் லம்மவெஞ் சேரிசேர.,, என்பது வந்தாலொன்றுசெய்வலென்னுஞ்சொல்லொழிந்துநிற்றலி னொழியிசை. (௰௨)

௩௱௩௫. மன்னே யசைநிலை யொழியிசை யாக்கங் - கழிவுமிகுதி நிலைபே றாகும். *

(எ-ன்.) மன்னென்னு மிடைச்சொல் லிலக்கண முணர்-ற்று. (ப-ரை.) மன்-மன்னென்னுமிடைச்சொல், அசைநிலை- அசைத்துநிற்றற்பொருளிலும், ஒழியிசை-ஒழிந்தசொற்பொருளிலும், ஆக்கம்-ஆக்கப்பொருளிலும், கழிவு-கழிதற்பொருளிலும், மிகுதி - மிகுதிப்பொருளிலும், நிலைபேறு- நிலைபெறுதற்பொருளிலும்,ஆகும்-வரும். எ-று. (பொ-ரை.) இவ்வாறு பொருளையுந்தருமன்னென்னுமிடைச்சொல்.எ-று. ❁ [வ-று.] "அதுமற்கொண்கன்றேரே.,, என்பதசைநிலை. "கூரியதோர்வாண்மன்.,, என்புழியதனாற் கருந்தாதறத்துணித்ததென்னுஞ்சொல்லொழியனின்றமையி னொழியிசை. நெடியன்மன் என்புழியவனே வலியனுமாயினனெனப் பொருட்டருதலினாக்கம். "சிறியகட்பெறினே யெமக்கீயுமன்னே.,, என்புழி யிப்பொழு தவனிறத்தலி னெமக்கீதல்கழிந்ததெனப்பொருட்டருதலிற்கழிதல். "எந்தையெமக்கருளுமன்.,, என்புழி மிகுதியு மருளுமெனப் பொருட்டருதலின் மிகுதி. "மன்னாவுலகத்து மன்னியது புரிமே ,, என்புழி யிவ்விடைச்சொல்லடியாகப்பிறந்த வினையுள் மன்னென்பது நிலையினையுணர்த்தினமையி னிலைபேறு. (௰௩)

௩௱௩௬. வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே. *

(எ-ன்.) மற்றென்னுமிடைச்சொல்லிலக்கணமுணர் - ற்று.— (ப-ரை.) மற்று-மற்றென்னுமிடைச்சொல், வினைமாற்று -வினைமாற்றுப்பொருளையும், அசைநிலை- அசைத்துநிற்றற் பொருளையும்,பிறிதெனும்-பிறிதுபொருளையுந்தரும். எ-று. (பொ-ரை.) இம்மூன்றுபொருளையுந்தரு மற்றென்னு மிடைச்சொல்.எ-று.

※ [வ-று.] "மற்றறிவா நல்வினை யாமிளையமென்னாது.," என்பதுவிரைந்தறிவாமென்னும் வினையையொழித்து விரையாதறிவாமென்னும் வினையைத்தந்து நின்றமையின் வினைமாற்று. "மற்றடிகள் கண்டருளிச் செய்யமலரடிக்கீழ்.," என்பதசைநிலை. "ஊழிற்பெருவலி யாவுளமற்றொன்று- சூழினுந் தான்முந்துறும்.," என்பதூழல்ல தொன்றென்னும் பொருடந்தமையிற் பிறிது.()

௪௱௩௪. மற்றைய தென்பது சுட்டிய தற்கினம். ※

(எ-ன்.) மேலதற்கோர் புறனடை யுணர்-று. (ப-ரை) மற்றையதென்பது- மற்றையதென்னும் பொருளாகிய வினைமாற்றும் பிறிதும், சுட்டியதற்கு- குறிக்கப்பட்டதற்கு, இனம்-இனமாகிய வினைமாற்றும் பிறிதுமாம். எ-று. (பொ - ரை.) மேற்கூறியமற்றென்னுமிடைச்சொற் பொருண் மூன்றனுண் மற்றைய தென்னும் பொருளாகியவினைமாற்றும் பிறிதும் அங்ஙனங்கருதியதற்கினமாகிய வினைமாற்று மினமாகிய பிறிதுமாமன்றி வேறுவினைமாற்றும் வேறுபிறிதுமல்லவாம். எ-று. ※ மேற்காட்டிய வுதாரணத்து ணல்வினையை விரைந்தறிவாமெனக்கருதியதற்குவிரையாதறிவாமெனவும் ஊழென் றெனக்கருதி யதற்கூழல்ல தொன்றெனவு மினம்வந்தவாறுகாண்க. வேறுபிறிதாவ தென்னையெனின், இரண்டுமணியுளவழியொன்று கண்டான் மற்றொன்று காணவேண்டுமென்றானாகில் மற்றொன்றென்ப ததற்கினமாகியதோர் மணியெனப் பொருள்கொள்ளா தாடையணியெனப் பொருள்கோடலென்க. வினைமாற்று மிவ்வாறேகாண்க. மேலைச்சூத்திரத்துள் வினைமாற்றெனவும் பிறிதெனவும் பொதுப்படக் கூறினேமையி னிச்சூத்திரத்தாற் புறனடைகொடுத்துக்காத்தாரென்க. இச்சூத்திரத்திற் கிவ்வாறன்றி மற்றைய தென்பதனை யோரிடைச்சொல்லாகவைத்து அச்சொ லங்ஙனங் கருதியபொருட் கினமாகியபொருளைத்தருமெனப் பொருள்கூறுவாருமுளர். மற்றைய தென்ப திடைச்சொலடியாகப் பிறந்தபெயரும் வினைக்குறிப்புமாமாதலானும் விகுதியோடு கூறினோனும் பகுதிப்பட்ட மற்றையென்னு மைகார வீற்றிடைச்சொற் கிப்பொருள் கூறினோனின் மன் மன்னை கொன் கொன்னையென நின்றாற்போல மற்று மற்றையென இறுதிவிகாரமாய் நின்றதன்றி யிதற்கெனவேறுபொருளின்மையானும் அதனொடிதற்குவேற்றுமை யிஃதினத்தையேதருதலெனப் பொருள்கொளின் மற்றென்ப தினத்தையு மினமல்லதையுந் தருமெனப் பொருள்படு மாதலானும் எல்லாவற்றானு மினமாயுள்ளதே வினைமாற்றும்பிறிதுமாய் வருமன்றியினமல்லதொருவாற்றானும் வாராமையானு மது பொருந்தாதென்க. (௰௫)

௪௱௨௰௫. கொல்லே யையமசைநிலைக் கூற்றே. *

(எ-ன்.) கொல்லென்னு மிடைச்சொல்லிலக்கண முணர்-ற்று. (ப-ரை.) கொல்-கொல்லென்னு மிடைச்சொல்லானது, ஐயம்-ஐயப்பொருளிலும், அசைநிலை-அசைநிலைப்பொருளிலும்வருகிற, கூற்று-இடைச்சொல்லாம். எ-று. (பொ-ரை.) கொல்லென்பதிவ்விரண்டுபொருளையுந் தருஞ்சொல்லாம். எ-று. ❋ [வ-று] இவ்வுருக் குற்றிகொல் மகன்கொல் என்பது குற்றியோ மகனோவென்னும்பொருள்படவருதலின் ஐயம். "பிரிவெண்ணிப்பொருள்வயிற்சென்றநங்காதலர்வருவர்கொல்வயங்கிழாய்" என்பதசைநிலை.

௪௱௨௰௬. ஒடுவுந்தெய்யவு மிசைநிறை மொழியே. *

(எ-ன்.) ஒடுவெனவுந் தெய்யவெனவும்வரு மிடைச்சொல் லிலக்கணமுணர்-ற்று. (ப-ரை.) ஒடுவுந்தெய்யவும்-ஒடுதெய்ய என்கிறவிரண்டும், இசைநிறை-இசைநிறைத்தற் பொருளைத்தருகிற, மொழி-சொற்களாம். எ-று. (பொ-ரை) இவ்விரண்டுமிசைநிறைத்தற்பொருளைத்தருஞ்சொற்களாம். எ-று. ❋ [வ-று] "முதைப்புனங்கொன்ற வார்கலியுழவர்-விதைக்குறுவட்டிற் போதொடு பொதுள்." எ-ம்- "சொல்லேன்றெய்ய நின்னொடுபெயர்த்தே." எ-ம்-வரும். (மௌ)

௪௱௨௰௭. அந்திலாங் கசைநிலை யிடப்பொருளவ்வே. *

(எ-ன்.) அந்திலெனவு மாங்கெனவும் வரு மிடைச்சொல் லிலக்கணமுணர்-ற்று. (ப-ரை.) அந்தில்-அந்திலென்பதும், ஆங்கு-ஆங்கென்பதும், அசைநிலை- அசைநிலைப் பொருளையும், இடப்பொருள-இடப்பொருளையுந்தருவனவாம். எ-று. (பொ-ரை.) இவ்விரண்டிடைச்சொல்லு மசைநிலைப் பொருளவாயு மிடப்பொருளவாயும்வரும். எ-று. ❋ [வ-று.] "அந்திற் கழலினன்கச்சினன்." என்பதசைநிலை. "வருமே-சேயிழை யந்திற் கொழுநற் காணிய." என்ப தவ்விடத்தென்னும் பொருடருதலினிடம். "ஆங்கத்திறனல்ல யாங்கழற." என்பதசைநிலை. இதனுளாங்கென்னுமசைநிலை யாங்கவென விறுதிவிகாரமாய் நின்றது. "ஆங்காங்காயினுமாக." என்பதிடம். (பஅ)

௪௱௨௰௮. அம்ம வுரையசை கேண்மினென் றாகும். *

(எ-ன்.) அம்மவென்னுமிடைச்சொல்லிலக்கணமுணர்-ற்று. (ப-ரை.) அம்ம-அம்மவென்பது, உரையசை - உரையசைப்பொருளைத்தருவதும், கேண்மினென்று-ஒன்றுசொல்லுவேன் கேண்மினென்கிற ஏவற்பொருளைத்தருவதும், ஆகும்-ஆகும். எ-று.— (பொ-ரை.) அம்மவென்பதுரையசைப் பொருளதாயும் ஒன்று சொல்வன் கேண்மினென்று மேவற்பொருளதாயும்வரும். எ-று

❋ [வ-று.] "அதுமற்றம்ம" என்பதனாயசை. இதுசெய்யுட்கணவரினு மச்செய்யுளின்பொருட் டன்றித் தானடைந்த சொல்லின்பொருட்டுவருதலி னுரையசையாயிற்று. "அம்மவாழிதோழி" என்பதொன்றுசொல்வன்கேளென்னு மேவற்பொருட்டந்தது

௪௱௩௰௯. மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல். ❋

(என்.) மாவென்னு மிடைச்சொல் லிலக்கண முணர்-ற்று.— (ப-ரை.) மாவென்கிளவி-மாவென்னுஞ்சொல், வியங்கோள்-வியங்கோளிடத்துவருகிற, அசைச்சொல்-அசைச்சொல்லாகும். எ-று (பொ-ரை.) மாவென்னுஞ்சொல் வியங்கோளின்கண்வரு மசைச்சொல்லாம். எ-று. ❋ [வ-று] "மாயக்கடவுட் குயர்கமாவலனே" "உப்பின்று-புற்கை யுண்கமா கொற்கை யோனே" எனவரும். ()

௪௱௪௰. மியாயிக மோமதி யத்தையித் தை - வாழிய மாளவீ யாழமுன் னிலையசை. ❋

(எ-ன்) மியாமுதலியவிடைச்சொற்களி னிலக்கணமுணர்-ற்று. (ப-ரை.) மியா-யாழ, மியா இக மோ மதி அத்தை இத்தை வாழிய மாள ஈ யாழ என்கிற பத்திடைச்சொற்களும், முன்னிலை-முன்னிலையிடத்துவருகிற, அசை-அசைச் சொற்களாம். எ-று.— (பொ-ரை.) இங்ஙனங்கூறிய பத்திடைச் சொற்களு முன்னிலைக் கண்வரு மசைநிலைகளாம். எ-று. ❋ [வ-று.] "சிலையன் செழுந்தழையன் சென்மியாவென்று - மலையகலான் வாடிவரும்." எ-ம்- "தண்டுறையூர காணிகவெனவே." எ-ம்- "காமஞ்செப்பாது கண்டதுமொழிமோ." எ-ம்- "சென்மதிபெரும." -எ-ம்- "மெல்லியற்குறுமக ளுள்ளிச்செல்வத்தை." - எ-ம்- "வேய்நரல் விடாகநீ யொன்றுபாடித்தை." -எ-ம்- "காணிய வாவாழியமலைச் சாரல்." எ-ம்- "சிறிது- தவிர்ந்தீகமாளநின் பரிசில ரும்மோர்." -எ-ம்- "சென்றீ பெருமநிற் றகைக்குநர்யாரோ." -எ-ம்- "நீயே - செய்வினைமருங்கிற் செலவயர்ந்தியாழ." -எ-ம்- முறையேகாண்க. ()

௪௱௪௰௧. யாகா பிறபிறக் கரோபோ மாதிருங் - சின்குரை யோரும் போலு மிருந்திட் - டன்றாந் தாந்தான் கின்றுநின் றசைமொழி. ❋

(எ-ன்.) யாமுதலிய விடைச்சொற்களி னிலக்கணமுணர்-ற்று. (ப-ரை.) யா-நின்று- யா கா பிற பிறக்கு அரோ போ மாது இகும் சின் குரை ஒரும் போலும் இருந்து இட்டு அன்று ஆம் தாம் தான் கின்று நின்று என்கிற இருபதிடைச்சொற்களும், அசைமொழி- எல்லாவிடங்களிலும்வருகிற அசைச்சொற்களாம் எ-று (பொ-ரை.) இவ்விருபதிடைச்சொல்லு முன்னையபோலா தெல்லாவிடத்திலு மெல்லாச் சொல்லினும்வரு மசைச்சொல்லாம்— எ-று. ❋ விதவாமையி னெல்லாவிடத்திலு மெல்லாச்சொல்லினு

ம்வருமென்பதுபெற்றும். [வ-று] "வாழ்கநின்கழலடி மைந்த வென்னவே - தோழியர் சுவாகதம் போதவீங்கிதென்.,, - எ-ம்- "அறநிழலெனக்கொண்டாய் நின்குடையக் குடைப் - புறநிழற் பட்டாளோ விவளிவட்காண்டிகா.,,-எ-ம்- "மேயுநிரைமுன்னர்க் கோலூன்றி நின்றுயோ -ராயனையல்லபிற ,,-எ-ம்- "பிறக்கிதனுட்செல்லான்பெருந்தவம்பட்டான்,,எ-ம்-"நோதகவிருங்குயிலாலுமரோ,,-எ-ம்- "எரியினன்ன செந்தலையன்றில்-பிரியின்வாழாதென்போ,,எ-ம்-"விளிந்தன்றுமாதோதெளிந்தவெங்கண்ணே,, எ-ம்-"காண்டிகு மல்லமோ கொண்க.,,-எ-ம்-"ஈங்காகியவா லென்றிசின்.,, எ-ம்-"அதுபெறலருங்குரைத்தே.,,- எ-ம்- "அஞ்சுவதோருமறனே,,-எ-ம்-"வடுவென்றகண்ணாய்வருந்திணேபோலும்,, எ-ம்-"ஓராற்று லென்கண்ணிமைபொருந்த வந்நிலையே - கூரார்வேன் மாறனென் கைப்பற்ற - வோரா-நனவென் றெழுந்திருந்தேனல்வினையொன் றில்லேன் - கனவுமிழந் தொழிந்த வாறு.,,- எ-ம்-"நெஞ்சம்பிளந்திட்டு.,,-எ-ம்- "தேவாதிதேவ னவன்சேவடிசேர்துமன்றே.,,-எ-ம்-"பணியுமா மென்றும் பெருமை சிறுமை-யணியுமாந்தன்னைவியந்து,,- எ-ம்- நீர்தாம்-எ-ம் - நீதான்- எ-ம்-"யான்பிறனளியன் வாழ்வாளைசைப்பட் டிருக்கின்றேன்,, [என்புழி யாளைசைப்பட்டேனென்பது பொருளாதலிற் கின்றென்பது நிகழ்காலவிடைநிலையன்று.] எ-ம்-"அழலடைந்தமன்றத் தாந்தலையாய்நின்றார் - நிழலடைந்தே நின்னையென்றேத்த.,,- எ-ம்-முறையேகாண்க. பிறவுமன்ன. (௨௨)

இடையியல்

முற்றுப்பெற்றது.



ஐந்தாவது

# உரியியல்.

சாசஉ. பல்வகைப் பண்பும் பகர்பெயராகி - யொருகுணம் பலகுணந்தழுவிப் பெயர்வினை-யொருவாசெய்யுட் குரியனவுரிச்சொல்.

(எ-ன்.) நிறுத்தமுறையானே யுரிச்சொல்லிலக்கண மிவ்வியலானுணர்த்துவான் றொடங்கியவற்றின் பொதுவிலக்கணமுணர்-ற்று. (ப-ரை.) பல்வகை-இசையும் குறிப்பும் பண்பும் ஆகிய பலவேறு வகைப்பட்ட, பண்பும்-பண்புகளையும், பகர்பெயராகி-உணர்த்துகிறபெயராகி, ஒருகுணம் - ஒருகுணத்தையும், பலகுணம்-பலகுணங்களையும், தழுவி-உணர்த்துவனவாய், பெயர்வினை - பெயர்வினைகளைவிட்டு, ஒருவா - நீங்காவாய், செய்யுட்கு-செய்யுளுக்கு, உரியன-உரியவையாய்ப் பொருளுக்குரிமைபூண்டுநிற்பவை, உரிச்சொல் - உரிச்சொற்களாம். எ-று. (பொ-ரை.) பண்புகள்குணப்பண்புந் தொழிற்பண்புமாகிய விரண்டனுளடங்குமாயினு மிசைகுறிப்பு பண்பெனப் பலவேறுவகைப்படுதலின் பலவேறுவகைப்பட்ட பண்புகளையுமுணர்த்தும்பெயராகி யங்ஙனமுணர்த்துழி யொருசொல் லொருகுணத்தை யுணர்த்துவனவும் பலகுணத்தை யுணர்த்துவனவுமா யேனைப்பெயர்வினைகளைவிட்டுநீங்காவாய்ச் செய்யுட்குரியனவாய்ப் பொருட்குரிமை பூண்டுவருவன வுரிச்சொல்லாம். எ-று. ❋ இவ்வாறு வருதன்மேற்காட்டுமுதாரணங்களுட் காண்க. இவையும் பண்புப்பெயராயினுமேனைப் பெயர்வினைகளைவிட்டு நீங்காமையின் வேறோதப்பட்டன வென்பதூஉம் செய்யுட்குரியனவாய்ப்பொருட்குரிமைபூண்டனவாதலி னிவற்றிற்குரிச்சொல்லெனக் காரணக்குறி போந்ததென்பதூஉ மிவற்றி னிலக்கணங் கூறியமுகத்தா னுணர்த்திய வாறுகாண்க. இசை-ஓசை-குறிப்பு-மனத்தாற் குறித்துணரப்படுவது. பண்பு- பொறியா னுணரப்படுங்குணம். இவற்றை யடக்கி நின்ற குணமுந் தொழிலும் பொருளெனவும் படுமாத லினிவற்றையுணர்த்து முரிச்சொல்லும்பெயர்ச்சொல்லெனப்படுமாதலின் பல்வகைப்பண்பும்பகர்பெயராகியென்றார். (க)

சாசஈ. உயிருயிரல்லதாம் பொருட்குணம்பண்பே. ❋

(எ-ன்.) மேற்பண்பென்றாரவிவற்றதெனவுணர்-ற்று. (ப-ரை.) உயிர்-உயிராகியபொருளும், உயிரல்லது-உயிரல்லாதபொருளும், ஆம் - ஆகிய, பொருள்-பொருள்களினுடைய, குணம்-குணங்கள், பண்பு-பண்புகளாகும். எ-று. (பொ-ரை.) உயிராகியபொ

ருளு முயிரல்லாதபொருளுமென விருவகையுளடங்கு முலகத்து ப்பொருள்களின் குணங்கள்பண்பாம். எ-று. ※ கடவுட்பொருளை யொழித்தாரதற்கோர் குணமின்மையானுமுன்னேடெற்சுட்டப் பட்டுலகப்பொருளாமாதலானுமென்க. (உ).

௪௪௪. மெய்ந்நாமூக்குநாட்டஞ்செவிகளி-னொன்றுமுதலாக் கீழ்க்கொண்டுமே லுணர்தலி-னோரறிவாதியா வுயிரைந்தாகும்.

(எ-ன்.) மேலுயிராகிய பொருளென்ற ரவையிவையெனத் தொகுத்துணர்-ற்று. (ப-ரை.) மெய்-மெய்யும், நா-நாவும், மூக்கு - நாசியும், நாட்டம்-கண்ணும், செவிகளின்-காதும்ஆகியஐம்பொறிகளாலும், ஒன்றுமுதலா- மெய்யாற்பரிசத்தையுணருமுணர்ச்சியொன்றுமுதலாக, கீழ்க்கொண்டு - கீழ்ப்போனவுணர்ச்சியுங்கொண்டு, மேல்-இரதம் கந்தம் உருவம் சத்தம் எனமேல்வரும்புலன்களை, உணர்தலின் - ஒன்றொன்றாகவுணர்தலின், ஓரறிவாதியா-ஓரறிவுயிர்முதலாக, ஐந்தாகும்-ஐந்துவகையாகும், உயிர்-அவ்வுயிர். எ-று. (பொ-ரை.) இங்ஙன மெய்முதலாகக் கூறிய ஐம்பொறிகளானும் பரிசம் இரதம் கந்தம் உருவம்சத்தமென்னும் ஐம்புலனையுமுணருங்கால் மெய்யாற்பரிசத்தை யுணருமுணர்ச்சியொன்று முதலாகக் கீழ்ப்போன வுணர்ச்சியுங்கொண்டு மேல்வரும்புலன்களை யொன்றொன்றாக வுணர்தலினோரறிவுயிர்முதலாகவைந்தாமவ்வுயிர். எ-று. (௩)

௪௪௫. புன்மர முதலவுற் றறியுமோ ரறிவுயிர். ※

(எ-ன்.) மேற்கூறியவுயி ரைந்தனு ளோ ரறிவுயி ரிவையென வுணர்-ற்று. (ப-ரை.) புல்-புல்லும், மரம்-மரமும், முதல-முதலியவை, உற்றறியும்-மெய்யாற்பரிசித்துப் பரிசத்தையறிகிற, ஓரறிவுயிர்-ஓரறிவுயிர்களாம். எ-று (பொ-ரை) புல்லுமரமுமுதலியன மெய்யாற் பரிசித்துப்பரிசத்தையறியுமோரறிவுயிர்களாம். எ-று

௪௪௬. முரணந் தாதிநா வறிவொடீ ரறிவுயிர். ※

(எ-ன்.) ஈரறிவுயிரிவையெனவுணர்-ற்று. (ப-ரை.) முரள் - இப்பியும், நந்து-சங்கும், ஆதி-முதலியவை, நாவறிவொடு - கீழ்ப்போன மெய்யறிவேயன்றி நாவா லிரதத்தையும் அறிகிற, ஈரறிவுயிர்-ஈரறிவுயிர்களாம். எ-று. (பொ-ரை.) இப்பியுஞ் சங்குமுதலியன கீழ்ப்போன மெய்யறிவேயன்றி நாவா லிரதத்தை யறியுமறிவோடீரறிவுயிர்களாம். எ-று. (௪)

௪௪௭. சிதலெறும் பாதிமூக் கறிவின்மூ வறிவுயிர். ※

(எ-ன்.) மூவறிவுயிரிவையென வுணர்-ற்று. (ப-ரை) சிதல்-கறையானும், எறும்பு-எறும்பும், ஆதி-முதலியவை, மூக்கறிவின்-கீழ்ப்போன இரண்டறிவுகளேயன்றி மூக்காற் கந்தத்தையும் அ

றிகிற அறிவோடு, மூவறிவுயிர்-மூவறிவுயிர்களாம். எ-று. (பொ-ரை.) கறையானும் எறும்புமுதலியன கீழ்ப்போன இரண்டறிவுகளையன்றி மூக்கானாற்றத்தை யறியுமறிவினோடு மூவறிவுயிர்களாம். எ-று. ❊ மேலோடுவைவழி ண்டும்வருவித்துக்கொள்க.()

௩௱௪அ. தும்பிவண் டாதிக்கண் ணறிவினோ லறிவுயிர். *

(எ-ன்.) நாலறிவுயிரிவையெனவுணர்-ற்று. (ப-ரை.) தும்பி-தும்பியும், வண்டு-வண்டும், ஆதி-முதலியவை, கண்ணறிவின்-கீழ்ப்போன மூன்றறிவுகளையன்றிக் கண்ணால் உருவத்தையும் அறிகிறவறிவோடு, நாலறிவுயிர்-நாலறிவுயிர்களாம். எ-று. (பொ-ரை.) தும்பியும் வண்டுமுதலியன கீழ்ப்போன மூன்றறிவேயன்றிக்கண்ணாலுருவத்தையறியுமறிவினோடு நாலறிவுயிர்களாம். எ-று. (எ)

௩௱௪௯. வானவர் மக்க ணரகர் விலங்குபுள் - ளாதிசெவியறிவோ டையறி வுயிரே. *

(எ-ன்) ஐயறிவுயிரிவையெனவுணர்-ற்று. (ப-ரை.) வானவர்-தேவரும், மக்கள்-மனிதரும், நரகர்-நரகரும், விலங்கு-மிருகங்களும், புள்-பறவைகளும், ஆதி-முதலியவை, செவியறிவோடு-கீழ்ப்போன நாலறிவுகளையன்றிச் செவியாற் சத்தத்தையும் அறிகிறவறிவோடு, ஐயறிவுயிர் - ஐயறிவுயிர்களாம் எ-று. (பொ-ரை.) வானவரு மக்களு நரகரும் விலங்கும் புள்ளு முதலியன கீழ்ப்போன நாலறிவேயன்றிச் செவியாற்சத்தத்தை யறியு மறிவினோடையறிவுயிர்களாம். எ-று. ❊ சித்துப்பொருள்சடப்பொருளெனப் பாருயிருயிரல்லதாம் பொருளெனக்கூறியவாறும் சித்தாகிய வுயிரறிவுசடமாகியவுடலொடுகூடியவழியன்றி நிகழாமையானுமற்றிகழ்ச்சிகண்டல்ல துயிருண்டென்பதூஉம் அதற்கோரறிவுண்டென்பதூஉந் தோன்றாமையானு முயிரைப்பிரித்தோதாதுடலொடுகூட்டிப் புன்மரமுதலவென முறையே கூறியவாறும் அவ்வுயிரறிவுடலோடுகூடி நிகழ்வழி யைம்பொறியானுமைந்தாய்நிகழ்தலினையறிவெனக்கூறியவாறும் இவ்வைம்பொறியு மெல்லாவுடற்கண்ணு மொருங்குநில்லா திங்ஙனங்கூறியமுறையேநின்றுநிகழ்தலி னுயிர்கள் பலவாயினு மறியும்வகையா னுயிரைந்தெனக் கூறியவாறுங்காண்க. ஆசிரியர் தொல்காப்பியர் "மக்கடாமே யாறறிவுயிரே." எனக்கூறியிருக்க மக்கண்முதலியோரையையறிவுயிரெனக்கூறன் மாறுகொளக்கூறலாம் பிறவெனின் மக்கண்முதலியோர்மனவறிவோடாறறிவுயி ரென்பதுநோக்கியன்றேமுன்னர் "மக்கடேவர் நரகருயர்திணை." எனக்கூறிப்போந்ததூஉமாதலின் இங்ஙன மைம்புலன் மாத்திரையே நுகருமறிவுடைய மக்கண்முதலியோரை விலங்குமுதலியவற்றோடொன்னிலையையறிவுயிரெனக்கூறினாரென வுய்த்துணர்ந்துகொள்க. (அ)

௩௱௫௰. உணர்விய லாமுயி ரொன்று மொழித்த - வுடன்முத லனைத்து முயிரல் பொருளே. *

(எ-ன்) உயிரல்பொருளாவன விவையெனவுணர்-ற்று. (ப-ரை) உணர்வியலாம்- அறிவுமயமாகிய, உயிரொன்றுமொழித்த- உயி ரொன்றுமேயன்றி, உடன்முதல்-உடம்புமுதலாகிய, அனைத்தும்- உலகத்துப்பொருள்களெல்லாம், உயிரல்பொருள் - உயிரல்லாத பொருள்களாம். எ-று. (பொ-ரை.) அறிவுமயமா முயிரொன்று மேயன்றி யவ்வுடம்புமுதலிய வுலகத்துப் பொருள்களெல்லாமு யிரல்லாதபொருள்களாம். எ-று. ✿ முன்ன ருயிர்மாத்திரையே கூறுவாருடம்பொடு கூட்டிக்கூறினாரன்றி யுடம்பையு முளப்ப டுத்தியுயிர்ப்பொருளென்று ரல்லரென்பதிதனு னுணர்க. (௯)

௩௱௫௧. ஒற்றுமை நயத்தி னொன்றெனத் தோன்றினும்- வே ற்றுமை நயத்தின் வேறே யுட லுயிர். *

(எ-ன்.) மேலதற்கோர்புறனடையுணர் - ற்று. (ப-ரை.) ஒற்று மைநயத்தின்- எவ்வுயிர் எவ்வுடம்பை யெடுத்ததோ அவ்வுடம்பி ன்மயமாய் நிற்கிற ஒற்றுமை நயங்கருதியவழி, ஒன்றென -ஒன் றுபோல, தோன்றினும்-தோன்றுமாயினும், வேற்றுமைநயத்தி ன்-உயிர்சித்தாயும் உடம்புசடமாயும் நிற்கிற வேற்றுமைநயமா கியவுண்மைகருதியவழி, உடலுயிர்-அவ்வுடலும்உயிரும், வேறு- வேறாம். எ-று. (பொ-ரை) பசுவுடம்பெடுத் துழித்தன்கன்றினுக் கிரங்கி நன்கிழைத்தவுயி ரவ்வுடம்பு நீங்கிப் புலியுடம்பெடுத்து ழியிரங்கா தக்கன்றினுக்கே தீங்கிழைக்கு மாதலி னெவ்வுயிரெவ் வுடம்பெடுத்ததோ வவ்வுடம்பின் மயமாய்நிற்கு மொற்றுமைந யங்கருதியவழியொன்றுபோற் றோன்றுமாயினு முயிர்சித்தாயு முடம்புசடமாயுநிற்கும் வேற்றுமைநயமாகிய வுண்மைகருதிய வழி யவ்விரண்டுந் தம்முள் வேறுமாதலி னுயிரோடு கூடிநின்ற காலத்து மவ்வுடம்பினை யுயிரல்பொருளென்றும். எ-று. (௰)

௩௱௫௨. அறிவருளாசை யச்சமான- நிறைபொறையோர்ப்பு க்கடைப்பிடிமைய - னினைவுவெறுப்புவப் பிரக்கநாண்வெகுளி- துணிவழுக் காறன் பெளிமை யெய்த்த - றுன்பமின்ப மிளமை மூப்பிகல்- வென்றி பொச்சாப் பூக்கமறமத - மறவியினையவுட ல்கொ ளுயிர்க்குணம். *

(எ-ன்.) உயிரின்குணமென்று ரவையிவையெனவுணர் - ற்று. (ப-ரை.) அறி-மறவி-அறிவு அருள் ஆசை அச்சம் மானம் நிறை பொறை ஓர்ப்பு கடைப்பிடி மையல் நினைவு வெறுப்பு உவப் பு இரக்கம் நாண் வெகுளி துணிவு அழுக்காறு அன்பு எளிமை எய்த்தல் துன்பம் இன்பம் இளமை மூப்பு இகல் வென்றி பொ ச்சாப்பு ஊக்கம் மறம் மதம் மறவி என்கிற முப்பத்திரண்டும்,

இனைய- இவைபோல்வனபிறவும், உடல்கொள்-உடம்போடுகூடி ய, உயிர்க்குணம் - உயிர்களினுடைய குணங்களாம். எ - று.— (பொ-ரை.) அறிவுமுதலிய முப்பத்திரண்டுமிவைபோல்வனபி றவுமுடம்போடுகூடிய வுயிர்க்குணங்களாம். எ-று. ❀ உடலோடு கூடாவழியுயிர்க்குணங்க டோன்றாவென்பா ருடலமொ ருயிர்க் குணமென்றார். பின்வருவதுமது. (௰௪)

௪௫௫. துய்த்த லஞ்ச றொழுத லணித - லுய்த்த லாதி யுட லுயிர்த் தொழிற்குணம். ✻

(எ-ன்.) உயிரின் றொழிற்குணமுணர்-ற்று. (ப-ரை) துய்-துய் த்தல்- துய்த்தல் அஞ்சல் தொழுதல் அணிதல் உய்த்தல் என்கிற ஐந்தும், ஆதி-இவைபோல்வனபிறவும், உடலுயிர்- உடம்போடு கூடியவுயிரினுடைய, தொழிற்குணம்-தொழிற்குணங்களாம் — எ-று. (பொ-ரை.) ஐம்புலனையு நுகர்தன்முதலிய வில்லைந்தும் இவைபோல்வன பிறவு முடம்போடுகூடிய வுயிரின் றொழிற்குண ங்களாம். எ-று. (௰௫)

௪௫௬. பல்வகை வடிவிரு நாற்றமை வண்ண -மறுசுவையூ றெட் டுயிரல் பொருட்குணம். ✻

(எ-ன்.) உயிரல்லாதபொருள்களின் குணமுணர்-ற்று (ப-ரை) பல்வகைவடிவு- வட்டம் இருகோணம் முக்கோணம் சதுரம் இ வைமுதலாகிய பலவகைவடிவுகளும், இருநாற்றம்- நற்கந்தம் து ர்க்கந்தம் என்கிற இருநாற்றங்களும், ஐவண்ணம்-வெண்மைசெ ம்மை கருமை பொன்மை பசுமை என்கிற ஐந்து வண்ணங்களு ம், அறுசுவை-கைப்பு புளிப்பு துவர்ப்பு உவர்ப்பு கார்ப்பு இனி ப்பு என்கிற அறுசுவைகளும், ஊறெட்டு - வெம்மை தண்மை மென்மை வன்மை நொய்ம்மை சீர்மை இழுமெனல் சருச்ச ரை என்கிற எட்டூறுகளும், உயிரல்பொருள்-உயிரல்லாதபொரு ள்களினுடைய, குணம்-குணங்களாம். எ-று. (பொ-ரை. வட்டமி ருகோண முக்கோணஞ் சதுரமுதலிய பலவகைவடிவு நற்கந்தந் துர்க்கந்தமென்னு மிருநாற்றமும் வெண்மைசெம்மைகருமை பொன்மை பசுமையென்னு மைந்துவண்ணமும் கைப்பு புளி ப்பு துவர்ப்பு உவர்ப்பு கார்ப்பு இனிப்பென்னு மாறிரதமும், வெம்மை தண்மை மென்மை வன்மை நொய்மை சீர்மை யிழு மெனல் சருச்சரையென்னு மெட்டூறு முயிரல்லாத பொருள்க ளின் குணங்களாம் எ-று. (௰௬)

௪௫௭. தோன்றன் மறைதல் வளர்தல்சுருங்க -னீங்கலடைத னடுங்கலிசைத்த-லீதலின்னன விருபொருட்டொழிற்குணம் ✻

(எ-ன்.) உயிரல்பொருட்கேயுரியதொழிற்குணமுருக்கிடத்த தியைதலையொழித் தவ்விருபொருட்கும் பொதுவான தொழிற்

குணமுணர்-ற்று. (ப-ரை.) தோன்றல்-லீதல், தோன்றல் மறைதல் வளர்தல் சுருங்கல் நீங்கல் அடைதல் நடுங்கல் இசைத்தல் ஈதல் என்கிற வென்பதும், இன்னன - இவைபோல்வன பிறவும், இருபொருள்- உயிர்ப்பொருளும் உயிரல்பொருளும் ஆகிய இரண்டற்கும் பொதுவாகிய, தொழிற்குணம் -தொழிற்குணங்களாம். எ-று. (பொ-ரை.) தோன்றன் முதலியவென்பது மிவைபோல்வனபிறவு முயிர்ப்பொரு ளுயிரல்பொருளென் றுமிரண்டற்கும்பொதுவான தொழிற்குணங்களாம். எ-று, ※ [வ-று.] உயிர் தோன்றிமறைந்தது- உடறோன்றிமறைந்தது- நெருப்புத்தோன்றி மறைந்தது-என இத்தொடக்கத்தன வெல்லா மிருபொருட்கும்பொதுவாகிய தொழிற்குணமாதல்காண்க. (மச)

சாருங. சாலவுறுதவ நனிகூர் கழிமிகல். ※

(எ-ன்) பல்வகைப்பண்பென்று ரவையிவையென விதுகாறு முணர்த்தியப்பண்புகளுளொருகுணம்பலகுணந்தழுவிவருமென் றுமுரிச்சொற்க ளிவையென வுணர்த்துவான்றொடங்கி யவற்றுளொருகுணந்தழுவிய வுரிச்சொல்லுட்சிலவுணர் ற்று. (ப-ரை) சால-கழி, சாலவென்பதுமுதலாகிய இவ்வாறுரிச்சொற்களும், மிகல்-மிகுதியாகிய ஒருகுணத்தையுணர்த்துகிற உரிச்சொற்களாம் எ-று. (பொ-ரை.) சாலவென்பதுமுதற் கழியென்ப னீறாகக்கூறிய ஆறுரிச்சொல்லு மிகுதியாகிய வொருகுணத்தை யுணர்த்துஞ் சொற்களாம். எ-று. ※ [வ-று.] "பருவந்து சாலப் பலகொலென்றெண்ணி."-"உறுவளிதூக்கு முயர்சினைமாவின்."-"தவச்சேய்நாட்டா ராயினும்"-"நனிபேதையே நயனில்கூற்றம்."-"பொறைநில்லாநோய்கூரப் புல்லென்றிசினே."-"காமங்கழிகண்ணோட்டம்." என முறையேகாண்க. இவற்றுட் சாலவென்பதுசாலென்னு முரிப்பெயரடியாகப்பிறந்த வினையெச்சக் குறிப்பு. சாலப்பலவாமென ஆமென்னும் வினைப்பயனிலை தொக்குநின்றது. இப்பண்படிகளைநோக்கிப் பல்வகைப் பண்பும் பகர்பெயராகியென்றார். சாலெனப் பண்படியாகச் சூத்திரஞ்செய்யாதுசாலவென வினையெச்சக்குறிப்பாகச்சூத்திரஞ்செய்தலவ்வுரிப்பெயரடியாக வினைவிகற்பங்களெல்லாம்பிறக்குமென்பது தோன்றவுடம்படுபுணர்த்தலாமென்க. அவையெல்லாம் வந்தவழிக்காண்க.

சாருஎ. கடியென் கிளவி காப்பே கூர்மை - விரைவே விளக்கமச்சஞ் சிறப்பே - விரைவே மிகுதி புதுமை யார்த்தல் -வரைவே மன்றல் கரிப்பி னுகும். ※

(எ-ன்.) பலகுணந்தழுவிய வுரிச்சொல்லுளொன் றுணர்-ற்று. (ப-ரை.) கடியென்கிளவி- கடியென்னுமுரிச்சொல், காப்பு-காவ

லும், கூர்மை-கூர்மையும், விரை-வாசனையும், விளக்கம்- விளக்கமும், அச்சம்-அச்சமும், சிறப்பு-சிறப்பும், விரைவு-விரைவும், மிகுதி-மிகுதியும், புதுமை-புதுமையும், ஆர்த்தல்-ஒலித்தலும், வரைவு-நீக்கலும், மன்றல்-மணமும், கரிப்பின்-கரிப்பும் ஆகிய பதின்மூன்று குணங்களினும், ஆகும்-வரும். எ-று. (பொ-ரை) கடியென்னுமுரிச்சொல் காப்புமுதலிய பதின்மூன்றுகுணத்தையு முணர்த்தும். எ-று. ❋ [வ-று.] "ஒண்சுடர் நல்லிருங்கடி நீலி." என்பது காப்பு. "கடிநுனைப்பகழி."-எ-து- கூர்மை. "கடிமாலை சூடி."-எ-து-நாற்றம். "கண்ணாடியன்ன கடிமார்பன்." - எ-து- விளக்கம். "கடியரமகளிர்க்கே கைவிளக்காகி" - எ-து- அச்சம். "கடிமாமிசைப்பூத்துக் கம்புளோடன்னமார்க்கும்."- எ-து-சிறப்பு. "எம்மம்பு கடிவிடுது நும்மரண்சேர்மின்."-எ-து-விரைவு. "கடியுண்கடவுட் கிட்டசெழுங்குரல்." -எ-து-மிகுதி. இது புதிதுண்கடவுளென்றுமாம். "கடிமுரசு"-எ-து-ஆர்த்தல். "கடித்துக்கரும்பினைக்கண்டகர நூறி."-எ-து-வரைவு. "கடிவினைமுடிகினி"-எ-து-மன்றல். "கடிமிளகுதின்றகல்லாமந்தி"-எ-து-கரிப்பு.

௪௫௮. மாற்ற நுவற்சி செப் புரைகரை நொடியிசை - கூற்றுப்புகறன் மொழி கிளவிவிளம்பறை - பாட்டுப் பகர்ச்சி யியம்பல் சொல்லே. ❋

(எ-ன்.) இதுவுமொருகுணந்தழுவியவுரிச்சொல்லுட்சிலவுணர்-ற்று. (ப-ரை.) மாற்ற-பல், மாற்றமுதலாகிய பதினாறும், சொல்-சொல்லென்னு மொருகுணத்தை யுணர்த்துகிற வுரிச்சொற்களாம். எ-று. [சாலவுறுதவ வென்பதனைச் சாரவையா தீண்டுக்கூறினார் இவை யொலிப்பண்பை யுணர்த்தி யேனைப்பெயர்வினைகளை பொருவாது நடத்தலினைத்துணைச்சிறப்பினவன்றி யொரோவழிபொருவியுநடக்குமென்பது தோன்றற்கென்க.] (பொ-ரை.) மாற்றமுதலியம்பலீறாகக்கூறியபதினாறுஞ் சொல்லென்னுமோர்குணத்தையுணர்த்துமுரிச்சொற்களாம். எ-று. ❋ [வ-று] "கோவலர்வாய்மாற்றமுணர்ந்து."-"இருபிறப்பாளர் பொழுதறிந்து நுவல."-"தெருண்டாரவைசெப்பலுற்றேன்" - "உலாப்பாருரைப்பவையெல்லாம்"-"அறங்கரைநாவி னான்மறைமுற்றிய."-"அஞ்சொற்பெரும்பணைத்தோளாயிழையாடொடியும்."-"நசையுநர்க்கடையாநன்பெருவாயி-லிசையெனப்புக்கு."-"உற்றது நாங்கள் கூறவுணர்ந்தனை"-"புகன்றவன்றியும் பூமிகவருமே" "காமஞ்செப்பாது கண்டதுமொழிமோ."-"கிளக்கும்பாணகேளினி" "மெய்ம்மூவாறெனவிளம்பினர்புலவர்"-"அறிவனதடிதொழுதறை குவனண்ணே"-"ஒருவன்செய்நன்றிகொன்றோர்க்-குய்தியில்லெனவறம்பாடின்றே" - "வார்த்தை பகர்குற்ற

ன்.,,-"இடிபோல வியம்பினனே,,எனமுறைமையேகாண்க. (மஎ)

சாறுக. முழக்கிரட்டொலிகலி யிசைதுவைபிளிறிரை- யிர க்கழுங்கியம்ப விமிழ்குளிறதிர்குரை-கனைசிலைசும்மை கவ்வைக ம்பலை-யரவமார்ப்போ டின்னவோசை. ❁

(எ-ன்.) இதுவுமது. (ப-ரை.) முழக்கு-போடு, முழக்குமுத லாகிய-இருபத்திரண்டும், இன்னன - இவைபோல்வனபிறவும், ஓசை-ஓசையென்னுமொருபொருளையுணர்த்து முரிச்சொற்க ளாம். எ-று. (பொ-ரை.) முழக்குமுதலிய விருபத்திரண்டு மி வைபோல்வன பிறவுமோசையென்னு மொருகுணத்தை யுணர் த்து முரிச்சொற்களாம். எ-று. ❁ [வ-று.] "முழங்கு முந்நீர் முழுவதும்வளைஇ,,- "குடிமையிரட்டுங் கோடியர்நெடுவரை.,, "ஒல்லெனவொலிக்குமொலிபுனலூரற்கு.,,-"கலிகெழுமூதூர்,, "பறையிசையருவி.,,-"தோறுவைத்தல்.,,-"பிளிறுவார்முரசம்,, "இரைக்குமஞ்சிறைப் பறவைகள்.,,-"இரங்குமுரசினம்,,-"இரு ம்பிழிமாரி யழுங்கினமூதூர்.,, - "காலைமுரசமதியம்ப.,,- "இமி ழ்கடல்வளைஇய வீண்டகன்கிடக்கை.,,- "குளிறுமுரசங் குணில் பாய.,,-"களிறுகளித்ததிருங்காரி.,,-"குரைபுனற்கன்னி,,-"கனைக டற்சேர்ப்ப.,,-"சிலைத்தார் முரசங்கறங்க.,,-"தள்ளாதசும்மைமி குதக்கண நாடுநண்ணி.,,-"கவ்வைநீர்வேலி,,-"விளைக்கம்பலை ம னைச்சிலம்பவும்.,,-"அறைகட லரவத்தானை.,,-"ஆர்த்தபல்லியக் குழாம்,,எனமுறைமையேகாண்க. (மஅ)

சாகூய. இன்னதின்னுழி யின்னணமியலு - மென்றிசைநூ லுட் குணகுணிப்பெயர்கள் - சொல்லாம்பரத்தலிற் பிங்கலமுத லா-நல்லோருரிச்சொலி னயந்தனர்கொளலே. ❁

(எ-ன்.) இவ்வியலுக்கோர்புறனடையுணர்-ற்று. (ப-ரை.) இன்னது - பெயர்வினையிடையுரிகளில் இன்னசொல், இன்னுழி - தன்மைமுன்னிலைபடர்க்கைகளிலும் வழக்குச்செய்யுள்களிலும்இவ் விடத்தே, இன்னணம் - இவ்விலக்கணமுள்ளதாய், இயலுமென் று-நடக்குமென்று, இசை-சொல்லக்கடவதாகிய, நூலுள் - இந் நூலுள், குணகுணிப்பெயர்கள் - குணப்பெயர்களையும் குணிப் பெயர்களையும், சொல்லாம்-வேண்டியமட்டுஞ்சொல்வதன்றி வி ரித்துச்சொல்லக்கடவமல்லம், பரத்தலின் - விரிக்கின்மற்றொன் றுவிரித்தலென்னுங் குற்றம்வருமாதலின், நல்லோர்- அவற்றைக் கண்டறியவேண்டியநல்லோர், பிங்கலமுதலா-பிங்கலந்தை திவா கரமுதலியநூல்களில், உரிச்சொலில்- உரிச்சொற்றொகுதியுள், ந யந்தனர்கொளல்-விரும்பிக்கொள்க. எ-று. (பொ-ரை.) பெயர் வினை யிடையுரியென்னு நால்வகைச்சொல்லு ளின்னசொற்றன் மை முன்னிலைபடர்க்கையென்னு மூன்றிடத்துள்ளும் வழக்குஞ்

செய்யுளென்னு மிரண்டிடத்துள்ளு மிவ்விடத்திவ்விலக்கணத்தாற் நடக்குமென்று சொல்லக்கடவதாகிய இந்நூலு ளவ்விலக்கணங்காட்டுதற்கு வேண்டியமாத்திரையே கூறுவதன்றி யுரிச்சொல்லாகிய குணப்பெயர்களுமேனைக்குணிப்பெயரையு நிகண்டினுட் கூறினாற்போல விரித்துக்கூறக் கடவமல்லம் விரிக்கின் மற்றொன்று விரித்தலெனனுங் குற்றம்வருமாதலின் அவற்றினைக்கண்டறியவேண்டுவோ ரிவ்விலக்கண மறிதற்கு முன்னமே யனைப்புலவராற் கூறப்பட்டபிங்கலந்தை திவாகரஞ் சூடாமணி முதலிய நூல்களுள் வகுத்து முரிச்சொற் றொகுதியுள் விரும்பிக்கொள்க. எ-று.— ※ இவ்விலக்கணமறிதற்கு முன்னமே நிகண்டறிகவென்றும் அறியுமுறையதுவாதலான். இவ்வியலுட் சாலவென்பது முதல் ஆர்ப்பென்பதீறாக நாற்பத்தைந் துரிச்சொல்லெடுத்துச் சுருங்கச் சொல்லுதல் சொல்லிய லுணர்த்து நூலுட்சொற்றொகுதிகளைவிரிக்கின் மற்றொன்று விரித்தலாமெனவுணரார் குன்றக்கூறலாமென்பராதலி னதுபரிகரித்தற்கு இச்சூத்திரத்தாற் புறனடைகூறினார். இங்ஙனங்கூறவே பெயரியலுட் பெயர்த்தொகுதியினையும் வினையியலுள் வினைத்தொகுதியினையும் இடையியலுள் இடைத்தொகுதியினையும்விரியா தவ்விலக்கணங்காட்டுதற்கு வேண்டியமாத்திரையே கூறுதற்கு மிதுவேபுறனடையாமென்க. பெயரியலென்பது பெயரிலக்கணம். பெயர்த்தொகுதியென்பது பெயர்க்கூட்டம். ஏனையவுமன்ன. கூட்டமெனினு நிகண்டெனினுமொக்கும். இலக்கணங்கூறுநூலுள் நிகண்டினையுமுடன்கூறுதலின் வேறோர் நூலாகக் கூறுதல தமிழுள்ளேயன்றி யாரிய முதலியவற்றுள்ளுங் காண்க. (௰௬)

௪௱௬௧. சொற்றொறு மிற்றிதன் பெற்றியென் றனைத்து - முற்ற
மொழிகுறின் முடிவிலவாதலிற் - சொற்றவற்றியலான் மற்றைய
பிறவுந் - தெற்றெனவுணர்த றெள்ளியோர்திறனே. ※

(எ-ன்.) இவ்வதிகாரத்திற் கோர்புறனடையுணர்-ற்று. (ப-ரை.) சொற்றொறும் - சொற்றோறும், இற்று - இத்தன்மைத்து, இதன் பெற்றியென்று - இதனிலக்கணமென்று, அனைத்தும் - முழுதும், முற்ற - நிறைவுற, மொழிகுறின் - சொல்லப்புகுந்தால், முடிவில - முடிவில்லவாம், ஆதலின் - ஆதலால், சொற்றவற்று - எடுத்துச்சொல்லப்பட்ட சொற்களுடைய, இயலான் - இலக்கணங்களைக்கொண்டு, மற்றைய பிறவும் - சொல்லப்படாதவற்றி னிலக்கணங்களையும், தெற்றெனவுணர்தல், ஒப்புமைகருதி இதுவுமதுவெனவுணர்தல், தெள்ளியோர் - நூலோதித்தெளிதற்குரியமாணாக்கருக்கு, திறன் - கடனாம். எ-று. (பொ-ரை.) சொற்றொறுமித்தன்மைத்திதனிலக்கணமென்று முற்றமொழியப்புகின்வரம்பிலவாமாதலினெ

டுத்துக் கூறியசொற்களி னிலக்கணங்களைக்கொண்டு சொல்லாது னவற்றி னிலக்கணங்களையு மொப்புமைகூறுதி யிதுவுமது வென முற்றவிளங்க வுணர்தனுலோதித் தெளிதற்குரிய மாணுக்கர்திற ரும். எ-று. ❋ இவற்றிற்குதாரணமுன்னோர் வந்துழி வந்துழிக் காட்டினுமாங்காங்குணர்க. (௨0)

௪௬௨. பழையனகழிதலும் புதியனபுகுதலும் - வழுவலகா ல வகையினுனே. ❋

(எ-ன்.) இந்நூலிற் கோர்புறனடையுணர்-ற்று. (ப-ரை.) பழையனகழிதலும்- முற்காலத்துள்ள விலக்கணங்களுட்சிலபிற்கா லத்திறத்தலும்; புதியனபுகுதலும்- முற்காலத்தில்லனசில பிற்கா லத்திலக்கணமாதலும், வழுவல-குற்றமல்லவாம், காலவகையினு ன்-காலவேற்றுமையதுவாகலால். எ-று. (பொ-ரை.) முற்காலத் துள்ளவிலக்கணங்களுட்சில பிற்காலத்திறத்தலு முற்காலத்தில்ல ன சிலபிற்காலத் திலக்கணமாய்வருதலுங் குற்றமல்லவாங் கால வேற்றுமையதுவாகலான். எ-று. ❋ இவற்றிற்கு முதாரண முன னர்வந்துழிவந்துழிக் காட்டினுமாங்காங்குணர்க. (௨௧)

உரியியல் முற்றிற்று.

சொல்லதிகாரம் முற்றுப்பெற்றது.



இருதிணையைம்பா னான்மொழியைம்பா லறுதொகையே.......❋
மருவழுவெட்டுரு பொன்பான்முகாநிலை யாய்ந்தவெச்ச ....❋
மொருபதுகோளட்டு முப்பொழுதிரிட மோரியல்பாய்....❋
வருமொழிமூன்று முணரச்சொல்வன்மைவருந்திருவே .....❋

நன்னூல்விருத்தியுரை

